ஓம்
தத்சத்
பாப்பிரஹ்மணே நம:.

# வேதாந்த சூடாமணி

## வசன வினாவிடை

பதவுரையுடன்.



இது
ஸ்ரீ சாது இரத்தின சற்குருவின் பாதசேகரராகிய
ஆசிரியர் கோ. வடிவேலு செட்டியாரவர்களால்
இயற்றப்பட்டு,

ஷை செட்டியாரவர்களாலும்
ம. ஷண்முக முதலியாரவர்களாலும்
பிரசுரிக்கப்பட்டது.

1927



[விலை ரூ. 1-8-0.

PRINTED AT
THE NOBLE PRESS, TRIPLICANE,
MADRAS, S. E.

ஈ. பெரியசாமி

உ

# முகவுரை.

வேதப் பொருளுரை வித்தக சங்கரன்
பாதப் போதிணை பணிவோ மியாமே.

"சத்தியுஞ் சிவமு மாகித் தாணுவாய்ச் சகத்துக் கெல்லாம், முத்தியு மளிக்க வல்ல முதல்வன்", "மெய்யான தொன்றுமே மெய்" "மெய்யன்றி மற்றெல்லா மித்தை" என்னும் பரம சித்தாந்தத்தை நம்மனோர் உள்ளவாறுணர்ந்து, உணர்ந்தவாறொழுகாமையால், அநாதியாகச் சாதல் பிறத்தலென்னுஞ் சங்கடத்திற் கடிமையாய், துன்பத்தைத் தொடர்பாயனுபவித்து வருதலைத் தொலைத்தற் பொருட்டு, சிருஷ்டிதோறும் கிரமந்தவறாது வேதத்தைத் திருவாய்மலர்ந்தருளி வருகின்றானென்பது வைதிக உலகத்தில் மிகு பிரசித்தமாம்; இவ்வேதத்தின் பொருளைச் சுருக்கமாகவும் பெருக்கமாகவும் விளக்கமாகக் கூறும் நூல்கள் எண்ணிறந்தனவாமென்பதும் மிகு பிரசித்தமாம். வேதத்தின்பொருளைச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் கூறும் நூல்களுள், கன்னடபாஷையில் நிஜகுணயோகியென்னும் பெரியார் திருவாய்மலர்ந்தருளியுள்ள விவேகசிந்தாமணியென்பதும் ஒன்றும். இந்நூல் வேதாந்த பரிச்சேதம், சைவசித்தாந்த பரிச்சேதம் என்றற்றொடக்கத்தனவாகப் பத்துப் பரிச்சேத முடையதா யமைந்திருக்கின்றது. இப்பத்துப் பரிச்சேதத்துள் முதலாவதாயுள்ள வேதாந்த பரிச்சேதம், ஸ்ரீவியாசபகவான் திருவாய்மலர்ந் தருளியுள்ள பிரஹ்ம சூத்திரத்திற்கு ஸ்ரீ - சங்கரபூஜ்ய பகவத் பாதாசாரிய சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளியுள்ள பாஷ்யத்தின் (பேருரையின்) கருத்துக்களை ஸ்ரீ விவரணாசாரியென்னும் பெரியார் விடாது விளக்கியெழுதியுள்ள விவரணமென்னும் உரையைப் பெரும்பான்மையு மனுசரித்து, வேதாந்தத்தின் (உபநிஷத்தின்) பொருள்களைச் சுருக்கமாகவும், விளக்கமாகவுங் கூறி விளங்குதல்பற்றி, வேதாந்த சாஸ்திராப்பியாசஞ் செய்ய முயல்வார் யாவராலும் பொன்னேபோற் போற்றப்பட்டு வருகின்றது.

இற்றைக்கேறக்குறைய முன்னூறு வருஷங்களுக்கு முன்னிருந்த நல்காற்றூர் - துறைமங்கலம் ஸ்ரீ - சிவப்பிரகாச சுவாமிகளென்னும் ஞானவேந்தர் வேதாந்த இரகசியத்தைத் தமிழ் மக்க ளெளிதி லுணர்ந் துய்யவேண்டுமென்னுங் கருணையால் 181 விருத்தச்செய்யுளில் அவ்வேதாந்த பரிச்சேதப்பொருளை விடாதமைத்து, ஆநந்தரசம் பெருக அச்செய்யுள்களைத் திருவாய்மலர்ந்தருளி, அச்செய்யுட்டிரட்டிற்கு வேதாந்த சூடாமணி யெனப் பெயர் தந்தருளினர். இவ்வேதாந்த சூடாமணியைத் தமிழ் மக்களுள் வேதாந்த சாஸ்திராப்பியாசஞ்செய்ய முயன்று வருபவருள் பலர் முறையாக ஸ்ரீ சேஷாத்திரி சிவனர் அருளிச் செய்துள்ள நாநாஜீவவாதக் கட்டளையைப் படித்து முடித்தபின் படித்துவருகின்றனரென்பது வேதாந்த உலகத்தில் பிரசித்தமாம். இவ்வேதாந்த சூடாமணிக்குப் பிறைசை - ஸ்ரீ - அருணாசல சுவாமிகளும், ஈசூர் - ஸ்ரீ - சச்சிதாநந்த

சுவாமிகளும் விரிவுரை யெழுதி யிருக்கின்றனர். அவ்வுரைகள் வேதாந்த சாஸ்திரங்களைச் செவ்வையாகப் படித்தவர்க்கன்றி மற்றவர்க்குப் பெரிதும் பயன் தருவனவன்று யிருத்தலை நோக்கி, வேதாந்த சாஸ்திரார்த்த அப்பியாசஞ்செய்ய முயலும் யாவர்க்கும் பயனுமாறு இவ்வேதாந்த சூடாமணி வசன வினாவிடையை யெழுதி வெளியிடுதற் குரியவனாயினேன். இவ்வினாவிடையை யானெழுது வதற்கு எனக்குதவியா யிருந்த நூல்கள் ஞானவாசிஷ்டம், பஞ்சதசி, விசார சாகரம், விருத்திப்பிரபாகரம், தத்துவானுசந்தானம், விருத்திரத்தினாவலி, பால போதம், விசார சந்திரோதயம், வேதாந்த பரிபாஷை, தருக்கபரிபாஷை, சித்தாந்தபிந்து, கைவல்லியநவநீதம் முதலியனவாம். வேதாந்த சூடாமணியைக் கருத்தூன்றிப் படிப்பவர் வேதாந்த சாஸ்திரங்களில் இலைமறைகாய்போலுள்ள விஷயமனைத்தையும் எளிதி லுணர்தற்குரியவராவ ரென்னும் துணிவுபற்றியே இவ்வேதாந்த சூடாமணி வசன வினாவிடையை யெழுதுதற்குரியவ னானேன். இஃது இந்நூலின் விஷய அட்டவணையைப் படித்துப் பார்ப்பவர்க்கு இனிது விளங்குவதாம். வேதாந்த சாஸ்திரங்களின் பரம தாற்பரியமனைத்து மமைந் திருக்கின்ற இந்நூலுக்குப் பதவுரையில்லாவிடின், அது செய்யுளைப் படிப்ப வர்க்கு வருத்தமுண்டாக்குமென்று கருதிப் பதவுரையுமெழுதி யிருக்கின்றேன்; வசன வினாவிடையிலும் பதவுரையிலும் வேண்டுமிடங்களில் விளக்கவுரையும் வேண்டுமளவு விரிவாக எழுதியிருக்கின்றேன்.

இராமநாதபுரம் ஜில்லா - கோட்டையூர்வாசியும், வேதாந்த சாஸ்திராபி மானியுமாகிய ஸ்ரீமத் - வெ - நா - லட்சுமணன் செட்டியாரவர்கள் இப்புஸ்தகம் அச்சிடுவதுபற்றி என்னிடத்துச் சில புஸ்தகங்கள் வாங்கிக்கொண்டு பொருள் கொடுத்தமை எப்போதும் மறத்தற்குரியதன்றாம்.

இவ்வேதாந்த சூடாமணி வசன வினாவிடையைப் பதவுரையுடனெழுதுவதற் குரிய விவேகம் எனக்குண்டாதற்குக் காரணபூதராயிருந்த ஸ்ரீ-சற்குரு-மகாத்மா-சை - இரத்தினசெட்டியாரவர்களது பெருங்கருணைத்திறம் என் சித்தத்தின்கண் எஞ்ஞான்றும் நிலைபெறுதற்குரியதாம்.

இந்நூலின்கண் பிரமப்பிரமாதங்களால் தவறு நேரிட்டிருத்தல் கூடும்; அதனை வேதாந்த வித்வத்சிரோமணிகள் தெரிவிப்பாராயின், அது மறுபதிப்புப் புஸ்தகத்தைச் சுத்தமாக அச்சிடுவதற்குப் பேருபகாரமாம்.

இவ்வேதாந்த சூடாமணி வசன வினாவிடையைப் பதவுரையுடனெழுதி மாறு எனது சித்தத்தின்கண் சற்குருமூர்த்தி வடிவமாக வெழுந்தருளியிருந்து என்னையேவிவந்த ஸ்ரீ - நடராஜப்பிரபு இஃதெஞ்ஞான்றும் நிலைபெறுமாறுங் கருணைபுரிவாராக.

சென்னை
1—2—27. }

இதிற் பிழையுளதாயின், உலகம் பொறுக்க.

கோ. வடிவேலு செட்டியார்.

ஸ்ரீ சாது - இரத்தின சற்குரு திருவடி வாழ்க.

# INTRODUCTION.

VEDANTA CHOODAMANI is one of those few books in Tamil, with which a student invariably begins his study of Vedanta Philosophy. This is a translation of an important portion of the famous Canarese work Viveka Chintamani, the spiritual product of the holy meditations of the great sage Nijaguna Yogi. That this translation is by the great Tamil Poet Sivapragasar of Thuraimangalam, certainly adds to its interest & usefulness. Thus it is twice blessed.

Sivapragasar is indeed a wellknown figure inTamil Literature. As a matter of fact nobody progresses too far in the study of the later day Tamil Literature without a tolerable knowledge of his mellifluous verses. Those lines in which he proclaims the supremacy of Thiruvasagam even over the sacred Vedas, cannot but be ringing in the ears of every Tamilian. He, a great linguist himself, well versed in Sanskrit & Kanarese, realised the greatness of his mother tongue & loved her with all the heart of a poet and a philosopher. But his was not a blind love. Fortunately for us, he was not only a great poet but a philosopher in the Indian sense of that word. His love for Tamil instead of throwing a veil over her weaknesses & clouding his eyes, revealed them all in bolder relief. The Tamil Student of Philosophy was very much handicapped by the absence of necessary books in Tamil and had to waste a major portion of his life in beginning to acquire a working knowledge of foreign languages only to end in slighting his mother tongue. As a true son of our Virgin Mother, Tamil, Sivaprakasar having himself experienced the difficulty tried to rectify it by offering to the thus struggling public of Tamil land, translations of valuable works on Philosophy. Logic being the foundation of Philosophy, he rendered into Tamil Prose Tharka Paribhasha, that famous work of the great logician Kesavamisra. The Vedanta philosophy as systematised by the mighty intellect of Sankara, captivated his imagination & intellect. Being a Vira Saivite himself he paid homage to Canarese the language in a way of his religion, by a careful study of the works therein. Comingacross the Vedanta Paricheta of Viveka Chintamani, he thought that it would serve a very useful starting point on our way to realise Vedanta. True to his expectations this Tamil translation is even now invaluable as a primer of Vedanta.

True it is that in this translation our poet is not at his best. If however we were to compare this with other works on Vedanta Philosophy, not the older ones but those recently translated, what a contrast we will find. Our book will easily pass off as the best.

But a translation is a translation for all that. The numerous Sanskrit technical words stare you in the face in every Stanza demanding a careful study. What shall we say of logical problems involved at every step of the reasoning. Logic if not a nightmare, is to most of us a hard nut to crack. And in these days when even prose works require voluminous Commentaries, poetry has certainly a weird look about it. These are some of the reasons which necessitate a commentary on the work on hand. A commentary however which gives only the meaning of the Verses, word by word, to the easeloving moderners presents the appearance of a dictionary of Synonyms without the latter's usefulnes. The present Commentator has therefore relegated that portion to the foot note to be carefully studied at leisure, when the readers have mastered the underlying idea in haste. Yes in haste; for this is a commentary which a man that runs may read. The commentary is really an essay. To bring out the importance of each & every idea & to drive it home into the minds of the readers, he has put the whole book in the form of questions & answers. He has made the work a catechism on Vedanta. All abstruse points on logic & grammar are explained with great mastery of the subject & lucidity of language, but they are not the paltry jargon of empty Scholarship.

Without giving any offence to anybody, it may be stated that Mr. Chettiar is the fittest person to write such a Commentary as the one presented here to the public at large. His mastery of Tamil language and literature is exhibited in every page of his commentary on Thirukkural. His notes on Tharka Paribhasha are a monument to his proficiency in Logic. His popular works on Gita, Kaivalya Navanitam, Sasivanna Bhotham, Upanidatham & Nanajiva Vada Kattalai, written on the same model as the present one have made him rightly famous as a great Vedanta philosopher. In the editon of such old works as the Perunthirattu we have a sample of his erudite scholarship & fine textual criticism. He has made his life a holy lamp burning day & night on the altar of Religion, illuminating the dark corners in the minds of his students who number now in thousands. Every evening he holds Vedanta classes, here there everywhere in all parts of the city. His monthly, bimonthly, quarterly &



annual tours all round the Presidency & his popular lectures delivered even in the remotest parts of Tamil Nadu are well known & well attended. It is not an exaggeration to say that even a child does not fail to understand his exposition of the most abstruse points in philosophy. Therefore it is no wonder that this book is understood by all without any difficulty whatever. He would probably have lectured on this selfsame book thousand & one times so much so he knows more than anybodyelse the difficulty a student feels in understanding the book. As in his prose works like Meygnana Bhodam & Viyasa Bhodhini, the style here also is like the pure & sparkling crystal water. It is simple and elegant. Like a heatless flame it burns up every dross & gives nothing but light. The only fault I can find therein is its faultless puritanism.

Tamilaham, Chintadripet, Madras. 1-2 1927. — T. P. MEENAKSHISUNDARAN M.A., B.L., COUNCILLOR, Corporation of Madras.

---

உ

ஆசிரியர் ஸ்ரீமத். கோ. வடிவேலுசெட்டியார் அவர்கள்
மாணவர்களுள் ஒருவராகிய
கா. பொன்னுசாமி நாட்டார் அவர்கள்
இயற்றிய

# சிறப்புப் பாயிரம்.

---

**நேரிசை யாசிரியப்பா.**

வான்றோய் இமயமும் ஆன்றோர் குமரியும்
என்றிடைப் பட்டுச் சான்றோர் வதியும்
அறந்திகழ் பரதநன் னாட்டிற் சிறந்தொளிர்
புறம்பவர் புகழுந் திறம்பல படைத்த
மறைமுடிக் கொள்கை கறையின்று விளக்கும்
நறையினு மினிய நன்னூல் பலவினும்
சிவப்பிர காசச் செம்மல் தென்றமிழ்த்
தவப்பேற் றானே தந்தவே தாந்த
சூடா மணியெனுந் தோமறு பனுவல்
நாடாப் பொருள்பல நவில்வதா மதனை
உரைநடை யதனில் வினாவிடை யுடன்பத
வுரையு மியற்றி யுதவின னுலகுக்
கேமஞ் சாலுங் கோமள புரத்தோன்
நாமம் புகலின் நல்வடி வேலனைப்
பன்னுஞ் சிரேட்டியெம் பாவம் பாற்றிக்
கன்மன மெல்லாங் கரையமெய்ப் பொருளைக்
கடன்மடை விண்டாற் போன்மெனக் கழறி
உடல்பொறை யென்ப துணர்த்தும் வித்தகன்
காண்டற் கெளிய காட்சிய னாகி
மாண்புறு கல்வியி னகத்தியன் மான
எச்சம யத்தும் இன்சொ லுடனே
அச்சமில் மாணவர்க் கறிவரு ளறிஞன்
பிறப்பெனும் பேதைமை நீங்கச்
சிறப்பெனுஞ் செம்பொருள் கண்டசீர் மையனே.

---

# விஷய அட்டவணை.

---

## சாதன சாத்திய விவேகம்.

ஓம்

தத் சத்

பரப்பிரஹ்மணே நமஃ.

# வேதாந்த சூடாமணி

## வசன வினுவிடை

### பதவுரையுடன்.

---

### தற்சிறப்புப் பாயிரம்.

1. தருணமா துமைமுகத் தாம ரைக்கெழு
மருணனு மெனவுதித் தடியரர் பாற்புரி
கருணைமா மதமெனக் காட்டு மாமுகன்
சரணவா ரிசமலர் தலையிற் கொள்ளுவாம்.

(இதன் பொருள்.) தருணமாது-(எப்போதும்) இளமையும் அழகுமுடைய, உமை-உமாதேவியாரது, முகத்தாமரைக்கு - திருமுகமாகிய செந்தாமரைமலர் விகசித்தற்பொருட்டு, எழு-(ஏனைய தாமரைமலர்கள் விகசித்தற்பொருட்டு உதய கிரியில்) தோன்றுகின்ற, அருணனுமென-சூரியனை யொத்தவனுமென்று(புலவர்) கூறுமாறு, உதித்து-(அவர்க்கு முன்னேவந்து) தோன்றி, அடியரர்பாற்புரி-(தான் தனது) அடியாரிடத்துச் செய்கின்ற, கருணை-கருணையையே, மாமதமெனக் காட்டும் - பெருமதமாகக் காட்டுகின்ற, மாமுகன் - யானை முகமுடைய விநாயகக் கடவுளது, சரணவாரிசமலர் - திருவடித் தாமரை மலர்களை, (எடுத்துக் கொண்ட வேதாந்த சூடாமணியென்னும் நூல் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டு, மன மொழி மெய்களால் வணங்கி), தலையில் - (எமது) சிரத்தின் கண், (அதற்கணியாக), கொள்ளுவாம் - (யாம்) அணிவாம், (என்றவாறு). 1

2. சீர்கொண்ட வருமறையின் முடிமணியைத் தெய்வ சிகாமணியை யடியவர்தங் கண்மணியை மாயைப், பேர்கொண்ட விருளிரிக்குந் தினமணியை முக்கட் பெருமணியை யகத்தினுக்கோர் விளக்காக விருத்தி, யேர்கொண்ட விவேகசிந்தா மணியேனுநூ லதனு ளேடுத்தியம்பும் வேதாந்த பரிச்சேதப் பொருளை, நேர்கொண்ட தமிழ்விருத்த யாப்பதனுற் றெரிய நிகழ்த்துவன்வே தாந்தசூ டாமணியேன் றேன்றே.

# வேதாந்த சூடாமணி.

---

### சிறப்புப் பாயிரம்.

**1**. வேதமோரு நான்குமா றங்கமுநன் னியாய மீமாஞ்சை யோடு
மிருதி புராணமுமீ ரேழா, வோதலுறும் வித்தைகளா மவற்றுண்மீ
மாஞ்சை யுயர்ந்ததா யைந்நான்கத் தியாயமா யருத்த,பேதமுற விருகூறு
மவற்றுண்முதற் கூறே பிறங்குமருட் சைமினிசூத் திரரூப மாகிப்,போதுமீ
ராறத்தி யாயமாய்க் கருமப் பொருளுணர்த்திப் பூருவமீ மாஞ்சை
யெனப் படுமோல்.

---

## பிரகரணோற்பத்தி—நூல்வரலாறு.

### சதுர்த்தச வித்தை.

வினா:—**சதுர்த்தச வித்தைகள் எவை?**

விடை:—அவை வேதம் 4, வேதாங்கம் 6, வேதோபாங்க மென்னும் நியாயம் 1, மீமாம்சை 1, ஸ்மிருதி 1, புராணம் 1 என்பனவாம்.

### வேதம் - 4.

வினா:—**வேதங்கள் எவை?**

விடை:—அவை 1-இருக்கு, 2-யசுர், 3-சாமம், 4-அதர்வண மென்பனவாம்.

(இ - ள்.) வேதமொரு நான்கும் - ஒப்பற்ற இருக்கு முதலிய நான்கு வேதங்களும், ஆறங்கமும் - (சந்தசு முதலிய) ஆறங்கங்களும், நன்னியாயம் - சிறந்த நியாயமென்னும் தருக்கமும், மீமாஞ்சையொடு - மீமாம்சையும், மிருதி புராணமும் - ஸ்மிருதியும் புராணமும், (என), ஈரேழாக - பதினான்காக, ஓதலுறும்-சொல்லப்படுவன, வித்தைகளாம்-(சதுர்த்தச) வித்தைகளாம், அவற்றுள்-அவ்வித்தைகளுள், மீமாஞ்சை - மீமாம்சையானது, உயர்ந்ததாய் - சிறப்புடையதாய், ஐந்நான்கு அத்தியாயமாய் - இருபது அத்தியாய முடையதாய், அருத்த பேதமுற - பொருள் வேற்றுமை பொருந்த (இருத்தலால்), இருகூறும்-இரண்டு பாகமாக விளங்குவதாம், அவற்றுள் - அவ்விரண்டு பாகத்துள், முதற்கூறு - முதற்பாகம், பிறங்கும் - விளங்குகின்ற, அருள்-கருணையையுடைய, சைமினி சூத்திரரூபமாகி - சைமினி முனிவரால் சூத்திரவடிவமாகக் கூறப்பட்டு, போதுமீராறத்தியாயமாய் - (மாறுபாடின்றி நிகழ்ந்து) வருகின்ற பன்னிரண்டத்தியாய முடையதாய், கருமப்பொருளுணர்த்தி - (வேதத்தின்) கருமகாண்டப் பொருளை அறிவித்து (வருவதால்), பூருவமீமாஞ்சையெனப்படும் - பூர்வமீமாம்சை யென்று கூறப்படுவதாம், (எ - று). ஆல் - அசை. 1



(இ - ள்.) சீர்-(மக்கட்கு மேன்மைதரும்) உறுதிப்பொருளை, கொண்ட-(தம்மகத்துக்) கொண்டுள்ள, அருமறையின் - (எல்லை காண்டற்கு) அருமையாயுள்ள வேதங்களின், முடிமணியை-முடியின்கண் விளங்கும்(சிவ)மாணிக்கத்தை, தெய்வசிகாமணியை - (இந்திரன் முதலிய) இமையவர்களின் முடியின்கண் விளங்கும் (அன்பு) மாணிக்கத்தை, அடியவர்தங்கண்மணியை - அடியார்களது (அகக்) கண்ணில் விளங்கும் (இன்ப) மாணிக்கத்தை, மாயைப் பேர்கொண்ட இருளிரிக்கும் தினமணியை - மாயையென்னும் பெயரைக் கொண்டுள்ள அஞ்ஞானவிருளைக் கெடுக்கும் (ஞான) சூரிய மாணிக்கத்தை, முக்கட்பெருமணியை-(சூரியன் - சந்திரன் - அக்கினியென்னும்) மூன்று கண்களையுடைய பெரிய (ஈசுவர) மாணிக்கத்தை, அகத்தினுக்கு-(எனது) சித்தத்தின்கண், ஓர் விளக்காக இருத்தி - ஒப்பற்ற தீபமாகவைத்து, ஏர்-(சுருங்கச்சொல்லல் முதலிய) அழகு (பத்தும்), கொண்ட - (தன்னிடத்துக்) கொண்டுள்ள, விவேக சிந்தாமணியெனும் நூலதனுள் - விவேகசிந்தாமணி யென்னும் சாஸ்திரத்துள், எடுத்தியம்பும்-(சாரமாக) எடுத்துக் கூறப்படுகின்ற, வேதாந்த பரிச்சேதப் பொருளை - வேதாந்த பரிச்சேதமென்னும் ஒரு பகுதியின் அர்த்தத்தை, நேர் - (இலக்கண) அமைதியை, கொண்ட - (தன்னகத்துக்) கொண்டுள்ள, தமிழ் - தமிழ் மொழியின்கண், விருத்தயாப்பதனால் - விருத்தச்செய்யுளாலே, தெரிய - (மந்தாதி காரிகளுக்கும்) விளங்குமாறு, வேதாந்த சூடாமணி யென்றொன்று-வேதாந்த சூடாமணி யென்றொரு நூல் (ஆக), நிகழ்த்துவன் - (யான்) கூறுவன், (எ - று). 2



வினா:—இவை யாரால் சொல்லப்பட்டன?

விடை:—பரமேசுவரனால். வேதங்களுக்குக் கர்த்தாவில்லை; அவை அநாதியாம் எனக் கூறுவதுமுண்டு. (அநாதி - உற்பத்தி யில்லாதது.)

வினா:—இவ்வேதங்களுள் ஒவ்வொன்றும் எத்தனை யெத்தனை பேதமுடையதாம்?

விடை:—இருக்குவேதம் இருபத்தொரு பேத முடையதாம்; யசுர்வேதம் நூற்றொரு பேதமுடையதாம்; சாம வேதம் ஆயிரம் பேதமுடையதாம்; அதர்வண வேதம் ஒன்பது பேதமுடையதாம்.

## வேதவாக்கிய சொரூபம்.

வினா:—அவ்வேதங்கள் எவற்றைக் கூறுகின்றன?

விடை:—அவை விதிவாதம், அர்த்தவாதம், மந்திரவாதம், நாமதேயமென நான்கு பேதத்தால் சகல தர்மங்களையும் கூறுகின்றன. அவற்றுள்,

1. அரசனது கட்டளையைப்போல மக்களை நிஷேத (பாவ) கருமஞ் செய்யாதபடி திருப்பிச் சுப(புண்ணிய) கருமஞ் செய்ய வேண்டுமென்று விதிப்பது விதிவாதமாம்;

2. சுப கர்மங்களைப் படர்களைப் போலத் துதிசெய்வது அர்த்தவாதமாம்; (அரசனருகேயிருந்து அவனைப் புகழ்ந்து கூறுவோர் படர்.)

3. ஆசாரியனைப்போலச் செய்யத் தக்கனவற்றைக் காட்டுவது மந்திரவாதமாம்;

4. மாதாவையும் பிதாவையும்போல யாகாதிகளுக்குப் பெயரிடுவது நாமதேயமாம்.

## வேதாங்கம்-6.

வினா:—வேதாங்கம் எவை?

விடை:—அவை 1-சந்தசு, 2-கல்பம், 3-வியாகரணம், 4-சிட்சை, 5-சோதிஷம், 6-நிருத்தம் என்பனவாம். இவை முறையே அவ்வேதங்களுக்குப் பாதம், அஸ்தம், முகம், கிராணம், நேத்திரம், சுரோத்திரம்போ லிருப்பனவாம்.

1. சந்தசு: மந்திரம் - சுலோக முதலியவற்றிற்கு அட்சர கணிதம் செய்வதாம்;

2. கல்பம்: ஆசுவலாயன - போதாயன - ஆபஸ்தம்ப முதலிய சூத்திர வடிவத்தால் யாகப் பிரயோகாதிகளைக் கற்பிப்பதாம்;

3. வியாகரணம்: சப்த சித்தியைச் சமர்ப்பிப்பதாம்;

4. சிட்சை: உதாத்த - அநுதாத்த - ஸ்வரித-பிரசயமென்னும் சதுர்வித ஸ்வரகரண பூர்வகமான பதபாளிக்கிரம வேதாத்தியயனாதிகளைக் கூறுவதாம்; (பதபாளி - சொற்களின் வரிசை.)

5. ஜோதிஷம்: லக்கின - திதி - வார - நட்சத்திர- யோக-காரணாதிகளால் வைதிக கர்மங்களைச் செய்வதற்குரிய காலத்தைத் தெரிவிப்பதாம்;

6. நிருத்தம்: வைதிக சப்த நிர்வசனத்தை நியமிப்பதாம்.



## வேதோபாங்கம்.

### நியாயம்-1.

வினா:—நியாயம் எது?

விடை:—அது தர்க்க சாஸ்திரமாம். அது நியாயம் - வைசேடிகமென இரு வகைத்தாம்.

1. நியாய சாஸ்திரம் பிரமாண முதல் நிக்கிரகஸ்தான மீறுயுள்ள சோடச (பதினாறு) பதார்த்த நிரூபணஞ் செய்யும்;

2. வைசேடிக சாஸ்திரம் திரவிய முதல் அபாவ மீறுயுள்ள சப்த (ஏழு) பதார்த்த நிரூபணஞ் செய்யும்.

### மீமாம்சை-1.

வினா:—மீமாம்சை எது?

விடை:—அது தர்மத்தையும் பிரஹ்மத்தையும் ஆராய்ச்சி செய்யும் நூலாம். (மீமாம்சை - ஆராய்ச்சி). அது முறையே தர்ம மீமாம்சை அல்லது பூர்வ மீமாம்சை என்றும், பிரஹ்ம மீமாம்சை அல்லது உத்தர மீமாம்சை யென்றும் இருவகைத்தாம்.

### ஸ்மிருதி-1.

வினா:—ஸ்மிருதி எது?

விடை:—அது வர்ணாசிரம தருமங்களைக் கூறும் நூலாம்.

இது மநு, அத்திரி, ஹாரிதம், விஷ்ணு, யாஞ்ஞவற்கியம், உசனம், ஆங்கிரசம், யமம், ஆபஸ்தம்பம், சம்வர்த்தம், காத்தியாயநம், பிரகஸ்பதி, பராசரம், வியாசம், சங்கம், லிகிதம், தட்சம், கௌதமம், சாதாதபம், வசிஷ்டமென இருபதாம். இவற்றுள், மநு கிரேதா யுகத்திற்கும், கௌதமம் திரேதா யுகத்திற்கும், சங்கமும் லிகிதமும் துவாபர யுகத்திற்கும், பராசரம் கலி யுகத்திற்கும் முக்கியமாம்.

ஜாபாலி - நாசிகேத முதலிய உபஸ்மிருதி, இராமாயணம், பாரதம், சைவாகமம், வைணவாகமம், மந்திர சாஸ்திரம், சாங்கிய சாஸ்திரம், யோக சாஸ்திர முதலிய வெல்லாம் ஸ்மிருதியிலே அந்தர்க்கதமாம். இராமாயணம் பாரதமென்னு மிதிகாசம் வேதத்திலந்தர்க்கதமா மென்பது முண்டு. (அந்தர்க்கதம் - அடக்கம்).

### புராணம் - 1.

வினா:—புராணம் எது?

விடை: —அது சர்க்கம் (சிருஷ்டி), பிரதிசர்க்கம் (உபசிருஷ்டி), வம்சம், மனுவந்தரம், வம்சானுசரிதம் என்னும் பஞ்ச லட்சணங்களையும் சகல வைதிக தாந்திரிக கருமங்களையும் கூறும் நூலாம். இதன் பரமதாற்பரியம் வேதாந்தங்களின் (உபநிஷத்துக்களின்) பொருளை விளக்கிக் கூறுவதேயாம்.

இது பிரஹ்மம், பதுமம், விஷ்ணு, சைவம், பாகவதம், நாரதீயம், மார்க்கண்டேயம், ஆக்கிநேயம், பௌஷ்யத், பிரஹ்ம கைவர்த்தம், இலிங்கம், வராகம், ஸ்காந்தம், வாமநம், கூர்மம், மச்சியம், காருடம், பிரஹ்மாண்டம் எனப் பதினெட்டாம்.

இவற்றுள், சைவம், ஸ்காந்தம், இலிங்கம், கூர்மம், வாமநம், வராகம், பௌஷ்யத், மச்சியம், மார்க்கண்டேயம், பிரஹ்மாண்டமென்னும் பத்தும் சிவ புராணமாம்; நாரதீயம், பாகவதம், காருடம், விஷ்ணு என்னும் நான்கும் விஷ்ணு புராணமாம்; பிரஹ்மம், பதுமம் என்னுமிரண்டும் பிரஹ்ம புராணமாம்; பிரஹ்ம கைவர்த்தம் சூரிய புராணமாம்; ஆக்கிநேயம் அக்கினி புராணமாம்.

(வேதம், வேதாங்கம், நியாயம், மீமாம்சை, ஸ்மிருதி, புராணம் என்பன முறையே அறிவு நூல், உறுப்பு நூல், அளவை நூல், ஆராய்ச்சி நூல், அற நூல், தொன்மைநூல் என்று கூறப்படுவனவாம்.)

## அஷ்டாதச வித்தைகள்.

**வினு:—அஷ்டாதச வித்தைகள் எவை ?**

விடை:—அவை சதுர்த்தச வித்தையோடு உபவேதம் நான்குமாம். உபவேதம் நான்கும் இருக்கு முதலிய நான்கனுள் அந்தர்க்கதமாம்; இவ்வாறே சநத்குமாரம், நாரசிங்க முதலிய உப புராணங்கள் புராணங்களில் அந்தர்க்கதமாம்.

## உபவேதங்கள்.

**வினு:—உபவேதங்கள் எவை ?**

விடை:—அவை ஆயுள் வேதம், அர்த்தவேதம், தநுர்வேதம், காந்தருவ வேத மென்பனவாம்.

1. வியாதிநிதானம், வியாதிச்சின்னம், மந்திர ஔஷத சிகிச்சை யென்பவற்றால் ஆயுள் - ஆரோக்கிய முதலியவற்றைத் தெரிவிக்கும் நூல் ஆயுள்வேதமாம்.

2. தட்சிணை, ஆச்சியம் (நெய்), சரு (அவி) முதலிய உபகரணங்களால் தருமார்த்த முதலியவற்றைப் பெறும் வழியைக்கூறும் நூல் அர்த்த வேதமாம். நீதி சாஸ்திரம், அசுவசாஸ்திரம், சிற்பசாஸ்திரம், பாகசாஸ்திரம் முதலிய வெல்லாம் இதிலந்தர்க்கதமாம். (அவி - சோறு)

3. பகைவரை வெல்லுதற்குரிய மந்திரப்பிரயோகம், அஸ்திரப்பிரயோக முதலியவற்றைக் கூறும் நூல் தநுர்வேதமாம்.

4. சாமவேத முதலியவற்றின் ச, ரி, க, ம, ப, த, நி என்னும் சப்த ஸ்வர கீதங்களைக் கூறும் நூல் காந்தருவ வேதமாம்.

**வினு:—இருக்கு-யசுர்-சாமம்-அதர்வணமென்னும் வேதம் 4, சந்தசு-கல்பம்-வியாகரணம்-சிட்சை-சோதிஷம்-நிருத்தமென்னும் வேதாங்கம் 6, நியாயம்-மீமாம்சை-ஸ்மிருதி-புராணமென்னும் வேதோபாங்கம் 4 என்னும் சதுர்த்தச வித்தைகளுள் உயர்ந்தது எது?**



**2.** சாற்றியவச் சைமினிசூத் திரத்திற்கு மிக்க சாபரமேன் றொருபா
டி யம்புரியப் பட்ட, தேற்றமிகு மம்மீமாஞ் சைக்குமதம் பாட்ட மேன
வொன்று பட்டாசா ரியனுல்வந் தன்று, போற்றுமவன் சீடனு கியபிரபா
கரனுற் புகழ்பிரபா கரமேனவோர் மதாந்தரநன் கமைய, வாற்றியவச்
சாபரபா டியமதற்கு விளங்க வாக்கப்பட் டுலகமேலா மறிந்திடநின்
றதுவே.

---

விடை:—மீமாம்சை வேதார்த்தங்களை மிகத் தெளிவாகக் கூறுவதாக விருத்தலின், அஃதுயர்ந்ததாம்.

## மீமாம்சா சாஸ்திர விபரம். பூர்வ மீமாம்சை.

**வினு:—மீமாம்சா சாஸ்திரத்தின் விபரத்தைக் கூறல் வேண்டும்?**

விடை:—மீமாம்சா சாஸ்திரம் இருபதத்தியாய முடையதாம்; வேதத்தின் கர்மகாண்டப் பொருளையும், ஞாநகாண்டப் பொருளையும் வெவ்வேருகக் கூறும் வகையால் இரண்டு பாகமுடையதாம்; அவற்றுள், முதற்பாகம் ஜைமினி முனிவரால் சூத்திர வடிவமாகச் சொல்லப்பட்டுப் பன்னிரண்டு அத்தியாய முடையதாம்; கர்ம கர்த்திருப் பிரதிபாதகமாய், லோக வேதாதி காணமென்றற் றொடக்கத்துச் சகஸ்ர (ஆயிர) நியாயங்களால் கருமகாண்டப் பொருளைக் கூறுவதால் பூர்வ மீமாம்சை என்று கூறப்படுவதாம். (கர்மகர்த்திரு-கர்மத்தைச் செய்பவன்; பிரதிபாதகம் - கூறுவது) (1)

## பூர்வ மீமாம்சா சாஸ்திர உரை விகற்பம்.

பூர்வ மீமாம்சா சாஸ்திரமென்னும் அந்த ஜைமினி முனிவர் சூத்திரத்திற்குச் சபரரென்னு முனிவரால் ஒரு பாஷ்யம் (விருத்தியுரை) செய்யப்பட்

---

(இ - ள்.) அச்சைமினி சாற்றிய சூத்திரத்திற்கு-அந்தச் சைமினி முனிவர் கூறிய சூத்திரத்திற்கு, (சபரரென்னு முனிவரால்), மிக்க - (மேன்மை) மிக்க, சாபரமென்று - சாபரமென, ஒருபாடியம் புரியப்பட்டது - ஒரு பாஷ்யம் செய்யப்பட்டது; ஏற்றமிகும்-புகழ்மிக்க, அம்மீமாஞ்சைக்கு-அப்பூர்வ மீமாம்சைக்கு, பட்டாசாரியனுல்-பட்டாசாரியென்னும் முனிவரால், மதம்பாட்டமென-பாட்ட மதமென (கூறுமாறு மதாந்தரமாக), ஒன்று - ஒருரை, வந்தன்று - செய்யப்பட்டது, போற்றும் - (யாவரும் வணங்கித்) துதித்தற்குரிய, அவன் சீடனுகிய-அப்பட்டாசாரியாது சிஷ்யராகிய, பிரபாகரனுல் - பிரபாகரரென்னும் முனிவரால், நன்கமைய ஆற்றிய-(சபரமுனிவரால் பொருள் விளக்கம்) நன்ருகப் பொருந்தச் செய்யப்பட்ட, அச்சாபர பாடியமதற்கு - அச்சாபர பாஷியத்திற்கு, புகழ் - புகழத்தக்க, பிரபாகரமென - பிரபாகரமென்று (உரைக்குமாறு), ஓர் மதாந்தரம் - ஒருரை மதாந்தரம் (ஆக), விளங்க - விளங்குமாறு, ஆக்கப்பட்டு - செய்யப்பட்டு, உலகமெலாம் - (வைதிக) உலகத்தார் யாவரும், அறிந்திட - அறியுமாறு, நின்றது - (நிலைபெற்று) நின்றது, (எ - று).

**3.** உரைத்தவிரண் டாங்கூறு பிரமமுரைப் பதனு லுத்தரமீ மாஞ்
சையெனப் பட்டருள்கூர் வியாதன், றெரித்தசூத் திரவடிவ மாகியிரு
நான்கத் தியாயமா மவற்றுண்முத ஞன்கத்தி யாயம், விரித்தலுறு
தேவதா காண்டமெனப் பட்டு விளங்குறுந்தெய் வதவிலக் கணம்பல
பத் திரனு, னிரைத்துரைசெய் யப்படுமே ஞன்கத்தி யாய நிகழ்பிரம
காண்டமென வேநிகழ்த்தப் படுமால்.

---

டது ; அது சாபர பாஷியமென்று கூறப்படும். அந்தப் பூர்வ மீமாம்சா சாஸ்திரத்திற்குப் பட்டரென்னும் முனிவரால் மதாந்தரமாக ஒரு வார்த்திகம் செய்யப்பட்டது ; அது பாட்டமென்று கூறப்படும். அந்தப் பட்டரது சிஷ்யரான பிரபாகர முனிவரால் அந்தச் சாபர பாஷியத்திற்கு மதாந்தரமாக ஒருரை செய்யப்பட்டது. அது பிரபாகரமென்று கூறப்படும். இந்தப் பிரபாகரம் உலகமுற்றும் அறிந்து புகழ நிலை பெறுவதாயிற்று. (மதாந்தரம் - வேறு மதம் ; அஃதாவது அபிப்பிராய பேதம். வார்த்திகம் - செய்யுள் வடிவமா யுள்ள உரை. திருஞானசம்பந்த சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய "வாழ்க வந்தணர்" என்றற்றொடக்கத்துத் திருக்கடைக்காப்பிற்குச் சேக்கிழார் சுவாமிகள் பெரிய புராணத்தில் செய்யுள் வடிவமாக உரை திருவாய்மலர்ந்தருளி யிருப்பதும் வார்த்திகமாம்.) (2)

### உத்தர மீமாம்சை.

#### (1) தேவதா காண்டம்.

மீமாம்சையின் இரண்டாம் பாகம் வியாச முனிவரால் சூத்திரவடிவமாகச் சொல்லப்பட்டு எட்டு அத்தியாய முடையதாம் ; அது பிரஹ்ம சொரூபத்தைக் கூறுவதால் உத்தரமீமாம்சை என்று கூறப்படும். அவ்வெட்டு அத்தியாயத்துள் முன்னுள்ள நான்கத்தியாயம் தேவதாகாண்ட மெனப்படும் ; அதில் பலபத்திராமரால் தேவதைகளி னிலக்கணங்கள் மந்திர வாதத்தைப்போலக் கூறப்பட்டிருக்கின்றன.

---

(இ - ள்.) உரைத்த - (முற்)கூறிய, இரண்டாங்கூறு - (மீமாம்சையின்) இரண்டாம் பாகம், பிரமமுரைப்பதனுல் - (ஜீவப்) பிரஹ்ம (ஐக்கியத்தைக்) கூறுவதால், உத்தர மீமாஞ்சை யெனப்பட்டு- (ஆன்ரோரால்) உத்தரமீமாம்சை யென்று கூறப்பட்டு, அருள்கூர் - கருணைமிகுந்த, வியாதன் - வியாசமுனிவர், தெரித்த - திருவாய் மலர்ந்தருளிய, சூத்திர வடிவமாகி - சூத்திரரூபமாய், இருநான்கத்தியாயமாம் - எட்டத்தியாய முடையதாம், அவற்றுள் - அவ்வெட்டத்தியாயத்துள், முதனுன்கத்தியாயம் - முற்பகுதியவாய நான்கத்தியாயம், விரித்தலுறு - (தேவதைகளை உபாசனைசெய்யுங் கிரமத்தைக்) கூறுதல் பொருந்திய, தேவதாகாண்ட மெனப்பட்டு - தேவகாண்டமென்று கூறப்பட்டு, விளங்குறும்- விளங்குவனவாம், (அந்தத் தேவதாகாண்டத்துள்),தெய்வத இலக்கணம்-(மந்திர வாதம் போலத்) தேவதைகளின் இலட்சணங்கள், பலபத்திரனுல் - பலபத்திராமரால், நிரைத்து - முறையாய், உரைசெய்யப்படும் - கூறப்பட்டிருக்கின்றன, மேனுன்கத்தியாயம் - பிற்பகுதியவாய நான்கத்தியாயம், நிகழ்பிரமகாண்டமென - விளங்குகின்ற பிரமகாண்டமென்று, நிகழ்த்தப்படும் - கூறப்படும். 3



**4.** அப்பிரம காண்டத்துட் சிவமோடுயி ரயிக்க மறைதலாற் சங்கரா
சாரியனுங் குருவா, லொப்பரிய பாடியமோன் றுரைக்கப்பட் டதுபின்
னுரைத்ததற்கு விவரணு சாரியனேன் பவனுற், சேப்பரிய விவரணமாக்
குறப்பட்ட ததுவே தெரியின்வே தாந்தநூ லென்றுரைக்கப் படுமோ, லிப்
பேரிய வேதாந்த நூற்போருளி னகல மெங்ஙனமேன் றிடினுரைத்து
மியம்பியநூன் முறையே.

---

#### (2) பிரஹ்ம காண்டம்.

(மீமாம்சையின் இரண்டாம் பாகத்தின்) பின்னுள்ள நான்கத்தியாயம் பிரஹ்ம காண்ட மெனப்படும். (3)

### வேதாந்த சாஸ்திரம்.

அந்தப் பிரஹ்ம காண்டம் ஜீவப் பிரஹ்ம ஐக்கியத்தைக் கூறுவதால் அதற்கு ஸ்ரீ சங்கரபூஜ்ய பகவத் பாதாசாரிய சுவாமிகளவர்களால் ஒரு சிறந்த பாஷியமருளிச் செய்யப்பட்டது; (அந்தப் பாஷியத்திற்குப் பதுமபாத முனிவரால் பஞ்சபாதிகை யென்னுமோருரை செய்யப்பட்டது); பின்னர், அப்பாஷியத்திற்கே விவரணுசாரி யென்னும் பெரியாரால் விவரணமென்னும் ஒருரை செய்யப்பட்டது ; அவ்விவரணமே வேதாந்த சாஸ்திரமென்று கூறப்பட்டு வருகின்றது. (அந்தச் சங்கரபாஷியத்திற்கு வார்த்திகம், ராமாநந்தீயம், பிரஹ்மவித்தியாபரணமெனப் பல வியாக்கியானங்களும், பாமதி நிபந்தனமென்னு முரையும், அவ்வுரைக்குக் கல்பதருவென்னும் வியாக்கியானமும், அவ்வியாக்கியானத்திற்குப் பரிமளமென்னுமுரையு மிருக்கின்றன. இவ்வாறு விரிந்த சித்தாந்த சாஸ்திர மனைத்தும் வேதாந்த சாஸ்திரங்களாம்.) (4)

---

(இ - ள்.) அப்பிரமகாண்டத்துள் - அந்தப் பிரமகாண்டத்துள், சிவமொடுயிரயிக்கம் - பிரஹ்மாத்தும ஐக்கியம், அறைதலால்-கூறப்படுதலால், (அக்காண்டத்திற்கு), சங்கராசாரியனுங் குருவால் - ஸ்ரீ சங்கராசாரியென்னும் லோககுருவால், ஒப்பரிய-ஒப்பில்லாத, பாடியமொன் றுரைக்கப்பட்டது-பாஷியமொன்று செய்யப்பட்டது, பின் - பின்னே, உரைத்ததற்கு-(சங்கராசாரியர்) திருவாய்மலர்ந்தருளிய அப்பாஷியத்திற்கு, விவரணுசாரிய னென்பவனுல் - விவரணுசாரி யென்னும் பெரியாரால், செப்பரிய - சொல்லுதற்கரிய, விவரணம் - விவரணமென்னுமோருரை, ஆக்குறப்பட்டது-செய்யப்பட்டது, அதுவே-அவ்வுரையே, தெரியின் - ஆராய்ந்துரைக்குமிடத்து, வேதாந்த நூலென்றுரைக்கப்படும் - வேதாந்த சாஸ்திரமென்று சொல்லப்படுவதாம், இப்பெரிய வேதாந்த நூற்பொருளினகலம் - இம்மகத்தாய வேதாந்த சாஸ்திர அர்த்தங்களின் விரிவை, எங்ஙனமென்றிடின் - (நீ கூறுவது) எவ்வாறுமென்று வினுவின், இயம்பிய - (நிஜகுண யோகியார்) திருவாய்மலர்ந்தருளிய, நூன்முறையே - நூற்கிரமமாகவே, உரைத்தும் - (அதனைக்) கூறுவாம், (எ - று). 4

ஆக்கியோன் பெயர் முதலியன.

**5.** அருமறையின் பொருடெரித்த விவேகசிந்தா மணியதனு ளறைவேதாந்தப், பொருளினைமுந் நீர்வரைப்பி னுலகறியச் சேந்தமிழாற் புனைதல்செய்தான், பெருகுசுவை நறவொழுகு செஞ்சொன்மல ராற்புனைபாப் பெருந்தண் மாலை, கருமிடற்று வானவற்கே சாத்துசிவப் பிரகாசன் கவிஞர் வேந்தே.

---

*வேதாந்த விஷயம்*

மங்களாசரணத் திரயம்.

வினு:—**மங்களாசரணத் திரயம் எவை?**

விடை:—*அவை 1-வாழ்த்து (ஆசீர்வாதம்), 2-வணக்கு (நமஸ்காரம்), 3-வஸ்து நிர்த்தேசம் (பொருளியல்புரைத்தல்) என்பனவாம். இவை நூலாரம்பத்தில் அத்தியாவசியகமாகச் செய்தற்குரியனவாம். (இவற்றின் அவாந்தர பேதம் இருபத்தேழாம்.)*

வியாக்கியான பஞ்ச லட்சணம்.

வினு:—**வியாக்கியான பஞ்சலக்ஷணம் எவை?**

விடை:—*அவை 1-பதம், 2-பதார்த்தம், 3-வாக்கியயோசனை, 4-வினு, 5-விடை யென்பனவாம். (மூலக் கிரந்தத்திலுள்ள 1-பதத்தைப் பிரித்துரைத்தல், 2-பதப்பொருளுரைத்தல், 3-வாக்கியத்தின் முடிபொருளை ஆராய்ச்சி வாயிலாகக் கூறல், 4-அதிற்றோன்றும் வினுவைக் கூறல், 5-அதற்கு விடைகூறலென்பன வியாக்கியான பஞ்சலட்சணமாம்.)*

---

*(இ - ள்.) பெருகுசுவை நறவொழுகு - (அளவில்லாது) பெருகுகின்ற நவரசமென்னும் தேன் ஒழுகுகின்ற, செஞ்சொல்மலரால் - செவ்விய சொற்களாகிய மலர்களால், புனை-தொடுத்த, பாப்பெருந்தண்மாலை - பாடலாகிய பெருமையும் இனிமையும் வாய்ந்த மாலையை, கருமிடற்றுவானவற்கே - திருநீலகண்டத்தையுடைய சிவபெருமானுக்கே, சாத்து - தரிக்கின்ற, சிவப்பிரகாசன் - சிவப்பிரகாச சுவாமி (என்னும்), கவிஞர்வேந்து-பாவலர்க்கிறைவன், அருமறையின் பொருள்-(அதிகாரிகளல்லாதார் அறிதற்கு) அருமையாயுள்ள வேதார்த்தங்களை, தெரித்த-(விளக்கமாகக்) கூறிய, விவேகசிந்தாமணி யதனுள்-விவேகசிந்தாமணி யென்னும் நூலின்கண், அறை - சொல்லப்படுகின்ற, வேதாந்தப் பொருளினை-வேதாந்த பரிச்சேதத்தின் பொருள்களை, முந்நீர்வரைப்பின் - கடல் சூழ்ந்த உலகத்தின்கண் (உள்ள), உலகறிய-உயர்ந்தோர் கண்டு வியக்குமாறு, செந்தமிழால் - செந்தமிழ்ப் பாடலால், புனைதல்செய்தான் - (சுருங்கச் சொல்லல் முதலிய பத்தழகும் பொருந்த வேதாந்த சூடாமணியென்னும் ஒரு நூலாகப்) பொலிவுபெற இயற்றியருளினுன், (எ - று).*





*பொதுப்பாயிரம்*

**6.** வாய்த்தநூன் முகத்துரைக்கு மங்களாசரணை வாழ்த்துவணக் கோடுவத்து நிர்த்தேச மேனமூன், றூர்த்தபதம் பதப்போருளே வாக் கியயோ சனையே யறிவினு விடையிவையைந் துரையினிலக் கணமாங், கோத்துரைசெய் விசேடவிசே டியங்கருத்தா கருமங் கோள்கிரியை யிவையைந்தந் நுவயவிலக் கணமாஞ், சாற்றுமநு பந்தசதுட் டயநூற்கு விடயஞ் சம்பந்தம் பயனதிகா ரிகளேனநான் கறியே.

---

அந்வய பஞ்ச லட்சணம்.

வினு:—**அந்வய பஞ்சலட்சணம் எவை?**

விடை:—*அவை 1-விசேஷணம், 2-விசேஷியம், 3-கர்த்தா, 4-கருமம், 5-கிரியை யென்பனவாம். இவை அவ்வியாக்கியானத்தின் சம்பந்தமாம். (குலாலன் கருங்கடத்தை வனைந்தா னென்புழி 1-கருமையென்பது விசேஷணமாம்; 2-கடமென்பது விசேஷியமாம்; 3-குலாலனென்பது கருத்தாவாம்; 4-கருங்கடமென்பது கருமமாம்; 5-வனைந்தானென்பது கிரியையாம். இவை முறையே அடை, அடைகொளி, எழுவாய், செயப்படுபொருள், பயனிலை யென்று கூறப்படும். அந்வயம் - பொருள்கோளாம்; அஃதெட்டு வகையாம்.)*

அநுபந்த சதுஷ்டயம்.

வினு:—**அநுபந்த சதுஷ்டயம் எவை?**

விடை:—*அவை 1-விஷயம், 2-சம்பந்தம், 3-பிரயோசநம், 4-அதிகாரி என்பனவாம். (தன்னையறிந்த பின்னர் முமுட்சுவைக் கிரந்தத்தோடு பொருத்துவது அநுபந்தமாம்.)* (6)

---

*(இ - ள்.) வாய்த்த - (இலக்கண வமைதி) பொருந்திய, நூல்முகத்துரைக்கும் - நூலாரம்பத்தில் கூறப்படும், மங்களாசரணை - மங்களாசரணையானது, வாழ்த்து வணக்கொடு வத்துநிர்த்தேசமென மூன்று - வாழ்த்தென்னும் ஆசீர்வாதம் - வணக்கமென்னும் நமஸ்காரம்-வஸ்து நிர்த்தேசமென்னும் பொருளியல்புரைத்தலென்று மூன்று வகையாம், உரையினிலக்கணம் - (வியாக்கியான லட்சணமென்னும்) உரையினிலக்கணமானது, ஆர்த்த - (மூலக்கிரந்தத்தில்) சொல்லப்படுகின்ற, பதம் பதப்பொருளே வாக்கியயோ சனையே யறிவினுவிடை - பதம் - பதார்த்தம் - வாக்கிய யோசனை - (ஐயுற்றபொருளை) அறிதற்கு (உரிய) வினு-விடை (என்று), இவை ஐந்தாம் - இவ்வைந்து வகையாம், அந்நுவய விலக்கணம் - அந்நுவய இலக்கணமானது, கோத்துரை செய் - (அவ்வுரையின்கண்) சேர்த்துக் கூறப்படும், விசேட விசேடியங் கருத்தா கருமங் கொள்கிரியை - விசேஷணம் - விசேஷியம்-கருத்தா-கருமம்-(கருமமென்னும் செயப்படு பொருளைச்செய்யக்) கொள்கின்ற கிரியை (என்று), இவையாம் - இவ்வைந்து வகையாம், நூற்கு - சாஸ்திரங்களுக்கு (உரியனவாக), சாற்று - (அறிஞரால் சிறப்பித்துக்) கூறப்படும், அநுபந்த சதுட்டயம் - அநுபந்த சதுஷ்டயமென்பன, விடயம் சம்பந்தம் பயனதிகாரிகளென - விஷயம் - சம்பந்தம்-பயன்-அதிகாரி யென்று, நான்கு - நான்கு வகையவாம், அறி - (இவற்றை நீ) அறியக்கடவாய், (எ - று).*

**7.** விடயமது சிவசீவர் தமதேகத் துவமாம் விமலனோடு நூற்கறை
யப் படலறையுந் தன்மை, யடைதலுறு சம்பந்தம் பயன்றுயரே லாநீத்
தாநந்த பதம்பெறுதல் சாதனநான் கினையு, முடையவனே யதிகாரி
யென்றறைவ ரறிஞ ருரைத்தசா தனசதுட் டயநித்த வநித்தப், படுபொரு
ளின் விவேகமிக பரபோக விராகம் பழிப்பரிய சமைமுமுட் சுத்வ
மெனப் படுமோல்.

---

1-விஷயம்.

1. ஜீவப் பிரஹ்ம ஐக்கியமே (வேதாந்த சூடாமணி யென்னும் இவ்வேதாந்த சாஸ்திரத்தின்) விஷயமாம்;

2-சம்பந்தம்.

2. பிரஹ்மத்திற்கும் (இந்த) வேதாந்த சாஸ்திரத்திற்குமுள்ள பிரதிபாத்தியப் பிரதிபாதக பாவமே சம்பந்தமாம். (பிரதிபாத்தியம் - சொல்லப்படுவதாம்; பிரதிபாதகம் - சொல்வதாம். பிரஹ்மம் - பிரதிபாத்தியமாம்; வேதாந்த சாஸ்திரம் - பிரதிபாதகமாம். இந்தச் சம்பந்தம் எழுவகைத்தாம். பாவம்- தன்மை.)

3-பிரயோசநம்.

3. துன்பமனைத்தையு மொழித்து ஆநந்த வடிவமாக விளங்கும் நிலையைப் பெறுவதே (அஃதாவது சர்வ துக்க நிவிர்த்தி - பரமாநந்தப் பிராப்தி வடிவ மோட்சமடைதலே) (இந்த நூலின்) பிரயோசநமாம்.

4-அதிகாரி.

4. சாதன சதுஷ்டய முடையவனே (இந்தச் சாஸ்திரத்திற்கு) அதிகாரி யாவன்.

---

(இ - ள்.) விடயமது (அவ்வநுபந்த சதுஷ்டயத்துள்) விஷயமாவது, சிவசீவர் தமது - பிரஹ்மாத்துமாக்களின், ஏகத்துவமாம் - ஐக்கியத் தன்மையாம், அடைதலுறு - பொருந்துகின்ற, சம்பந்தம் - சம்பந்தமாவது, விமலனொடு நூற்கு - பிரஹ்மத்திற்கும் வேதாந்த சாஸ்திரத்திற்கும் (உள்ள), அறையப்படல் - சொல்லப்படுதலும், அறையுந்தன்மை - சொல்லுந்தன்மையுமாம், பயன் - பயனாவது, துயரெல்லாம் நீத்து - துன்பமனைத்தையு மொழித்து, ஆநந்த பதம் பெறுதல் - ஆநந்த (வடிவமாகவே விளங்கும்) நிலைமையை யடைதலாம், அதிகாரி - அதிகாரியென்பவன், சாதன நான்கினையு முடையவனே - (சாதன சதுஷ்டயமென்னும்) நான்கு சாதனங்களையு முடையவனே யாவன், என்றறைவ ரறிஞர் - என்று (இவ்வாறு அநுபந்த சதுஷ்டயத்தைக்) கூறுவர் அறிவுடையார், உரைத்த - கூறிய, சாதன சதுட்டயம்-சாதன சதுஷ்டயமென்பன, நித்தவநித்தப்படுபொருளின் விவேகம் - நித்தியமாகவும் அநித்தியமாகவும் பொருந்திய பொருள்களின் விவேகம் (நித்தியா நித்திய வஸ்து விவேகம்), இகபரபோகவிராகம் - இகலோகத்தும் பரலோகத்துமுள்ள போகங்களில் விருப்பமில்லாமை (இகாமுத்திரார்த்த பலபோகவிராகம்), பழிப்பரிய - பழிப்பில்லாத, சமை - சமை (முதலிய ஆறு குணங்களைப்பெறுதல்) (சமாதி சட்க சம்பத்தி), முமுட்சுத்வம் - முமுட்சுத்துவம் (மோட்ச விருப்பம்), எனப்படும்- என்று கூறப்படுவனவாம், (எ - று).





**8.** நித்தியமான் மாவேபோய் விடயமெலா மெனத்தேர் நிலைதரு
நித் தியாநித்திய வத்துவிவேகம்பின், மெத்திவரு மிகமோட முத் திரத்தில்
வருபோக விராகமிம்மை மறுமையுள விடயநுகர் வனைத்தும், பொய்த்
தழியு மிடும்பைமய மெனவிடுத லாகும் புகழ்சமையே முதலாய சட்
குணங்கள் பெறுதல், வைத்தசமை யியல்பாய முத்திவிருப் பதுவே
வயங்குமுமுட் சுத்துவமென் றறிந்திடுக மதித்தே.

---

[பிரஹ்மஞான சாத்தியமான மோட்சம் சாதனசதுஷ்டயமுடைய அதிகாரிக்கன்றி மற்றவர்க்குச் சித்திப்பதன்றாகலின், சாதன சதுஷ்டய சம்பன்னனே இந்தச் சாஸ்திரவாராய்ச்சி வாயிலாக மோட்சமடைவதற்கு அதிகாரியாவ (தகுதியுடையவனாவ) னென்பதாம்.]

சாதன சதுஷ்டயம்.

வினா:—**சாதன சதுஷ்டயமேவை?**

விடை:—அவை 1-நித்தியாநித்திய வஸ்து விவேகம், 2-இகா முத்திரார்த்த பலபோக விராகம், 3-சமாதிசட்க சம்பத்தி, 4-முமுட்சுத்துவ மென்பனவாம்.(7)

(1) நித்தியா நித்திய வஸ்து விவேகம்.

1. (சச்சிதாநந்த வடிவமாயுள்ள) ஆத்மாவே நித்தியமாம்; (அநார்த ஜடதுக்க வடிவமாயுள்ள) துவைதப் பிரபஞ்சமனைத்தும் அநித்தியமாம் (மித்தையாம்) என்று அவற்றை விசாரித்துத் திடமாகத் தெளிவதே நித்தியா நித்திய வஸ்து விவேகமாம். (நித்தியம் - அழியாதது; அநித்தியம் அழிவது; வஸ்து - பொருள்; விவேகம் - பகுத்தறிதல்; அநார்தம் - அசத்து.)

(2) இகா முத்திரார்த்த பலபோக விராகம்.

2. காணப்படும் இவ்வுலகத்திலும் கேட்கப்படும் அவ்வுலகத்திலும் (புண்ணிய லோகத்திலும்) அநுபவித்தற் குரியனவாயுள்ள மாலை-சந்தனம் - வநிதாதி விஷயமனைத்தும் கர்ம சாத்தியமாயிருத்தலின், மித்தையாம்; துக்க சாதனமாமென்று அவற்றின்றன்மையையறிந்து, அவற்றை வாந்திசெய்த அன்னம்-மலம்-

---

(இ - ள்.) நித்தியா நித்தியவத்து விவேகம் - (அச்சாதன சதுஷ்டயத்துள்) நித்தியா நித்திய வஸ்து விவேகமாவது, நித்தியமான்மாவே - (பிரஹ்ம சொரூபமாயுள்ள) ஆத்மாவே நித்தியமாம், பொய்விடயமெலாம்-(மாயாப் பிரபஞ்ச வடிவ) விஷயமனைத்தும் அநித்தியமாம், எனத்தேர்தரு நிலை - என்று (அவற்றைப்) பகுத்துணரும் நிலைத்த புத்தியாம், பின் - (அதன்) பின்னர், மெத்திவரும் - பொருந்தி வருகின்ற, இகமொடு அமுத்திரத்தில் வருபோக விராகம் - இகாமுத்திரார்த்த பல போக விராகமாவது, இம்மை மறுமையுள - இகலோகத்திலும் பரலோகத்திலுமுள்ள, விடய நுகர்வனைத்தும் - விஷயானுபவமனைத்தும், பொய்த்தழியும் - மித்தையாயொழிவனவாம், இடும்பை மயம் - துன்ப வடிவமாம், என - என்று (அவற்றையுணர்ந்து), விடுதலாகும் - (அவற்றிலுள்ள விருப்பத்தை) விடுதலாம், வைத்த - (அதன் பின்னர்ப்) பொருந்தி வருகின்ற, சமை - சமாதி சட்க சம்பத்தியாவது, புகழ் - (மேலோர்) புகழ்கின்ற, சமையே முதலாய - சமையே முதலாகவுள்ள, சட்குணங்கள் பெறுதல் - ஆறு குணங்களையும் பெறுதலாம், வயங்கு-(அதன்பின்) விளங்குகின்ற, முமுட்சுத்துவம் - முமுட்சுத்துவமாவது, இயல்பாய முத்தி விருப்பதுவே - இயல்பாகவுள்ள (சாயுச்சிய) மோட்சாபேட்சையே யாம், என்று மதித்து அறிந்திடுக-என்று (சாதன சதுஷ்டயங்களை) ஆராய்ந்தறிவாயாக, (எ - று). (அமுத்திரம் - மறுமை; வரு - வருகின்ற.)

**9.** சமைதமையே திதீக்கையுப ரதிசிரத்தை சமாதி சமைமுதலா மறுகுணங்க ளுட்கரண மடக்கல், சமைதமைதான் புறக்கரண மடக்கு தல்கா மாதி தணித்திடுகை திதீக்கைகரு மங்களனைத் தினையுஞ், சுமை யெனவே விடுதேலுப ரதிசுருதி குருவைத் துணிவினு னம்புமதே சிரத்தை குரு மோழிநேஞ், சமைவுறவே திட்பமுறல் சமாதியிச்சா தனஞ்சே ரதி காரி செயுங்குருசே வையினையெடுத் தியம்பில்.

---

மூத்திர முதலியவற்றைப்போலக் கண்டு அவற்றின்கண் சித்தத்தைச் செலுத்தா திருத்தலே இகாமுத்திரார்த்த பல போக விராகமாம்.

(இகம்-இவ்வுலகம்; அமுத்திரம் - அவ்வுலகம்; அர்த்தம் - பொருள்; பலம் - பிரயோசனம்; விராகம் - ஆசையின்மை.)

### (3) சமாதி சட்க சம்பத்தி.

சமாதி சட்க சம்பத்தியென்பது சமை, தமை, திதிட்சை, உபரதி, சிரத்தை, சமாதான மென்பனவற்றைப்பெறுதலாம். (8)

#### சமை.

1. அந்தக்கரண நிக்கிரகம் (உட்கரண மடக்கல்) சமையாம். (அந்தக் கரணம் - மனம், புத்தி, சித்தம், அகங்காரமென நால்வகைத்தாம்.)

#### தமை.

2. பாகிய கரண நிக்கிரகம் (வெளி யிந்திரிய மடக்கல்) தமையாம். (பாகியம் - வெளி; கரணம் - இந்திரியம்).

#### திதிட்சை.

3. காமாதி காரணமாக வரும் தாபத்திரயங்களைப் பொறுத்துக் கொள்ளல் திதிட்சையாம். [தாபத்திரயம்:—1. (தன்னை) உடம்பை)ப்பற்றி வரும் துன்பம், 2. பிறவுயிர்களைப்பற்றி வரும் துன்பம், 3. தெய்வத்தைப்பற்றி வருந் துன்ப மென்பனவாம்.]

---

(இ - ள்.) சமை முதலா மறுகுணங்கள் - (கூறிய) சமை முதலாகவுள்ள ஆறுகுணங்கள், சமைதமையே திதீக்கையுப ரதிசிரத்தை சமாதி - சமை - தமை - திதிட்சை - உபரதி - சிரத்தை - சமாதி - என்பனவாம், (அவற்றுள்), சமை - (சமமென்னும்) சமையாவது, உட்கரணமடக்கல் - (மனம் - புத்தி - சித்தம் - அகங்காரமென நான்காயுள்ள) அந்தக்கரணத்தை யடக்குதலாம், தமை தான் - (தமமென்னும்) தமையாவது, புறக்காணமடச்குதல் - (சுரோத்திரம் - துவக்கு - சட்சு - சிங்குவை - கிராணமென ஐந்தாயுள்ள) புறக்கரணங்களென் னும் இந்திரியங்களை யடக்குதலாம், திதீக்கை - திதிட்சையாவது, காமாதி தணித்திடுகை - காமம் வெகுளி முதலியவற்றை (அவை பெருகிவாராதபடி) தணியச்செய்தலாம், உபாதி - உபாதியாவது, கருமங்களனைத்தினையும் சுமை யெனவே விடுதல் - கருமமனைத்தையும் (இவை பெருஞ்) சுமைபோல்வனவா மென்று (கருதி) விடுதலாம், சிரத்தை - சிரத்தையாவது, சுருதிகுருவை - வேதத்தையும் குருநாதனையும், துணிவினுல் நம்புமதே - நிச்சயமாக நம்புவதே யாம், சமாதி - சமாதியாவது, குருமொழி - குருநாதனது உபதேச வாக்கியம், நெஞ்சமைவுறவே - மனத்தின்கண் பொருந்த, திட்பமுறல் - உறுதியாகவிருத் தலாம், இச்சாதனஞ்சேரதிகாரி - இச்சாதன (சதுஷ்டய)ங்கள் பொருந்தியுள்ள அதிகாரி புருஷன், செயும் குருசேவையினை - செய்யுங் குருசேவையை, எடுத் தியம்பில் - எடுத்துக்கூறுமிடத்து, (எ - று).





**10.** ஆத்தமுட னங்கமே தானஞ்சற் பாவ மாமவற்றுட் குருபர னுக் கனுகூல விருத்தி, யாத்தமுயர் குருபரன்குற் றேவலே யங்க மருட் குரவற் குரியமனை நிலமுதலா மவற்றைக், காத்தலது தானமாஞ் சற் குருவே மெய்யாக்கண்டசிவ மெனநம்பு மதுவேசற் பாவ, மேத்துகரு மம் பத்தி மிகுஞான காண்ட மேனுமிவற்றுன் மூவதிகா ரிகள்வேறு முளரால்.

---

#### உபரதி.

4. கரும மனைத்தையும் (இவை) சுமையாமென்றுணர்ந்து புத்தி பூர்வகமாக விடுதல் உபரதியாம். (கருமங்களைப் பயனேக்காது பகவத் பிரீதியாகச் செய் வதும் உபரதியாம்.)

#### சிரத்தை 1.

5. சுருதி வாக்கியத்தையும் குரு வாக்கியத்தையும், (இவையுண்மை வாக் கியமாமென்று) துணிவாக நம்புதலே சிரத்தையாம். (வேத வாக்கியத்திலும், குருவாக்கியத்திலும் பத்தி உறுதியாக விருந்தாற்றுன், அவற்றின்கண் நம் பிக்கை அல்லது விசுவாசமென்னும் சிரத்தையுண்டாம்.)

#### சமாதானம்.

6. குருவி னுபதேசத்தை மனத்தின்கண் பொருந்தத் திடமாகக் கொள்ளு தல் சமாதானமாம்.

### (4) முமுட்சுத்துவம்.

7. என்ஞான்றும் ஒரு தன்மையாயுள்ள மோட்ச விருப்பமே முமுட் சுத்துவமாம். (9)

### சதுர்வித குருசேவை.

வினு:—சதுர்வித குருசேவை எவை?

விடை.—அவை ஆப்தம், அங்கம், ஸ்தாநம், சத்பாவ மென்பனவாம்.

#### ஆப்தம்.

1. அந்தச் சாதன சதுஷ்டயமுடைய அதிகாரி குருவிற்குப் பிரியமாக வொழுகுதல் ஆப்தமாம்.

---

(இ - ள்.) ஆத்தமுடனங்கமே தானஞ்சற்பாவமாம் - (அக்குருசேவை) ஆப்தம் - அங்கம் - ஸ்தானம் - சத்பாவம் (என நான்கு) ஆம், அவற்றுள் - அந் நான்கனுள், ஆத்தம் - ஆப்தமாவது, குருபானுக்கு அனுகூல விருத்தி - குரு நாதனுக்கு அனுகூலமானவற்றைச் செய்தொழுகுதலாம், அங்கம் - அங்க மாவது, உயர்குருபரன் குற்றேவலே - (நற்குணங்களால்) உயர்ந்துள்ள குருநாத னுக்கு (அவனது கால் கழுவுதல் முதலிய) குற்றேவலைச் செய்தலாம், தானம் - ஸ்தானமாவது, அருட்குாவற்குரிய - அருளையுடைய குருநாதனுக்கு உரியனவாயுள்ள, மனைநில முதலாமவற்றைக் காத்தலது - வீடு விளைநில முதலிய வற்றைப் பாதுகாத்து வருதலாம், சற்பாவம் - சத்பாவமாவது, சற்குருவே - சற்குருநாதனே, மெய்யாக்கண்ட - பிரத்தியட்சமாகத் தரிசித்த, சிவமென நம்புமதுவே - பாமசிவமாவன் என்று (அவனை) நம்புவதாம், ஏத்து - (மேலோர்) துதிக்கின்ற, கருமம் பத்தி மிகுஞான காண்டமெனுமிவற்றுல்—கருமகாண்டம் - பத்திகாண்டம் - (மேன்மை) மிக்க ஞானகாண்டமென்னும் இம்மூன்றுல், வேறு மூவதிகாரிகளுளர் - (அவ்வதிகாரிக்கு) வேருக மூன்றதிகாரிகளிருக்கின்றனர், ()

**11.** உடம்பினையும் வருகுடும்பந் தனையுமியா னெனதென் றுளன்
கரும காண்டியெலாக் கிரியையுமீ சற்கே, திடம்பெறநின் றுக்குமவ
னேபத்தி காண்டி செயுங்கரும மனைத்தினுக்குங் கரிதானென் றிருப்
போன், மடந்தவிரு நன்ஞான காண்டியென லாகு மற்றுமுள ரைவ
ரோரு வர்க்கோருவ ருயர்வா, யடைந்தவதி காரிகளங் கவர்கருமி முமுட்
சோ டறையுமப்பி யாசியநு பவியுடனு ரூடன்.

---

அங்கம்.

2. குருபானுக்குக் குற்றேவல் செய்தல் அங்கமாம்; (அது கால் கழுவுதல், துணி தோய்த்தல், கால் பிடித்தல் முதலியனவாம்.)

ஸ்தாநம்.

3. குருவின் வீடு விளைநில முதலியவற்றைப் பாதுகாத்தல் ஸ்தானமாம். (இதனுல் சற்குரு மூர்த்தி இல்லறத்தாராகவு மிருப்பாரென்பது விளங்குவதாம்.)

சத்பாவம்.

4. சற்குரு மூர்த்தியை உண்மையாகக் கண்ட பரமசிவமென்று கருதி, அவரை நம்புவதே சற்பாவமாம். (பரமசிவமே மானுட வடிவங்கொண்டு சற்குருமூர்த்தியாய் அன்பர்க் கனுக்கிரகஞ் செய்ய வருகின்றதென்னும் குரு விசுவாச முடையார்க்குக் குருவினனுக்கிரகங் கிடைக்குமென்பதிங் குணர்தற் பாலதாம்.)

அதிகாரத்திரயம்.

வினு:—**அதிகாரத்திரய மேவை?**

விடை:—வேதம் கருமகாண்டம், பத்திகாண்டம், ஞானகாண்டமென மூன்று வகையாக விருத்தலின், அவற்றின் அதிகாரம் பற்றிக் கருமகாண்டி, பக்தி காண்டி, ஞானகாண்டி யென வேறு மூன் றதிகாரி களிருக்கின்றனர்; அவர் தம்முள், (10)

கருமகாண்டி.

1. தேகத்தில் யானென்னும் அபிமான வடிவ அகந்தையும், கிருக கிருத்

---

(இ - ள்.) உடம்பினையும் வரு குடும்பந்தனையும் - (அம்மூன்று காண்டிகளுள்) தேகத்தையும் (அது காரணமாக) வருகின்ற குடும்பத்தையும் (முறையே), யானெனதென் றுளன் - யான் எனது என்று (கருதி) இருப்பவன், கருமகாண்டி - கருமகாண்டியாவன், எலாக்கிரியையும் - கிரியையனைத்தையும், ஈசற்கே - பரமசிவனுக்கே (என்று ஈசுவரார்ப்பணமாக), திடம்பெற நின்றுக்குமவனே - உறுதியாக நின்று செய்பவனே, பத்திகாண்டி - பத்திகாண்டியாவன், தான்செயுங் கருமமனைத்தினுக்கும் - தான் செய்யும் கருமமனைத்திற்கும், கரியென்றிருப்போன் - (யான்) சாட்சியேயாவ னென்றிருப்பவன், மடந்தவிரும் - அறியாமை நீங்கிய, நல் ஞானகாண்டி - சிறந்த ஞானகாண்டியாவன், எனலாகும் - என்று (அவர்களைக்) கூறலாம், ஒருவர்க்கொருவருயர்வாய் - ஒருவர்க்கு ஒருவர் உயர்வாக, அடைந்த அதிகாரிகள் - பொருந்திய அதிகாரிகள், மற்றும் ஐவருளர் - இன்னும் ஐவரிருக்கின்றனர், அவர் - அவ்வைவர், கருமிமுமுட்சோடு அறையுமப்பியாசி யனுபவியுடனுரூடன் - கருமி - முமுட்சு - (சிறப்பித்துச்) சொல்லப்படுகின்ற அப்பியாசி - அனுபவி - ஆரூடன் (என்று கூறப்படுவர்), (எ - று).

அங்கு - ஓடு - உடன் என்பன - அசை நிலைகள். 11



**12.** மூடமோடு தன்சாதி கருமமே பற்றி முத்தனு மவனூறு பிறப்
பினிலோண் கருமி, நீடுலக மின்மையென நினைந்துபுறக் கரும நிட்டனுய்
முப்பிறப்பின் முத்தனு மவனே, நாடரிய முமுட்சுலகங் கனவெனக்
கண் டுள்ள நற்கருமஞ் சேர்ந்துபிறப் பிரண்டுளனப் பியாசி,வீடுலக விவ
கார நினையாமல் விவேக மேவியோர் பிறப்பினுன் முத்தனனு பவியே.

---

திய முதலியவற்றில் எனதென்னும் அபிமானவடிவ மமதையு முடையவன் கருமகாண்டியாவன். (கிருகம் - வீடு, கிருத்தியம் - ஸ்நான - சந்தியாவந்தன முதலிய கருமம்.)

பத்திகாண்டி.

2. தான்செய்யுங் கரும மனைத்தையும் உறுதியாகப் பயனேக்காம லீசுவரார்ப்பணஞ் செய்பவன் பத்திகாண்டியாவன்.

ஞானகாண்டி.

3. நினைத்தல் - உரைத்தல் - நடத்தல் முதலிய கரும மனைத்தையும் மனம் வாக்குக் காயங்கள் செய்கின்றன; அவை செய்யும் கரும மனைத்திற்கும் யான் சாட்சியாக விருக்கின்றேனென்ப துணர்ந்து, உணர்ந்தவா றிருப்பவன் (அஞ்ஞானம் நீங்கிய) ஞானகாண்டியாவன்.

இன்னும் வேறைந்ததிகாரிகளும் ஒருவர்க்கொருவர் உயர்வாக விருக்கின்றனர்.

அதிகார பஞ்சகம்.

வினு:—**அவ்வதிகாரிகள் எவர்?**

விடை:—அவர் கருமி, முமுட்சு, அப்பியாசி, அநுபவி, ஆரூடனென்பவராவர்; அவர்தம்முள், (11)

கருமி.

1. (ஆத்மாநாத்ம விசாரமில்லாமையாகிய) மூடத்தன்மையால், தன் ஜாதிக்

---

(இ - ள்.) (அவ்வைவருள்), மூடமொடு - அறியாமையால், தன்சாதி கருமமேபற்றி - தன்வருணத்திற்குரிய கருமங்களையே மேற்கொண்டு (ஒழுகி), நூறு பிறப்பினில் - நூறு பிறப்புக்களுள், முத்தனுமவன் - (சீவன்) முத்தனுதற்குரியவனே, ஒள் கருமி - சிறந்த கருமியாவன், நீடுலகம் - விரிவாகவுள்ள உலகம், இன்மை - அசத்தாம், என - என்று, நினைந்து - (அதனைப் பரோட்சமாய்த் தெளிவாக) அறிந்து, புறக்கரும நிட்டனுய் - பாகிய கரும நிஷ்டையுடையவனுய், முப்பிறப்பில் - மூன்று பிறப்புக்களுள், முத்தனுமவனே - (சீவன்) முத்தனுதற்குரியவனே, நாடரிய முமுட்சு - தேடியடைதற்கரிய முமுட்சுவாவன், உலகம் கனவெனக்கண்டு - (சாக்கிரப்) பிரபஞ்சத்தைச் சொப்பனப் பிரபஞ்சம்போல (மித்தையாம்) எனவுணர்ந்து, உள்ளம் - (தன்) சித்தத்துள், நற்கருமஞ்சேர்ந்து - சிறந்த தியானுப்பியாசம் பொருந்தி (இருக்க), பிறப்பிரண்டுளன் - இரண்டு பிறப்புக்களுள் (சீவன் முத்தனுதற்கு) உரியவனுயிருப்பவனே, அப்பியாசி - அப்பியாசியாவன், வீடு - (முன்)விட்ட, உலக விவகார நினையாமல் - உலக வியவகாரத்தைக் கருதாது, விவேகமேவி - (ஆத்மாநாத்ம) விவேகமடைந்து, ஓர் பிறப்பினுல் முத்தன் - ஒரு சன்மத்தில் (சீவன்) முத்தனுதற்குரியவனே, அனுபவி - அனுபவியாவன், (எ - று). பாகியம்-வெளி, கரும நிஷ்டை - குருபணிவிடை. 12

**13.** உலகநிலை தோன்றுமற் றன்றிகழ்ஞா னத்தா லுண்மைமுத்த
ஞமவனே யாரூடன் மற்று, மூலகமுதல் யாதேனத்தேர் வோடுகுருவை
யடைந்து முடம்பாதி போய்யேனக்கண் டருட்குருவை யடைந்து, முலகி
லோரு குரவன்றன் மகற்குபதே சஞ்சேய் துறக்கேட்டு முயர்தருஞா னிக
ளாகி முத்தி, யுலகுதோழு விவேகமோடு விரத்தி தேய்வ கதியா லுற்றிடு
வோர் மூவரதி காரிகளா குவரால்.

---

குரிய கருமத்தை (சாஸ்திரோக்தமாக) விடாது செய்து வருபவன் கருமியாவன். இவன் தன் சாதிக்குரிய கருமத்தை விடாதுசெய்து வருவானுயின், பையப் பையச் சித்த சுத்தி முதலியவற்றைப் பெறுவது வாயிலாகத் தனது நூறு பிறப்புக்களுள் முத்தி பெறுதற்குரியவனுவன்.

முமுட்சு.

2. இம்மாயாப் பிரபஞ்சம் அசத்தாமென்று அதனைச் சாஸ்திர விசார வாயிலாகவும் யுத்திவாயிலாகவும் பரோட்சமாக அறிந்து தெளிந்து, சற்குரு பணிவிடை செய்தலாகிய பாகிய கரும நிஷ்டனு (வெளிக் கருமத்தைச் செய்பவனு) யிருப்பவன் முமுட்சுவாவன். இவன் தனது மூன்று பிறப்புக்களுள் முத்தி பெறுதற் குரியனுவன்.

அப்பியாசி.

3. மாயாப்பிரபஞ்சம் சொப்பனவுலகம் போல்வதாமென்றுஅதனைத் தெளிவாக வறிந்து, அப்பியந்தாத்தில் (உள்ளே) தியான முதலிய நற்கருமங்களைச் செய்து வருபவன் அப்பியாசியாவன். இவன் தனது இரண்டு பிறப்புக்களுள் முத்திபெறுதற் குரியவனுவன்.

அநுபவி.

4. தான் விட்ட உலக வியவகாரத்தைச் சிறிதும் நினையாது ஆத்மாநாத்ம விவேக முடையவனு யிருப்பவன் அநுபவியாவன்; இவ னடுத்துவரு மொரு பிறப்பில் முத்தி பெறுதற்குரியவனுவன். (12)

ஆரூடன்.

5. தனது ஆத்ம ஞானத்தால் விசுவவிகிருதி (உலகநிலை) தோன்றுத

---

(இ - ள்.) உலக நிலை - உலக வியவகாரம், தோன்றுமல் - (சிறிதும்) தோன்றுது, தன்திகழ் ஞானத்தால் - விளங்குகின்ற தனது (ஆத்மாவின்) ஞானத்தினுல், உண்மை - உடனே (இச்சன்மத்திலேயே), முத்தனுமவனே - (சீவன்) முத்தனுதற்குரியவனே, ஆரூடன் - ஆரூடனுவன், மற்றும் - இன்னும், உலகில் - இவ்வுலகத்துள், உலகமுதல் யாது - உலகத்திற்கு மூலம் யாது, என - என்று (கருதுகின்ற), தேர்வொடு - விசாரத்துடனே, குருவையடைந்தும் - சற் குருவை யடைந்தும், உடம்பாதி - தேகாதிகளை, பொய்யெனக் கண்டு - அநித் தியமென் றுணர்ந்து, அருட்குருவை யடைந்தும் - கருணையுடைய குருநாதனை யடைந்தும்,ஒருகுரவன் - ஒரு ஞானுசிரியன், தன்மகற்கு - தனது சிஷ்யனுக்கு, உபதேசம் செய்துற - ஞானுேபதேசம் செய்ய, கேட்டும் - (அதனைப் பிறர் கூறக்) கேட்டும், (முறையே), உலகுதொழு - உயர்ந்தோர் (போற்றி) வணங் கும், விவேகமொடு - விவேகத்தாலும், விரத்தி - விரத்தியாலும், தெய்வ கதி யால் - தெய்வகதியாலும், உயர்தரு ஞானிகளாகி - மேன்மையைத் தருகின்ற தத்துவ ஞானிகளாய், முத்தி - மோட்சத்தை, உற்றிடுவோர் - அடைவோர், (ஆகிய), மூவர் - மூவர், அதிகாரிகளாகுவர் - (அவரினும் வேருய) அதிகாரி களாவர், (எ - று). (விரத்தி - வைராக்கியம்; உண்மை - உடன்.)





வின்றித் தன்மயமாகவே விளங்குகின்றவன் ஆரூடனுவன். இவன் சத்தியோ முத்தனுவன்; அஃதாவது உடனே (இந்தப் பிறப்பிலேயே) முத்தி பெறுதற் குரியவனுவன்.

இவ்வைவருள் பின்னவர் முன்னவரை நோக்க உயர்ந்தவராவார். இன்னும் விவேக முதலிய அதிகாரத்திரயத்தால் முத்தி பெறுவாருமுண்டு.

வேறு அதிகாரத் திரயம்.

விஞ:—**அவ்வதிகாரத்திரயம்** எவை?

விடை:—அவை விவேகம், விரக்தி, தெய்வகதி யென்பனவாம்; இவற் றுள், யாதாவதொன்றை யுடையோரும் முத்தி பெறுதற்குரியவராவர்.

விவேகம்.

1. மாயாப் பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானமா யிருப்பது யாது என்று விசாரணை செய்வதோடு சற்குருவை யடைந்து, அவரது உபதேசத்தால் பிரஹ்ம ஞானியாய் முத்தி பெறுவானெருவன்; இவ்வதிகாரி விவேகத்தால் முத்தி பெறுதற் குரியனுவன்.

விரக்தி.

2. தேகாதிப் பிரபஞ்சத்தை மித்தையென்றுணர்ந்து, போகத்திலுள்ள விருப்பத்தை யொழித்துச் சற்குருவை யடைந்து அவரது உபதேசத்தால் பிரஹ்ம ஞானியாய் முத்திபெறுவான் மற்ெருருவன்; இவ்வதிகாரி விரக்தி யால் (வைராக்கியத்தால்) முத்திபெறுதற் குரியவனுவன்.

தெய்வகதி.

3. ஒரு சற்குரு மூர்த்தி தன் சிஷ்யனுக்குத் தத்துவோபதேசஞ் செய்ய, அதனைப் பிறர் சொல்லக்கேட்டு, கேட்டவுடனே பிரஹ்ம ஞானியாய் முத்தி பெறுவான் இன்ெனுருவன். இவ்வதிகாரி தெய்வகதியால் (நிஷ்காமிய புண் ணிய கருமத்தின் பரிபாகத்தால்) முத்திபெறுதற் குரியவனுவன். (13)

**14.** சாதகர்க ளாஞ்சீடர் பேதத்தாற் குரவர் தாமும்போ தக குருவே முதலாக விருநாற், பேதமடை குவரவருட் போதகன்முன் னூலிற் பெரும்பொருள்கூ றிடுபவன்றத் துவந்திகழ்த்து பவனே, வேத கனல் வசியாதி யாலிம்மை யின்பம் வெந்துயரங் குதவுமவ னிசிதகுரு வறத்தைப், போதகஞ்செய் திருமையினு மின்பமருள் பவனே புகழ் தருகா மியகுருவென் றறைகுவர்மு தறிஞர்.

---

அஷ்ட குரு.

வினா:—**குரவர் சாதகராயுள்ள சிஷ்யர்க்கு உபதேசஞ் செய்யும் அதிகார பேதத்தால் எத்தனை விதமாக விருப்பர்?**

விடை:—அவர் போதககுரு, வேதககுரு, நிஷித்தகுரு, காமியகுரு, சூசககுரு, வாசககுரு, காரககுரு, விகிதகுருவென எண்வகையாக விருப்பர்.

போதக குரு.

1. சுருதி - ஸ்மிருதி முதலிய சாஸ்திரங்களின் பொருள்களைச் சிஷ்யர்க்குப் போதிப்பவன் போதக குருவாவன்.

வேதக குரு.

2. சிஷ்யர்க்குத் தத்வார்த்தங்களை விளங்கக்கூறி யறிவிப்பவன் வேதக குருவாவன்.

நிஷித்த குரு.

3. சிஷ்யர்க்கு வசியம், ஆகருஷண முதலிய வித்தைகளைக் கற்பித்து, அவற்றின் வாயிலாக இம்மையில் சுகத்தையும், மறுமையில் கொடிய துக்கத்தையும் தருபவன் நிஷித்த குருவாவன்.

காமிய குரு.

4. சிஷ்யர்க்குத் தருமோபதேசஞ் செய்து, அது வாயிலாக இம்மையிலும் மறுமையிலும் இன்பத்தை விளைவிப்பவன் காமியகுருவாவன். (தருமோப

---

(இ - ள்.) சாதகர்களாம் சீடர் - (முத்திபெறுதற்பொருட்டுச்) சாதனஞ் செய்பவராகிய சிஷ்யர்க்கு, பேதத்தால் - (உபதேசம் செய்யும் அதிகார) பேதத்தினால், குரவர்தாமும் - ஆசிரியர்களும், போதக குருவே முதலாக - போதகாசிரியர் முதலாக, இருநாற்பேத மடைகுவர் - எண் வகைப்படுவர், அவருள் - அவ்வெண்மருள், (சிஷ்யர்க்கு), முன்னூலிற் பெரும்பொருள் - (எந்நூலிற்கும்) முன்னூலான வேதத்தின் பெரிய பொருளை, கூறிடுபவன் - போதிக்கின்றவனே, போதகன் - போதக குருவாவன், தத்துவம் திகழ்த்துபவனே - (இஃது இன்ன தத்துவமாம்; இஃது இன்ன தத்துவமாம் எனத்) தத்துவங்களை விளங்கச் செய்கின்றவனே, வேதகன் - வேதக குருவாவன், நல்வசியாதியால் - சிறப்புள்ள வசியம் ஆகருஷண முதலியவற்றால், இம்மை - இகலோகத்தில், இன்பம் - சுகத்தையும், அங்கு - அப்பரலோகத்தில், வெந்துயர் - கொடிய துக்கத்தையும், உதவுமவன் - கொடுக்கின்றவனே, நிசிதகுரு - நிசிதகுருவாவன், அறத்தைப் போதகஞ்செய்து - அறநூலை யுபதேசஞ்செய்து, இருமையினும் - (இம்மை மறுமையென்னும்) இரண்டுலகத்திலும், இன்பமருள்பவனே - சுகத்தைத் தருகின்றவனே, புகழ்தரு - (யாவரும்) புகழுகின்ற, காமிய குரு - காமிய குருவாவன், என்று - என்று (இவ்வாறு ஆசிரியர் பாகுபாட்டினை), மூதறிஞர் - பேரறிவுடையார், அறைகுவர் - கூறுவர், (எ-று),

14



**15.** சூசகனும் விவேகத்தாற் சமைமுதலாங் குணங்க டொகுப் பவன்போய் விடயமென வான்மவிருப் பருள்வோன், வாசகனுஞ் சிவ சீவ ரயிக்கியஞா னத்தை வழங்குமவன் காரகனை யந்தவிர்த்து நிலைத்த, வாசகலு முத்தியருள் பவன்விகித குருவா மதிகாரி யிவராவ ரெனமுன் னர்க் கூறு, நேசமுறு சீடர்தம்மு ளொருவன்முத் தாப நெருப்பினால் வெந்துசிந்தா குலமுடைய னாகி.

---

தேசம் - காமியகருமஞ் செய்யும் வகையை விவரித்துக் கூறல். இம்மை-இப்பிறப்பு; மறுமை - வருபிறப்பு.) (14)

சூசக குரு.

5. சிஷ்யர்க்கு நித்தியாநித்தியவஸ்து விவேகத்தை யுண்டாக்குவது வாயிலாக, சமை-தமை - திதிட்சை - உபரதி - சிரத்தை - சமாதானமென்பவற்றை யொருங்கே வருமாறு செய்பவன் சூசக குருவாவன்.

வாசக குரு.

6. சிஷ்யர்க்கு விஷய மனைத்தும் மித்தையென்று கூறுவது வாயிலாக, ஆத்மாவின்கண் விருப்ப முண்டாக்குகின்றவன் வாசக குருவாவன்.

காரக குரு.

7. சிஷ்யர்க்குச் சீவப் பிரஹ்ம ஐக்கிய ஞானோபதேசஞ் செய்பவன் காரக குருவாவன். (காரக குரு - காரணகுரு வென்பன ஒரு பொருட் கிளவிகளாம்.)

விகித குரு.

8. சிஷ்யர்க்கு அவர்தம் ஐயத்தை நீக்குவது வாயிலாக நித்தியமாயுள்ள மோட்சத்தை யருள்செய்கின்றவன் விகித குருவாவன்.

(விதிப்படி வேதாந்த சாஸ்திரங்களைக் கற்குமாறு கற்று, வேதாந்த நிஷ்டையுடையவனாகி, தன்னைச் சரணாகதியாக வடைந்த சிஷ்யர்க்கு மீண்டும் ஐயமுண்டாகாதவாறு தத்துவோபதேசஞ் செய்து, அவர்தம் அஞ்ஞானத்தை நீக்குபவனே விகித குருவாவனென் றிங்குணர்தல் வேண்டும்.) (15)

---

(இ - ள்.) விவேகத்தால் - (ஆத்மாநாத்ம) விவேக வாயிலாக, சமை முதலாங்குணங்கள் - சமை முதலாகவுள்ள ஆறு குணங்களையும், தொகுப்பவன் - ஒருமிக்க வரச்செய்கின்றவனே, சூசகனும் - சூசககுருவாவன், விடயம் பொய்யென - (மாயாப் பிரபஞ்ச வடிவ) விஷயங்கள் மித்தையாம் என்று (கூறுவது வாயிலாக), ஆன்ம விருப்பருள்வோன் - ஆத்மாவின்கண் விருப்பமுண்டாகச் செய்கின்றவனே, வாசகனும் - வாசக குருவாவன், சிவசீவ ரயிக்கிய ஞானத்தை - ஆத்மப்பிரஹ்ம ஐக்கிய ஞானத்தை, வழங்குமவன் - (உபதேச வாயிலாகக்) கொடுக்கின்றவனே, காரகன் - காரக குருவாவன், ஐயந்தவிர்த்து - சந்தேகத்தை நீக்கி (அது வாயிலாக), நிலைத்த-நிலைபெற்ற, ஆசகலுமுத்தி - குற்றமற்ற மோட்சத்தை, அருள்பவன் - கொடுக்கின்றவனே, விகித குருவாம் - விகிதகுருவாவன், அதிகாரியிவராவரென - இவர்தாம் அதிகாரிகளாவரென்று, முன்னர்க்கூறும் - முற்கூறப்பட்ட, நேசமுறு சீடர்தம்முள் - அன்புபொருந்திய சீடருள், ஒருவன் - ஒருவன், முத்தாப நெருப்பினால் - தாபத்திரயாக்கினியால், வெந்து - வெதும்பி, சிந்தாகுல முடையனாகி - வியாகூல சித்தனாய், (எ - று).

15

**16.** நானாரிப் பவமேனக்கு வந்தவா றேன்கோ னசிப்பதேவ
ராலேனவாய்ந் தலர்கரங்கோண் டேகி, யானுநற் கல்வியறி வடக்கம்
வை ராக மாதியாங் குணமுடைச்சற் குருவையடைந் தேதிர்மண்,
ணூனரப் பணிந்தேழுந்தன் பாற்கரங்கள் குவித்தே யுறவழுத்தி யருட்
குருவே யேன்பாசத் தழிவு, தானுமேத் திறத்தினு லேனவினவல் சீடன்
றனதுவிதி வத்துபசன் னத்துவமா மன்றே.

---

சிஷ்யன் விதிவத் உபசந்நத்துவம்.

வினு:—சிஷ்யன் விதிவத் உபசந்நத்துவங் கூறல் வேண்டும்?

விடை:—அது, மேற்கூறிய சிஷ்யருள் ஒருவன் (தன்னைப்பற்றி வரும் துன்பம், பிறவுயிரைப்பற்றி வருந் துன்பம், தெய்வத்தைப்பற்றி வரும் துன்பம் என்னும்) தாபத்திரயாக்கினியால் வெதும்பி (நொந்து), வியாகூல சித்தமுடையவனாய், நான் யார்? எனக்கிச் சம்சாரம் வந்த விதம் எப்படி? இச்சம்சாரம் எவரால் நசிப்பதாம்? என்று விசாரணை செய்து, (யான் ஜாதி-குல-கோத்திர முதலியவற்றால் மேம்பாடுடையவனென்னும் புத்தியை யொழித்து), பத்திரம்-புஷ்பம்-பழ முதலியவற்றைத் தன் கையிற்கொண்டு சென்று, வித்தை (கல்வி யறிவு), விவேகம் (ஆத்மாநாத்ம ஞானம்), விநயம் (அடக்கம்), விராகம் (வைராக்கியம்) முதலிய நற்குணங்களைத் தனக்கியல்பாக வுடைய சற்குருவை (சரணாகதியாகப் பக்தி விசுவாசத்தோடு) அடைந்து, (அக் குருவிற்கு) எதிரே வந்து, (அக்குருவின் திருவடியின்கண்) பூமியிலே தன் னுடம்பு (இரண்டு பாதம், இரண்டு கை, இரண்டு தோள், மார்பு, நெற்றியென்னு மெட்டுறுப்பும்) தோயும்படி வணங்கி, (அக்குரு எழுந்திருக்கக் கடவாயென்று கூறியபின்) எழுந்து, அன்புடனே தனது கரமிரண்டையும் சிரமீது வைத்துக் கூப்பி, அக் குருமூர்த்தியை ''அடியேனை யாள வருள்மேனி சாத்திப் படிமீது வந்த பரனே'' என்றற்றொடக்கத்தனவற்றைக் கூறி மிகுதியாகத் துதித்து, அருட்குரு மூர்த்தியே! எனது சம்சாரத்தினாசம் எவ்வாற்றாலாமென்று வினுவுவதாம். இவ்வாறவன் வினுவுவது சிஷ்யன் விதிவத் உபசந்நத்துவமாம் (விதிப்படி சரணமடையுந் தன்மையாம்). (16)

(இ - ள்.) நானார் - நானென்பதன் பொருள் யாது, எனக்கு - எனக்கு, இப்பவம் - இந்தப் பிறப்பு, வந்தவாறென் - வந்த விதம் எவ்வாறாம், எவரால் நசிப்பது - (இது) எவரால் கெடுவதாம், என ஆய்ந்து - என்று (அவற்றை) ஆராய்ச்சி செய்து, (தனது மேன்மை யனைத்தையும் விட்டு), அலர் - (பத்திரம்) புஷ்பம் (பழ முதலியவற்றை), கரங்கொண்டேகி - கையிலெடுத்துக்கொண்டு சென்று, ஆனாத - கெடாத, நற்கல்வி - சிறந்த (வேதாந்த) வித்தை, அறிவு - (விவேக) ஞானம், அடக்கம் - விநயம், வைராகம் - வைராக்கியம், ஆதியாம் - முதலாகிய, குணமுடைய-நற்குணங்களையுடைய, சற்குருவையடைந்து - சற்குரு மூர்த்தியையடைந்து, எதிர் - (அவர்) முன்னே (வந்து), (அவரை), மண் ஊனுரப்பணிந்து - மண்ணின்கண் (தனது) உடம்பு பொருந்த வணங்கி, எழுந்து - எழுந்து (நின்று), அன்பால் - (பய)பத்தியோடு, கரங்கள் குவித்து - கைகளைக்கூப்பி, (சிரசின்மீது வைத்துக்கொண்டு), உறவழுத்தி - மிகுதியாகத் தோத்திரஞ் செய்து, அருட்குருவே - அருளையுடைய சற்குரு மூர்த்தியே, என்பாசத்தழிவு - எனது அஞ்ஞானத்திற்கு நாசம், எத்திறத்தினால் ஆம் - எந்தவிதத்தாலாம், எனவினவல் - என்று கேட்டு விண்ணப்பஞ் செய்வதே, சீடன் தனது - சிஷ்யனது, விதிவத் துபசன்னத்துவமாம் - விதிப்படி சரண மடையுந் தன்மையாம், (எ - று). கொல் - தான் - அன்று - ஏ - என்பன அசை நிலைகள். 16



**17.** அனையவன ததிகாரந் தேரிந்தருளா னோக்கி யஞ்சலோம்
பேன்றபய கரஞ்சிரத்தி லிருத்திப், புனையவருஞ் சுருதியுத்தி யாலவன
தனுன்ம புத்தியினை யோழித்துத்தா தான்மியவாக் கியத்தா, னினைவ
ரிய வோருபிரம நீயேயேன் றுள்ள நிலையையுணர்த் துதல்குரவ னுபதேச
மாகு, மினையவுப தேசமுறை யுத்தேச முடனே யிலக்கணஞ்சோ தனை
யேனுமூன் றினையுமுடைத் தாமால்.

---

குருபதேசம்.

வினு:—சற்குரு மூர்த்தி தம்மை விதிப்படி சரண மடைந்த சிஷ்யனுக்கு எவ்வா றுபதேசஞ் செய்வர்?

விடை:—அவர் தம்மை விதிப்படி சரணமடைந்த சிஷ்யனது பக்குவத்தைப் பல வகையாலும் ஆராய்ந்து பார்த்து, இவன் தத்துவோபதேசம் பெறுவதற்கு அருகனவனென் றுணர்ந்தபின் அவனைக் கிருபையோடு பார்த்து, அன்பனே! நீ பிறவித்துன்பத்திற்கு அஞ்ச வேண்டாம்; நாம் கூறும் உறுதி மொழிகளைப் பாதுகாக்கக்கடவா யென்று கூறி, அபயாஸ்தத்தை அவனது சிரத்தின்மீது வைத்து, சுருதி வாக்கியத்தாலும் யுக்தியாலும் (அநுபவத்தாலும்) அவனது தேகான்ம புத்தியையொழித்து, தாதாத்மிய வாக்கியமென்னும் தத்துவமசி மகா வாக்கியத்தின் பொருளைக் கூறுவதுவாயிலாகப் பிரஹ்ம சொரூபமாகவே நீ யிருக்கின்றாயென்று (சுருதி - யுக்தி - அநுபவத்திற்கு ஒத்து) உள்ள நிலையை அவனுக்கறிவிப்பர்; இவ்வா றறிவிப்பதே சற்குருவினுபதேசமாம். தாதாத்மியம் - அபேதம்; அஃதாவது ஒற்றுமை.

உபதேசக் கிரமம்.

வினு:—இவ் வுபதேசக்கிரமம் எவ்வா றிருக்கும்?

விடை:—போதிக்கும் வகையென்னும் அவ் வுபதேசக் கிரமம் உத்தேசம், இலக்கணம், பரீட்சையென்னு மூன்றனையுமுடையதா யிருக்கும். (17)

(இ - ள்.) அனையவனது - (அவ்வாறு வினுவிய) அச்சிஷ்யனது, அதிகாரந் தெரிந்து - பக்குவத்தை (சோதனை செய்து) அறிந்து, அருளால் - கருணையோடு, நோக்கி - (அவனை) பார்த்து, அஞ்சல் - (நீ) அஞ்சற்க, ஓம்பு - (யாம் அருள்வதை) பாதுகாக்கக் கடவாய், என்று - என்று கூறி, அபயகரம் - அபயாஸ்தத்தை, சிரத்திலிருத்தி - (அவனது) சிரத்தின்மீது வைத்து, புனைய வரும் - (சுரத்தினால்) அழகமைய வருகின்ற, சுருதி - சுருதி வாக்கியத்தாலும், யுத்தியால் - யுத்தியினாலும், அவனது அனான்ம புத்தியினை - அவனுடைய (தேகாதி) அநாத்ம புத்தியை, ஒழித்து - நீக்கி, தாதான்மிய வாக்கியத்தால் - (சீவப்பிரஹ்ம அபேதங்கூறும்) தத்துவமசி மகா வாக்கிய உபதேசத்தாலே, நினைவரிய - நினைத்தற்கரிய, ஒரு பிரம நீயேயென்று-ஒப்பற்ற பரப்பிரஹ்மம் நீயேயென்று, உள்ளநிலையை - யதார்த்த நிலையினை, உணர்த்துதல் - அறிவித்தலே, குரவனுபதேசமாகும் - குருவினது உபதேசமாம், இனையவுபதேச முறை - இவ் வுபதேசக்கிரமம், உத்தேசமுடனே யிலக்கணம் சோதனையெனு மூன்றினையும் - உத்தேசம் இலக்கணம் பரீட்சையென்னும் மூன்றையும், உடைத்து - உடையதாம், (எ - று), உடன் - ஆல் - அசைநிலைகள். 17

**18.** அறியவுணர்த் துறுபொருளை நாமமாத் திரத்தா லறைந்திடுத லுத்தேச மாங்களகம் பளமாங், குறியுடைய தானெனல்போ லப்பொரு ளிற் சிறந்த குறியுரைத்த லிலக்கணமவ் விலக்கியமாம் பொருளிற், செறி வுறுமவ் விலக்கணமுண் டோவிலையோ வென்னத் தெரிந்திடுதல் பரிட் சையோர் பொருளறிந்து பெறற்குப், பொறியுறல்செய் காட்சியா மள வைமுத லாகப் பொருந்துபிர மாணங்க ளெட்டுளவா மன்றே.

---

உத்தேசம்.

1. சற்குருமூர்த்தி சிஷ்யனுக்கு விளங்க அறிவிக்கும் பொருளைப் பெயர் மாத்திரமாகக் கூறுவது உத்தேசமாம்.

இலக்கணம்.

2. ஆ(பசு) களகம்பளமாம் குறியினையுடைய தென்று கூறுவதுபோல, அப்பொருளிலுள்ள சிறந்த குறியினைக் கூறல் இலக்கணமாம். (களம் - கண்டம், கம்பளம் - அலைதாடி, அஃதாவது ஆடுதோல்.)

பரீட்சை.

3. அவ்விலக்கியப் பொருளில் அவ் விலக்கண மிருக்கிறதா? இல்லையா? என்று அவ்விலக்கணத்தை யாராய்ச்சி செய்து பார்த்தல் பரீட்சையாம். (பிரஹ்மப் பொருளின் பெயரைக் கூறுதல் உத்தேசமாம்; ஆவிற்குச் சிறந்த குறி களகம்பள மாதல்போல, அதற்குச் சிறந்த குறி சச்சிதாநந்த மாமெனல்இலக்கணமாம்; அந்தப் பிரஹ்மப்பொருளில் சச்சிதாநந்த விலக்கணமிருக்கின்றதா? இல்லையா? என்றவ்விலக்கணத்தை யாராய்ச்சி செய்து பார்த்தல் பரீட்சையாம். இவ்வாறே உலகுயிர் முதலியவற்றையும் உத்தேச முதலியவற்றாலுணர்தல் வேண்டும்.)

அஷ்டப் பிரமாணம்.

வினா:—ஒரு பொருளை யறிந்து பெறுவதற்கு எவை வேண்டும்?

விடை:—பிரமாணங்கள் வேண்டும்.

---

(இ - ள்.) (அம்மூன்றனுள்), அறிய - (சிஷ்யன்) அறியும்படி, உணர்த்துறு பொருளை - (அவனுக்கு) அறிவிக்கும் பொருளை, நாமமாத்திரத்தால் - பெயர் மாத்திரமாக, அறைந்திடுதல் - (ஆசிரியர்) கூறுதல், உத்தேசமாம் - உத்தேசமாம், களம் - கண்டத்தின்கண், கம்பளமாம் - கம்பளம்போலும் ஆடுதோல் ஆகிய, குறியுடையது - அடையாளமுடையது, ஆனெனல்போல - ஆவென்பதுபோல, அப்பொருளின்-அந்தப் பொருளினது, சிறந்தகுறி - சிறந்த அடையாளத்தை, உரைத்தல் - கூறுதல், இலக்கணம் - (அசாதாரண தருமமென்னும்) இலக்கணமாம், அவ்விலக்கியமாம் பொருளில் - அந்த இலக்கியமாகிய பொருளின்கண், செறிவுறும்-பொருந்திய, அவ்விலக்கணமுண்டோ-அந்த இலக்கணம் இருக்கின்றதோ, இலையோ-இல்லையோ, என்னத்தெரிந்திடுதல்-என்றாராய்ந்தறிவது, பரிட்சை - பரீட்சையாம், ஓர் பொருளறிந்து பெறற்கு - ஒரு பொருளை (இன்னதென்று) உணர்ந்தடைதலாகிய சித்திக்கு, உறல்செய் - (விஷயங்களிற் சென்று) கூடுகின்ற, பொறி - இந்திரியங்கள் (ஆகிய), காட்சியாமளவை - பிரத்தியட்சமாகிய பிரமாணம், முதலாக - முதலாக, பொருந்து பிரமாணங்கள் - பொருந்துகின்ற பிரமாணங்கள், எட்டுளவாம்-எட்டு (வகையாக) இருப்பனவாம், (எ - று). அன்று - ஏ - அசைநிலைகள்.

18





**19.** கடமுதலா மவற்றினது காண்கையது தானே காட்சிபுகை யாலங்கி ஞானமனு மானந், திடமருவு மவ்வனுமா னம்பதிஞை யேது திட்டாந்த மெனுமங்க முடைத்தவற்றுட் பதிஞை, யிடமலைவெவ் வழ லுடைத்தென் பதுபுகையுண் மையினு லெனலேது மடைப்பளிபோ லென்பதுதிட் டாந்த, முடைமையுண ராத்தனுரை யானதிதீ ராதி யுறு கனியா திகளுண்மை ஞானமா கமமாம்.

---

வினா:—அந்தப் பிரமாணங்கள் எத்தனை?

விடை:—அவை பிரத்தியட்சம், அநுமானம், ஆகமம், அருத்தாபத்தி, உவமானம், அநுபலத்தி, சம்பவம், ஐதிகமென எட்டாம். (18)

வினா:—பிரமாணத்தி னிலக்கணங் கூறல் வேண்டும்?

பிரமாண இலக்கணம்.

விடை:—பிரமையின் கரணம் பிரமாணமாம்; பிரமை - பிரமாணத்தாலுண்டாகும் ஞானமாம்; கரணம் - சிறந்த காரணமாம்.

வினா:—பிரத்தியட்சப் பிரமாண முதலியவற்றினியல்பினைக் கூறல் வேண்டும்?

---

(இ - ள்.) (அந்தப் பிரமாணங்களுள்,) கடமுதலாமவற்றினது-கடமுதலாகவுள்ள அப்பொருள்களின், காண்கையது தானே - பிரத்தியட்ச ஞானத்திற்குச் சிறந்த காரணமாயுள்ள நேத்திர முதலிய இந்திரியங்களே, காட்சி - பிரத்தியட்சப்பிரமாணமாம், புகையால்-(இம்மலை) புகையுடையதென்னும் ஞானத்தால், அங்கி ஞானம் - (அது) நெருப்புடையதென்னும் ஞானம், அனுமானம் - அனுமானப் பிரமாணமாம், (இங்குப் புகை ஞானம் - அனுமானப் பிரமாணமாம்), திடமருவும் - உறுதியமைந்த, அவ்வனுமானம் - அந்த அனுமானம், பதிஞையேது திட்டாந்தமெனும் - பிரதிஞ்ஞை - ஏது - திருஷ்டாந்தமென்று கூறப்படுகின்ற, அங்கமுடைத்து - (மூன்று) அவயவ முடையதாம், அவற்றுள் - அம்மூன்றனுள், இடமலை - பெரியதாயுள்ள (இம்) மலை, வெவ்வழலுடைத்தென்பது - வெம்மையாய அக்கினியுடைய தென்பது, பதிஞை - பிரதிஞ்ஞையாம், புகையுண்மையினுலெனல் - புகையுடைமையாலென்பது, ஏது - ஏதுவாம், மடைப்பளிபோலென்பது - அடுக்களைப்போலென்பது, திட்டாந்தம்-திருஷ்டாந்தமாம்,உடைமையுணர்-(உள்ளவாறு) பொருள்களினிருப்பை யுணர்ந்துள்ள, ஆத்தனுரையால் - ஆப்தனது வார்த்தையால், நதிதீராதி - ஆற்றங்கரை முதலியவற்றின்கண், உறு - பொருந்திய, கனியாதிகள் - பழமுதலியன, உண்மைஞானம் - (இருக்கின்றனவென்னும்) யதார்த்த ஞானம், (உண்டாமிடத்து அவ் வார்த்தை), ஆகமமாம் - ஆகமப் பிரமாணமாம், (எ - று). தான்-அசை.

'கடமுதலா மவற்றினது காண்கையது தானே' என்பதற்கு (நேத்திர முதலிய இந்திரியங்களுக்குக்) கட முதலாகவுள்ள அப்பொருள்களினு பிரத்தியட்ச ஞான முண்டாதலே எனு பொருள் கூறுவதும் பொருந்தும்.

19

### 1. பிரத்தியட்சப் பிரமாணம்.

விடை :—1. கட முதலியவற்றின் பிரத்தியட்ச ஞானத்தில் சட்சு (நேத்திர) முதலிய இந்திரியங்களே பிரத்தியட்சப் பிரமாணமாம். இது கடமென்று அதனைக் கண்ணிந்திரியத்தா லறியுமிடத்து, கண்ணிந்திரியம் பிரமாணமாம்; கடம் பிரமேயமாம்; அதன் ஞானம் பிரமையாம்; ஏனைய இந்திரியங்களிலும் பிரமாணத்தினியல்பை இவ்வாறே அறிக. பிரத்தியட்சப் பிரமையின் காணம் பிரத்தியட்சப் பிரமாணமாம்; சிலவிடத்துச் சத்தமும் பிரத்தியட்ச ஞான காரணமாம்.

### 2. அனுமானப் பிரமாணம்.

2. இம்மலை தீயுடையது, புகை யுடைமையால் என்னுமிடத்துப் புகை யுடைமையினது ஞானம் தீ யுடைமையின் ஞானத்தை யுண்டாக்குவதா யிருத்தலின், இம்மலை தீயுடையதென்னும் ஞானத்திற்குப் புகை யுடைமையாலென்னும் ஞானம் அநுமானப் பிரமாணமாம்.

அநுமிதிப் பிரமையின் காணம் அநுமானப் பிரமாணமாம்; இலிங்க ஞானத்தாற் றோன்றும் ஞானம் அநுமிதியாம். இம்மலை புகையுடையதென்று மலையில் புகையின் பிரத்தியட்ச ஞானமுண்டானவிடத்துத் தீயின் ஞானமுண்டாகின்றது. இங்குப் புகையின் ஞானம் இலிங்க ஞானமாம்; அஃது அநுமானப் பிரமாணமாம்; அதனாலுண்டாகும் தீயின் ஞானம் அநுமிதியாம். அவ்வனுமானம்: பிரதிஞ்ஞை, ஏது, திருஷ்டாந்தமென மூன்றவயவ முடையதாம்; அம்மூன்றனுள்,

பிரதிஞ்ஞை.

(1) இம்மலை நெருப்புடையது என்பது பிரதிஞ்ஞையாம்;

ஏது.

(2) புகை யுண்மையால் என்பது ஏதுவாம்;

திருஷ்டாந்தம்.

(3) மடைப்பள்ளிபோல என்பது திருஷ்டாந்தமாம். (மடைப்பள்ளி-சமையலறை; திருஷ்டாந்தம் - உதாரணம்).

### 3. ஆகமப் பிரமாணம்.

3. ஆற்றங்கரை முதலியவற்றுள் பழ முதலிய பொருள்களிருத்தலை யுணர்ந்த ஆப்தனது வாக்கியத்தால் ஆற்றங்கரை முதலியவற்றுள் பழமுதலிய பொருள்க ளிருத்தலை யுணருமிடத்து, அவ்வாக்கியம் ஆகமப் பிரமாணமாம்.

ஆகமப் பிரமாணம் சத்தப்பிரமாண மென்பன ஒரு பொருட்கிளவிகளாம்.
சாப்திப் பிரமையின் காணம் சப்தப் பிரமாணமாம்; யதார்த்தத்தைக் கூறுவோன் வாக்கியம் சப்தப்பிரமாணமாம்; அதனாலுண்டாகும் ஞானம் சாப்திப் பிரமையாம். இங்குப் பரமேசுவரனாற் சொல்லப்பட்ட வேதங்களும், அவற்றை மூலமாக வுடைய சாஸ்திரங்களும், பிறவும் சப்தப் பிரமாணங்களாம். வச்சிரஹஸ்தன் புரந்தரனென்பது வைதிக வாக்கியமாம்; ஆற்றங்கரையி விரண்டு பழங்களுள என்பது லௌகிக வாக்கியமாம். ஆப்தன் - உண்மை கூறுவோன்.





**20.** பகற்போழுதுண் ணானொருவ னிளையாமை கண்டு பரிந்திர வூண் கற்பித்தல் காணருத்தா பத்தி, யகத்தினிலை யுறுதேவ தத்தனேனி லிருப்ப னவன்வேறோ ரிடத்திலெனத் தேரிந்திடுத றன்னைத், தகப்பேரியர் கேள்வியருத் தாபத்தி யேன்பர் தகுபசுவோ டோக்குமரை யேனு மோழிகேட் டிருந்தோன், புகப்படரும் வனத்திலதன் விடயஞா னந் தான் போருந்துதலே யுவமானப் பிரமாண மாகும்.

---

### 4. அருத்தாபத்திப் பிரமாணம்.

4. அருத்தா பத்திப் பிரமையின் காணம் அருத்தாபத்திப் பிரமாணமாம். அருத்தாபத்தி யென்பது அர்த்தஸ்ய ஆபத்தி யெனப் பிரிபடும்; அதன் பொருள் அர்த்தத்தின் (பொருளின்) கற்பனையென்பதாம். அது திருஷ்டாருத்தாபத்தி (காட்சிப் பொருட்பேறு), சுருதாருத்தாபத்தி (கேள்விப் பொருட்பேறு) என்றிருவகைத்தாம்; அவற்றுள்,

திருஷ்டாருத்தாபத்தி.

(1). பகற்காலத்தி லுணவுண்ணாதுள்ள ஒருவனது உடம்பு இளையாதிருத்தலைக்கண்டு, அவனதுடம்பு இளையாது பருத்திருத்தற்குக் காரணம் அவனிரவின்கண் உணவினை யுண்ணுதலாமென்று அவனிடத்து இராப் போஜ

---

(இ-ள்) (அருத்தாப்பத்திப் பிரமாணம் இருவகைத்தாம்; அவ்விரண்டனுள்), பகற்பொழுது - பகற்காலத்தில், உண்ணானொருவன் - (உணவு) உண்ணாத ஒருவனது உடம்பு, இளையாமை - இளையாதிருத்தலை (பருத்திருத்தலை), கண்டு-பார்த்து, பரிந்து- விரும்பி, இராவூண் - (காணப்படும் பருமைக்குக் காரணமான) இராப்போஜனத்தை, கற்பித்தல் - கற்பித்தல், காணருத்தாபத்தி - திருஷ்டாருத்தாபத்தியாம், (ஒருவன்), உறு - பொருந்திய, தேவதத்தன் - தேவதத்தனென்பவன், அகத்தினிலை - வீட்டின்கணில்லை, எனில் - என்று கூறின், (அதனைக்கேட்ட மற்றொருவன் தான் கேட்ட அவ்வசனத்திற்கு), அவன் - அத்தேவதத்தன், வேறோரிடத்தில் - மற்றோரிடத்தின்கண், இருப்பனென - இருப்பனென்று, தெரிந்திடுதல் தன்னை - ஆராய்ந்து நோக்கிப்பொருள் கொள்ளுவதை, தகப்பெரியர் - மிகப்பெரியோர், கேள்வியருத்தாபத்தி யென்பர் - சுருதார்த்தாபத்தியென்று கூறுவர், தகு - தகுதியுடைய, பசுவோடொக்கும் மரை - ஆவையொக்கும் ஆமா, எனுமொழி - என்னும் வாக்கியத்தை, (பிறர்கூற), கேட்டிருந்தோன் - கேட்டிருந்த ஒருவன், படரும் - விஸ்தாரமாகவுள்ள, வனத்தில் - (ஒரு) காட்டின்கண், புக - சென்று, (ஆமாவைக்கண்டு), அதன் - அவ்வாமாவின்கணுள்ள ஆவொப்புமை ஞானத்தால், விடயஞானம் - (ஆவின்கண் ஆமாவின் ஒப்புமை ஞானமாகிய) விஷயஞானத்தை, தான் பொருந்துதலே - தானடைதலே, உவமானப்பிரமாணமாகும்—உவமானப்பிரமாணமாம், (எ - று).

னத்தைக் கற்பிக்கு மிடத்து, இளையாமை யிரவுண்டலால் பொருந்து மன்றி வேறோ ராற்றாற் பொருந்தா தென்பது பெறப்படுவதாம். இங்கு இளையாமை (பருமை) பொருந்தாமையால் இரவுண்டல் கற்பிக்கப்படுதலின், பருமை பொருந்தாமையின் ஞானம் திருஷ்டாருத்தாபத்திப் பிரமாணமாம் ; அதனால், இரவுண்டலைக் கற்பித்தல் திருஷ்டாருத்தாபத்திப் பிரமையாம்.

சுருதாருத்தாபத்தி.

(2.) ஒருவன் தேவதத்தன் வீட்டிலில்லை யென்று கூறினால், அதனைக் கேட்டமற்றொருவன் அத்தேவதத்தன் வேறோரிடத்தி லிருப்பானென்பதை ஆராய்ந்து கற்பிக்குமிடத்து, தேவதத்தனது ஜீவனம் அவன் வேறோரிடத் திருத்தலால் பொருந்துமன்றி வேறோராற்றாற் பொருந்தாதென்பது பெறப்படுவதாம். இங்கு ஜீவனம் பொருந்தாமையால் வேறோரிடத்திருத்தல் கற்பிக்கப் படுதலின், ஜீவனம் பொருந்தாமையின் ஞானம் சுருதாருத்தாபத்திப் பிரமாணமாம் ; அதனால், வேறோரிடத்திருத்தலைக் கற்பித்தல் சுருதாருத்தாபத்திப் பிரமையாம்.

## 5. உவமானப் பிரமாணம்.

5. உவமிதிப் பிரமையின் கரணம் உவமானப் பிரமாணமாம். ஆவை (பசுவை) யொக்கும் ஆமா (கவயமென்னும் காட்டுப் பசு) என்னும் வாக்கியத்தை வனவாசி யொருவன் சொல்லக் கேட்டிருந்தவன் ஒருகால விசேஷத்தில் தான் சென்ற காட்டினிடத்து ஆமாவைக்கண்டவிடத்து, அவனுக்கு அவ்வாமாவின்கணுள்ள ஆவொப்புமை ஞானத்தால் ஆவின்கண் ஆமாவின் ஒப்புமை ஞான முண்டாவதாம். இங்கு ஆமாவில் ஆவொப்புமையின் ஞானம் உவமானப் பிரமாணமாம்; ஆவில் ஆமாவின் ஒப்புமை ஞானம் உவமிதியாம். பேதசகித சமான தருமம்- ஒப்புமை(சாதிருசியம்) எனப்படும்.





**21.** இந்நிலனிற் கடமில்லை யென்பதனாற் றோன்று மின்மை யுணர் வபாவமா மாயிரமா கியவெண், டன்னிலொரு நூறெனுமெண் ணுண்டெனுஞா னந்தான் சம்பவமா மிம்மரத்தி லியக்கனுள னென் னுஞ், சொன்னிகழ்வில் வருமியக்க விடயவுணர் வதனைச் சொற்றிடுவ ரறிஞரை திகமென்ன வளவை, யென்னவிவண் டொகுத்துரைத்த காட்சி முத லாய வெண்வகையிற் சமயர்கோள லின்னவென வுரைப்பாம்.

## 6. அநுபலத்திப் பிரமாணம்.

6. அபாவப் பிரமையின் கரணம் அநுபலத்திப் பிரமாணமாம். அபாவத்தின் யதார்த்த ஞானம் எதனா லுண்டாகின்றதோ அஃது அநுபலத்திப் பிரமாணமாம். அபாவம் - இன்மை, உபலத்தி - விளக்கம், அநுபலத்தி - விளங்காமை.

ஒருவனுக்கு இந்நிலத்தில் கடம் விளங்கவில்லை யென்னுங் காரணத்தினால் ஈண்டுக் கடமில்லையென்னும் ஞான முண்டாவதாம் ; அந்த ஞான முண்டாவதற்குக் காரணம் அந்தக் கடத்தின் விளங்காமையாகிய அபாவமாம். இங்குக் கடத்தின் விளங்காமை யென்னும் அபாவம் அநுபலத்திப் பிரமாணமாம்; கடமில்லை யென்னும் யதார்த்த ஞானம் அபாவப் பிரமையாம்.

---

(இ - ள்.) இந்நிலத்தில் - இப்பூமியின்கண், கடமில்லை - கடமானது விளங்கவில்லை, என்பதனால் - என்னுங்காரணத்தால், தோன்றும் - (ஈண்டுக் கடமில்லையெனத்) தோன்றுகின்ற, இன்மை உணர்வு - (கடத்தின்) அபாவ ஞானம், அபாவமாம் - அனுபலத்திப் பிரமாணமாம், (ஈண்டுக் கடமில்லை யென்பதன்கண் கடம் விளங்காமை அஃதில்லை யென்பதற்குச் சிறந்த காரணமா யிருத்தலின், அவ் விளங்காமையே அனுபலத்திப் பிரமாணமாமென்க.), ஆயிரமாகிய வெண்டன்னில் - ஆயிரமென்னும் எண்ணின்கண், ஒருநூறெனுமெண் - ஒரு நூறென்னும் எண், உண்டெனும் ஞானந்தான் - உண்டென்னும் ஞானமே, சம்பவமாம் - சம்பவப்பிரமாணமாம், இம்மரத்தில் - இந்த (ஆல) மரத்தின்கண், இயக்கனுளன் - யட்சனிருக்கின்றான், என்னும் சொல் - என்கின்ற வார்த்தை, நிகழ்வில் - விளங்கி வருதலாலே, வரும் - உண்டாகின்ற, இயக்க விடய வுணர்வதனை - (இவ் வாலமரத்தின்கண் யட்சனிருக்கின்றான் என்னும்) யட்ச விஷய ஞானத்தை, ஐதிகமென்ன - ஐதிகப் பிரமாணமென்று, அறிஞர் - அறிவுடையோர், சொற்றிடுவர் - கூறுவர், அளவையென்ன - பிரமாணங்களென்று, இவண் தொகுத்துரைத்த - ஈண்டுத் தொகுத்துக்கூறிய, காட்சி முதலாய - பிரத்தியட்ச முதலிய, எண்வகையில் - அஷ்டப் பிரமாணங்களுள், சமயர்கொளல் - (சார்வாகன் முதலிய) சமய வாதிகள் கொள்ளுதல், இன்னவென - இவையாமென்று, உரைப்பாம் - கூறுவாம், (எ - று).

**22.** புகலுலகா யதனுக்குக் காட்சியோன்றே சைன புத்தவைசே
டியர்கடமக் கிரண்டனுமா னத்தோ, டுகலருஞ்சாங் கியர்க்குமூன் றுரை
யோடுநோன் குவமை யோடுநியாயர்க் கருத்தா பத்தியோடைந் தாகு, மிகு
பிரபா கரர்க்கா று மபாவமோடு பாட்ட வேதாந்தி கட்காகு மெனவறிக
தேரிவுற், றிகலருமோண் புராணிகர்க டமக்களவை யெட்டா மேன்
றுரைப்பர் சம்பவவை திகங்களுட னன்றே.

---

7. சம்பவப் பிரமாணம்.

7. ஆயிரமென்னு மெண்ணில் நூறென்னும் எண் உண்டென்னும் ஞானத்தில் ஆயிரமென்னும் ஞானம் சம்பவப் பிரமாணமாம்; நூறு உண்டென்னும் ஞானம் அதனாலுண்டாகிய பிரமையாம். ஆயிரமென்னும் எண் நூறென்னும் எண்ணின்றிச சம்பவியா தாகலின், ஆயிரமென்னு மெண்ணில் நூறென்னும் எண் இருக்கின்றதென்பதாம்.

8. ஐதிகப் பிரமாணம்.

8. இவ்வாலவிருட்சத்தில் இயக்கனிருக்கின்று னென்னும் சொல் நிகழ்ச்சியால் வரும் இவ்வாலவிருட்சத்தில் இயக்கனிருக்கின்று னென்னும் ஞானத்தில், சொல் நிகழ்ச்சி ஐதிகப் பிரமாணமாம்; இவ்வால விருட்சத்தில் இயக்கனிருக்கின்று னென்னும் ஞானம் அந்தப் பிரமாணத்தின் பயனும்.

இம் மரத்தில் பே யிருக்கிறதென்று பிறர் கூற, அதனால் மற்றவர்க்கு இம் மரத்தில் பே யிருக்கின்றதென்னும் ஞானம் பரம்பரையாக வுண்டாகின்ற தென்பதாம்.

அஷ்டப் பிரமாணங்களுள் சமயிகளின் கோட்பாடு.

வினு:—இவ்வாறு தோதத்துக் கூறிய அஷ்டப் பிரமாணங்களுள், உலோகாயதன் முதலாயினேர் எவ்வேப் பிரமாணத்தை அங்கீகரித் திருக்கின்றனர்? (21)

---

(இ - ள்.) புகல்-(ஈசனில்லை; உயிரில்லையென்றற் றொடக்கத்தனவற்றைக்) கூறுகின்ற, உலகாயதனுக்கு - உலோகாயதனென்னும் சார்வாகனுக்கு, காட்சியொன்றே - பிரத்தியட்சமொன்றே (பிரமாணமாம்), சைன புத்த வைசேடியர்கள் தமக்கு - சைனர் - புத்தர் - (தார்க்கிகருள் ஒரு பகுதியாரான) வைசேடியர் என்பவர்க்கு, அனுமானத்தோடு - அனுமானத்துடன் (பிரமாணம்), இரண்டு - இரண்டாம், உகலரும்-கெடுதலில்லாத, சாங்கியர்க்கு-(சைவரோடு) சாங்கியர்க்கு, உரையொடு - ஆகமத்துடன் (பிரமாணம்), மூன்று - மூன்றும், நியாயர்க்கு - (தார்க்கிகருள் மற்றொரு பகுதியாரான) நியாயர்க்கு, உவமையொடு - உவமானத்துடன் (பிரமாணம்), நான்கு - நான்காம், மிகு பிரபாகரர்க்கு - (மேன்மை) மிக்க பிரபாகரர்க்கு, அருத்தாபத்தியொடு - அருத்தாபத்தியுடன் (பிரமாணம்), ஐந்தாகும் - ஐந்தாம், பாட்ட வேதாந்திகட்கு - பாட்டர் வேதாந்திகள் என்பவர்க்கு, அபாவமொடு - அனுபலத்தியுடன் (பிரமாணம்), ஆறும் - ஆறும், ஆகுமென - (இவ்வாறு அவர்கட்குப் பிரமாணம்) ஆகுமென்று, தெரிவுற்று - ஆராய்ச்சி செய்து, அறிக - (நீ அவற்றை) அறிவாயாக, இகலரும் - மாறுபாடில்லாத, ஒண்மை புராணிகர்கள் தமக்கு - மேன்மையுடைய புராணிகர்களுக்கு (பௌராணிகர்க்கு), சம்பவ ஐதிகங்களுடன் - சம்பவம் ஐதிகம் என்பவற்றுடன், அளவை யெட்டாம் - பிரமாணங்கள் எட்டாம், என்றுரைப்பர் - என்று (புலவர் பிரமாணங்களின் கோட்பாட்டினைக்)கூறுவர், (எ-று). அன்று-ஏ-அசை. 22



திருக்கு விவேகம்.

**23.** திருந்தியவே தாந்தநூ லியம்புறுவ திருக்குத் திருசியமேன்
றிருபொருளங் கவற்றின்முதற் றிருக்கில், வரைந்திடுவ சுவகதந்தன்
சாதி விசாதிகளா மற்றவைமூன் றினுக்குமுதா ரணமுறையே மொழி
யின், விரிந்தநிழ றருநெடும்பூம் பனைமரமோன் றிற்கு மிஞிறினங்கள் புக்கு
முகத் துழுதுபெரு குறுதே, னருந்துநறு மலர்முதலா யினவும்வே றுள்ள
வணிமரமுங் கன்முதலா யினவும்போ லாமால்.

---

விடை:— (1.) சார்வாகர் (உலகாயதர்) பிரத்தியட்சப் பிரமாண மொன்றையே அங்கீகரித்திருக்கின்றனர்;

(2.) சைனரும், பௌத்தரும், வைசேஷிகரும் பிரத்தியட்சப் பிரமாணத்தோடு அநுமானப் பிரமாணத்தையும் அங்கிகரித்திருக்கின்றனர்;

(3.) (சைவரோடு) சாங்கியர் இவ்விரண்டு பிரமாணங்களோடு சப்தப் பிரமாணத்தையு மங்கிகரித்திருக்கின்றனர்;

(4.) நையாயிகர் இம்மூன்று பிரமாணங்களோடு உவமானப் பிரமாணத்தையு மங்கிகரித் திருக்கின்றனர்;

(5.) பிரபாகரர் இந்நான்கு பிரமரணங்களோடு அருத்தாபத்திப் பிரமாணத்தையு மங்கிகரித்திருக்கின்றனர்;

(6.) பாட்டரும் வேதாந்திகளும் இவ்வைந்து பிரமாணங்களோடு அநுபலத்திப் பிரமாணத்தையு மங்கிகரிக்கின்றனர்;

(7) - (8) பௌராணிகர் இவ்வாறு பிரமாணங்களோடு சம்பவப் பிரமாணத்தையும் ஐதிகப் பிரமாணத்தையும் அங்கீகரித்திருக்கின்றனர். (22)

[பதார்த்த விவேகம்.

வினு:—பதார்த்தம் எத்தனை வகையாம்?

---

(இ - ள்.) திருந்திய - ஒழுங்கமைந்துள்ள, வேதாந்தநூல் - வேதாந்த சாஸ்திரங்களால், இயம்புறுவ - சொல்லப்படுவன, திருக்குத்திருசியமென் றிருபொருள் - திருக்கு - திருசியமென விரண்டுபொருள்களாம், அவற்றின் - அவ்விரண்டு பொருள்களுள், முதல் - முதலாகவுள்ள, திருக்கில்-திருக்குப்பொருளினின்றும், வரைந்திடுவ - நீக்கப்படுவன, சுவகதம் தன்சாதி விசாதிகளாம் - சுவகத (பேத)ம் - ஸஜாதீய (பேத)ம் - விஜாதீய (பேத)ம் என்பனவாம், அவை மூன்றினுக்கும் - அந்தச் சுவகத (பேத) முதலிய மூன்றற்கும், உதாரணமொழியின்-உதாரணங் கூறுமிடத்து, (அவை), முறையே - கிரமமாக, விரிந்த நிழல் தரும்-பரந்த நிழலைக்கொடுக்கின்ற, நெடும்பூம் பனைமரமொன்றிற்கு-நீண்ட அழகமைந்த கிளைகளையுடைய ஒரு விருட்சத்திற்கு, மிஞிறினங்கள் - வண்டுக் கூட்டங்கள், புக்கு - (உள்ளே) சென்று, முகத்துழுது - (மலரும் பக்குவமுள்ளதாகிய போரும்பைத் தமது) முகத்தின்கண் உள்ள மூக்கால் கிளறி, பெருகுறு - (அதனால்)பெருகுகின்ற, தேனருந்து நறுமலர் முதலாயினவும் - தேனையுண்ணுகின்ற வாசனையுடைய புஷ்ப முதலியனவும், வேறுள்ள அணிமரமும் - (அவ்விருட்சத்திற்கு) வேருகவுள்ள அழகிய விருட்சமும், கல்முதலாயினவும் - கல் முதலியனவும், போலாம் - போல்வனவாம், (எ - று), நெடும்பூம்பனைமரமொன்றிற்கு மலர் முதலாயின சுவகத பேதமாம்; வேறுள்ள வணிமரம் ஸஜாதீயபேதமாம்; கல்முதலாயின விஜாதீயபேதமாமென்ப துணர்க. அங்கு - மற்று - ஆல் என்பன அசைநிலைகள். 23

விடை :—அது பாரமார்த்திகம், வியாவகாரிகம், பிராதிபாஸிகம், துச்ச மென நான்கு வகையாம்.

பாரமார்த்திக பதார்த்தம்.

(1.) சேதன மொன்றே பாரமார்த்திக பதார்த்தமாம்; (சேதனம் - அறிவு.)

வியாவகாரிக பதார்த்தம்.

(2.) மாயாப் பிரபஞ்சம் வியாவகாரிக பதார்த்தமாம்.

பிராதி பாஸிக பதார்த்தம்.

(3.) கயிற்றரவு, கானல் நீர், சொப்பனப் பிரபஞ்ச முதலியன பிராதி பாஸிக பதார்த்தமாம்.

துச்ச பதார்த்தம்.

(4.) மலடி மகன், முயற் கொம்பு முதலியன துச்ச பதார்த்தமாம். (துச்சம்-அசத்து.)

இவற்றுள், சேதனம் திருக் பதார்த்தமாம்; ஏனையவை திருசிய பதார்த்தமாம்.]

## திருக்குத் திருசிய விவேகம்.

வினு :—வேதாந்த சாஸ்திரங்கள் எவற்றைக் கூறுகின்றன?

விடை :—அவை திருக்குத் திருசியங்களை விவரித்துக் கூறுகின்றன. (திருக்கு - அறிவு; திருசியம்-அறியப்படும் பொருள்.)

### திருக்கு விவேகம்.

வினு :—அவற்றுள், திருக்கு எவ்வா றிருக்கும்?

விடை :—அது சுவகத பேதம், ஸஜாதீய பேதம், விஜாதீய பேதமென்னு மூன்று பேதமுமில்லா திருப்பதாம்.

வினு :—சுவகத பேத முதலியவற்றிற்கு உதாரணங் கூறல் வேண்டும்?

சுவகத பேதம்.

விடை:—(1) ஒரு விருட்சத்திற்கு (அதனது அவயவமா யுள்ள) இலை-மலர்-பழ முதலியன வேறு யிருத்தலே சுவகத பேதமாம்;

ஸஜாதீய பேதம்.

(2) அவ் விருட்சத்திற்கு அதுபோன்ற மற்றொரு விருட்சம் வேறு யிருத்தலே ஸஜாதீய பேதமாம்;

விஜாதீய பேதம்.

(3) அவ் விருட்சத்தினும் வேறாய வியல்புடைய கல் - மண் முதலியன அதற்கு வேறு யிருத்தலே விஜாதீய பேதமாம்.

(23)



**24.** நிரவயமா தலினுனுஞ் சத்து வேறு நிகழாமை யானுமிறை தனக்குமுத னடுவின், றேருவுறுக விவ்வுலக காரணமா மாயை யுண் மையினு னிறுதியதி லென்பதென்கோ லென்னில், வரைவுதரு சித்திரி கன் சித்திரசத் தியைப்போன் மாயையுஞ்சன் மாத்திரமாம் பிரமத்தின் வேறுய்த், தெரிவதிலா மையினென்றுஞ் சச்சிதா நந்த சிவத்தினுக்கு விசாதியிலை யென்றுணர்க தெரிந்தே.

---

பேத நிராகரணம்.

வினு :—திருக்கு ஆகாயம் போல நிரவயமா யிருத்தலாலும், அதுபோல மற்றொரு சத்துப்பொருள் அதற்கு வேறக வில்லாமையாலும், அத்திருக்குவிற்குச் சுவகத பேதமும் ஸஜாதீய பேதமு மில்லை யென்பதொக்கும்; இவ் வுலக காரணமாயுள்ள மாயையிருப்பதால், அதற்கு விஜாதீய பேதமில்லை யென்பது எவ்வாறு பொருந்தும்?

விடை :—சித்திரகார னிடத்துள்ள சித்திரமெழுதும் சத்தி அவனுக்கு வேறுகத் தோன்றாமை போல, சன்மாத்திரமாம் பிரஹ்மமென்னும் திருக்குவினிடத்துள்ள உலக காரணமா யுள்ள மாயையும் அத் திருக்குவிற்கு வேறுகத் தோன்றுவ தில்லையாம், அதனுல், சச்சிதாநந்த சொரூப சிவ மென்னும் திருக்குவிற்குச் சுவகத பேதமும் ஸஜாதிய பேதமும் போல விஜாதியபேதமும் எஞ்ஞான்று மில்லையாம். (24)

---

(இ - ள்.) நிரவயவம் ஆதலினுனும் - (சத்ரூபப் பிரஹ்மம் ஆகாயம்போல) நிரவயவமாயிருத்தலாலும், வேறு சத்து நிகழாமையானும் - (அதற்கு) வேறுகச் சத்துப்பொருள் விளங்காமையாலும், இறை தனக்கு - (அச்சத்ரூபப்) பிரஹ்மத்திற்கு, முதல் நடுவு - சுவகதபேதமும் - ஸஜாதீய பேதமும், இன்று (என்று)-இல்லையாமென்று, ஒருவுறுக - (அவற்றை) நீக்கிவிடுக, இவ்வுலக காரணமா மாயை - இவ்வுலகத்திற்கு (பரிணாமியுபாதான) காரணமாயுள்ள மாயை, உண்மையினுல் - இருத்தலாலே, இறுதியது - விஜாதீயபேதம், இல் என்பது - இல்லையாமெனக் கூறல், என்கொலென்னில் - எவ்வாறுமென்று வினுவுவாயாயின், வரைவுதரு - (சித்திர வுருவம்) எழுதுகின்ற, சித்திரிகன் - சித்திரகாரனது, சித்திர சத்தியைப்போல - சித்திர சத்தியைப்போல, மாயையும் - (ஜகத்காரண) மாயையும், சன்மாத்திரமாம் பிரமத்தின் - சத்ரூபப் பிரஹ்மத்திற்கு, வேறுய்த் தெரிவதிலாமையின் - வேறுக விளங்காமையாலே, என்றும் - எப்போதும், சச்சிதாநந்த சிவத்தினுக்கு - சச்சிதாநந்த வடிவப் பிரஹ்மத்திற்கு, விசாதியிலை-விஜாதீய பேதமுமில்லையாம், என்று-என்று, தெரிந்துணர்க-(சத்ரூபப்பிரஹ்மம் சுவகத பேத முதலிய பேதமூன்று மில்லாததாமென்பதை நீ) ஆராய்ந்துணர்வாயாக, (எ - று). நிரவயவம் - அவயவமில்லாதது. 24

**25.** சுருதியினு ளேகமே வாத்துவித மேன்னுஞ் சோற்கிடையு ளேகமேனுஞ் சோல்லதனுக் கயிக்க, மரிதிலுண ரேவவேனு மிடைச் சோற்குத் தேற்ற மத்துவித மேனுமோழிக்குத் துவிதவிலக் காகக் கருதுபோருள் வருதலினு லிம்முறையே மாயா கற்பனேகள் சடந்துநிர வயமாகி யேன்றுந், திரிதலில்சின் மயமாகு மோருபிரமந் தனக்குத் தேரித் தசுவ கதமுதலா யினமூன்று மிலேயே.

---

பேத நிராகரணத்திற்குச் சுருதிப் பிரமாணங் கூறல்.

*திருக்குவிற்குச் சுவகத பேதம், ஸஜாதீய பேதம், விஜாதீய பேதமென்னும் பேத மூன்று மில்லை யென்பதற்கு "ஏகமேவாத்துவிதீயம்" என்னும் சுருதிப்பிரமாணம் (சாமவேதம்-சாந்தோக்கிய உபநிடதம்-ஆறுவது பிரபாடகம்) மிகு முக்கியமானதாம். 'ஏகமேவாத்துவிதீயம்' என்னும் சுருதிவாக்கியம் ஏகம்-ஏவ-அத்துவிதீயம் எனப்பிரிபடுவதாம்; அவற்றுள், ஏகம் என்னும் சொல்லிற்குப் பொருள் ஐக்கியமாம்; ஏவ என்னும் சொல்லிற்குப் பொருள் (அவதாரணே அல்லது நிச்சயம் அல்லது துணிவு என்னும்) தேற்றமாம்; அத்துவிதீயம் என்னுஞ் சொல்லிற்குப் பொருள் துவைதநிஷேதம் (மாயாப் பிரபஞ்சமாகிய துவைத முண்மையிலில்லை) என்பதாம்.*

*ஏகமேவாத்துவிதீயம் என்பதன் பொரு ளிவ்வா றிருத்தலால், இம் முறையே மாயா கற்பனேக்கு அப்பாலாய், நிரவயவமாய், எஞ்ஞான்றும் மாறுவ தில்லாததாயுள்ள சின்மய சொரூபமென்னும் பிரஹ்மமாயுள்ள திருக்குவிற்குச் சுவகதபேதம் ஸஜாதீய பேதம் விஜாதீய பேதமென்னும் பேதம்மூன்று மில்லை யென்பதே முடிபொருளாம்.*

*'ஏகமேவாத்துவிதீயம்' என்பதன்கணுள்ள ஏகம் என்னும் பதம் சுவகதபேதமும், ஏவ என்னும் பதம் ஸஜாதீயபேதமும், அத்துவிதீயமென்னும் பதம் விஜாதீயபேதமும் பிரஹ்மத்திற் கில்லை யென்பதை விளக்குவனவாம்.* (25)

---

*(இ - ள்.) சுருதியினுள் - சாமவேதத்தின்கண், ஏகமேவாத்துவிதம் என்னும் - ஏகமேவாத்துவிதம் என்று கூறப்படுகின்ற, சொற்கிடையுள் - வாக்கியத்துள் (இருக்கின்ற), ஏகமெனும் சொல்லதனுக்கு - ஏகம் என்னும் சொல்லுக்கு, அயிக்கம் - (சீவப்பிரஹ்ம) ஐக்கியமும், அரிதிலுணர் - அருமையாக வுணர்தற்குரிய, ஏவ எனுமிடைச்சொற்கு - ஏவ என்னும் இடைச்சொல்லுக்கு, தேற்றம்-நிச்சயமும், அத்துவிதமெனுமொழிக்கு - அத்துவிதமென்னும் சொல்லுக்கு, துவித விலக்கு-துவைத நீக்கமும், ஆக - ஆக, கருதுபொருள் - ஆராய்ந்தறிதற்குரிய பொருள், வருதலினுல் - (இலக்கண முறையாகப் பெறப்பட்டு) வருதலாலே, இம்முறையே - இக்கிரமமாக, மாயா கற்பனேகள் - மாயா கற்பிதங்கள், கடந்து - (இயல்பாகவே) நீங்கி (இருக்க), நிரவயவமாகி-நிரவயவமாய், என்றும்-எக்காலத்தும், திரிதலில் - மாறுபடுதலில்லாத, சின்மயமாகும்-சித்ரூபமாயுள்ள, ஒரு பிரமந்தனக்கு - ஒப்பற்ற பிரஹ்மத்திற்கு, தெரித்த - (முன்னர்க்) கூறிய, சுவகத முதலாயின மூன்றும் - சுவகதபேதம் - ஸஜாதீயபேதம் - விஜாதீயபேதமென்னும் மூன்று பேதங்களும், இலே - இல்லையாம் - (எ - று).*
25



**26.** அத்தியா ரோபமப வாதமேன விரண்டா யறைகுவர்கற் பிதமத்தி யாரோப முள்ள, சுத்தியூ டிலாதவிர சதம்விளேதல் போலச் சோல்பிரம சத்தினிலா வுலகதுகற் பித்த, லேய்த்திதுதான் வேள்ளிய தன் றிப்பியேனல் போலோர்ந் திறைமேய்போய் யுலகமேனத் தேளித லப வாத, மேய்த்தபோரு ளறியுமிலக் கணமூன்று மவைதாம் விளங் கதத்து வாவிருத்தி தடத்தமோடு சோரூபம்.

---

கற்பிதத் துவயம்.

வினு :—**கற்பிதத்துவயம் எவை?**

விடை :—*அவை அத்தியாரோபம், அபவாத மென்பனவாம்.*

**அத்தியாரோபம்.**

*1. இருப்பதாய கிளிஞ்சலின்கண் இல்லாததாய வெள்ளி கற்பிதமாகத் தோன்றுவதுபோல, சத்ரூபப் பிரஹ்மத்தின்கண் அசத்ரூப மாயாப் பிரபஞ்சம் கற்பிதமாகத் தோன்றுதல் அத்தியாரோபமாம். வஸ்துவில் (கயிற்றில்) அவஸ்து (பாம்பு) தோன்றுதல் அத்தியாரோபமாம்.*

**அபவாதம்.**

*2. இது வெள்ளியன்று கிளிஞ்சிலே யென்று விசார வாயிலாக மெய் பொய்களைத் தெளிவாக அறிவதுபோல, மாயாப் பிரபஞ்சம் சத்தன்று பிரஹ்மமே சத்து என்று விசாரவாயிலாகச் சத்து அசத்துக்களைத் தெளிவாக அறிதலே அபவாதமாம். அதிஷ்டானசேஷம் (கயிறு மிஞ்சுதல்) அபவாதமாம்.*

பிரஹ்ம லட்சண விவேகம்.

வினு:—**சத்ருபப் பிரஹ்மத்தையறிதற்குரிய இலக்கணங்கள் எவையாம்?**

விடை :—*அவை அதத்வியா விருத்தி லட்சணம், தடஸ்த லட்சணம், சொரூப லட்சண மென்பனவாம்.* (26)

---

*(இ - ள்.) கற்பிதம் - கற்பிதமானது, அத்தியாரோபம் அபவாதமென - அத்தியாரோபமும் அபவாதமுமென்று, இரண்டாய்-இரண்டு (பகுதி) ஆய் (இருக்கின்றதென்றுஅதனை), அறைகுவர்-(மேலோர்) கூறுவர், (அவற்றுள்), அத்தியாரோபம் - அத்தியாரோபமாவது, உள்ள சுத்தியூடு - இருப்பதாய கிளிஞ்சிலின்கண், இலாத இரசதம் - இலதாய வெள்ளி, விளேதல்போல - கற்பிதமாகத் தோன்றுதல்போல, சொல் - (புலவர் புகழ்ந்து) கூறுகின்ற, பிரமசத்தின் - சத்ரூபப் பிரஹ்மத்தின்கண், இலாவுலகது - இலதாய (மாயாப்) பிரபஞ்சம், கற்பித்தல் - கற்பிதமாகத் தோன்றுதலாம், அபவாதம் - அபவாதமாவது, எய்த்து - (ஆராய்ச்சிசெய்து) அறிந்து, இதுதான் வெள்ளியதன்று, - இது வெள்ளியன்று, இப்பியெனல்போல் - கிளிஞ்சலே யென்று (அவ்விரண்டையும்) உணர்தல்போல, ஓர்ந்து - விசாரித்து (அறிவதால்), இறைமெய் - பிரஹ்மமே சத்தியம், உலகம்பொய் - (மாயாப்) பிரபஞ்சம் மித்தை, எனத்தெளிதல் - என்று (அவ்விரண்டையும்) தெளிவாக வுணர்தலாம், மெய்த்தபொருள் - உண்மையாயுள்ள பிரஹ்மப்பொருளே, அறியுமிலக்கண மூன்றும் - அறிதற் கேதுவாய இலக்கண மூன்றும், அவைதாம் - அவ்விலக்கணங்கள், விளங்கு - விளங்குகின்ற, அதத்துவாவ்ருத்தி தடத்தமொடு சொரூபம் - அதத்வியா விருத்தி - தடத்தம் - சொரூபமென்பனவாம், (எ - று).*
26

**27.** ஆகமுத லனநேதி யதுசெய்து நின்ற வாருயிரை யறிவித்த லதத் துவா விருத்தி, சாகைநுனி மதியுளதேன் றுணர்த்தலிற்பூ தாதி சகமாய காரணங்கோண் டறிவுணர்த்தல் தடத்த, மாகனலி விளங்குகதிர்ச் சொருபனெனல் போலான் மாவினிச சொருபமிது வெனவுணர்த்தல் சொரூப, நீகடவு சொருபநிசஞ் சச்சிதா நந்த நித்தியம்பூ ரணமாக நீநி னைந்து கோள்ளே.

---

### அதத்வியாவிருத்தி லட்சணம்.

1. (தேகம், இந்திரியம், பிராணன், மனம், புத்தி, சித்தம், அகங்காரம், இவற்றிற்குக்காரணமாயுள்ள அவித்தை முதலிய) தேகாதியநாத்ம வஸ்துக்களை இஃ தாத்மாவன்று, இஃ தாத்மா வன்று என யுத்தியால் நேதிசெய்து, அதனுல், (இஃ தன்றென நேதிசெய்தற் கிடம்பெருது) நின்ற ஆத்மாவை யறிவிப்பதே அதத்வியா விருத்தி லட்சணமாம். தத்-அது (ஆத்மா); அதத்-அஃ தல்லாதது (அநாத்மா); வியா விருத்தி-வேறு பிரித்தறிவிப்பது. அஃதாவது ஆத்மாவை (அநாத்மா) வினின்றும் வேறு பிரித்தறிவிப்பதாம். நேதிசெய்தல் - ஒன்றை இது பிறிதொன்றன்றென்று தள்ளுதல்செய்தல்.

### தடஸ்த லட்சணம்.

2. விருட்சத்தி னுனியில் சந்திர னிருக்கின்ரு னென்று கூறி, அது கொண்டு அவனை யறிவிப்பதுபோல, நுண்ணுணர்வில்லாதார்க்கு (பஞ்ச) பூதங் களை முதற்காரணமாயுடையதாக விளங்குகின்ற வுலகத்திற்கு ஆத்மா அபிந்ந நிமித்த உபாதான காரணமாக விருக்கின்றதென்று கூறி, அது கொண்டு அதனை யறிவிப்பது தடத்த லட்சணமாம். ஒருகாலத்திருப்பதாய் வியா வர்த்தகஞ் செய்வது (வேறு பிரித்தறிவிப்பது) தடஸ்த லட்சணமாம்.

---

(இ-ள்.) (அம்மூன்றனுள்,) ஆகமுதலன-தேகாதியநாத்மவர்க்கங்களை, நேதி யதுசெய்து—(யுத்தியால் இஃதாத்மாவன்று, இஃதாத்மாவன்றெனத்) தள்ளுதல் செய்து(அதனுல்), நின்ற-(தள்ளுதல்செய்தற்குரியதாகாது எஞ்சி) நின்ற, ஆருயி ரை-(எங்கும்) நிறைந்துள்ள ஆத்மாவை, அறிவித்தல்-தெரிவித்தல், அதத்துவா விருத்தி - அதத்வியாவிருத்தி லட்சணமாம், சாகைநுனி - (இம்மரக்)கிளையின் நுனியின்கண், மதியுளது - (மூன்ரும்) பிறைச்சந்திர னிருக்கின்ருன், என்று - என்று, (கூறி அக்கிளையிலிருத்தலைக்கொண்டு அச்சந்திரனை), உணர்த்தலின் - தெரிவித்தல் போல, பூதாதியாய - (பஞ்ச) பூதங்களை முதற்காரணமாயுடை யதாய, சகம்- உலகத்திற்கு, காரணங்கொண்டு - (ஆத்மா அபிந்ந நிமித்த உபா தான காரணமாயிருக்கின்றதென்று கூறி அக்) காரணமாயிருத்தலைக் கொண்டு, அறிவு - (அந்த) ஆத்மாவை, உணர்த்தல்-தெரிவித்தல், தடத்தம்-தடத்த லட்ச ணமாம், மாகனலி - பெருமை வாய்ந்த சூரியன், விளங்கு-விளங்குகின்ற, கதிர்ச் சொருபன் - கிரண வடிவன், எனல்போல் - என்று கூறுவது போல, ஆன்மா வினிச சொருபம் - ஆத்மாவினுண்மை வடிவம், இதுவென வுணர்த்தல்-இதுவா மென்று (கூறி அதனுல் அதனை) அறிவித்தல், சொருபம்-சொருபலட்சணமாம், நீ கடவு-நீ வினவுகின்ற, நிசசொருபம்-(ஆத்மாவின்)உண்மைவடிவமானது, சச்சிதா நந்த நித்தியம் பூரணமாக - சத்து - சித்து - ஆநந்தம் - நித்தியம் - பூரணமாக (இருக்கின்றதென்று அதனை), நீ நினைந்துகொள் - நீ சிந்தித்துக்கொண்டிருக் கக்கடவாய், (எ - று). இதில் நேதி செய்தல் அதத்வியாவிருத்தி லக்ஷணமாம்; ஜகத்காரணம் தடஸ்த லக்ஷணமாம்; நிஜசொருபம் சொருபலக்ஷணமாம். 27



**28.** மதித்தன்மதி யாமைநன வாதிகளிற் றனக்கோர் வாதையிலா துண்டேனல்சத் தவத்தையனைத் தினுமே, யுதித்தவிட யங்களைநின் றறிந்திடுதல் சித்தா முவப்பினுக்கு விடயமாந் தன்மையா நந்தந், திதித் தசதோ திதநித்த மனைத்தினுஞ்சா தகமாந் திறத்தினு லனைத்தினுஞ்சம் பந்தநிறை வெனவே, விதித்திடுகே வுயிர்சச்சி தாநந்த மயமேல் விளங் கியதி லவற்றுளா நந்தமேங்கு மேனினே.

---

### சொருப லட்சணம்.

3. சூரியன் உஷ்ணப் பிரகாச வடிவினனு யிருக்கின்ரு னென்று கூறுவது போல, ஆத்மாவினிஜவடிவம் இதுவென்றுகூறி அதனுல் அதனையறிவிப்பது சொருபலட்சணமாம். (ஆத்மாவின் நிஜசொருபம் சச்சிதாநந்த நித்தியம் பூரண மாம்.) எப்போது மிருப்பதாய் வியாவர்த்தகஞ் செய்வது சொருபலட்சணமாம்.

### ஆத்ம சொருப லட்சண பஞ்சகம்.

வினு :—ஆத்மாவின் சொருப லட்சண பஞ்சக மேவை?

விடை :—அவை சத்து, சித்து, ஆநந்தம், நித்தியம், பூரணமென்பன வாம். அவற்றுள், (27)

### சத்து.

1. யான் இதனை யறிவேனென்னும் அறிவிலும் யான் இதனை அறியே னென்னும் அறியாமையிலும், (ஒன்றை நினைத்தலிலும் பிறிதொன்றை மறத் தலிலும்), (காமாதி விருத்திகள் தோன்றுமிடத்திலும் தோன்ருவிடத்திலும்), சகலமென்னும் சாக்கிர சொப்பனங்களிலும் கேவலமென்னும் சுழுத்தியிலும் தனக்கொரு கேடின்றியிருப்பது சத்தாம். முக்காலத்தும் பொய்யென்று நிச்ச யிக்கப்படாதது சத்தாம்.

---

(இ - ள்.) (அவற்றுள்,) மதித்தல் மதியாமை - (ஒன்றனை) அறிதல் (பிறி தொன்றனை) அறியாமை (என்பவற்றிலும்), (காமாதி விருத்திகள் தோன்று மிடத்திலும் தோன்ருவிடத்திலும்), நனவாதிகளில் - சாக்கிராதியவஸ்தைகளி லும், தனக்கோர் வாதையிலாது - தனக்கொருகேடில்லாமல், உண்டெனல் - இருக்கின்றதென்பதே, சத்து - (ஆத்மாவின்) சத்ருபமாம், அவத்தையனைத் தினும் - சாக்கிர முதலிய அவஸ்தையெல்லாவற்றிலும், உதித்த விடயங்களை - தோன்றுகின்ற (சப்தாதி) விஷயங்களை, நின்று - (மாருது) நின்று, அறிந்திடுதல்- அறிவதே, சித்தாம் - (ஆத்மாவின்) சித்ருபமாம், உவப்பினுக்கு - பரமப் பிரீதிக்கு, விடயமாந்தன்மை - விஷயமாவதே, ஆநந்தம் - (ஆத்மாவின்) ஆநந்தரூபமாம், திதித்த - நிலைபெற்ற, சதோதிதம் - சதோதிதமாவதே, நித் தம் - (ஆத்மாவின்) நித்திய ரூபமாம், அனைத்தினும் - (கற்பிதப்பொருள்) எல்லாவற்றிற்கும், சாதகமாந் திறத்தினுல் - அதிஷ்டானமாயிருக்குந் தன்மை யால், அனைத்தினும் - (அக்கற்பிதப்பொருள்) எல்லாவற்றிலும், சம்பந்தம் - கூடியிருப்பதே, நிறைவு - (ஆத்மாவின்) பூரண ரூபமாம், எனவே விதித் திடுக - என்று (இவ்வாறு ஆத்மாவின் சத்ரூப முதலியவற்றை நீ) ஆராய்ந் தறிவாயாக, உயிர் சச்சிதாநந்த மயமேல் - ஆத்மா சச்சிதாநந்த வடிவமாயிருக்கு மாயின், அவற்றுள் - அச்சச்சிதாநந்தங்களுள், ஆநந்தம் - ஆநந்தமானது, (சத் தும் சித்தும்போல), எங்கும் - சர்வபுத்தி விருத்தியிலும், விளங்கியதில் - விளங் குதலில்லையே, (அதனுல் ஆத்மா ஆநந்த வடிவயன்று), எனின் - என்று வினவு வாயாயின், (எ - று). சதோதிதம் - என்பது சதா - உதிதம் எனப்பிரிபடும்; அதன்பொருள் என்றும் நிலைத்துள்ளதென்பதாம். 28

**29.** வெம்மையோளி யுருவாய வழல்விளக்கி லோளியே விளங் கியிடும் புனலிடத்தில் வெம்மையே விரியும், வெம்மையோளி யிரண்டு மேழும் விறகினிலவ் வகைபோல் விமலசத்தோன் றேதிகழுங் கன்முத லா மவற்றின், மெய்ம்மைதவிர் புத்தியது தமோகுணத்தின் மூட விருத் தியினு மிராசதத்தின் கோரவிருத் தியினு, மெய்ம்மையோடு சித்தாகுஞ் சத்துவத்திற் சாந்த விருத்தியினிற் சச்சிதா நந்தங்க டோன்றும்.

---

சித்து.

2. *சாக்கிர முதலிய அவஸ்தை மூன்றிலும் தோன்றும் விஷயங்களை (அவற்றிற்கு வேருக) நின்றறிவது சித்தாம். முக்காலத்தும் சர்வத்தையு மறிவது சித்தாம்.*

ஆநந்தம்.

3. *பரமப் பிரீதிக்கு விஷயமாவது ஆநந்தமாம். முக்காலத்தும் மிகுபிரியத் திற்கு விஷயமாயிருப்பது ஆநந்தமாம்.*

நித்தியம்.

4. *சதோதிதமாவது (எஞ்ஞான்றும் நிலைபெற்றிருப்பது) நித்தியமாம். முக்காலத்தும் கேடின்றி யிருப்பது நித்தியமாம்.*

பூரணம்.

5. *திருசிய பதார்த்தம் அனைத்திற்கும் சாதகமாக (அதிஷ்டாந மாக) விருக்கும் வகைபால் (கடத்தில் மண்போல) அத் திருசிய பதார்த்த மனைத்திலும் சம்பந்தமாயிருப்பது பூரணமாம். கடத்தில் மண் நிறைந்திருத்தல் போல, மாயாப்பிரபஞ்சத்தில் நிறைந்திருப்பது பூரணமாம்.*

ஆநந்த விளக்கம்.

**வினா :—ஆத்மா சச்சிதாநந்த வடிவமா யிருக்குமாயின், அச் சச்சிதாநந்**

---

*(இ - ள்.) வெம்மையொளி யுருவாயவழல் விளக்கில் - உஷ்ணப் பிரகாச வடிவமாயுள்ள தீ விளக்கின்கண், ஒளியே - பிரகாசமே, விளங்கி யிடும் - விளங்குவதாம், (அதனுஷ்ணம் விளங்குவதில்லையாம்), புனலிடத் தில் - (அக்கினியின் சம்பந்தமுள்ள) நீரின்கண், வெம்மையே விரியும் - உஷ்ணமே விரிந்து விளங்குவதாம், (பிரகாசம் விளங்குவதில்லை யாம்), விறகினில் - (அக்கினியின் சம்பந்தமுள்ள) விறகின்கண், வெம்மை யொளியிரண்டுமெழும் - உஷ்ணமும் பிரகாசமுமாகிய விரண்டும் தோன்றி விளங்குவனவாம், அவ்வகைபோல் -(அக்கினியின் உஷ்ணமும் பிரகாசமும்) அவ்வாறு விளங்குதல்போல, விமலசத்தொன்றே - மலமற்ற ஆத்மாவின் சத்ரூப மொன்றே, கல்முதலாமவற்றில் - மலைமுதலாகவுள்ள பொருள்களில்,(மலையிருக் கின்றது, கடலிருக்கின்றது என்றற்றொடக்கத்தனவாக),திகழும்- விளங்குவதாம், (அதன் சித்ரூபமும் ஆநந்தரூபமும் விளங்குதலில்லையாம்), மெய்ம்மை தவிர் - உண்மை நீங்கிய, புத்தியது - புத்தியின், தமோகுணத்தின் - தாமத குணத்தி ஞல், மூடவிருத்தியினும் - (அஞ்ஞான மயமான) மூடவிருத்தியிலும், இராச தத்தின் - இராசத குணத்தினல், கோரவிருத்தியினும் - (இராக மயமான) கோர விருத்தியிலும், மெய்ம்மையொடு சித்தாகும் - (ஆத்மாவின்) சத்ரூபத்தோடு சித் ரூபமும் விளங்குவதாம், (அதன் ஆநந்த ரூபம் விளங்குவதில்லையாம்), சத்து வத்தின் - சத்துவ குணத்தினல், சாந்தவிருத்தியினில் - (வைராக்கிய மயமான) சாந்த விருத்தியின்கண், சச்சிதாநந்தங்கள் தோன்றும்-(ஆத்மாவின்) சச்சிதாநந்த சொரூபமூன்றும் விளங்குவனவாம், (எ - று).*





**30.** ஆதலினு லாநந்த மயமாமான் மாவவ் வைந்தினுக்கு முபா தியுள வவைமுறையே மொழியிற், பேதமுறுஞ் சத்துமூன் ரும்விவகா ரிகம்பின் பிராதிபா சிகம்பார மார்த்திகசத் தெனவே, மூதுணர்விற் சுழுத்தியிற்ருேன் ருதுநன வுற்று முத்தியுறு மளவுமுறுங் கடாதிமுத லதுவாம், போதுகன வினிற்ருேன்றி யழிவதிடை யதுவாம் பொன்ருத பிரமசத்தே யிறுதியதா மன்றே.

---

**தத்துள், ஆநந்தம் சத்தும் சித்தும்போலச் சர்வ புத்தி விருத்தியிலும் விளங்கல் வேண்டும்; விளங்காமையால், ஆத்மா ஆநந்த வடிவமாமென்பது எவ்வாறு பொருந்தும் ?** (28)

*விடை :— அக்கினி வெம்மையும் (உஷ்ணமும்) பிரகாசமுமாகிய விரண் டையும் வடிவமாக வுடையதாம்; அவ் விரண்டனுள், விளக்கில் பிரகாசமே விளங்குவதாம், மற்றையது விளங்குவதில்லையாம்; நீரில் வெம்மையே விளங்கு வதாம், மற்றையது விளங்குவ தில்லையாம்; விறகில் வெம்மையும் பிரகாசமும் விளங்குவனவாம். அங்ஙனமே, பிரஹ்மம் சத்தும் சித்தும் ஆநந்தமுமாகிய மூன்றையும் வடிவமாக வுடையதாம்; அம்மூன்றனுள், கல் முதலிய வற்றில் (கடமிருக்கின்றது, படமிருக்கின்றது என்றற் றொடக்கத்தனவாகத்) சத்தொன் றமே விளங்குவதாம், மற்றையன விளங்குத லில்லையாம்; புத்தியின் தாமத குணத்தால் அஞ்ஞானமயமா யுள்ள மூட விருத்தியிலும் இராசத குணத்தால் இராக மயமா யுள்ள கோர விருத்தியிலும் (நா னிருக்கின்றேன் நானறிகின்றே னென்றற் றொடக்கத்தனவாகச்) சத்தும் சித்தும் விளங்குவனவாம்; ஆநந்தம் விளங்குவதில்லையாம்; சத்துவ குணத்தால் வைராக்கிய மயமா யுள்ள சாந்த விருத்தியில் (யான் சச்சிதாநந்த வடிவமாக விருக்கின்றேனென்று) சத்தும் சித்தும் ஆநந்தமுமாகிய மூன்றும் விளங்குவனவாம். இவ்வாற்ருல் ஆத்மா சத் வடிவமாகவும் சித்வடிவ மாகவு மிருப்பதன்றி ஆநந்த வடிவமாகவு மிருப்பதாம்.* (29)

சத்து, சித்து, ஆநந்தம், நித்தியம், பூரணமென்னு மைந்திற்கும் உபாதியால் (ஒவ்வோன்றற்கும்) பேதமுண்டேனல்.

**வினா :—சத்து முதலியன தம்முள் பேத முடையனவோ ?**

---

*(இ - ள்.) ஆதலினுல் - ஆதலால், ஆநந்தம் - ஆநந்தம், ஆன்மா மய மாம் - ஆத்ம சொரூபமாம், அவ்வைந்தினுக்கும் - (சத்து முதலிய) அப்பஞ்ச ரூபத்திற்கும், உபாதியுள - உபாதிகளிருக்கின்றன, அவை - அவ்வுபாதிகளை, முறையே மொழியின் - கிரமமாகக் கூறுமிடத்து, பேதமுறும் - (கற்பிதமாக) வேற்றுமைபொருந்திய, சத்து - சத்தானது, விவகாரிகம் - வியாவகாரிக சத்து, பின்-பின்னர், பிராதிபாசிகம் - பிராதிபாஸிக சத்து, பாரமார்த்திக சத்து - பார மார்த்திக சத்து, என மூன்ரும் - என்ற மூன்ற வகையதாம், (அவற்றுள்,) மூதுணர்வில் - பழைய உணர்வில்லாத, சுழுத்தியில் - சுழுத்தியவஸ்தையின் கண், தோன்ருது - தோன்ருமல், நனவு உற்று - சாக்கிராவஸ்தையிற் பொருந் தித்தோன்றி), முத்தியுறுமளவும் - விதேக முத்தியுடையுமளவும், உறும் - இருக்கின்ற, கடாதி - கடபட முதலியன, முதலதுவாம் - வியாவகாரிக சத் தாம், போது - (தொடர்ச்சியின்றிக்) கழிகின்ற, கனவினிற்ருேன்றி - சொப் பனுவஸ்தையிற்ருேன்றி, அழிவது - நாசமாகும் பொருள், இடையதுவாம் - பிராதிபாஸிக சத்தாம், பொன்ருத - (எவ்வாற்ருனுங்) கெடுதலில்லாத, பிரம சத்தே - சத்ரூபப் பிரஹ்மமே, இறுதியதாம் - பாரமார்த்திக சத்தாம், (எ - று).*

விடை :—அவை உபாதியால் தம்முள் பேதமுடையனவாம்.

ஒருபொருளைப் பலபொருள்போலத் தோன்றச்செய்வதற் கேதுவாயிருப்பது உபாதியாம்.

### சத்துத் திரயம்.

வினா .—சத்தின் பேதம் எவை ?

விடை :—அவை வியாவகாரிக சத்து, பிராதிபாஸிக சத்து, பாரமார்த்திக சத்து என்பனவாம்; அவற்றுள்,

### வியாவகாரிக சத்து.

1. சுழுத்தியவஸ்தையில் தோன்றாது, சாக்கிராவஸ்தையில் தோன்றி விதேக முத்தி பெறுமளவும் விளங்கும் கட முதலியவற்றின் சத்தே (இருப்பே) வியாவகாரிக சத்தாம். (சாக்கிராவஸ்தையிலுள்ள கடபட முதலியன விதேக முத்தி பெறு மளவும் சுழுத்தியவஸ்தையில் தோன்றாது அதினின் றெழுந்த போது முன்போலத் தோன்றுதலால் வியாவகாரிக சத்து என்று கூறப்படுகின்றன வென்க.) ஆத்மஞானத்தால் பொய்யென்று நிச்சயித்தற்குரியது வியாவகாரிக சத்தாம்.

### பிராதி பாஸிக சத்து.

2. சொப்பநாவஸ்தையிற்றோன்றி யழியும் கட முதலியவற்றின் சத்தே பிராதிபாஸிக சத்தாம்; (கயிற்றரவு, கானல் நீர் முதலியனவும் பிராதி பாஸிக சத்தாம். இவையும் சொப்பனப் பொருள்களும் அறியுங் காலத் தன்றி வேறு காலத்திற் றோன்றாமையால் பிராதி பாஸிக சத்தென்று கூறப்படுகின்றன வென்க.) ஆத்மஞானமின்றியே பொய்யென்று நிச்சயித்தற்குரியது பிராதி பாஸிக சத்தாம்.

### பாரமார்த்திக சத்து.

3. மாயை அதன் காரிய வுலகம் என்னும் சர்வ கற்பனைக்கும் அதிஷ்டானமாய் உற்பத்தியும் நாசமுமில்லா துள்ள பிரஹ்ம சத்தே பாரமார்த்திக சத்தாம். சத்தொன்றே உபாதியால் மூன்றாக விளங்குதல் இங்கு ஆராய்ந் துணர்தற் குரியதாம். முக்காலத்தும் பொய்யென்று நிச்சயித்தற் குரியதாகாதது பாரமார்த்திக சத்தாம்.





**31.** சீவனோ டீசன்கூ டத்தன்பி ரமமேன்னச் சித்துநான் காங்
குடநீர் கதுவுறும்வெண் மீன்வான், றூவுபனி நீர்விம்ப வனுமிதா காசஞ்
சோல்கடா வச்சின்னா காசமோடு மாவான், மேவுமிவை யவற்றினுக்
குத் திட்டாந்த முறையாம் விடயமோடு பிரமம்வா சனைமுக்கி யம்பின்,
னேவுநிச வான்மாவோ டத்துவிதம் வித்தை யெனுமிவற்றின் பெயரா
லெண் வகைப்படுமோ நந்தம்.

---

### சித்துச் சதுஷ்டயம்.

வினா :—சித்தின் பேத மெவை ?

விடை :—அவை ஜீவன், ஈசன், கூடஸ்தன் (ஆத்மா), பிரஹ்மம் (சிவம்) என்பனவாம். அந் நான்கிற்கும் திருஷ்டாந்தம் முறையே கடஜலப் பிரதி பிம்பாகாசம், மேகஜலப் பிரதிபிம்பாகாசம், கடாவச்சின்னாகாசம், மகாகாச மென்பனவாம். (கடாவச்சின்னாகாசம் - கடத்தோடு கூடிய ஆகாசம்).

1. கடஜலத்தில் பிரதிபிம்பித்துள்ள ஆகாசம்போல அவித்தை அல்லது அந்தக்கரணத்தில் (புத்தி அல்லது அகங்காரத்தில்) பிரதிபிம்பித்துள்ள சேதனம் ஜீவனும்;

2. மேகஜலத்திற் பிரதிபிம்பித்துள்ள ஆகாசம்போல மாயையிற் பிரதி பிம்பித்துள்ள சேதனம் ஈசனும்;

மேகத்திற் கவகாச (இட)ங் கொடுக்கின்ற ஆகாசமும், மேக ஜலப் பிரதிபிம்பாகாசமும் மேகாகாசமெனப்படும்; அதுபோல, மாயையின் அதிஷ்டான சேதனமும், அதன்கணுள்ள சேதனத்தின் பிரதிபிம்பமும் ஈசுவரனும் என்பதிங்குணர்தற் பாற்றும்.

---

(இ - ள்.) சித்து - சித்தானது, சீவனொடு ஈசன் கூடத்தன் பிரமமென்ன - ஜீவன் - ஈசுவரன் - கூடஸ்தன் - பிரஹ்மமென்று, நான்காம் - நான்கு பகுதியதாம், குடநீர் - கடநீரின்கண், கதுவுறும் - பிரதிபிம்பித்துள்ள, வெண்மீன்வான் - வெண்மையாகிய நட்சத்திரங்களோடு கூடிய ஆகாயமும், தூவுபனிநீர் - சிந்துகின்ற குளிர்ச்சியாகிய நீரையுடைய மேகத்தின்கண், விம்பம்- பிரதி பிம்பமாகவுள்ள, அனுமிதாகாசம் - * அனுமானத்தாலறியும் ஆகாயமும், சொல் - (சிறப்பாகச்) சொல்லப்படுகின்ற, கடாவச்சின்னாகாசமொடு - கடத்தோடு கூடிய ஆகாயமும், மாவான் - மாகாகாசமும், (ஆக), மேவுமிவை - பொருந்துமிந்நான்கும், அவற்றினுக்கு - (சீவன் முதலிய) அந்நான்கிற்கும், முறை - கிரமமாக, திட்டாந்தமாம் - (உதாரணமென்னும்) திருஷ்டாந்தங்களாம், ஆநந்தம் - ஆநந்தமானது, விடயமொடு பிரமம் வாசனை முக்கியம் பின்னேவுநிச மான்வாவோ டத்துவிதம் வித்தை-விஷயாநந்தம் - பிரஹ்மாநந்தம் - வாசநாநந்தம் - முக்கியாநந்தம் - நிஜாநந்தம் - ஆத்மாநந்தம் - அத்துவிதாநந்தம் - வித்தியாநந்தம், எனுமிவற்றின் பெயரால் - என்று கூறப்படும் இவ்வாநந்தங்களின் பெயர்களால், எண்வகைப்படும்-எண்வகைப்படுவதாம், (எ - று). (பின் - பின்பு, ஏவும்-சொல்லப்படுகின்ற). கடாவச்சின்னம் என்பது கட - அவச்சின்னம் எனப் பிரிபடும். அவச்சின்னம் - கூடியது. * அவ்வனுமானம் வருமாறு:—மேக ஜலம் ஆகாயத்தின் பிரதிபிம்ப முடையது; சொச்சத்திரவிய மாதலின்; கடம் ஜலம் போல என்பதாம். சொச்சம் - பளபளப்பு.

**32.** மாதுமுதல் விடயவூ தியங்கடமிற் றோன்றி வரல்விடய வாநந்தங் கண்படையிற் றோன்ற, லோதுபிர மாநந்தந் துயிலொழிவிற் றோற்ற முடையதுதான் வாசனா நந்தங்கே ளேவா, மாதலுமி ளேது மன்மதி தோன்றுதன்முக் கியமா மாநந்த மனோலயயோ கத்தினில்வந் துதித்த, லேதமறு நிசாநந்தம் பிரியவிட யத்து ளியான்பிரிய னென்னத் தோன் றுதலான்மா நந்தம்.

---

3. கடத்தோடுகூடியுள்ள ஆகாசம்போல அவித்தை அல்லது அந்தக் காணத்தோடு கூடியுள்ள சேதனம் கூடஸ்தனும்;

4. மகாகாசம்போல எங்குமுள்ள சேதனம் பிரஹ்மமாம்.

சித்தொன்றே உபாதியால் நான்கு வகையாக விளங்குதல் இங்காராய்ந் துணர்தற்குரியதாம்.

ஆநந்தாஷ்டகம்.

வினா :—ஆநந்தத்தின் பேதம் எவை?

விடை :—அவை விஷயாநந்தம், பிரஹ்மாநந்தம், வாசநாநந்தம், முக்கியாநந்தம், நிஜாநந்தம், ஆத்மாநந்தம், அத்துவிதாநந்தம், வித்தியாநந்தம் என்பனவாம். அவற்றுள், (31)

விஷயாநந்தம்.

1. வனிதாதி (மனைவி மக்கள் முதலிய) விஷயங்களை யடைவதாற் றோன்றும் ஆநந்தம் விஷயாநந்தமாம்;

பிரஹ்மாநந்தம்.

2. நித்திராகாலத்தில் (சுழுத்தியவஸ்தையில்) தோன்றும் ஆநந்தம் பிரஹ்மாநந்தமாம்;

வாசநாநந்தம்.

3. நித்திரை தெளிந்தும் தெளியாதுள்ள விடத்துத் தோன்றும் ஆநந்தம் வாசநாநந்தமாம்;

---

(இ - ள்.) மாது முதல் - மங்கையர் முதலிய, விடய வூதியங்கள் தமில் - விஷயங்களாகிய பயனை யடைவதால், தோன்றிவரல் - உண்டாய் வரும் ஆநந்தம், விடயவாநந்தம் - விஷயாநந்தமாம், கண்படையில் - (சுழுத்தி வடிவ) நித்திரையின்கண், தோன்றல் - விளங்குமாநந்தம், ஓது - (சிறப்பித்துச்) சொல்லப்படுகின்ற, பிரமாநந்தம் - பிரஹ்மாநந்தமாம், துயிலொழிவில் - நித்திரை (தெளிந்துந் தெளியாது) ஒழிந்தவிடத்து, தோற்றமுடையது - விளங்குமாநந்தம், வாசநாநந்தம் - வாசநாநந்தமாம், உளம் - மனத்தின்கண், கேடு ஆதலும் - வெறுப்புண்டாதலும், ஆம் ஆதலும் - விருப்புண்டாதலும், இல் - இல்லாத, நொதுமல் மதி - உபேட்சாபுத்தியின்கண், தோன்றுதல் - விளங்கும் ஆநந்தம், முக்கியமாமாநந்தம் - முக்கியாநந்தமாம், மனோலயயோகத்தினில்-யோகாப்பியாசத்தால் மனோலயமான விடத்து, வந்துதித்தல் - விளங்கித் தோன்றுமாநந்தம், ஏதமறும் - குற்றமற்ற, நிசாநந்தம்-நிஜாநந்தமாம், பிரிய விடயத்துள் - (மனைவி மக்கள் முதலிய) பிரியமாயுள்ள பொருள்களுள், யான் பிரியனென்ன - யானே (எனக்கு மிகு) பிரியமானவனென்று, (உணர்ந்த விடத்து), தோன்றுதல் - விளங்கும் ஆநந்தம், ஆன்மாநந்தம் - ஆத்மாநந்தயாம், (எ - று). தான் - அசை. ஆதல் என்பது கேடு என்பதனோடும் சென்றியைந்துநின்றது.





**33.** விரியுமுல கனைத்தும்பொய் மெய்ம்மைதா னேன்னும் விவேகத்திற் றோன்றுவதே யத்துவிதா நந்த, மரியமறை முடிவாகும் வாக்கியஞா னத்தா லாதலது வித்தியா நந்தமேன வறிக, வுரியனமுன் னின்மையோடு பின்னின்மை யன்றி யோன்றோன்று காமையேன்று மின்மையேன நான்காய்த், திரியுமபா வங்களிவை நித்தியத்துட் புகாத திறத்தனவாம் பூரணத்து முருதனமூன் றகும்.

---

முக்கியாநந்தம்.

4. விருப்பு வெறுப்பின்றியதாய உபேட்சா புத்தியிற் றோன்றும் ஆநந்தம் முக்கியாநந்தமாம்;

நிஜாநந்தம்.

5. யோகாப்பியாசத்தால் மநோலயமான விடத்துத் தோன்றும் ஆநந்தம் நிஜாநந்தமாம்;

ஆத்மாநந்தம்.

6. வனிதாதி பிரிய வஸ்துக்களில் யானே பிரிய சொருபனென்றுணர்ந்த விடத்துத் தோன்றும் ஆநந்தம் ஆத்மாநந்தமாம்; (32)

அத்துவிதாநந்தம்.

7. மாயையும் அதனி னின்றும் விரிந்துள்ள நாமரூபப் பிரபஞ்சமுமாகிய அனைத்தும் மித்தையாம்; தானே(ஆத்மாவே)சத்தியமா (நித்திய வஸ்துவா)மென்னும் விவேகஞானமுண்டாயவிடத்துத்தோன்றும் ஆநந்தம் அத்துவிதாநந்தமாம்;

வித்தியாநந்தம்.

8. மறை முடிவிலுள்ள தத்துவமசி முதலிய மகா வாக்கியார்த்தங்களின் விசாரஞாநத்தா லுண்டாகும் ஆநந்தம் வித்தியாநந்தமாம்.

ஆநந்தமொன்றே உபாதியால் எட்டுவகையாக விளங்குதல் இங்காராய்ந் துணர்தற்குரியதாம்.

---

(இ - ள்.) விரியுமுலகனைத்தும் பொய் - (மாயையோடு அதனினின்றும்) விரிந்துள்ள பிரபஞ்சமனைத்தும் மித்தையாம், தான் - ஆத்மாவே, மெய்ம்மை - சத்தியமாம், என்னும் விவேகத்தில் - என்னும் விவேக (வடிவ) ஞானமுண்டாயவிடத்து, தோன்றுவது - விளங்கும் ஆநந்தம், அத்துவிதாநந்தம் - அத்துவிதாநந்தமாம், அரிய - (சற்குருவினனுக்கிரக மில்லாதார் அறிதற்கு) அருமையாயுள்ள, மறைமுடிவு - (உபநிஷத்வடிவ) வேதாந்தங்களில், ஆகும்-(இருப்பன) ஆகிய, வாக்கியம் (தத்துவமசி முதலிய மகா) வாக்கியங்களால், (உண்டாகும்), ஞானத்தால் - (சீவப்பிரஹ்ம ஐக்கிய அபரோட்ச) ஞானத்தால், ஆதலது - தோன்றி விளங்கும் ஆநந்தம், வித்தியாநந்தம் - வித்தியாநந்தமாம், என அறிக - என்று (இவ்வாறு ஆநந்தத்தின் வகையினை நீ) அறிவாயாக, அபாவங்கள் - (இன்மையென்னும்) அபாவங்கள், உரியன - (பிரதியோகியென்னும் எதிர் மறையினுணர்ச்சியால் அறிதற்கு) உரியனவாயுள்ள, முன்னின்மையொடு - பிராகபாவமும், பின்னின்மை - பிரத்துவம்சாபாவமும், அன்றி - இவை யல்லாமல், ஒன்றொன்றாகாமை -(ஒன்றபிறிதொன்றாகா தென்னும்) அந்நியோந்நியாபாவமும், என்றுமின்மை - அத்தியந்தாபாவமும், என - என்று, நான்காய் - நான்கு பாகுபாடுடையனவாய், திரியும் - (தோன்றிக்) கெடுவனவாம், இவை-இவ்வபாவங்கள், நித்தியத்துள் - பிரஹ்ம நித்தியபதத்துள், புகாத திறத்தனவாம்-சேராத தன்மையினவாம், பூரணத்தும் - பிரஹ்ம பூரணபதத்துள்ளும், உறுதன - பொருந்தாதனவாய பரிச்சேதங்கள், மூன்றுகும் - மூன்றுபாகுபாடுடையனவாம், (எ - று).

### அபாவ சதுஷ்டயம்.

வினா :— நித்தியத்தின் பேத மேவை ?

விடை:—அபாவம் முன்னின்மை (பிராகபாவம்), பின்னின்மை (பிரத்துவம்சாபாவம்), ஒன்றொன்றாகாமை (அந்நியோந்நியாபாவம் - பேதம்), என்றுமின்மை (அத்தியந்தாபாவம்) என நான்காம்; இவற்றுள், அந்நியோந்நியா பாவமும் அத்தியந்தா பாவமும் நித்தியம்போலத் தோன்றுவனவாம். இந்நான்கு அபாவமும் நாசமடைவனவாயிருத்தலின், நித்தியத்திற் சேராதனவாம். (அதனால், நித்திய பேதமில்லையாம்.)

### பிராகபாவ முதலியன.

பிராகபாவம் - உற்பத்தி யின்றி நாசமுடைய அபாவமாம்;

பிரத்துவம்சாபாவம் - உற்பத்தியாய் நாச மின்றிய அபாவமாம்;

அந்நியோந்நியா பாவம் - உற்பத்தி நாசமின்றிய அபாவாம்;

அத்தியந்தா பாவமும் உற்பத்தி நாசமின்றிய அபாவமாம் என்பது தர்க்க நூலாரது கொள்கையாம்.

கடம் தன் உற்பத்திக்குமுன் இல்லாமை அதன் பிராகபாவமாம்; அந்தக்கடம் தன் நாசத்தின் பின் இல்லாமை அதன் பிரத்துவம்சாபாவமாம்; கடம் படமன்று என்புழிப் படத்தின் பேதம் கடத்திலிருத்தலின், அப்பேதம் அந்நியோந்நியா பாவமாம்; நீரில் புழுதி யென்றுமில்லை, தீயில் குளிர்ச்சி யென்று மில்லை யென்புழி நீரில் புழுதியில்லாமையும் தீயில் குளிர்ச்சி யில்லாமையும் அத்தியந்தாபாவமாம்.

பிராகபாவம் (கடத்தின் முன்னின்மை) தனது பிரதியோகி (தனது எதிர்மறையாய கடம்) உண்டாயகாலத்துக் கெடுதலின் நித்திய மன்றாம்; பிரத்துவம்சாபாவம் (கடத்தின் பின்னின்மை) தனது பிரதியோகியின் (தனது எதிர்மறையாய கடத்தின்) சமவாயி (முதற்) காரணத்திலிருத்தலாலும், அச்சமவாயி காரணம் நாசமடைந்தபோது தானும் நாசமாய் விடுதலாலும், அதுவும் நித்திய மன்றாம்; கடம் படமன்று என்புழிக் கடத்திலிருக்கும் படத்தின் பேதமென்னும் அந்நியோந்நியாபாவமும், தீயில் குளிர்ச்சி யென்று மில்லை யென்புழித் தீயிலுள்ள குளிர்ச்சியின் அத்தியந்தா பாவமும், கடமும் தீயும் நாசமாயபோது தாமும் நாசமாய் விடுதலின் அவையும் நித்திய மன்றாம். இவ்வாறு மாயை பரியந்தம் அபாவங்களை விசாரணை செய்து நோக்கினும், அவை அநித்தியமேயாம்.

பிரஹ்ம பின்ன மனைத்தும் அநித்தியமாம்; பிரஹ்ம ஞானத்தால் நிவிர்த்தியாவனவா மென்னும் உண்மை யுணர்ச்சி யில்லாதார் பிருதிவி முதலிய பாவ பதார்த்தங்கள் நித்திய மாகாவிடினும் பிராகபாவ முதலிய அபாவபதார்த்தங்களாவது நித்தியமாகாவோ வென்று செய்யுஞ் சங்கையை நிவிர்த்தி செய்தற் பொருட்டுப் பிராகபாவ முதலிய அபாவங்கள் நித்தியத்திற்சேராதனவாமென்று கூறப்படுகின்றன வென்க.



### ‘‘முற்கூறிய அபாவத்தின் சுவரூபத்தில் வேதாந்தத்திற்கு விருத்தமான அம்சங்களைக் காட்டுதல்.

இவ்வாறு அபாவங்கள் நியாயசாஸ்திரத்தின்படி சொல்லப்பட்டன. இதில் வேதாந்தத்திற்கு விருத்தமான அம்சங்களைச் சுருக்கமாய்க்காட்டுவோம்.

1. கபாலத்தில் கடத்தின் பிராகபாவத்தினை அநாதி யென்பர். அது பிரமாண விருத்தமாமாகலின், வேதாந்தத்தை அநுசரித்ததன்று; எனெனின், கடப் பிராகபாவத்தின் அதிகரணம் ஸாதியாம்; பிரதியோகியாகிய கடமும் ஸாதியாம். பிராகபாவத்திற்கு அநாதித் தன்மை எவ்வாறுண்டாம்?

மாயையில் சகல காரியங்களின் பிராகபாவத்திற்கும் அநாதித்தன்மை கூறின் சம்பவிக்கின்றது; மாயை அநாதியாகலின். ஆனால், மாயையிற் காரியத்தின் பிராகபாவத்தை அங்கீகரித்தல் வியர்த்தமாம்; சித்தாந்தத்தில் இஷ்டமுமன்று; ஆதலால், பிராகபாவம் ஸாதி ஸாந்தமாம்.

2. அங்ஙனமே நையாயிகமதத்தில் பிரத்துவம்ஸாபாவமும் தனது பிரதியோகியின் உபாதானத்திலேயே யிருக்கின்றது; ஆதலால், கடத்தின் துவம்ஸம் கபால மாத்திரத்திருப்பதாம்; அஃது அநந்தமாம் என்று கூறுதல் அசங்கதமாம். கடத்துவம்ஸத்தின் அதிகரணமாகிய கபாலத்தின் நாசத்தால் கடத் துவம்சத்திற்கு நாசம் உண்டாகுதலால், பிரத்துவம்ஸாபாவமும் ஸாதி ஸாந்தமாம்.

3. அங்ஙனமே அந்நியோந்நியா பாவமும் ஸாதிஸாந்த அதிகரணத்தில் ஸாதி ஸாந்தமாம். எங்ஙனம்: கடத்தில் படத்தின் அந்நியோந்நியாபாவமிருக்கின்றது; அதன் அதிகரணம் கடமாம்; அது ஸாதியும் ஸாந்தமுமாம். ஆதலால், கடத்திலிருப்பதாகிய படாந்நியோந்நியாபாவமும் ஸாதி ஸாந்தமாம். அநாதி அதிகரணத்தில் அந்நியோந்நியாபாவம் அநாதியாம். ஆனால் அஃது அநாதியும் ஸாந்தமுமாம்; அநந்தமன்று.

எங்ஙனம்: பிரஹ்மத்தில் ஜீவனது பேதமிருக்கின்றது. அது ஜீவனது அந்நியோந்நியாபாவமாம். அதன் அதிகரணம் பிரஹ்மமாம்; அஃது அநாதியாம். ஆதலால், (௧) பிரஹ்மத்தில் ஜீவனது பேதவடிவ அந்நியோந்நியாபாவம் அநாதியாம்; (௨) பிரஹ்ம ஞானத்தினால் அஞ்ஞான நிவிர்த்தி வாயிலாகப் பேதத்திற்கு அந்த முண்டாகின்றது. ஆதலால் அது ஸாந்தமாம்.

அநாதிபதார்த்தத்திற்கும் ஞானத்தினால் நிவிர்த்தி அத்வைத வாதத்தில் இஷ்டமாம். இதனாற்றான் ௧. சுத்தசேதனம், ௨ ஜீவன், ௩. ஈசுவரன், ௪ அவித்தை, ௫. அவித்தியாசேதனங்களின் சம்பந்தம், ௬. அநாதிகளுக்கு ஒன்றற் கொன்றுள்ள பேதம் என்னும் ஆறு பதார்த்தங்களையும் அத்வைத மதத்தில் சுவரூபமாக அநாதியென்பர். சுத்த சேதன மொழிந்த ஐந்திற்கும் ஞானத்தினால் நிவிர்த்தியை அங்கீகரித்திருக்கின்றனர்.

இதில் இச்சங்கை யுண்டாகின்றது:—ஜீவேசுவரர்களை அத்வைத வாதத்தில் மாயிக மென்பர். மாயையின் காரியம் மாயிகமெனப்படும். ஜீவனும் ஈசுவரனும் மாயையின் காரியமும் அநாதியுமாவர் என்று கூறுதல் விருத்தமாம்.

அச்சங்கைக்கு இது சமாதானமாம்:—ஜீவேசுரர்கள் மாயையின் காரியமாவரென்பது மாயிகம் என்னும் சொல்லிற்குப் பொருளன்று. ஆனுல், மாயையினது ஸ்திதியின் அதீனம் ஜீவேசுவரர்களது ஸ்திதியென்பது பொருளாம். மாயையின் ஸ்திதியின்றி ஜீவேசுவரர்களது ஸ்திதி யிராதாகலின் அவர் மாயிகமாவர்; மாயையினைப்போல அநாதியுமாவர். இவ்வாற்ருல் அநாதி அந்நியோந்நியாபாவமும் ஸாந்தமாம். அந்நியோந்நியாபாவம் அநந்தமன்று.

4. அங்ஙனமே: அத்தியந்தாபாவமும் ஆகாய முதலியவற்றினைப்போல அவித்தையின் காரியமும் விநாசியுமாம்.

இவ்வாற்ருல் அத்வைத வாதத்தில் சகல அபாவங்களும் விநாசியாம். எவ்வபாவமும் நித்தியமன்று; அத்வைத வாதத்தில் அநாத்ம பதார்த்தங்கள் முழுவதும் மாயையின் காரியமாமாகலின், ஆத்மாவின் வேருயவற்றிற்கு நித்தியத்தன்மை சம்பவியாது.

எங்ஙனம்: கடமுதலிய பாவ பதார்த்தங்கள் மாயையின் காரியமோ, அங்ஙனமே அபாவமும் மாயையின் காரிய மாகலின், மித்தையாம்.

ஒரு நூலாசிரியராகிய அத்வைதவாதி ஒருவர் அத்தியந்தாபாவத்தினை அங்கீகரித்து, மற்றைய அபாவங்களைப் பொய் என்பர்.

1. எங்ஙனம் கடத்தின் பிராகபாவத்தைக் கபாலத்திற் கூறுவர்; அது பொய்யாம்; ஏனெனின், கடத்தின் உற்பத்திக்கு முற்கால சம்பந்தியாகிய கபாலமே "கடம் உண்டாகும்" என்னும் உணர்ச்சிக்கு விஷயமாம். கடத்தின் பிராகபாவம் அப்பிரசித்தமாம்.

2. அங்ஙனமே: தண்ட முதலியவற்ருல் பொடிக்கப்பட்ட கபாலத்தின் அல்லது பிரிவுபட்ட கபாலத்தின் வேருன கடத்துவம்சமும் அப்பிரசித்தமாம்.

3. அங்ஙனமே: கட சம்பந்தமின்றிய பூதலமே கடத்தின் ஸாமயிகாபாவமாம். கடமுளதாயின் அப்போது கடத்தின் சம்பந்தியாகிய பூதலமிருக்கின்றதாகலின், கடசம்பந்தமின்றிய பூதலமில்லை. இவ்வாற்ருல் ஸாமயிகாபாவம் அதிகரணத்தின் வேறன்று.

4. அங்ஙனமே: கடத்தில் படத்தின் பேதத்தைக் கடத்திலிருப்பதாகிய படாந்நியோந்நியாபாவமென்பர். அஃது இரண்டின் அபேதத்தினது அத்தியந்தாபாவவடிவமாம். இரண்டு பதார்த்தங்களினது அபேத அத்தியந்தாபாவத்தின் வேருன அந்நியோந்நியாபாவம் அப்பிரசித்தமாம். இவ்வாற்ருல் அத்தியந்தாபாவம் ஒன்றேயிருக்கின்றது; பிறிதோரபாவமுமில்லை. இவ்வாறு அபாவத்தின் நிரூபணத்தில் வெகு விசாரமுளது." என்று விருத்தி ரத்நாவலி 7-வது ரத்நம் கூறுவது இங்கு ஆராய்ந்துணர்தற்பாலதாம்.



**34.** உரைத்தவைதா மியாவையெனி னொருகாலத் துண்டின் றொருகாலத் தெனுங்கால பரிச்சேத முடனே, தெரித்தவொரு தேயத் துண் டொருதேயத் தில்லையென் றேயபரிச் சேதமுமொன் ருமாகா தென்னுங், கருத்தில்வரு வத்துபரிச் சேதமுமா மென்னக் கருதிடுக வினிச்சித்தின் விரிவாகு மெனமுன், விரித்திடுமச் சீவாதி கட்குநா மாதி விவகார கற்பனையீண் டெடுத்துமொழி குதுமால்.

---

பரிச்சேதத் திரயம்.

வினு:—அங்ஙனமாயின், பூரணத்திற்சேராதவை எவையாம்?

விடை:—அவை கால பரிச்சேதம், தேச பரிச்சேதம், வஸ்து பரிச்சேதமென்பனவாம். அவற்றுள், (33)

கால பரிச்சேதம்.

1. ஒருவஸ்து ஒருகாலத்துண்டு, பிறிதொரு காலத்தில்லை யென்பதே கால பரிச்சேதமாம்;

தேச பரிச்சேதம்.

2. ஒருவஸ்து ஒருதேசத்துண்டு, பிறிதொரு தேசத்தில்லை யென்பதே தேச பரிச்சேதமாம்;

வஸ்து பரிச்சேதம்.

3. ஒருபொருள் பிறிதொரு பொருளாகாதென்பதே வஸ்து பரிச்சேதமாம். (பரிச்சேதம் - முடிவு அல்லது எல்லையாம்).

காலத்தா லந்தமுடையது கால பரிச்சேத முடையதாம்; தேச (இட)த்தாலந்த முடையது தேச பரிச்சேத முடையதாம்; வஸ்துவா (பொருளா) லந்த முடையது வஸ்து பரிச்சேத முடையதாம். (அந்தம் - முடிவு.)

பிரஹ்மம் உற்பத்தி நாசமின்றி யிருத்தலின், கால பரிச்சேத மில்லாததாம்; எங்கு மிருத்தலின், தேச பரிச்சேத மில்லாததாம்; மாயாப் பிரபஞ்சமனைத்துமா யிருத்தலின், வஸ்து பரிச்சேத மில்லாததாம்.

---

(இ - ள்.) உரைத்தவை தாம் யாவை யெனின்—கூறியபரிச்சேதங்கள் எவையாமெனின், (அவை), ஒருகாலத்துண்டு - (ஒன்று) ஒருகாலத்திருப்பதாம், ஒருகாலத்தின்று - பிறிதொருகாலத்தில்லாததாம், எனும் காலபரிச்சேதமுடன் - என்று கூறப்படுகின்ற காலபரிச்சேதமும், தெரித்த (ஆராய்ந்து) கூறப்படுகின்ற, ஒருதேயத்துண்டு - (ஒன்று) ஒருதேசத்திருப்பதாம், ஒருதேயத்தில்லை - பிறிதொரு தேசத்தில்லாததாம், என் - என்று கூறப்படுகின்ற, தேய பரிச்சேதமும் - தேசபரிச்சேதமும், ஒன்றும் - (இஃது) ஒரு பொருளாம், ஆகாது - (பிறிதொரு பொருள்) ஆவதன்று, என்னும் - என்று கூறப்படுகின்ற, கருத்தில் வரும்-ஆராய்ச்சியால் தோன்றுகின்ற, வத்துபரிச்சேதமும்-வஸ்துபரிச்சேதமும், ஆமென்ன-ஆகுமென்று, கருதிடுக-(அம்மூன்றனையும் நீ) ஆராய்ந்தறிவாயாக, இனி - இனிமேல், சித்தின் விரிவாகுமென - சித்தினது பேதமா மென்று, முன்விரித்திடும் - முன்னர் விரித்துக்கூறிய, அச்சீவாதிகட்கு - அந்தச் சீவேசாதிகளுக்கு, (உள்ள), நாமாதி விவகாரகற்பனை - நாமரூப வியவகார கற்பனைகளை, ஈண்டு - இவ்விடத்தில், எடுத்து மொழிகுதும் - (விளங்குமாறு) எடுத்துக்கூறுவாம், (எ - று). 34

**35**. சாற்றரிய சீவபே தங்கண்முறை விசுவன் றைசதன்பின் பிராஞ்ஞனெனப் பகர்ந்திடுவ ரவருள், வேற்றுமைசெய் தூலவுடல் வியட்டியபி மானி விவகாரி கன்புத்தி கதுவுறுசை தன்யன், மாற்றரிய சிதாபாசன் விட்சேப ரூபன் வருபிரமாத் துருநுவல்கத் துருவோடுபோத் துருவே, தோற்றியிடும் விஞ்ஞான மயன்குடும்பி சரீரி துவம்பதமுக் கியன் முதலா யினவிசுவ ஞமம்.

---

*"தேச கால முதலாகவுள்ள அநிர்வசநீய ஜகத்தனைத்தும் ஆத்மாவின்கண் அஞ்ஞானியாற் கற்பிக்கப்பட் டிருப்பனவாம். மத்தியான சூரியனிடத்துக் கூகையானது இரவின் கற்பனையைச் செய்யும்; உறங்குகின்ற புருஷனுக்குக் கனவின்கண் நித்திராதோஷத்தால் நாநாப் பிரகாரமாயஜகத்துத்தோன்றும்; அது போல, ஆத்மாவின் அஞ்ஞானத்தால் சம்பூரண ஜகத்து நமக்குப் பிரதீதியா (தோன்று) கின்றது. சச்சிதாநந்த சொரூப ஆத்மாவின்கண் தேச கால வஸ்து பரிச்சேதமின்றாம். இக்காரணத்தால் ஆத்மா அநந்தமாம்." என்று ஆத்மபுராணம் முதல் அத்தியாயம் கூறுவது இங்கு நன்குணர்தற்பாலதாம்.*

**ஜீவாதி நாமாதி வியவகார கற்பனை.**

வினா:—சித்தின் பேதமா மென்று முற்கூறிய ஜீவாதிகளின் நாமாதி வியவகார கற்பனைக ளெவை?

விடை:—அவற்றை முறையாகக் கூறுகின்றோம்; கேட்கக் கடவாய். (34)

**ஜீவ நாமாதி வியவகார கற்பனை.**

ஜீவன்:விசுவன், தைசதன், பிராஞ்ஞனென மூன்று பேதமாக விளங்குவன். அவ் விசுவன் முதலிய மூவருள்,

**விசுவ பரியாய நாமம்.**

1. ஸ்தூல சரீர வியஷ்டி யபிமானி, வியாவ காரிக ஜீவன், புத்திப் பிரதிபலந சைதன்னியன், சிதாபாசன், விட்சேப ரூபன், பிரமாத்துரு, கர்த்துரு, போத்துரு, விஞ்ஞான மயன், குடும்பி (சம்சாரி), சரீரி, துவம்பத முக்கியார்த்தன் (க்ஷேத்திரஞ்ஞன், விஷயி, பாவாத்மா) முதலாயுள்ள பெயர்கள் (ஜாக்கிராவஸ்தையி னபிமானியா யுள்ள) விசுவனது பரியாய நாமங்களாம். (35)

---

(இ - ள்.) சாற்றரிய - (வேதாந்த சாஸ்திர விசாரமில்லாதவர்) கூறுதற்கரிய, ஜீவபேதங்கள் - சீவபேதங்களை, முறை - (ஜாக்கிராதிக்) கிரமமாக, விசுவன் தைசதன் - விசுவனும் தைசதனும், பின் - பின்னர், பிராஞ்ஞனென - பிராஞ்ஞனும் என்று, பகர்ந்திடுவர் - (அறிஞர்) கூறுவர், அவருள் - அம்மூவருள், வேற்றுமைசெய் - (ஜீவ)பேதங்களைச் செய்கின்ற, தூலவுடல் வியட்டியபிமானி - ஸ்தூல சரீர வியஷ்டியபிமானி, விவகாரிகன் - வியாவகாரிக ஜீவன், புத்திகதுவுறு சைதன்யன் - புத்திப்பிரதிபலந சைதன்னியன், மாற்றரிய - (அஞ்ஞானமுள்ள அளவும்) கெடுதலில்லாத, சிதாபாசன் - சிதாபாசன், விட்சேபரூபன் - விட்சேபரூபன், வரு - (வியவகார தசையில் தொடர்ந்து) வருகின்ற, பிரமாத்துரு - பிரமாத்துரு, நுவல் - (கருமத்தைச் செய்பவனென்று) சொல்லப்படுகின்ற, கத்துரு - கர்த்துரு, போத்துரு - போக்துரு, தோற்றியிடும்-(யான் யானென) விளங்கி வருகின்ற, விஞ்ஞானமயன் - விஞ்ஞானமயன், குடும்பி - சம்சாரி, சரீரி - சரீரி, துவம்பத முக்கியன்- துவம்பத முக்கியார்த்தன், முதலாயின - முதலியன, விசுவஞமம் - (சாக்கிராவஸ்தையின் அபிமானியாய) விசுவனது (பரியாய) நாமங்களாம், (எ - று). கதுவுறுதல் - பிரதிபலித்தல். 35



**36**. பெற்றவொரு சூக்குமமெய் வியட்டியபி மானி பிராதிபா சிக சீவன் சொப்பனகற் பிதனேன், மற்றவைதா முதலாய தைசதன்றன் பெயராய் வழங்குறுவர் காரணமெய் வியட்டியபி மானி, யுற்றுவரு மவித்தையோ பகிதன்கா ரியமா முபாதிகனேன் பனமுதலாம் பிராஞ் ஞஞ மங்கள், பற்றிவரு சீவான்மா வந்தரான் மாமேற் பரமான்மா வேனப்படுமோன் மாவிதமூன் றுகும்.

---

**தைசத பரியாய நாமம்.**

2. சூட்சும சரீர வியஷ்டி யபிமானி, பிராதிபாஸிக ஜீவன், சொப்பன கற்பிதன் முதலாயுள்ள பெயர்கள் (சொப்பநாவஸ்தையின் அபிமானியாயுள்ள) தைசதனது பரியாய நாமங்களாம்.

**பிராஞ்ஞ பரியாய நாமம்.**

3. காரண சரீர வியஷ்டி யபிமானி, அவித்தியோபகிதன், காரியோபாதிகன் முதலாயுள்ள பெயர்கள் (சுழுத்தியவஸ்தையினபிமானியாயுள்ள) பிராஞ்ஞனது பரியாய நாமங்களாம்.

ஒரு பதத்தின் அர்த்தத்தைத் ... கும் மற்றொரு பதம் பரியாய நாமமாம்.

**ஆத்மத் ... திரயம்.**

வினா:—ஆத்ம பேதமுண் ... ?

விடை.—உண்டு. ... பரமாத்மாவென ... வகைத்தாம்; (36)

ஆத்மா: ஜீவாத்மா, அந்தரா... அவற்றுள்,



---

(இ - ள்.) பெற்ற-(சிருஷ்டியின் ஆரம்பகாலத்தில்) பெற்ற, ஒரு - ஒப்பற்ற, சூக்குமமெய் வியட்டியபிமானி - சூட்சும சரீர வியஷ்டியபிமானி, பிராதிபாசிக சீவன்-பிராதிபாஸிக ஜீவன், சொப்பன கற்பிதன் - சொப்பன கற்பிதன், என் - என்று கூறப்படுகின்ற, அவை முதலாய - அப்பெயர்கள் முதலிய வற்றை, தைசதன் பெயராய் - (சொப்பனாவஸ்தையி னபிமானியாய) தைசதனது (பரியாய) நாமங்களாய், வழங்குறுவர் - (அறிஞர்) கூறுவர், காரணமெய் வியட்டியபிமானி - காரண சரீர வியஷ்டியபிமானி, உற்றுவரும் - (அநாதியாகப்) பொருந்திவருகின்ற, அவித்தையோபகிதன் - அவித்தியோபகிதன், ஆம் - (சுகதுக்கம் தொடர்ந்து வருவது) ஆகிய, காரிய உபாதிகன் - காரியோபாதிகன், என்பன முதலாம் - என்று சொல்லப்படுவன முதலாகவுள்ள பெயரனைத்தும், பிராஞ்ஞநமங்கள்-(சுழுத்தியவஸ்தையி னபிமானியாய) பிராஞ்ஞனது (பரியாய) நாமங்களாம், பற்றிவரு — (உபாதிகளைப்) பொருந்தி வருகின்ற, சீவான்மா - ஜீவாத்மா, அந்தரான்மா - அந்தராத்மா, மேல் - (இவ்விரண்டற்கும்) மேலாக வுள்ள, பரமான்மா - பரமாத்மா, எனப்படும் - என்று கூறப்படுகின்ற, ஆன்மாவிதம் - ஆத்மாவின் வேறுபாடு, மூன்றுகும் - மூன்றாம், (எ - று). 36

**37.** காய்ந்துள விரும்பு போலுடம் பாதி கலந்துறு குடும்பமென் வழக்கிற், சார்ந்துளன் சீவான் மாவெனப் படுவான் றாமரை யிலையினீர் போலத், தோய்ந்துள குடும்பப் பெருவிவ காரந் தோய்வில னந்தரான் மாவாம், போந்துல கிற்குப் பரிதிபோற் சான்றாய்ப் பொருந்தினோன் றான் பர மான்மா.

---

ஜீவாத்மா.

1. தீயிற் காய்ந்துள்ள இரும்பு (தப்தாய பிண்டம்)போல, தேகேந்திரிய பிராணன் முதலியவற்றுள் (யானெனதென்னும் அபிமான வடிவமாகச்) சம்பந்தித்து, சம்சார வியவகார மனைத்து முடையவன் ஜீவான்மாவென்று சொல்லப் படுவான்.

அந்தராத்மா.

2. தாமரை யிலையினீர் (கமலபத்திரோதகம்) போல, சம்சார வியவகார மனைத்திலும் பொருந்தியும், பொருந்தாதிருப்பவன் அந்தராத்மா வென்று சொல்லப்படுவான்.

பரமாத்மா.

3. உலக வியவகாரமனைத்திற்கும் சூரியன் சாட்சி மாத்திரமாக விளங்குதல்போல, ஜீவாத்மா அந்தராத்மாக்களின் வியவகார மனைத்திற்கும் சாட்சி மாத்திரமாக விளங்குகின்றவன் பரமாத்மாவென்று சொல்லப்படுவான். (37)

---

(இ - ள்.) (அவ்வாத்மத்திரயத்துள்), காய்ந்துள இரும்புபோல் - தப்த அயப்பிண்டம்போல, உடம்பாதி - தேகம் (இந்திரியம்) முதலியவற்றுள், கலந்துறு - (கருமவசத்தால்) சம்பந்தித்துவருகின்ற, குடும்பமென் வழக்கில் - சம்சார மென்னும் வியவகாரத்தில், சார்ந்துளன் - சேர்ந்திருப்பவன், சீவான்மா வெனப்படுவான் - ஜீவாத்மா வென்று சொல்லப்படுவான், தாமரையிலையினீர் போல - கமலபத்திர உதகம் போல, (தனக்குரியதாய்), தோய்ந்துள - பொருந்தியிருக்கின்ற, குடும்பப்பெருவிவகாரம்-சம்சாரமென்னும் பெரிய வியவகாரத்தில், தோய்விலன் - (பொருந்தியும்) பொருந்தாதிருப்பவன், அந்தரான்மாவாம் - அந்தராத்மா(என்று சொல்லப்படுவான்)ஆவன், போந்து-(தேகாபிமான முதலியன வில்லாதொழுகி) வந்து, உலகிற்கு - உலக வியவகாரத்திற்கு, பரிதிபோல் - சூரியன் (சாட்சியா யிருத்தல்) போல, சான்றாய் - (ஜீவாத்மா அந்தராத்மாக்களின் வியவகாரத்திற்குச்) சாட்சியாய், பொருந்தினோன்றான் - அமைந்திருப்பவன், பரமான்மா - பரமாத்மா (என்று சொல்லப்படுவான்), (எ - று) (தப்த - காய்ந்த ; அயப்பிண்டம் - இரும்புருண்டை.)





**38.** நீர்விழுந் தொருவெங் கதிர்தடு மாறி நின்றதென் றுரைப்பது போலுங், கார்விரைந் தோட வோடுகின் றதுதண் கலைமதி யென்பது போலு, மோர்வருந் திரிவில் போதவான் மாவிற் குடன்முத லாகியவுபாதிப், பேர்வருஞ் சீவ பாவனை யுலகப் பெருவிவ காரமென் றறியே.

---

சம்சார கற்பனை.

வினா :—ஆத்மாவிற்குச் சம்சார கற்பனை எவ்வாறாம் ?

விடை :—"வாக்குமன முங்கண்ணு மற்றளவிந் தியங்களுமே, நோக்கரிய"தாய், எஞ்ஞான்றும் வேறுபாடடையாததா யுள்ள சைதன்னிய (அறிவு) வடிவ ஆத்மாவிற்கு ஸ்தூல - சூக்கும - காரண மென்னுந் தேகத்திரய உபாதிகளால் விசுவன் - தைசதன் - பிராஞ்ஞனென்னும் பெயர்வருகின்ற ஜீவாவஸ்தையானது, அசைகின்ற நீரின்கண் சூரியன் விழுந்து தடுமாறி வருத்தமடைகின்றான்; மேகம் விரைந்தோட, சந்திரன் அதனுள் புகுந்து விரைந்தோடுகின்றானென்று உலகத்தார் கூறும் வியவகாரம் போல்வதாம்.

ஆத்மா ஜனந மரணாதி சம்சாரத்தை யடைந்திருக்கின்றதென்பது அசைகின்ற நீரின்கண் சூரியனது பிரதிபிம்பம் அசைகின்றதை யறியாது சூரியனே நீரில் விழுந்து அசைகின்றானென்றும், சந்திரனோடாதும் மேக மோடுவதுமாயிருப்பதையறியாது சந்திரன் மேகத்துள் புகுந் தோடுகின்றானென்றும் உலகத்தார் கூறுவது போல்வதாமென்க. [கேவலத்தில் (சுழுத்தியில்) அவித்தையிலும், சகலத்தில் (சாக்கிர - சொப்பனங்களில்) அவித்தையின் காரியமாயுள்ள அந்தக்கரணத்திலும் ஆத்மா ஜீவரூபமாய்ப் பிரதிபலித் திருக்கின்றது; சம்சார கற்பனை யனைத்தும் பிரதிபிம்ப வடிவ ஜீவனுக்கன்றிப் பிம்ப வடிவ ஆத்மாவிற் கில்லையாமென்ப திங்குணர்தற் பாலதாம்]. (38)

---

(இ - ள்.) ஒருவெங்கதிர் - ஒப்பற்ற வெம்மை வடிவமாய சூரியன், நீர் விழுந்து - (அசைகின்ற) நீரின்கண் (தவறி) விழுந்து, தடுமாறி நின்றது - தடுமாற்றமடைந்து (தத்தளித்துக்கொண்டு) இருக்கின்றான், என்றுரைப்பது போலும் - என்று கூறுவதுபோலவும், கார்விரைந்தோட - மேகம் விரைவாக ஓடாநிற்க, தண்கலைமதி - தட்ப வடிவமாய கிரணங்களையுடைய சந்திரன், ஓடுகின்றது - (அம்மேகத்துள்புகுந்து) ஓடுகின்றான், என்பதுபோலும் - என்று கூறுவதுபோலவும், ஓர்வரும் - (சுருதியுக்திகளால் இன்னதன்மையதென்று வெளிப்படையாக ஆராய்ந்து) அறிதற்கரிய, திரிவில் - (எஞ்ஞான்றும்) மாறுபடுதலில்லாத, போத ஆன்மாவிற்கு - ஞானவடிவமாயுள்ள ஆத்மாவிற்கு, உடல் முதலாகியவுபாதி - தேகத்திரய வுபாதிகளால், பேர்வரும்-(விசுவன் - தைசதன் என்றற்றொடக்கத்துப்) பெயர்வருகின்ற, சீவபாவனை - ஜீவாவஸ்தையானது, உலகப்பெருவிவகாரம் - உலகத்தில் பெரிய (சம்சார) வியவகாரமாம், என்றறி - என்று (இங்ஙனம் ஆத்மாவின் சம்சார கற்பனையை) அறியக்கடவாய், (எ - று).

**39.** அருவிராட் புருட னிரணிய கருப்ப னந்தரி யாமியேன் றீசன், றிரிவித மவருட் டேலவா கத்துச் சமட்டியா கியவபி மானி, விரிவுறும் வைசுவா நரனெனன் முதல விராட்புரு டன்பெய ராகு, மருவுற மிலிங்க மேனுமுடற் சமட்டி மானிமாப் பிராணனே யன்றி.

**40.** சூத்திராத் மிகனேன் பெயர்முத லாகச் சோற்றன ரிரணிய கருப்பற், கேத்துகா ரணமா முடம்புறு சமட்டி யெனுமபி மானியவ் வியத்தன், வாய்த்தகா ரணமா முபாதிக னனந்த மயன்பர தேவதை பரம, ஞத்ததற் பதமுக் கியார்த்தனேன் பெயர்மு னந்தரி யாமிபெற் றிடுமே.

---

ஈசுவர நாமபேதம்.

வினு :—ஈசுவர நாமபேத மெவ்வாறும் ?

விடை :—ஈசுவரன் (தேகத்திரய சமஷ்டி யபிமானத்தால்) விராட் புருஷன், இரணிய கருப்பன், அந்தரியாமியென்று மூன்று விதமாக விளங்குகின்றான்; அம் மூவருள்,

1. ஸ்தூல சரீர சமஷ்டி யபிமானி, வைசுவாநரன் முதலிய பெயர்கள் விராட் புருஷனது பரியாய நாமங்களாம்;

2. இலிங்க (சூக்கும) சரீர சமஷ்டி யபிமானி, மகாப்பிராணன், சூத்திராத்மா முதலிய பெயர்கள் இரணிய கருப்பனது பரியாய நாமங்களாம். (39)

3. காரண சரீர சமஷ்டி யபிமானி, அவ்வியத்தன், காரணோபாதிகன், ஆநந்தமயன், பரதேவதை, பரமன், தற்பத முக்கியார்த்தன், (அஞ்ஞான

---

(இ - ள்.) ஈசன் - பரமேசுவரன், அரு - (வெளிப்படையாக அறிதற்கு) அரிய, விராட் புருடன் - விராட்புருஷனும், இரணிய கருப்பன் இரணிய கர்ப்பனும், அந்தரியாமி - அந்தரியாமியும், என்று - என்று, திரிவிதம் - மூன்று வகையாக விளங்குவன், அவருள் - அம்மூவருள், தூலவாகத்துச் சமட்டியாகிய வபிமானி - ஸ்தூல சரீர சமஷ்டியபிமானி, விரிவுறும் - (எங்கும்) வியாபித்துள்ள, வைசுவாநரன் - வைஸ்வாநரன், எனல் முதல - என்று கூறுதல் முதலியன, விராட் புருடன் பெயராகும் - விராட் புருஷனது (பரியாய) நாமங்களாம், மருவுறும் - (ஸ்தூல சரீரத்துள்) பொருந்தியிருக்கின்ற, இலிங்கமெனு முடற் சமட்டி (அபி)மானி - இலிங்க சரீர சமஷ்டியபிமானி, மாப்பிராணன் - மகாப்பிராணன், அன்றி - (இவ்விரண்டுமே) அல்லாமல், (எ - று). 39

(இ - ள்.) சூத்திராத்மிகன் - சூத்திரான்மா, என் - என்று சொல்லப்படுகின்ற, பெயர் முதலாக - பெயர்முதலாக (உள்ளனவற்றைப் பரியாய நாமமாக), இரணிய கருப்பற்கு - இரணிய கருப்பனுக்கு, சொற்றனர் - (புலவர்) கூறினர், எத்து - (புலவர் புகழ்ந்து) துதிக்கின்ற, காரணமாமுடம்புறு சமட்டியெனுமபிமானி - காரண சரீர சமஷ்டியபிமானி, அவ்வியத்தன் - அவ்வியக்தன், வாய்த்த - (காரியங்கள் தன்னுளடங்கப்) பொருந்திய, காரணமாமுபாதிகன் - காரணோபாதிகன், அனந்தமயன் - ஆநந்தமயன், பரதேவதை - பரதேவதை, பரமன் - பரமன், ஆத்த - (தத்துவமசி மகாவாக்கியத்துள்) பொருந்திய, தற்பத முக்கியார்த்தன் - தத்பத முக்கியார்த்தன், என் - என்று கூறப்படுகின்ற, பெயர் - பெயர்களை, (பரியாய நாமமாக), முன் - (சிருஷ்டிக்கு) முதன்மையாகவுள்ள, அந்தரியாமி பெற்றிடும் - அந்தரியாமி பெறுவன், (எ - று). (ஆநந்தமயனென்பது செய்யுளோசை நோக்கி அநந்தமயனென்று கூறப்பட்டது). 40



**41.** சித்திர படமோர் பொருளோடுங் கூடாத் திகழ்வினிற் றௌ தமே யெனவு, நெய்த்தகூழ் வருடக் கடிதமே யெனவு நீனிறத் திலாஞ்சித மெனவும், பத்தியோ வியஞ்சேர்ந் திரஞ்சித மெனவும் படுதல்போற் பிரமமு மாயை, வைத்தகா ரியங்கள் கடந்துறு நிலையில் வயங்குஞ்சித் தெனும்பெயர் புனைந்தே.

**42.** அகிலகா ரணமா மாயையை மருவி யந்தரி யாமியா மாயை, சகலகா ரியமாஞ் சூக்கும வுடம்பு சார்ந்துபொன் கர்ப்பனென் றாகி, விகலமி றூல வுடம்பினை மேவி விராட்டென நிற்குமென் றறிவாய், திகழுறு பிரமஞ் சித்திர படமேற் சித்திர மியாதென வினவில்.

---

உபகிதசைதந்நியன், மாயோபாதிகன், மாயாபாசகன், மாயி, மாயாவி, ஜகத்யோனி, அட்சரன், சபளப்பிரஹ்மம், சகுணப்பிரஹ்மம், பரன், மகேசுவரன்) முதலிய பெயர்கள் அந்தரியாமியினது பரியாய நாமங்களாம். (40)

ஈசுவரனது தேக திருஷ்டாந்தம்.

வினு:—ஈசுவரன் விராட் புருஷன் முதலிய பெயர் பெற்றிருப்பதைத் திருஷ்டாந்த வாயிலாகக் கூறல் வேண்டும் ?

---

(இ - ள்.) சித்திரபடம் - ஒரு சித்திரபடமானது, ஓர் பொருளோடுங் கூடாத்திகழ்வினில் - ஒரு வர்ணத்தோடுங் கூடாது (தனித்து) விளங்குமிடத்து, தௌதமே யெனவும் - தௌதபட மென்றும், நெய்த்த - இளகிய, கூழ் - (பசைக்கூழ் என்னும்) கஞ்சி, வருட - (தன் மீது) பூச, (அதனால்), கடிதமே யெனவும் - கடித பட மென்றும், (பின்), நீனிறத்து - நீலவர்ணத்தால் (அச்சுக்கட்டினால்), இலாஞ்சித மெனவும் - இலாஞ்சித பட மென்றும், (பின்), பத்தி-வரிசையாக, ஓவியஞ் சேர்ந்து - சித்திர வுருவம் அமைந்து (பொருந்த அதனை யெழுதினால்), இரஞ்சித மெனவும் - இரஞ்சித பட மென்றும், படுதல்போல் - கூறப்படுதல் போல, பிரமமும் - பிரஹ்மமும், மாயை - மாயையும், வைத்த - (அதனால்) உண்டாய, காரியங்கள் - காரிய வடிவப் பிரபஞ்சங்களும், (ஆகிய இவற்றிற்கு),கடந்துற நிலையில்-அதீதமாய்ப் பொருந்திய நிலைமையில், சித்தெனும் பெயர் புனைந்து-சித்தென்னும் பெயரைப் பொருந்தி, வயங்கும் - விளங்குவதாம், (எ - று). (தௌதபடம் - வெள்ளைவஸ்திரம்.) 41

(இ - ள்.) அகில காரணமாம் - பிரபஞ்சமனைத்திற்கும் (பரிணாமியுபாதான) காரணமாயுள்ள, மாயையைமருவி - மாயையை (உபாதியாகப்) பொருந்தி, (இருக்குமிடத்து),அந்தரியாமியாம் - அந்தரியாமி(என்னும் பெயரைப் பொருந்தி விளங்குவது) ஆம், மாயை - மாயையினது, (காரியமாயுள்ள அபஞ்சீகிருத பூதங்களின்), காரியமாம் - காரியமாயுள்ள, சகல சூக்குமவுடம்பு - சர்வ சூட்சும சரீரங்களையும், சார்ந்து - (உபாதியாகப்) பொருந்தி, (இருக்குமிடத்து), பொன் கருப்பனென்றாகி - இரணிய கருப்பனென்று (கூறப்படுவது) ஆய், (விளங்குவதாம்), விகலமில் - குறைவில்லாத, தூலவுடம்பினைமேவி - (சர்வ) ஸ்தூல சரீரங்களையும் (உபாதியாகப்) பொருந்தி, (இருக்குமிடத்து), விராட்டென - விராட் புருஷனென்று (கூறுமாறு), நிற்கும் - (விளங்கி) நிற்பதாம், என்றறிவாய் - என்று (இவ்வாறு ஈசனது தேகதிருஷ்டாந்தத்தை) அறியக்கடவாய், திகழுறுபிரமம் - (எஞ்ஞான்றும் மாறுதலின்றி) விளங்கும் பிரஹ்மம், சித்திரபடமேல் - சித்திரபடம் போல்வதாயின், சித்திரம் யாது - (அதன்கண்) சித்திரம்போல இருப்பது யாது,எனவினவில் - என்று நீ வினுவுவாயாயின், 42

**43.** விரிஞ்சனே முதலாஞ் சேதன மோடு வெற்பெழு வாயசே தனமாய்ப், பரந்துள வுலகஞ் சித்திர மேன்பர் பரம்பொரு ளாமொரு பிரமத், திருஞ்சடா சடமா முலகது தோற்ற மெவ்வண மெனிற்படந் தன்னில், வரைந்தபன் னிறமாய்க் குளிர்முதன் மாற்ற வல்லன வலதுகிற் போலி.

---

விடை:—சித்திர படமொன்று (கருமை செம்மை முதலிய பல வர்ணங்களுள்) ஒரு வர்ணத்தோடுங் கூடாது தனித்து விளங்கும்போது தௌத படம் (வெள்ளை வஸ்திரம்) என்றும், (தன் மீது) பசைக்கூழ் பூசியபோது கடிதபட மென்றும், நீல வர்ணத்தால் அச்சுக்கட்டியபோது இலாஞ்சித பட மென்றும், வரிசையாகச் சித்திர மமைத்தபோது இரஞ்சித பட மென்றும் பெயர் பெற்று விளங்குவதாம்; அதுபோல, ஆத்ம வடிவப் பிரஹ்மப் பொருளும் மாயையையும் அதன் காரியமாயுள்ள பிரபஞ்சங்களையும் கடந்து தனித்து விளங்கும்போது சித்தென்றும், பிரபஞ்ச மனைத்திற்குங் காரணமாயுள்ள மாயையோடு கூடியபோது அந்தரியாமி யென்றும், மாயா காரியமாயுள்ள (அபஞ்சிகிருத பூதங்களின் காரியமாயுள்ள) சூட்சும சரீர சமஷ்டியோடு கூடிய போது இரணிய கருப்பனென்றும், (பஞ்சீகிருத பூத காரியமாயுள்ள) ஸ்தூல சரீர சமஷ்டியோடு கூடியபோது விராட்புருஷன் என்றும் பெயர் பெற்று விளங்குவதாம்.

**வினு:—பிரஹ்மம் சித்திரபடம் போன் றிருப்பதாயின், அதன்கண் சித்திர வடிவம்போ லிருப்பதேது ?** (41 - 42)

விடை:—பிரஹ்மன் முதலாகவுள்ள சேதனப் பொருள்களும், மலை முதலாகவுள்ள அசேதனப் பொருள்களுமாக விரிந்துள்ள வுலகம் பிரஹ்மவடிவப் படத்தின்கண் சித்திர வடிவமாக விருப்பதாம்.

**வினு:—சத்தாயுள்ள பரம்பொரு ளென்னும் பிரஹ்மத்தின்கண் மித்தையாயுள்ள சேதன (அறிவு) அசேதன ஜட) வடிவ வுலகம் தோன்றி யிருப்ப தெவ்வாறும் ?**

---

(இ - ள்.) பரம் பொருளாம் - (மாயாப் பிரபஞ்ச வடிவக் கற்பிதப்பொருளுக்கு) அதிஷ்டானப் பொருளாயுள்ள, ஒரு பிரமத்து - ஒப்பற்ற பிரஹ்மத்தின்கண், விரிஞ்னே முதலாம் - பிரமன் முதலாகவுள்ள, சேதனமோடு - சேதனப் பொருளுடனே, வெற் பெழுவாய் - (மேரு) மலை முதல், அசேதனமாய் - சடப்பொருளாக, பரந்துள வுலகம் - விரிந்திருக்கின்ற பிரபஞ்சத்தை, சித்திர மென்பர் - சித்திரவடிவமா யென்று கூறுவர் (புலவர்), (அந்தப் பிரஹ்மத்தின் கண்), இருமை - பெரியதாய், சடாசடமாம் - ஜடசித் வடிவமாயுள்ள, உலகது தோற்றம்-பிரபஞ்சத்தினது தோற்றம், (இருத்தல்), எவ்வணமெனின்-எவ்வாறு மென்று வினுவுவாயாயின், படந்தன்னில் - (ஒரு சித்திர) படத்தில்- வரைந்த - எழுதப்பட்டுள்ள, பன்னிறமாய் - பல நிறமுடையனவாக, துகிற் போலி - வஸ்திராபாசங்கள், குளிர் முதல் - குளிர் முதலியவற்றை, மாற்ற- நீக்குதற்கு, வல்லன வல - வல்லமையுடையன வல்லனவாம், (எ - று). சடாசடம் என்பது சட-அசட மெனப் பிரியும்.

43



**44.** ஓர்வடி வாகிக் குளிர்முதன் மாற்று முண்மையாஞ் சித்திர படம்போன், ருர்வுற வெழுதுங் கிரிமுத லாய வதனெடொப் புறுகிலா வாபோற், றேர்வரும் பிரமத் தெழுந்துபற் பலவாஞ் சீவர்கள் சித்தோடொப் பாகப், பார்முத லொவ்வா சடங்களா தலினுற் பரத்திலாஞ் சடாசட வுலகம்.

---

விடை:—சித்திரபடத்தில் பலவர்ணமாக வெழுதப்பட்டுக் குளிர் முதலியவற்றை நீக்குவதற்குச் சக்தியில்லாதனவாயுள்ள துகிற்போலிகளும் (வஸ்திராபாசங்களும்), குளிர் முதலியவற்றை நீக்குவதற்குச் சக்தியுள்ளதாயுள்ள சத்தியமான அச் சித்திரபடமும் ஒரு வடிவமா யொத்திருந்தும், சித்திரபடத்தி லெழுதப்பட்டுள்ள மலை முதலியன அச் சித்திரபடத்தோடு சமானமாவ தில்லையாம் ; அதுபோல, சித்ரூபப் பிரஹ்மத்தின்கண் கற்பிதமாய் வெவ்வேருகத் தோன்றுகின்ற (சிதாபாசரான) ஜீவர்கள் அச் சித்ரூபப் பிரஹ்மத்தோடு சமானமாய்த் தோன்றினும், பிருதிவி முதலிய ஜடப் பொருள்கள் சமானமாகத் தோன்றுவதில்லையாம்; அதனுல்,

(சித்திரப்புடவையில் போலிப் புடவையும் மலை முதலியனவுமாயுள்ள சித்திரம் சித்திரகாரனுல் எழுதப்பட் டிருத்தல்போல,) சித்ரூபப் பிரஹ்மத்தில் சிதாபாச ஜீவர்களும் பிருதிவி முதலிய பூதங்களுமாயுள்ள உலகம் மாயையாற் கற்பிக்கப்பட்டிருக்கின்ற தென்பது நிச்சயிக்கப்படுவதாம். சித்திரபடத்தில் சித்திர காரனுல் எழுதப்பட்டுள்ள வஸ்திராபாசங்கள், மலை முதலியன என்பனவற்றுள், வஸ்திராபாசங்கள் அச்சித்திரபடத்திற்குச் சமானமாயும், மலை முதலியன சமான மன்ருயும் இருத்தல்போல, சித்ரூபப் பிரஹ்மத்தில் மாயையால் கற்பிக்கப்பட்டுள்ள சிதாபாசங்கள் பிருதிவி முதலிய ஜடப்பொருள்கள் என்பனவற்றுள், சிதாபாசங்கள் அச்சித்ரூபப் பிரஹ்மத்திற்குச் சமானமாயும், பிருதிவி முதலிய சடப்பொருள்கள் சமானமன்ருயும் இருக்கின்றன வென்பது சாஸ்திரார்த்தமாம். (43 - 44)

---

(இ - ள்.) (அவ் வஸ்திராபாசங்களும்), குளிர்முதல்-குளிர் முதலியவற்றை, மாற்றும்-நீக்குகின்ற, உண்மையாஞ் சித்திரபடமும் - யதார்த்தமாய சித்திர படமும், ஓர் வடிவாகி - ஒரு வடிவமாய், போன்றும் - ஒத்திருந்தும், ஆர்வுற- (அச்சித்திர படத்தின்கண்) அன்பு பொருந்த, எழுதும் - எழுதப்பட்டுள்ள, கிரிமுதலாய - மலைமுதலிய சித்திரங்கள், அதனெடு - அச்சித்திரபடத்தோடு, ஒப்புறகிலா ஆ(று) போல் - சமானமாதலில்லாத விதம்போல, தேர்வரும் - ஆராய்ந்தறிதற்கரிய, பிரமத்து - (சித்ரூபப்) பிரஹ்மத்தின்கண், எழுந்து - கற்பிதமாய், பற்பலவாம் - பலபலவாகத் தோன்றுகின்ற, சீவர்கள் - (சிதாபாச சைதந்நியராய) ஜீவர்கள், சித்தொடொப்பாக - (அந்தப்பிரஹ்ம வடிவச்) சித்தோடு சமானமாக(த் தோன்றினும்), பார்முதல் சடங்கள் - பிருதிவி முதலிய ஜடப்பொருள்கள், ஒவ்வா - சமானமாகத் தோன்றுவனவன்ரும், ஆதலினுல் - அதனுலே, சடாசடவுலகம் - ஜட சித்வடிவமாயுள்ள பிரபஞ்சம், பரத்தில் - சித்ரூபப்பிரஹ்மத்தின் கண், ஆம் - சித்திர படத்தில் சித்திரரூபம் போலக் கற்பிதமாமென்றே நிச்சயிக்கப்படுவதாம், (எ - று). (பலபலவாக - வேறு வேருக). படமும் போன்றும் என்னு மும்மைகள் தொக்குநின்றன.

44

**45.** இத்திறத் தீசன் முக்கிய குணங்க ளெலாமறி தன் முத லனவாங், கத்துருத் துவமோ டகத்துருத் துவம்பி னன்னிதா கத்து ருத் துவமே, யத்தன்மெய்ப் பிரபுத் துவவலி யாக்க லளித்தல்போக் குதனிய மனந்தா, னெய்த்திட லகற்று மநுப்பிர வேச மென்பன வீச னைந் தொழிலே.

---

ஈசுவானது முக்கிய குணங்கள்.

வினு:—ஈசுவானது முக்கிய குணங்களெவை?

விடை:—அவை (1)சர்வஞ்ஞத்துவம் (எல்லாவற்றையும் அறியுந் தன்மை), (2)சர்வேசுரத்துவம் (எல்லாவற்றையும் ஆளுந்தன்மை), (3)சர்வநியந்திருத்துவம் (எல்லாவற்றையும் நியமிக்குந் தன்மை), (4) சர்வாந்தரியாமித்துவம் (எல்லா வற்றினுள்ளு மிருக்குந் தன்மை), (5) சர்வ கர்த்திருத்துவம் (எல்லாவற்றை யுஞ் செய்யுந் தன்மை), (6) சர்வசக்தித்துவம் (எல்லா வல்லமையு முடைய தன்மை) முதலியனவாம்.

ஈசுவானது பிரபுத்துவ சாமர்த்திய குணத்திரயம்.

வினு:—ஈசுவானது பிரபுத்துவ சாமர்த்திய குணத்திரய மெவை?

விடை:—அவை (1) கர்த்திருத்துவம் (செய்தற்றன்மை), (2) அகர்த் திருத்துவம் (செய்யாத தன்மை), (3) அந்நிதாகர்த்திருத்துவம், (வேறு வகை யாகச் செய்தற்றன்மை) என்பனவாம்.

ஈசுவானது பஞ்சகிருத்தியம்.

வினு:—ஈசுவானது பஞ்ச கிருத்திய மெவை?

விடை:—அவை (1) சிருஷ்டி (உலகத்தைப் படைத்தல்), (2) ஸ்திதி (காத்தல்), (3) சங்காரம் (அழித்தல்), (4) திரோபவம் (உயிர்களை மறைத்தல்), (5) அநுக்கிரகம் (உயிர்களுக்கருள் செய்தல்) என்பனவாம். (45)

---

(இ - ள்.) இத்திறத்து - இத்தன்மையுடைய, ஈசன் - பரமேசுவானது, முக்கிய குணங்கள் - சிறந்த குணங்கள், எலாமறிதல் முதலனவாம் - சர்வஞ்ஞத் துவ முதலாயினவாம், அத்தன் - பரமேசுவானது, மெய் - உண்மையாய, பிர புத்துவவலி - பிரபுத்துவசாமர்த்தியம், கத்திருத்துவமோடு - கர்த்திருத்துவ மும், அகத்துருத்துவம் - அகர்த்திருத்துவமும், பின் - பிறகு, அன்னிதாகத் திருத்துவம் - அந்நிதாகர்த்திருத்துவமும் (ஆம்), ஈசன் - பரமேசுவானது, ஐந் தொழில் - பஞ்சகிருத்தியங்கள், ஆக்கல் - சிருஷ்டியும், அளித்தல் - ஸ்திதியும், போக்குதல் - சங்காரமும், நியமனம்-திரோபவமும், எய்த்திடல் - வருந்துதலை, அகற்றும் - நீக்கும், அநுப்ரவேசம் - அநுக்கிரகமும், என்பன - என்று கூறப் படுவனவாம், (எ - று.) தான் - சாரியை. 45



**46.** நீங்கிய விகாரப் பிரமமா மீச னிகழ்த்துமோ தொழில்பல வென்னிற், பூங்கதி ரிச்சை யின்றியே வாரி பொழிமழைக் கதிரினற் பொழியா, வாங்கதி னிழலாய்ப் பொருந்தியந் நிழலை யலர்முகி லான் மறைத் தளித்துத், தூங்கிம கரத்தால் வெங்கதி ரானீர் தொலைத்ததைத் தன்னேடாக் குதல்போல்.

---

ஈசுவரன் பஞ்சகிருத்தியங்கள் செய்தலைத் திருஷ்டாந்த வாயிலாகக் கூறல்.

வினு:—நிர்விகார அத்துவிதீயப் பிரஹ்ம சொருபமாயுள்ள பாமேசு வான் (சிருஷ்டி, ஸ்திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகமென்னும்) பஞ்ச கிருத்தியங்களைச் செய்வது கூடுமோ? (நிர்விகாரம் - விகாரமின்மை.)

விடை:—கூடும்; சூரியன் (1) இச்சா யத்தன மின்றி(இச்சையும் முயற்சியு மில்லாது) (நீரைக்கடலில் முகந்து பொழிகின்ற)தனது வருஷ(மழைக்) கிரணத் தால் விருஷ்டிரூப (மழை வடிவ) நீரைப்பெய்து, (பின்) அந்நீரிற் றனே பிரதி பிம்பித்து, (2) (பின்) அப்பிரதிபிம்பத்தை மேக கிரணத்தால் மறைத்து, (3) (பின்) பனிக்கிரணத்தால் காத்து, (4) (பின்) உஷ்ணகிரணத்தால் அந்நீரை யழித்து, (5) (பின்) அந்தப் பிரதிபிம்பத்தைத் தன்னேடு ஐக்கியமாகச் செய்து கொள்ளுவதுபோல, பரமேசுவரனும் (1) தனது மாயாசத்தியோடுகூடிச் சித்துப் பிரதானத்தால் நிமித்தகாரணனுயும், ஜடப் பிரதானத்தால் உபாதான (முதற்) காரணனுயுமிருந்து, புத்தி முதலியவற்றைச்சிருஷ்டித்து, (பின்)அந்தப்புத்தி முத லியவற்றிற்றனே ஜீவரூபமாய்ப் பிரதி பிம்பித்து, (2) (பின்) அந்தப்பிரதிபிம் பத்தை ஆவரண சத்தியால் மறைத்து (அறம்பாவ மென்னும்) கருமத்தால் போக்துருவாக விருந்து, (3) (பின்) நியமசத்தியாலே போகத்தையும், (போக் கியத்தையும்) போக்துருவையும் நியமப்படி காத்து, (4) (பின்) உருத்திர வடிவத் தால் மாயாமயமாயுள்ள புத்தி முதலிய காரியங்களையழித்து, (5) (பின்) சற்குரு (சற்சாஸ்திர) வடிவத்தால் அந்தப்பிரதிபிம்ப ஜீவனைத் தன்னேடு ஐக்கியமாகச் செய்துகொள்ளுகின்று னென்பதை நீ யுணர்வாயாக. போகம் - (சுகதுக்க) அனுபவம்; போக்கியம் - அநுபவித்தற்குரிய பொருள்; போக்துரு-போகத்தை யனுபவிப்பவன்.

---

(இ - ள்.) நீங்கிய விகாரம் - விகாரம் நீங்கிய (நிர்விகார), பிரமமாமீசன் - (அத்துவிதீய) பிரஹ்ம சொரூபமாயுள்ள பரமேசுவரன், தொழில்பல - (சிருஷ்டி முதலிய வியாபாரமாகிய) பலகிருத்தியங்களை, நிகழ்த்துமோ - செய்யுமோ, என் னில் - என்று நீ வினுவுவாயாயின், பூங்கதிர் - பொலிவமைந்த கிரணங்களை யுடைய சூரியன், இச்சையின்றியே - இச்சை(யோடு பிரயத்தனமும்) இல்லா மலே, பொழி - (மழை) பெய்தற்குரிய, மழைக்கதிரினல் - (தனது வருஷ மென்னும்) மழைக்கிரணத்தால், வாரி - (விருஷ்டியென்னும் மழை வடிவமான) சலத்தை, பொழியா - பெய்து, (பின்னர்), அதில் - அந்தச்சலத்தின்கண், நிழலாய்ப் பொருந்தி - பிரதிபிம்ப வடிவமாகப் பொருந்தி, அந்நிழலை - அந்தப் பிரதிபிம்பத்தை, அலர்முகிலால் - பரவியமேககிரணத்தால், மறைத்து-மறையச் செய்து, தூங்கு - நெருங்கியுள்ள, இமகரத்தால் - பனிக்கிரணத்தால், அளித்து - காத்து, வெங்கதிரால் - உஷ்ண கிரணத்தால், நீர்தொலைத்து - அந்தச் சலத்தையழித்து, அதை - அந்தப் பிரதிபிம்பத்தை, தன்னேடாக்குதல்போல் - தன்னுடன் கூட்டிக்கொள்ளுதல்போல, (எ - று). ஆங்கு - அசை. 46

**47.** போற்றிறை மாயா சத்தியோ டொன்றிப் பொலிந்தசிற் பிரதான மதனாற், சாற்றரு நிமித்த காரண னாகித் தகுஞ்சடப் பிரதான மதனா, லாற்றுபா தான காரண னெனநின் றாக்கிய புத்தியா திகளிற், றோற்றுபு சீவ ரூபமாய் வினையாற் சொற்றபோத் துருவென நின்றே.

---

இவற்றின் விவரம் வருமாறு:—

| உவமானம். | | உவமேயம். |
|---|---|---|
| சூரியன் | | பரமேசுவரன் |
| | 1. சிருஷ்டி. | |
| மழை பெய்து அதிற் பிரதி பிம்பித்தல் | | புத்தி முதலியவற்றைப் படைத்து அவற்றிற்பிரதிபிம்பித்தல் |
| | 2. ஸ்திதி. | |
| அப்பிரதி பிம்பத்தைப் பனிக்கிரணத்தால் காத்தல் | | அப்பிரதிபிம்பத்தை நியம சத்தியால் நியமப்படி காத்தல் |
| | 3: சங்காரம். | |
| அம்மழை நீரை உஷ்ண கிரணத்தாலழித்தல் | | அப்புத்திமுதலியவற்றை உருத்திர வடிவத்தாலழித்தல் |
| | 4. திரோபவம். | |
| அப்பிரதி பிம்பத்தை மேக கிரணத்தால் மறைத்தல் | | அப்பிரதிபிம்பத்தை ஆவரண சத்தியால் மறைத்தல் |
| | 5. அநுக்கிரகம். | |
| அப்பி திபிம்பத்தைத் தன்னோடைக்கியமாகச் செய்து கொள்ளல். | | அப்பிரதிபிம்பத்தை (சீவனை)த் தன்னோடைக்கியமாகச்செய்து கொள்ளல். |

---

(இ ள்.) போற்றிறை - (அன்பர் என்புருகத்) துதிக்கும் பரமேசுவரன், மாயாசத்தியோடொன்றி - (தனது) மாயா சத்தியுடன் கூடி, பொலிந்த - விளங்கிய, சித்பிரதானமதனால் - சித்துப் பிரதானத்தினால், சாற்றரு - (முதற் காரணனன்றென்று) கூறுதற்கரிய, நிமித்த காரணனாகி - நிமித்த காரணனாய், தகும் - (மித்தையெனக் கூறுதற்குத்) தகுதியாயுள்ள, சடப்பிரதானமதனால் - ஜடப்பிரதானத்தால், ஆற்று - (தன் காரியத்தோடு அபேதமாகப்) பொருந்துகின்ற, உபாதான காரணனென நின்று - முதற்காரணனென்று (நிலைபெற்று) நின்று, ஆக்கிய - சிருஷ்டித்த, புத்தியாதிகளில் - புத்தி முதலிய காரியங்களில், சீவரூபமாய்-ஜீவவடிவாய், தோற்றுபு - (பிரவேசித்துத்) தோன்றி, (அந்தச் சீவனை ஆவரணசத்தியால் மறைத்து), வினையால் - கருமங்களால், சொற்ற - (துன்பத்தின் வசமானவனென்று) சொல்லப்படுகின்ற, போத்துரு என்று (கூறுமாறு) நின்று, (எ - று).





**48.** நியமசத் தியினாற் போகபோத் துருவை நியமஞ்செய் துருத் திர வுருவான், மயமுறு மாயா காரியஞ் சிதைத்து வந்தரு ளாரிய வுருவா, லயர்வுறு சீவன் றன்னையே தன்னோ டயிக்கமாக் குவனென வறிக, வுயர்வுறு சமட்டி வியட்டியென் பனவா லுயிரிறை கட்குறும் பேதம்.

---

இப்பஞ்ச கிருத்தியங்களுள் முன்னுள்ள மூன்றும் உலகத்திற்கும் பின்னுள்ள இரண்டும் உயிர்க்குமாம். "பரையாதி விருப்பறிவு தொழிலாகி யுலகமெலாம் படைத்துக் காத்து, வரையாது துடைத்துமறைத் தருளியவை நின்றுந்தன் வடிவு வேறு, யுரையாதி மறைகடந்த வொருமுதல்வி" என்று திருவிளையாடற் புராணங் கூறுவதும், "ஐந்தொழிலு மெனதிவைக ளாகுஞ் சிருட்டி முத லானமுத் தொழில் சடத்தும், அறிவிடத் தோரிரண்டும்" என்று திருப்போரூர்ச் சந்நிதிமுறை கூறுவதும் இங்குணர்தற் பாலனவாம். இறைவன் கிரியாசத்தியால் உலகத்தைப் படைத்தும், ஞானசத்தியால் காத்தும், இச்சா சத்தியால் அழித்தும், ஆதிசத்தியால் உயிரைமறைத்தும், பராசத்தியால் அதற்கருள் செய்தும் வருகின்றானென்பது சைவநூற் கொள்கையாம்.

ஆவரண விட்சேபசத்திகளையுடைய அநாதிபாவரூபம் மாயையாம். ஆவரணத்திற்கு (மறைப்பிற்கு) எதுவானசத்தி ஆவரணசத்தியாம்; விட்சேபத்திற்கு (தோற்றத்திற்கு) எதுவான சத்தி விட்சேபசத்தியாம். பஞ்சகிருத்தியங்களுள் சிருட்டி, ஸ்திதி, சங்காரம், அநுக்கிரகங்கள் விட்சேபசத்தியின் காரியமாம்; திரோபவம் ஆவரணசத்தியின் காரியமாம்.

"சுத்தசத்துவகுணசகிதமாயை, மாயையின் அதிஷ்டான சேதனம், மாயையிலுள்ள ஆபாஸம் இம்மூன்றும் சேர்ந்தது ஈசுவரனெனப்படும். அந்த எசுவரன் சர்வஞ்ஞன்; அவனே ஜகத்திற்குக் காரணன்.

காரணம் இருவகைத்து:-(1) உபாதானகாரணம், (2) நிமித்தகாரணம்.

(1) எது காரியத்தின் ஸ்வரூபத்தில் பிரவேசிக்கின்றதோ, எதனை விட்டுக் காரியம் சித்திக்கின்றதில்லையோ, அஃது உபாதான காரணமெனப்படும். மண் கடத்துக்கு உபாதானகாரணம், கடஸ்வரூபத்தில் மண் பிரவேசிக்கின்றது; மண்ணின்றிக் கடம் நிலைத்திருக்கின்றதில்லை.

---

(இ - ள்.) நியம சத்தியினால் - நியாமக சத்தியினால், போக போத்துருவை - (போக்கியத்தோடு) போகத்தை யனுபவித்தற்குரிய போத்துருவை, நியமஞ்செய்து - நியமனஞ்செய்து, உருத்திரவுருவால் - உருத்திர வடிவத்தால், மாயாமயமுறு - மாயா வடிவமாகப் பொருந்தியுள்ள, காரியஞ்சிதைத்து - (அந்தக்) காரியங்களையழித்து, வந்து - (மானுடச்சட்டை சாற்றி) வந்து, அருள் - (தத்துவ ஞானோபதேசத்தை) அருளும், ஆரிய வுருவால் - ஆசிரிய வடிவத்தால், அயர்வுறு - துன்பமுற்றுள்ள, சீவன் தன்னை - (அந்தச்) சீவனை, தன்னோடயிக்கமாக்குவன் - தன்னோடு ஐக்கியஞ்செய்து கொள்வன், என - என்று, அறிக - (ஈசனது பஞ்சகிருத்தியங்களை நீ) அறிவாயாக, உயர்வுறு - மேன்மை பொருந்திய, சமட்டி வியட்டியென்பனவால் - சமஷ்டி வியஷ்டி என்று கூறப்படுவனவற்றால், உயிரிறைகட்கு - சீவேசுவரர்க்கு, பேதமுறும் - வேற்றுமையமைந்திருக்கின்றது, (எ - று). நியமசத்தி-நியமிக்கும் வல்லமை.

(2) எது ஸ்வரூபத்தில் பிரவேசிக்கின்றதில்லையோ, ஆனால் காரியத்திற்கு வேறாக இருந்துகொண்டு காரியத்தைச் செய்கின்றதோ, எதன் நாசத்தினால் காரியம் நாசமடைகின்றதில்லையோ, அது நிமித்தகாரணமெனப்படும். கடத்திற்குக் குயவன் தண்டம் சக்கரம் முதலியன நிமித்தகாரணங்கள்; கடஸ்வரூபத்தில் அவை பிரவேசிக்கின்றதில்லை ; கடத்திற்கு வேறாயிருந்துகொண்டு கடத்தை உற்பத்திசெய்கின்றன ; உற்பத்தியானபின் குயவன் தண்டாதிகளின் நாசத்தினால் கடம் நாசமடைகின்றதில்லை. இவ்விதத்தால் காரணம் உபாதானம் நிமித்த மென இருவகைத்தாம்.

ஈசுவரனே ஜகத்திற்கு உபாதான காரணமாயும் நிமித்தகாரணமாயு மிருக்கின்றான். அஃது ஒரே சிலந்திப்பூச்சி தன் வலைக்கு உபாதானகாரணமாயும் நிமித்த காரணமாயும் இருப்பதுபோலாம். சிலந்திப்பூச்சியின் ஜடசரீரம் அதன் வலைக்கு உபாதானகாரணமாம்; அந்தப்பூச்சியின் சரீரத்துள்ள சேதன பாகம் நிமித்தகாரணமாம். ஆதலால், ஒரு ஈசுவரனையே நிமித்தகாரணமாகவும் உபாதானகாரணமாகவும் அங்கீகரித்தலில் ஒரு திருஷ்டாந்தமு மில்லையெனக் கூறின், சிலந்திப்பூச்சியைப்போல, ஈசுவரனது சரீரமான ஜடமாயை ஜகத்திற்கு உபாதானகாரணமாம்; அவனது சேதனபாகம் நிமித்தகாரணமாம்.

இவ்விதத்தால் ஒரே ஈசுவரன் ஜகத்திற்கு உபாதானகாரணமும் நிமித்தகாரணமுமாவானென்பதில் திருஷ்டாந்தம் சிலந்திப்பூச்சியும் முக்கிய திருஷ்டாந்தம் சொப்பனமுமாம். எப்போது ஜீவர்களுக்குக் கர்மம் பலனைக் கொடுக்க எதிர்முகமாகின்றதில்லையோ, அப்போது பிரளயமுண்டாகின்றது; அவர்களுக்குக் கர்மம் பலனைக்கொடுக்க எதிர்முகமாகும்போது சிருஷ்டியுண்டாகின்றது. இவ்விதத்தால் சிருஷ்டி ஜீவனுடைய கர்மாதீனமா யிருக்கின்றது.'' "ஈசுவரன் ஜகத்தின் உற்பத்தி பாலனம் சம்ஹாரமென்பனவற்றைச் செய்கின்றானென்று சகல சாஸ்திரங்களும் கூறுவதனபிப்பிராய மிதுவாம்:—சேதனாம்சம் (மாயாரகித சேதனம்) ஆகாயம்போல அசங்கமாயிருக்கின்றது; ஆபாசாம்சம் (மாயாசகித சேதனம் அஃதாவதுபரம்) ஜகத்தி னுற்பத்திமுதலியவற்றைச் செய்கின்றது; அதனிடத்திற்றான் சர்வஞ்ஞத்துவ மிருக்கின்றது. பத்தர்கள் மீது அநுக்கிரகம் செய்வதும், ஏனைய ஐசுவரியங்களும் கேவலம் ஆபாச (ஈச)னிடத்திருக்கின்றன. சேதனாம்சம் (சுத்தப்பிரஹ்மம்) ஏகரச (ஒருவித)மாம்; அதனிடத்துச் சத்தாஸ்பூர்த்தியைக் கொடுத்தலன்றி வேறு ஐசுவரியம் பொருந்தாது'' என்று விசாரசாகரம் கூறுவதிங்குணர்தற்பாலதாம்.

### சமஷ்டி-வியஷ்டிரூபத் துவயம்.

வினா:—ஜீவேச பேதங்களின் காரண மேவை?

விடை:—அவை சமஷ்டி வியஷ்டி என்பனவாம். (46 - 47 - 48)



**49.** மிகுமரப் பன்மை தண்டலை யெனல்போன் மிகுமுயி
ரெலாமுநா னெனுமோர், தகுமபி மான மிறைசமட் டியதாந் தனித்
தனி மரப்பெயர் கோளல்போற், பகுமுட றோறும் வேறுவே றாகப் படு
மபி மானமோர்ந் துரைப்பிற், றொகுமுயிர் வியட்டி யுருவமென் குவர்
மேற் றுவம்பத விலக்கிய முரைப்பாம்.

1. ஒருவன் பல வேறுபாடுள்ள விருட்சக்கூட்டத்தை வனம் (காடு) என்று கூறுவதுபோல, ஈசுவரன் பல வேறுபாடுள்ள உயிரெல்லாவற்றையும் நானென்றபிமானிக்கும் அபிமானமே ஈசுவரனது சமஷ்டி வடிவமாம்;

2. ஒருவன் (அவ்வனத்தில் இஃதொரு விருட்சம் - இஃதொரு விருட்சமென) ஒவ்வொரு விருட்சத்தையும் தனித் தனியாகக் கூறுவதுபோல, ஜீவன் வேறு வேறாகவுள்ள உடல்தோறும் வேறு வேறாக நான் நானென்றபிமானிக்குமபிமானமே ஜீவனது வியஷ்டி வடிவமாம்.

விருட்சம் பலவற்றை யொன்றாகக்கொண்டு இஃதொரு தோப்பு என்று கூறுதல்போல்வது சமஷ்டி வடிவமாம் ; அவற்றுள், இஃதொரு பலாவிருட்சம், இஃதொரு அசோக விருட்சம் என்று ஒவ்வொன்றையும் தனித்தனியாகக் கூறுதல்போல்வது வியஷ்டி வடிவமாம். இங்ஙனம் ஈசுவரன் ஜீவர்கள் யாவரையும் யானென்றபிமானிப்பது அவனுக்குச் சமஷ்டி வடிவமாம் ; ஜீவர்களுள் ஒவ்வொருவரும் தத்தம் உடம்பினை யான் யானென்றபிமானிப்பது அவர்களுக்கு வியஷ்டி வடிவமா மென்க. வனத்தைப்போலாவது ஜலாசய (தடாகத்)தைப்போலாவது கோத்துவ (ஆத்தன்மை) முதலிய ஜாதியைப்போலாவது முழு உடலைப்போலாவது ஒரு புத்திக்கு விஷயமாவது சமஷ்டி எனப்படும்; ஒவ்வொரு விருட்சத்தைப்போலாவது ஒவ்வொரு நீர்த்துளியைப் போலாவது ஒவ்வொரு வியக்தியை (ஆ முதலிய வடிவத்தை)ப்போலாவது தேகத்திலுள்ள கிருமி முதலியவற்றின் ஒவ்வொரு தேகத்தைப் போலாவது அநேக புத்திக்கு விஷயமாவது வியஷ்டியெனப்படும். அவற்றுள், சமஷ்டி காரண சரீரமும், சமஷ்டி சூட்சும சரீரமும், சமஷ்டி ஸ்தூலசரீரமும் ஈசுவரனது உபாதிகளாம் ; வியஷ்டிகாரண சரீரமும், வியஷ்டி சூட்சும சரீரமும், வியஷ்டி ஸ்தூல சரீரமும் ஜீவர்களது உபாதிகளாம் என்னும் சாஸ்திரார்த்தம் இங்குணர்தற்பாலதாம். (49)

(இ - ள்.) மிகுமரப்பன்மை - விருட்சங்கள் மிகு பலவாக விருத்தலை, தண்டலையெனல்போல் - (ஒரு) காடெனக் கூறுதல்போல, மிகுமுயிரெலாமும் - மிக்க ஜீவர்யாவரையும், நானெனும் - நானென்று கருதுகின்ற, ஓர் தகுமபிமானம் - ஒரு தகுதியுள்ள அபிமானமே, இறை சமட்டியதாம் - பரமேசுவரனது சமஷ்டி வடிவமாம், தனித்தனி - (அக்காட்டின்கண்) தனித்தனியாக (இஃதொரு விருட்சம், இஃதொரு விருட்சம் என), மரப்பெயர்கொளல்போல் - விருட்சத்தின் பெயரை(க்குறித்துக்) கொள்ளுதல்போல, பகும் - பிரிவுள்ள, உடல்தோறும் - தேகந்தோறும், வேறு வேறாகப்படும் - வேறு வேறாகவுண்டாகும், அபிமானம் - அபிமானத்தை, ஓர்ந்துரைப்பின் - ஆராய்ந்து கூறுமிடத்து, தொகும் - தொகுதியாயுள்ள, உயிர் வியட்டியுருவமென்குவர் - ஜீவனது வியஷ்டி வடிவமாமென்று கூறுவர் (புலவர்), மேல்-இனி, துவம்பத விலக்கியம் - துவம்பத விலக்கியார்த்தத்தை, உரைப்பாம் - கூறுவாம், (எ - று). 49

**50.** சீவனென் றிடுமூ வகையதிட் டான சேதன னந்தரி யாமி,
யாவலி லநுசந் தாத்துரு சுயஞ்சத் தார்த்தனே டவச்சின சீவன்,
தாவரும் பார மார்த்திகன் றுரியன் சான்றினன் பிரத்திகான் மாவா,
லேவமி றேம்ப தத்திலக் கியார்த்த னேன்பகூ டத்தனு மங்கள்.

**51.** ஈசனென் றிடுமூ வகையதிட் டான னியம்பரு மோருபரப்
பிரமம், பாசமில் பரதத் துவம்பர மான்மாப் படியிலா விசுத்தசித்
தன்றிப், பேசுதற் பதலக் கியார்த்தனேன் பனமுற் பெறுபரி யாயநா
மங்க, டேசுறு பிரமந் தனக்கென வுரைப்பர் திருந்துநூ றெரிதரும்
புலவர்.

---

கூடஸ்த பரியாய நாமம்.

வினா:—கூடஸ்தனது பரியாய நாமங்க ளேவை?

*விடை:—அவை (விசுவன் - தைசதன் - பிராஞ்ஞ னென்னும்) ஜீவத்திரய அதிஷ்டான சைதன்னியன், அந்தரியாமி, அநுசந்தாத்திரு, சுவயஞ்சத் தார்த்தன், அவச்சின்ன ஜீவன், பாரமார்த்திக ஜீவன், துரியன், சாட்சிகன், பிரத்தியகாத்மா, துவம்பத விலக்கியார்த்தன் முதலியனவாம்.* (50)

---

(இ - ள்.) மூவகைச் சீவனென்றிடும் - (விசுவாதி) ஜீவத்திரயங்களுக்குப் பொருந்தா நின்ற, அதிட்டான சேதனன் - அதிஷ்டான சைதந்நியன், அந்தரியாமி - அந்தரியாமி, ஆவலில் - இச்சையின்றிய, அனுசந்தாத்துரு - அநுசந்தாத்திரு, சுயஞ்சத்தார்த்தன் - சுவயஞ்சத்தார்த்தன், அவச்சினசீவன் - அவச்சின்ன ஜீவன், தாவரும் - கேடில்லாத, பாரமார்த்திகன் - பாரமார்த்திக ஜீவன், துரியன் - துரியன், சான்றினன் - சாட்சிகன், பிரத்திகான்மா - பிரத்தியகாத்மா, ஏவமில் - குற்றமில்லாத, தொம்பதத்திலக்கியார்த்தன் - துவம்பத லட்சியார்த்தன், என்ப - என்று கூறப்படுவன, கூடத்தனுமங்கள் - கூடஸ்தனது (பரியாய) நாமங்களாம், (எ-று). ஒடு-ஆல் என்பன அசை நிலைகள். 50

(இ - ள்.) மூவகை யீசனென்றிடும் - (விராட் புருஷன் முதலிய) ஈசுவரத்திரயங்களுக்குப் பொருந்தாநின்ற, அதிட்டானன் - அதிஷ்டான சைதந்நியன், இயம்பரும் - சொல்லுதற்கரிய, ஒரு பரப்பிரமம் - ஒப்பற்ற பரப்பிரஹ்மம், பாசமில் - (அஞ்ஞான வடிவப்) பாசமில்லாத, பரதத்துவம் - பரதத்துவம், பரமான்மா - பரமாத்மா, படியிலாத - ஒப்பில்லாத, விசுத்த சித்து - விசுத்த சித்து, அன்றி - (இவையே) அன்றி, பேசு - (சிறப்பித்துக்) கூறப்படுகின்ற, தற்பத லக்கியார்த்தன் - தத்பத லட்சியார்த்தன், என்பன - என்று கூறப்படுவன, தேசுறு பிரமந்தனக்கு - (தானாகவே) விளங்குதல் பொருந்திய பிரஹ்மத்திற்கு, முற்பெறு - முதன்மையாக வமைந்த, பரியாய நாமங்களென - பரியாய நாமங்களாமென்று, (அவற்றை) திருந்துநூல் - (மாறுபாடின்றி) திருந்தியுள்ள வேதாந்த சாஸ்திரங்களை, தெரிதரும்புலவர் - ஆராய்ந்தறிந்துள்ள பண்டிதர், உரைப்பர் - கூறுவர், (எ - று).
51



**52.** வடிவோடு பெயராற் குடமுத லாக மண்பல வகைப்படு
மதுபோற், சுடுபசும் பொன்னே செய்கையாற் பலவாஞ் சுடரிழை யுருவு
கோள் வதுபோற், படியறு சித்தே முன்சொல்சீ வாதி பலவுமா மேன
முத லாக, விடலரு மறிஞர் நூல்பல திருக்கு விவேகமேன் றியம்புறு
மன்றே.

---

பிரஹ்ம பரியாய நாமம்.

வினா:—பிரஹ்மத்தினது பரியாய நாமங்களேவை?

*விடை:—அவை (விராட் புருஷன் - இரணிய கருப்பன் - அந்தரியாமி யென்னும்) ஈசுவரத்திரய அதிஷ்டான சைதன்யன், பரப்பிரஹ்மம், பர தத்துவம், பரமாத்மா, விசுத்த சித்து, தத்பத விலக்கியார்த்தன், (சர்வாதிஷ்டாத்துரு, நிர்க்குணன், நிர்விசேஷன், நிஷ்களன், நிரவத்தியன், நிரஞ்சனன், அசங்கன், நிருபப்பிலவாநந்தன், நிர்மாயி, நிருபத்திரவன், சத்தாமாத்திரன், சத்தியன்) முதலியனவாம்.* (51)

திருக்த விவேகசாரம்.

வினா:—இத்திருக்த விவேகசாரத்தைக் கூறல் வேண்டும்?

*விடை:—மண்ணொன்றே நாம ரூபங்களால் கடகலச முதலாயினவாகப் பலவாய் விளங்குதல் போலும், பொன்னொன்றே பொன்வினைஞனது தொழிலால் கடகமகுட முதலிய ஆபரணங்களாகப்பலவாய் விளங்குதல் போலும், சித்தொன்றே உபாதி பேத கற்பனையால் ஜீவராகவும், ஈசுவரனாகவும், உலகமாகவும் விளங்குகின்றது. இவ்வாறு கூறுவதே திருக்கு விவேகசாரமாம்.* (52)

---

(இ - ள்.) மண் - மண் (ஒன்றே), வடிவொடு - உருவத்துடன், பெயரால் - நாமத்தால், குடமுதலாக - கடமுதலியனவாக, பலவகைப்படு மதுபோல்- பலவிதமாகப் பொருந்துதல் போலவும், சுடு - (புடம்போட்டு) உருக்கிய, பசும்பொன்னே - சிறந்த பொன்னொன்றே, செய்கையால் - (பொன்வினைஞனது) தொழிலால், பலவாம் - நானாவாகிய, சுடரிழையுருவு கொள்வதுபோல்- பிரகாசிக்கின்ற ஆபரண வடிவங்களைக் கொள்ளுதல் போலவும், படியறு - வேற்றுமையற்றுள்ள, சித்தே - சித்தொன்றே (உபாதி பேத கற்பனையால்), முன்சொல் - முன்னர்க்கூறிய, சீவாதி - ஜீவர் முதலிய, பலவுமாம் - பல பேத விகார கற்பனையனைத்துமா யிருக்கின்றது, என - என்று, (இவ்வாறு விசாரணை செய்துணர்வதை), முதலாக-தலைமையாக, விடலரும்-நீங்குதலில்லாத, அறிஞர்-(மெய்) அறிவினையுடையார், (இயற்றியருளியுள்ள), நூல்பல-வேதாந்த சாஸ்திரங்கள்பல, திருக்கு விவேகமென்றியம்புறும் - திருக்கு விவேக மெனக்கூறும், (எ - று). அன்று - ஏ - அசைநிலை.
52

---

திருசிய விவேகம்.

**53.** இந்துவினை யநாதியடைந் ததைமுழுது மறையாம லிந்து தன்ஞு, லந்திறனை யொளிர்வித்துக் கோள்களங்க மெனவெனையா னறியே னென்னு, முந்துலக விவகாரந் தனிலுயிரை யடைந்ததனை மூடா தென்று, மந்தவுயி ராலறியப் பட்டுமனற் றம்பிக்கு மந்தி ரம்போல்.

---

## திருசிய விவேகம்.

### மாயாசத்தியின் இலக்கணம்.

வினு:—மாயாசத்தியி னிலக்கணம் கூறல்வேண்டும்?

விடை:—சந்திரனை அநாதியாக ஆசிரயித்துக்கொண்டு, அவனை முற்று மறையாது (ஏகதேசமாக மறைத்து) எப்போதும் அச்சந்திரனுலேயே விளங்கப் படும் களங்கம்போல, என்னை யானறியேனென்னும் உலகப்பிரசித்த வியவ காரத்தால் ஆத்மாவை யாசிரயித்துக்கொண்டு அதனை முற்று மறையாது (ஏகதேசமாக மறைத்து) எப்போதும் அவ்வாத்மாவாலேயே அறியப்படுவ தாயும், மந்திரப் பிரயோகத்தால் ஸ்தம்பிக்கப்படும் அக்கினியின் சுடுந்தொழில் அக்கினியின் சொரூபமாகாதும், அதனினும் வேருகத்தோன்ருது மிருந்து கொப் புள முதலிய காரியங்களை யுண்டாக்குவதுபோல, ஆத்மாவின் சொரூபமாகாதும் அதனினும் வேருகத்தோன்ருது மிருந்து ஆகாயமுதலியகாரியங்களை யுண்டாக்கு தாயும், அவற்றைத் தன்னுள் மறைத்துக்கொள்வதாயும், (அவ்வாகாய முதலிய காரியங்களால் அறியத்தக்கதாயும்), அகடிதகடனா சாமர்த்தியமுடையதாயும், சகல

---

(இ - ள்.) இந்துவினை - சந்திரனை, அநாதியடைந்து - அநாதியாக அடைந்து, அதை - அச்சந்திரனை, முழுதுமறையாமல் - முற்றும் மறையாது (ஏகதேசமாய் மறைத்து), (எப்பொழுதும்), இந்து தன்ஞல் - அச்சந்திர ஞல், அந்திறனை - (தனது) அழகிய தன்மையை, ஒளிர்வித்துக்கொள் - விளங் கச்செய்து கொள்ளுகின்ற, களங்கமென - களங்கத்தைப்போல, எனையானறி யேன் - நான் என்னையறியேன், என்னும் - என்று கூறப்படுகின்ற, முந்து - பழைமையாயுள்ள, உலக விவகாரந்தனில் - உலகப் பிரசித்த வியவகாரத்தால், உயிரையடைந்து - ஆத்மாவை (அநாதியாக) அடைந்து, அதனை - அவ்வாத் மாவை, மூடாது - (முற்றும்) மறையாது, (ஏகதேசமாய் மறைத்து), என்றும் - எப்பொழுதும், அந்த வுயிரால் - அந்த ஆத்மாவினுல், அறியப்பட்டும் - அறியப் படுவதாயும், மந்திரம் - மந்திரத்தால், தம்பிக்கும் - பந்திக்கப்படுகின்ற, அனல்போல-அக்கினியின் சுடுந்தொழில் (அக்கினியின்சொரூபமாகாதும் அதனி னும் வேருகத் தோன்ருதும் இருத்தல்)போல, (எ - று). 53



**54.** விளங்குறுமான் மாவுருவ மல்லாம லான்மாவின் வேருய்த் தோன்ரு, துளங்கோள்வியோ மாதிகா ரியங்கடமைத் தோன்ருவா ருே டுக்கி நின்றுந், துளங்கலக டிதகடநா சாமர்த்தி யாகியுமே தோன்ரு நின்ற, வளங்கடரு காரணமா யதுவாகுந் திருசியமா மாயா சத்தி.

---

அநர்த்தங்களையும் தருதற்குக் காரணமாயுமிருப்ப தெதுவோ அதுவே திரு சியவடிவ மாயாசத்தியாம்.

திருக்குவிற்கு விஷயமாவது திருசியமாம்; திருக்கு - அறிவு; திருசியம்- அறியப்படுவது; திருக்குவால் (அறிவால்) அறியப்படுவது திருசியமாம். தத்வாறு சந்தானம் "தரிசனத்திற்கு விஷயமாவது திருசியமாம்; விருத்தி ஞானம் தரிசன மாம்" என்று கூறுவதும், வைராக்கியசதகம் "சிவன்திரு சியமன்ருல்" என்று கூறுவது மிங்குணர்தற்பாலனவாம்.

(அநாதி - உற்பத்தி யில்லாதது ; அகடிதகடனா சாமர்த்தியம் - நிகழாததை நிகழ்த்துவிக்கும் வல்லமை). (53-54)

---

(இ - ள்.) விளங்குறும் - (மாறுபாடின்றி ஞான சொரூபமாக) விளங்கு கின்ற, ஆன்மாவுருவமல்லாமல் - (பிரத்தியக்) ஆத்ம சொரூபமாகாதும், ஆன் மாவின் - (அந்த) ஆத்மாவினும், வேருய்த்தோன்ருது - வேருகத் தோன்ரு தும், உளம் - ஆராய்ச்சியால், கொள் - (அறிந்து) கொள்ளத்தக்க, வியோ மாதி காரியங்கள் தமை - ஆகாய முதலிய காரியப்பொருள்களை, (தோன்றச் செய்து மீண்டும் அவை), தோன்ருவாறு - தோன்ருத விதம், ஒடுக்கி நின்றும் - (அவற்றைத் தன்னுள்) மறைத்தும், (அக்காரியங்களால் அறியத்தக்கதாயும்), துளங்கல் - மாறுதலுடைய, அகடிதகடனா சாமர்த்தியாகியும்- நிகழாததை நிகழச் செய்யும் வல்லமையுடையதாயும், தோன்ரு நின்று - தோன்றி நின்று, அவளங் கள் - (சர்வ)அனர்த்தங்களையும், தரு - கொடுத்தற்கு, காரணமாயது - காரணமா யிருப்பது, திருசியமா மாயா சத்தி ஆகும் - திருசியமாயுள்ள மாயா சத்தி யாம், (எ - று). 54

**55.** அனையதோரு மாயையிலக் கணமசத்துச் சடந்துக்க மநித்தங் கண்ட, மேனுமிவற்றுண் முயற்கோடு முதலசத்துச் சடவுருக்கல் லெழுவாய் புத்தி, தனையடையுங் கோரமோடு மூடவிருத் திகடுக்கந் தபுமேய் யாதி, முனமுரைசேய் யநித்தங்கண் டங்கால பரிச்சேத முதல வாகும்.

---

மாயா லட்சண பஞ்சகம்.

வினு:—மாயா லட்சண பஞ்சகமேவை?

விடை:—அவை அசத்து, ஜடம், துக்கம், அநித்தம், கண்டமென்பன வாம்; இவ்வைந்தனுள்,

அ ச த் து.

1. (என்றமில்லாத) முயற்கொம்பு, (வான் தாமரை) முதலியன அசத்தாம்.

ஜ ட ம்.

2. (மூடமாய) கல் (கட்டை) முதலியன ஜடமாம்.

து க் க ம்.

3. புத்தியை யடைந்துள்ள (இராசத குணத்தால் இராக மயமாயுள்ள) கோர விருத்தியும், (தாமத குணத்தால் அஞ்ஞான மயமாயுள்ள) மூடவிருத்தியும் துக்கமாம்.

அ நி த் த ம்.

4. (தோன்றிக் கெடுகின்ற) தேக முதலியன அநித்தமாம்.

க ண் ட ம்.

5. கால பரிச்சேதம், தேச பரிச்சேதம், வஸ்து பரிச்சேத மென்பன கண்டமாம்.

---

(இ - ள்.) அனையதொரு மாயையிலக்கணம் - அத்தன்மையதாய மாயையினது ஒப்பற்ற இலக்கணம், அசத்துச்சடந்துக்க மநித்தங்கண்டம் - அசத்து-ஜடம்-துக்சம்-அநித்தியம் - (பரிச்சின்னமென்னும்) கண்டம் என்றைந்து வகையதாம், எனுமிவற்றள் - என்றுகூறப்படும்இவ்வைந்தனுள், முயற்கோடு முதல் - (என்றமில்லாத) முயற்கொம்பு முதலியன, அசத்து - அசத்துரூபமாம், கல்லெழுவாய் - கல்முதலியன, சடவுரு - ஜடரூபமாம், புத்திதனையடையும் - (இராசதகுண - தாமதகுண மயமான) புத்தியைப்பொருந்தியிருக்கின்ற, கோரமொடு மூடவிருத்திகள் - கோர மூடவிருத்திகள், துக்கம் - துக்கரூபமாம், தபுமெய்யாதி - (தோன்றிச்)கெடுகின்ற சரீர முதலியன, முனமுரைசெய் - முன்னர்க்கூறிய, அநித்தம் - அநித்தியரூபமாம், காலபரிச்சேதமுதல - கால பரிச்சேத முதலியன, கண்டமாகும் - (கண்டிதமென்னும்) கண்டரூபமாம், (எ - று). 55



**56.** பின்னமோ டசத்துச்சா வயமுமேதிர் மறையுமவை பிரிந்து தம்மின், மன்னியவு மோழிந்தநிர்வாச் சியமாகு நவவிதமம் மாயையேய்து, முன்னலருஞ் சுருதிசம் பந்தமுத்தி சம்பந்த முலக பந்த,மேன்ன வரு ஞானங்கண் முறையேயம் மாயைபடு மியல்பு கூறின்.

---

1. அத்தியந்தாபாவத்திற்கு (முழுது மின்மைக்கு)ப் பிரதியோகித் தன்மை எதுவோ அது தேசபரிச்சேத மெனப்படும்; பிருதிவிமாத்திரத்திருக்கும் கந்த குணத்திற்கு ஜல முதலியவற்றில் அந்தியந்தாபாவ மிருக்கின்றது; அதற்குப் பிரதியோகி கந்தகுணமாம்; அதில் அதற்குப் பிரதியோகித்தன்மை யிருக்கின்றது; அது தேச பரிச்சேதமாம்; ஆதலால், கந்தகுணம் ஏக தேசத்திருப்பதாயிருத்தலால் தேசபரிச்சேத முடையதாம்.

2. பிராகபாவம் பிரத்துவம்ஸாபாவங்களின் பிரதியோகித்தன்மை எதுவோ அது காலபரிச்சேத மெனப்படும்; மண்ணின் காரியமாகிய கடத்தின் உற்பத்திக்குமுன் பிராகபாவமும் அக்கடத்தின் நாசத்திற்குப்பின் பிரத்துவம்சாபாவமு மிருக்கின்றன; அவற்றிற்குப் பிரதியோகிகடமாம்; அதனிடத்து (கடத்தினிடத்து)ப் பிராகபாவப் பிரத்துவம்சாபாவங்களின் பிரதியோகித் தன்மை யிருக்கின்றது; அதுவே காலபரிச்சேதமாம்; ஆகையால், கடம் உற்பத்திநாச முடையதாயிருத்தலால் காலபரிச்சேத முடையதாம்.

3. அந்நியோந்நியாபாவத்தின் பிரதியோகித்தன்மை வஸ்துபரிச்சேத மெனப்படும்; கடபடங்களுக் கொன்றற் கொன்றுள்ள பேதமாகிய அந்நியோந்நியாபாவம் எதுவோ அதற்குப் பிரதியோகி கடமும் படமுமாம்; அவற்றில் அதன் பிரதியோகித்தன்மை யிருக்கின்றது; அது வஸ்துபரிச்சேதமாம்; அப்பேதத்தை யுடைய கடபடங்கள் வஸ்துபரிச்சேதமுடையனவாம்.

---

(இ - ள்.) அம்மாயை-அந்த மாயையானது, பின்னமோடு அசத்துச்சாவயமும் - பின்னமும் அசத்தும் சாவயவமும், எதிர்மறையும் - (அவற்றிற்கு) எதிர்மறையாயுள்ள அபின்னமும் சத்தும் நிரவயவமும், அவை - (பின்னம் - அபின்ன முதலிய) அவை, பிரிந்து - (எதிர்மறையாகப்) பிரிந்து, தம்மின் - தம்முள்ளே, மன்னியவும் - பொருந்தியனவாய பின்னுபின்னமும் சதசத்தும் சாவயவ நிரவயவமும், (என), மொழிந்து - சொல்லப்பட்டு, (இவ்வாறிருத்தல் பொருந்தாத), நவவிதம் - ஒன்பது பிரகாரத்தை, எய்தும் - அடைவதாம், (அதனுல்), அநிர்வாச்சியமாகும் - (இன்ன தன்மையதென்று கூறப்படாததென்னும்) அநிர்வாச்சிய வடிவமாம், உன்னலரும் - (அநதிகாரிகள்) நினைத்தற்கரிய, சுருதி சம்பந்தம் - சுருதி சம்பந்தஞானம், உத்திசம்பந்தம் - யுக்தி சம்பந்தஞானம், உலக பந்தம் - உலகசம்பந்தஞானம், என்னவரும் - என்று சொல்லப்பட்டு வருகின்ற, ஞானங்கள் - ஞானத்திரயங்களால், முறையே - முறையாக, அம்மாயைபடும் - அம்மாயைக்குண்டாகும், இயல்பு - இயல்பினை, கூறின் - சொல்லுமிடத்து, (எ-று). 56

சுவகதபேதம், ஸஜாதீயபேதம், விஜாதீயபேத மென்னு மூன்றும் இம் மூவகைப்பரிச்சேதத்துள், வஸ்துபரிச்சேதத்துள் அடங்குவனவாம். (55)

**மாயா அநிர்வாச்சிய நவப்பிரகாரம்.**

**வினு :—மாயையின் அநிர்வாச்சிய நவப்பிரகாரத்தைக் கூறல் வேண்டும்?**

விடை :—மாயையானது பின்னம் - அபின்னம் - பின்னுபின்னம், சத்து - அசத்து - சதசத்து, சாவயவம் - நிரவயவம் - சாவயவ நிரவயவமென்று கூறப்பட்டு(இவ்வாறிருத்தல் பொருந்தாத) ஒன்பது பிரகாரத்தை யடைவதாம் ; அதனுல், அநிர்வாச்சிய வடிவமாம்.

மாயையானது பின்னம் (வேறுபட்டது), அபின்னம் (வேறுபடாதது), பின்னுபின்னம்; சத்து (இருப்பது), அசத்து (இல்லாதது), சதசத்து; சாவயவம் (அவயவமுடையது), நிரவயவம் (அவயவ மில்லாதது), சாவயவ நிரவயவ மென்னுமிவற்றுள் இத்தன்மையதாய சொரூபமுடையதென்று நிச்சயித்துக் கூறுவதற்கு முடியாததாக விருத்தலின், அநிர்வாச்சிய வடிவமாகவிருக்கின்றதென்று கூறப்படுகின்றது.

1. மாயையானது நான் பிரஹ்மமென்று தன்னை யுணருந் தத்துவ ஞானத்தால் பொய்யென்று நிச்சயிக்கப் படுவதா யிருத்தலின் சத்தன்றும்; (2) உலக காரணமாயிருத்தலாலும் நானஞ்ஞானியென்னு மநுபவ மிருத்தலாலும் அசத்தன்றும்; (3) சத்தும் அசத்தும் தம்முள் விரோதமுடையனவா மாகலின் அவ்விரண்டுமென்றும் ;

2. (4) திரவியமாயின் சாவயவமாம் ; அன்ருகலின், சாவயவ மன்றும்; (5) ஜகதாகாரமாய்ப் பரிணமித்தலின் நிரவயவமன்றும்; (6) சாவயவமும் நிரவயவமும் தம்முள் விரோத முடையனவா மாகலின் அவ்விரண்டு மன்றும் ;

3. (7) பிரஹ்மத்திற்கு அன்னியமாக வின்மையின் பின்ன மன்றும்; (8) சித்தாகிய பிரஹ்மத்திற்கும் ஜடமாகிய மாயைக்கும் அபேதங் கூடாமையின், அபின்ன மன்றும்; (9) பின்னமும் அபின்னமும் தம்முள் விரோத முடையனவாமாகலின் அவ்விரண்டுமென்று மென்பது இங் குணர்தற் பாலதாம்.

“சத்தசத்திற்கு விலட்சணமாயதை (வேருயதை) அநிர்வசநீய மென்பர்; அதனை மித்தை யென்றங்கூறுவர். மூன்று காலத்திலும் பாதிக்கப்படாததை (பொய்யென்று நிச்சயிக்கப்படாததை)ச் சத்தென்பர் ; சொரூபமின்றியதை (சூனியத்தை) அசத்தென்பர்; பாதயோக்கிய (பொய்யென்று நிச்சயிக்கத்தக்க) சொரூபமுடையதைச் சதசத் விலட்சணமென்பர்” என்று பாலபோதங் கூறுகின்றது.

(56)



**57.** விண்ணின்மல ரேனத்துச்ச மேயேனவு மிப்பிவரு வேள்ளி
போல, வேண்ணுமநிர் வாச்சியமா மேனவுமுயிர் போனித்த மேனவு
நிற்கு, முண்ணிலவு தமமாயை மோகமுட னவித்தைபோய்ம்மை
யுருவி யேன்றே, நண்ணுமிவை மாயாபஞ் சகமாகு மேனவறிஞர்
நவில்வ ரன்றே.

**மாயாப் பிரதீதித் திரயம்.**

(பிரதீதி - தோற்றம்; திரயம் - மூன்று.)

**வினு :—மாயாப் பிரதீதித் திரயங்களைக் கூறல் வேண்டும்?**

விடை :—அம்மாயையானது சுருதி சம்பந்த ஞானத்தால் ஆகாயத் தாமரை போலத் துச்சமாகவும், யுக்தி சம்பந்த ஞானத்தால் கிளிஞ்சில் வெள்ளிபோல அநிர்வாச்சியமாகவும், உலக சம்பந்த ஞானத்தால் ஆத்மாப்போல நித்தியமாகவும் தோற்றுவதாம்.

மாயையானது ‘ இந்தப் பிரஹ்மத்தில் நாநாவென்பது சிறிதுமில்லை’ என்றற்றொடக்கத்துச் சுருதி சம்பந்த ஞானமுடையார்க்கு ஆகாயத் தாமரை போலத் துச்சமாகவும், மாயை சத்தாயிருக்குமாயின் மாருதிருத்தல் வேண்டும், மாறிப் போதலின் சத்தா யிருத்தல் கூடாது, அதனுல் மித்தையா யிருத்தல் வேண்டுமென்னும் யுக்தி சம்பந்த ஞானமுடையார்க்குக் கிளிஞ்சில் வெள்ளி போல அநிர்வாச்சியமாகவும், சுருதி சம்பந்த ஞானமும் யுக்தி சம்பந்த ஞானமுமில்லாதவர்க்கு ஆத்மாப்போல நித்தியமாகவும் தோன்றுவதாமென்ப திங்குணர்தற்பாலதாம். (சுருதி-வேதம்; துச்சம் - அசத்து; யுக்தி இது கூடும், இது கூடாதெனத் தோன்று மறிவு; அநிர்வாச்சியம் - மித்தை; நித்தியம் - அழியாதது.)

**மாயாநாம பஞ்சகம்.**

**வினு :—மாயாநாம பஞ்சகத்தைக் கூறல் வேண்டும்?**

விடை :—தமம் (தமசு), மாயை, மோகம், அவித்தை, அநிருதம் (பொய்ம்மையுருவி) என்பன மாயாநாம பஞ்சகமாம். (57)

(இ - ள்.) (அந்தமாயையானது சுருதி சம்பந்த ஞானத்தால்), விண்ணின் மலரென - ஆகாயத்தாமரைமலரைப்போல, துச்சமேயெனவும் - அசத்தென்றும், (யுக்தி சம்பந்த ஞானத்தால்), இப்பிவருவெள்ளிபோல - கிளிஞ்சிலில் தோன்றும் வெள்ளியைப்போல, எண்ணும் - ஆராய்ந்தறியத்தக்க, அநிர்வாச்சியமாமெனவும் - அநிர்வாச்சியமென்றும், (உலக சம்பந்த ஞானத்தால்), உயிர்போல் - ஆத்மாவைப்போல, நித்தமெனவும் - நித்தியமென்றும், (சொல்லப்பட்டு), நிற்கும் - இருப்பதாம், உண்ணிலவும் - சித்தத்துள் விளங்குகின்ற, தம மாயை மோகமுட னவித்தை பொய்ம்மை யுருவியென்று-தமமும் மாயையும் மோகமும் அவித்தையும் மித்தியாசொரூபியென்னும் அநிருதமும் என, நண்ணுமிவை - பொருந்தாநின்ற இவற்றை, மாயா பஞ்சகமாகுமென - மாயாநாமபஞ்சகமாமென்று, அறிஞர் - புலவர், நவில்வர் - கூறுவர், (எ - று). 57

**58.** சீவசே தனமறைத்துத் தமமயலா கியவுலகத் திறத்திற் கெல்லா, மேவுகா ரணமாகி மாயைவிப ரீதஞானம் விளைத்து மோக, மோவவுணர் வழித்தவித்தை சத்தின்வே றுகிப்போய் யுருவி யாகும், வீவிலா மாயையதற் கிருதருமஞ் சங்கோச விகாச மென்றும்.

---

தமம்.

1. அந்த மாயையானது ஜீவசேதனத்தை (அதன் நிச வடிவம் அதற்கு விளங்காவாறு) மறைத்தலால் தமமென்றும்,

மாயை.

2. தனக்கு வேறாகத் தோன்றுகின்ற பல கூறுபாடுடைய உலகமனைத் திற்கும் பரிணாமியுபாதானகாரணமா யிருத்தலால் மாயையென்றும்,

மோகம்.

3. அங்ஙனம் தோன்றியுள்ள உலகத்தில் ஜீவர்களுக்கு ஜகத் சத்தியம், தேகமே ஆத்மா, போகமே மோட்சம் என்றற் றொடக்கத்து விபரீத புத்தியை யுண்டாக்குதலால் மோகமென்றும்,

அவித்தை.

4. அகம் பிரஹ்மாஸ்மி - நான் பிரஹ்மமா யிருக்கின்றேன் என்ற சந் தேக விபரீதமில்லாது அதிகாரி புருஷர்க்குச் சற்குருவருளா லுண்டாகும் தத் துவ ஞானத்தால் (ஒளி முன் இருள் கெடுவதுபோல) கெடுதலால் அவித்தை யென்றும்,

---

(இ - ள்.) சிவசேதனம் - (அந்தமாயையானது சிதாபாசனென்னும்) ஜீவ சைதன்னியத்தை, மறைத்து - மறைத்தலால், தமம் - தமம் (என்று சொல்லப் படுவதாம்), அயலாகிய - (தனக்கு) வேறாகத்தோன்றுகின்ற, உலகத்திறத்திற் கெல்லாம் - பலகூறுபாடுடைய உலகமனைத்திற்கும், மேவுகாரணமாகி - பொருந்திய (பரிணாமியுபாதான) காரணமாயிருத்தலால், மாயை - மாயை (என்று சொல்லப்படுவதாம்), விபரீத ஞானம் விளைத்து - (அவ்வுலகத்தில் சகத்சத்தியம் என்றற் றொடக்கத்து)விபரீதஞானத்தையுண்டாக்குதலால், மோகம் - மோகம் (என்று சொல்லப்படுவதாம்), உணர்வு-தத்துவஞானம், ஓவ-(ஆத்மாவினின்றும்) நீங்க, அழித்து - அழித்தலால், அவித்தை - அவித்தை (என்று சொல்லப் படுவதாம்), சத்தின் வேறாகி - சத்ரூபப்பிரஹ்மத்திற்கு வேறாகவிருத்தலால், பொய்யுருவியாகும் - மித்தியாசொரூபி (என்று சொல்லப்படுவது) ஆம், வீவி லாத - (தத்துவஞான முண்டாமளவும்) கெடுதலில்லாத, மாயையதற்கு - அந்த மாயைக்கு, சங்கோச விகாசமென்று - சங்கோசம் விகாசமென, இருதருமமாம் - இரண்டு தருமமுமுண்டு, (எ - று). (திறம் - கூறுபாடு.) 58



**59.** விரிந்துபட மோவியங்கள் பலதிகழ்த்திக் குவிந்தொடுக்கும் விதமே போல, வரந்தைதரு மாயையுந்தன் விகாசதரு மத்தினா லகிலங் காட்டிப், பரந்தவைகள் சங்கோச தருமத்தா லடக்குமெனப் பகர்வர் மாயைக், கிருந்தகுண மிரண்டுளவில் சுதந்தரமுஞ் சுதந்தரமு மென்ன வன்றே.

---

அநிருதம்.

5 சத்ரூபப் பிரஹ்ம வடிவ ஆத்மாவிற்கு அந்நியமாக விருத்தலால் அநி ருதமென்றும் சொல்லப்படுகின்றது. அநிருதம்-மித்தியாசொரூபி.

விசாரசாகரம் ''ஓரேவஸ்துவிற்கு (1) பிரதானம்,(2) பிரகிருதி, (3)மாயை, (4) அவித்தை, (5) அஞ்ஞான மென்பன பெயர்களாம்.

(1) சர்வ காரியங்களையும் தன்னில் லயப்படுத்திப் பிரளயகாலத்திலிருக் கின்ற உதாசீன ஸ்வரூபம் பிரதானமெனப்படும்; (2) சிருஷ்டியின் உபாதான யோக்கியமான தமோகுணப் பிரதான ஸ்வரூபம் பிரகிருதி யெனப்படும் ; (3)தேசகாலாதி சாமக்கிரிகளின்றி இந்திர ஜாலத்தால் துர்க்கட (நிகழ்தற்கரிய) பதார்த்தங்களுண்டாகுமிடத்து, அவ்விந்திர ஜாலத்தை மாயை யென்பர்; அது போல, அசங்க அத்துவிதீயப் பிரஹ்மத்தின்கண் இச்சாதிகள் துர்க்கடமாம்; அவற்றைச் செய்தலின், மாயை யெனப்படும்; (4) ஸ்வரூபத்தை மறைத்தலின், அஞ்ஞானமெனப்படும்; (5) பிரஹ்மவித்தையால் நாசமடைதலின், அவித்தை யெனப்படும். மாயை சுவதந்தர (சுதந்தர)மாக ஒருகாலத்துமிருப்பதில்லை; ஆனல், சேதனத்தை யாசிரயித்தே யிருக்கின்றது; அதனல், சத்தியென்றும் சொல்லப்படும். இவ்விதத்தால் பிரகிருதி முதலியன பிரதானத்தின் பேதங் களாதலால், பிரதான ஸ்வரூபமாகவே யிருக்கின்றன. அந்தப் பிரதானம் பிரஹ்ம சேதனத்தின் சக்தியாம்'' என்று கூறுவதும், விசார சந்திரோதயம் ''மாயையின் பெயர் 15.-(1) மாயை, (2) அவித்தை, (3) பிரகிருதி, (4) சத்தி, (5) சத்யை, (6) மூலை, (7) தூலை, (8) யோனி, (9) அவ்வியத்தம், (10) அவ்வியாகிருதம், (11) அஜை, (12) அஞ்ஞானம், (13) தமசு, (14) துச்சை, (15) அநிர்வசநீயை'' என்று கூறுவது மிங்குணர்தற்பாலனவாம்.

மாயா தர்மத்துவயம்.

வினா :—மாயா தர்மத்துவய மேவை ?

விடை :—அவை 1 சங்கோசம் 2 விகாசமென்பனவாம். (58)

---

(இ - ள்.) படம்விரிந்து - சித்திரபடமானது (தான்) விரிதலால், ஓவி யங்கள் பல - சித்திரரூபங்கள் பலவற்றை, திகழ்த்தி - விளங்கக்காட்டி, குவிந்து - சுருங்குதலால், ஒடுக்கும் - (அவ்வுருவங்களைத் தன்னுள்) மறைத்துக் கொள்ளுகின்ற, விதமேபோல - வகையினைப்போல, அரந்தைதரு மாயையும் - (ஜீவர்க்குத்) துன்பத்தைத்தருகின்ற மாயையும், தன்விகாச தருமத்தினல் - தனது விரிதலாகிய தருமத்தால், அகிலங்காட்டி - பிரபஞ்சமனைத்தையும் (விளங்கக்)காட்டி, சங்கோச தருமத்தால்-(தனது) சுருங்குதலாகிய தருமத்தால், பரந்த அவைகள் - (நாமரூபவடிவமாக) விரிந்துள்ள அப்பிரபஞ்சமனைத்தையும், அடக்கும் - (தன்னுள்) மறைத்துக்கொள்ளுவதாம், என - என்று (அதனை), பகர் வர் - (புலவர்) கூறுவர், மாயைக்கு - (இன்னும் அந்த) மாயையினிடத்து, இருந்த குணம் - பொருந்திய குணங்கள், இல் சுதந்தரமும்-சுதந்தரமின்மையும், சுதந்தர மும் - சுதந்தரமும், என்ன - என்று, இரண்டுள - இரண்டுண்டு, (எ - று). (காட்டுதல் - தோற்றுவித்தல்.) 59

**60.** போய்பாகிச் சத்துருவப் போருளின்வே ருகியோரு போரு ளாய்த் தோற்றல், செய்யாமை யாலுளதில் சுதந்தரஞ்சான் ருயவோரு சேத னன்பா, லுய்யாத சீவாதி யாக்குதலாற் சுதந்தரமு முளது மாயை, மெய்யான தலதேன்றல் விசும்பலர்போ லில்லேயேன விளம்ப லன்றே.

---

*சித்திரபடமானது தனது விகாச தருமத்தால்* (விரிவால்) *வர்ண பேதத்தால் நாநாவிதமாயுள்ள சித்திரங்களை விளங்கக் காண்பித்துத் தனது சங்கோச தருமத்தால்* (குவிவால்). *அந்தச் சித்திரங்களைத் தன்னுள் அடக்கிக் கொள்ளும் விதம்போல, மாயையும் தனது விகாச தருமத்தால் நாமரூப பேதத்தால் நாநா விதமாயுள்ள உலகங்களை விளங்கக் காண்பித்துத் தனது சங்கோச தருமத்தால் அவ்வுலகங்களைத் தன்னுள் அடக்கிக் கொள்ளுவதாம். அஃது இவ்வா றிருத்தலே அதன் தர்மத்துவயமாம்.*

மாயா துணத்துவயம்.

வினு:—மாயா துணத்துவய மேவை?

விடை:—*அவை* (1) *அசுவதந்தரத்தன்மை* (*சுதந்தரமின்மை*), (2) சுவ *தந்தரத்தன்மை* (*சுதந்தரம்*) *என்பனவாம்.* (59)

*மாயை மித்தையாய்ச் சத்ரூபப் பிரஹ்மத்தினும் வேருக ஒரு பொருளாய்த் தோன்ருமையினுல் அசுவதந்தர முடையதாம்* (*சுதந்தரமாக இருத்தலில்லாததாம்*); (*காற்ருனது கடலின்கண் அலைநுரை முதலியவற்றைக் கற்பிப்பது போலச்*) *சர்வ சாட்சியாயுள்ள சத்ரூபப் பிரஹ்மத்தின்கண் ஜீவேசுவர ஜகத்தைக் கற்பித்தலால் சுதந்தரமு முடையதாம். அதனுல், இம்மாயை ஆத்மாப் போலச் சத்துமன்ரும்; ஆகாயத் தாமரை போல அசத்துமன்ரும்; ஆனுல், இவ் விரண்டினும் வேருயதாம்; அஃதாவது அநிர்வசநீயமென்னும்மித்தையாம்.* (60)

---

(இ - ள்.) (*மாயையானது*) பொய்யாகி - *மித்தியா வடிவமாய்*, சத்துருவப் பொருளின் - *சத்ரூபப்பிரஹ்மத்தினும்*, வேருகி - *வேருக*, ஒரு பொருளாய் - (*தான்*) *ஒருபொருளாய்*, தோற்றல் செய்யாமையால் - *தோன்ருமையாலே*, இல் சுதந்தரம் - *சுதந்தரமின்மை*, உளது - *உடையதாம்*, சான்ருய (*சர்வ*) *சாட்சியாயிருக்கின்ற*, ஒருசேதனன்பால் - *ஒப்பற்ற பிரஹ்மத்தினிடத்து*, உய்யாத - (*சுகமாகப்*) *பிழைத்தலில்லாத*, சீவாதி - *ஜீவேசுவரசகத்தை*, ஆக்குதலால் - *உண்டாக்குதலாலே*, சுதந்தரமுமுளது - *சுதந்தரமுமுடையதாம்*, மாயை-*இம்மாயையை*, மெய்யானது அலது அன்று-*மெய்யல்லாததன்று* (*சத்து*), என்றல் - *என்றுங்கூறற்க*, விசும்பலர்போல் - *ஆகாய*(*த்தாமரை*) *மலரைப் போல*, இல்லையென - *அசத்தென்றும்*, விளம்பல் - *கூறற்க*, (*பின்னை - சதசத் விலட்சணமென்று கூறுக.*) (எ - று). எ - *அசை*. என்றல்- விளம்பல் *என்பன அல்வீற்று எதிர்மறை வியங்கோள் வினைமுற்று. அன்றென்பது பிரித்துக் கூட்டப்பட்டது.* 60



**61.** புலனில்கனுக் கரியாதி போற்ருேன்றி விசாரிக்கிற் போன்றும் போய்யா, நிலவுதல்சேய் சுத்தசத் துவவடிவ மாயையோடு நிகழ்த்து கின்ற, மலினசத் துவவடிவ வவித்தைதமப் பிரதான வடிவ மாகு, நலமில்பிர கிருதியேன விருத்திமூன் றுடையதுமுன் னவின்ற மாயை.

---

(1) *உள்ளவாறு விசாரணை செய்யுமிடத்துத் தனக்கெனப் பொருளின்றியதாய், தானில்லாவிடத்துத் தோன்றுவது மித்தையாம்;* (2) *ஆன்ம ஞானத்தாலன்றிப் பிறிதொன்ருலழியாதிருப்பது மித்தையாம்;* (3) *காலத்திரயத்திலும் பொய்யென்று நிச்சயித்தற்குரியதாயிருப்பது மித்தையாம்;* (4) *சத்தியத்திற்கு வேருயிருப்பது மித்தையாம்.*

*"சத் பதார்த்தத்தினும் அசத் பதார்த்தத்தினும் விலட்சணமாவது யாதோ அஃது அஞ்ஞானமெனப்படும்; அஃதாவது சத்தியமாகவும் அசத்தியமாகவும் நிரூபிக்க முடியாதது அஞ்ஞான மெனப்படும். அஞ்ஞானத்தைச் சத்தியமெனக் கொண்டால் சத்தியமாகிய பிரஹ்மத்தைப்போல அவ்வஞ்ஞானம் நாசமாகாமல் இருத்தல் வேண்டும்; ஆனுல், பிரஹ்ம ஞானத்தால் அவ்வஞ்ஞானம் நாசமாய் விடுகின்றது; ஆகையால், அவ்வஞ்ஞானத்தைச் சத்தியமாகவும் நிரூபித்தல் முடியாது; அவ்வஞ்ஞானத்தை அசத்தியமெனக் கொண்டால் அசத்தியமான மலடி மகன் போல அவ்வஞ்ஞானம் பிரத்தியட்சமாதல் கூடாது; ஆனுல், அவ்வஞ்ஞானமோ 'நான் பிரஹ்மத்தை அறிகிலேன்' என்னும் பிரத்தியட்ச அனுபவத்திற்கு விஷயமாகியே தோற்றுகின்றது; ஆகையால், அவ்வஞ்ஞானத்தை அசத்தியமாகவும் நிரூபித்தல் முடியாது. இக்காரணம் பற்றி அவ்வஞ்ஞானத்தை அநிர்வசநீய மென்பர். 'அசத்விலட்சணம் அஞ்ஞானம்' என்னுமிம்மாத்திரமே அஞ்ஞானத்திற்கு இலக்கணமெனின், மலடி மைந்தன் முதலிய அசத்திய பதார்த்தங்களை விட விலட்சணமான சத்தியப் பிரஹ்மத்தினிடத்து அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும்; அவ்வதிவியாப்தி தோஷத்தை நீக்குதற்பொருட்டு அவ்விலக்கணத்தில் 'சத்விலட்சணம்' என்று கூறப்பட்டது. பிரஹ்மம் சத்தினும் விலட்சணமன்று; ஆகையால், அதனிடத்து அதிவியாப்தி யுண்டாகாது. 'சத்விலட்சணம் அஞ்ஞானம்' என்னுமிம்மாத்திரமே அஞ்ஞானத்திற்கு இலக்கண மெனின், சத்தியப் பிரஹ்மத்தை விட விலட்சணமான மலடி மகன் முதலிய அசத்திய பதார்த்தங்களிடத்து அவ்விலக்கணத்திற்கு அதி வியாப்தி யுண்டாகும்; அவ்வதிவியாப்தி தோஷத்தை நீக்குதற்பொருட்டு அவ்விலக்கணத்தில் 'அசத்விலட்சணம்' என்று கூறப்*

---

(இ - ள்.) புலன்-*இந்திரிய வியவகாரங்கள்*, இல் - *இல்லாத*, கனு - *சொப்பனத்தின்கண்*, கரியாதிபோல் - *யானை முதலியன* (*தோன்றுதல்*)*போல*, தோன்றி - *தோன்றுதலுடையதாய்*, விசாரிக்கின் - (*மாயையென்பது எத்தன்மையதென்று*) *ஆராய்ச்சி செய்யுமிடத்து*, பொன்றும் - *இல்லாதொழியும்*, பொய்யாக - *மித்தையாக*, நிலவுதல்செய் - *விளங்குகின்ற*, முன் - *முன்னர்*, நவின்ற - *கூறிய*, மாயை - *மாயையானது*, சுத்த சத்துவ வடிவமாயையொடு - *சுத்த சத்துவகுணரூப மாயையும்*, நிகழ்த்துகின்ற-(*அதன்பின்*) *கூறப்படுகின்ற*, மலின சத்துவவடிவ அவித்தை *மலின சத்துவகுணரூப அவித்தையும்*, நலமில் - *நன்மை தருவதில்லாத*, தமப்பிரதான வடிவமாகும் பிரகிருதி - *தாமதகுணப் பிரதானரூபப் பிரகிருதியும்*, என - *என்று*, விருத்தி மூன்றுடையது - *மூன்று விருத்தி யுடையதாம்*, (*இவையே மாயாவிருத்தித் திரயமாம்.*) (எ - று). 61

**62.** மாயைவரு சுழுத்திலயங் களினத்தி யாசயிக்க மாயிற்
றுண்மை, யாயபிர மத்தினன வோடுபேடைப்பி னிதுபேத வவத்தை
யெய்து, மேயவதிற் பிரமசை தன்னியம்விம் பித்திதுவே விளங்கு
ஞானத், தூயசைதன் னியவீசன் பதியிறையேன் றிடநிற்குந் துணிவு
தன்னால்.

---

பட்டது. அம்மலடி மகன் முதலியன அசத்தினும் விலட்சணமன்று; ஆகையால், அவற்றினிடத்து அதிவியாப்தி யுண்டாகாது. வாஸ்தவமாய் விசாரித்துப் பார்த்தாலோ 'சத்விலட்சணம் அஞ்ஞானம்' என்னுமிம் மாத்திரமே அஞ்ஞானத்திற்கு இலக்கணமெனல் போதும்; அசத்தென்னும் பதம் வீணேயாம். ஏனெனின், அசத்வஸ்து ஒன்று உளதாயின், அதற்கு அசத்துத் தன்மை சம்பவியாதாகும்; அசத்வஸ்துவே யாது மில்லையானால், எதனிடத்து அவ்விலக்கணத்திற்கு அதிவியாப்தி யுண்டாகும். அவ்வஞ்ஞானத்தின் இலக்கணத்தில் 'அசத் விலட்சணம்' என்னும் எப்பதங்களை நூலாசிரியர் தந்தனரோ அவை கேவலம் சீடர்களின் புத்தி விருத்திக்காகக் கொடுக்கப்பட்டன.'' என்று தத்துவாநுசந்தானம் கூறுவது இங்குணர்தற்பாலதாம். (60)

### மாயா விருத்தித் திரயம்.

வினா:—மாயா விருத்தித் திரய மேவை?

விடை:—இந்திரிய வியாபார மின்றிய சொப்பனத்தில் யானை முதலியன தோன்றுதல்போலத் தோன்றி, சற்குரு சற் சாஸ்திர வாயிலாக விசாரணை செய்யுமிடத்துத் தனக்கென ஒரு வடிவமின்றிக் கெடுமியல்புடைய பொய்யாகிய முற்கூறிய மாயையானது சுத்த சத்துவகுண வடிவ மாயை, மலின (அசுத்த) சத்துவகுணவடிவ அவித்தை, தாமதகுணப்பிரதான வடிவப் பிரகிருதி யென்று மூன்று விருத்தியுடையதாம். இவையே மாயா விருத்தித்திரயமாம். (தாமதகுணப் பிரதானவடிவப் பிரகிருதி - தாமதகுணத்தை முக்கிய வடிவமாக வுடைய பிரகிருதி.) (61)

அம்மூன்றுவிருத்திகளுள் மாயையானது சுழுத்தியவஸ்தையிலும், (உலகத்தின்) லயாவஸ்தையிலும் சத்ரூபப் பிரஹ்மத்தின்கண் அத்தியாச ஐக்கியமாயிருந்து, பின் சாக்கிராவஸ்தையிலும் (உலகத்தின்) சிருஷ்டியவஸ்தையிலும் சத்ரூபப்பிரஹ்மத்திற்குச் சிறிது வேற்றுமையாகத் தோன்றும் அவஸ்தையை யடைவதாம்.

---

(இ - ள்.) மாயை - மாயையானது, வரு - (மாறிமாறி) வருகின்ற, சுழுத்திலயங்களின் - சுழுத்தியவஸ்தையிலும் (மகாப்) பிரளயத்திலும், உண்மையாய பிரமத்தின் - சத்ரூபப்பிரஹ்மத்தின்கண், அத்தியாச அயிக்கமாயிற்று - கற்பித ஐக்கியமாயிருப்பதாம்; (பின்), இது - இந்தமாயை, நனவொடு படைப்பின் - ஜாக்கிராவஸ்தையிலும் சிருஷ்டியிலும், பேதவவத்தையெய்தும் - (சிறிது) பேதாவஸ்தையை யடைவதாம், மேயஅதில் - (சிறிது பேதாவஸ்தையைப்) பொருந்திய அம்மாயையின்கண், பிரமசைதன்னியம் - (அந்தப்) பிரஹ்ம சைதன்யம், விம்பித்து - (ஈசுவாரூபமாகப்) பிரதிபிம்பித்து, (விளங்குவதாம்), இதுவே - இந்தப்பிரதிபிம்ப சேதனமே, விளங்கு - (மாறாது) விளங்குகின்ற, ஞானம் - முற்றறிவினையுடைய, தூய சைதன்னிய ஈசன் - பரிசுத்தமாய சைதன்யரூப பரமேசுவரன், பதி - பதிபதார்த்தம், இறை - இறைவன், என்றிட - என்று (புலவர்) கூறுமாறு, துணிவு தன்னால் - நிச்சயமாக, நிற்கும் - இருப்பதாம், (எ - று). 62



**63.** அப்பரற் குபாதி யாகி யமோககா ரணியா மாயை
போய்ப்புறு மவித்தை யெண்ணிற் போத்துருப் பசுவேன் றோது
மோப்பருஞ் சீவர்க் கெல்லா முபாதியாய் மோகஞ் செய்யு
மெய்ப்புறு பகுதி பாச மெனக்குண சமமாய் நின்று.

---

### ஈசுவர விளக்கம்.

1. இம்மாயையில் சத்ரூபம் பிரஹ்மம்(கண்ணாடியில் முகம் பிரதிபிம்பித்து விளங்குதல்போலப்) பிரதிபிம்பித்து விளங்குவதாம். இந்தப் பிரதிபிம்ப மானது சர்வஞ்ஞத்துவ முதலிய குணங்களையுடைய சைதன்னிய (அறிவு) வடிவ ஈசனென்றும், பதியென்றும், இறையென்றும், தத்பதார்த்தனென்றும், பிரேரிப்பவனென்றும் விளங்குவதாம். (62)

இம்மாயையானது அந்த ஈசுவரனுக்கு உபாதியாய் அமோக காரணியாயிருக்கும்.

(ஒரு பொருளைப் பல பொருள் போல விளங்கச் செய்வது உபாதியாம். மோககாரணி - மோகத்தைச் செய்வதற்குக் காரணமாயிருப்பதாம்; அமோக காரணி - மோகத்தைச் செய்வதற்குக் காரணமாகாதிருப்பதாம். மோகம் - உலகம் சத்தியம், உடம்பே உயிரென்றற் றொடக்கத்து விபரீத புத்தியாம்.)

### ஜீவ விளக்கம்.

2. (கலங்கற் சலம்போலத் தன் னம்சத்தால் பலவாயுள்ள) அவித்தையானது (தன்னிடத்திற் பிரதிபிம்பித்து) அளவில்லாதுள்ள போத்துரு வென்றும் பசு வென்றும் கூறப்படும் ஜீவர்க்கெல்லாம் உபாதியாய், மோக காரணியாய் (மயக்கத்தைச் செய்வதாய்) இருக்கும்.

(பிரஹ்ம சைதன்னியம் மாயையில் ஏக வடிவமாய்ப் பிரதி பிம்பித்து ஈசுவரனாகவும், அவித்தையில் அநேக வடிவமாய்ப் பிரதிபிம்பித்து ஜீவர்களாவும் விளங்குகின்ற தென்ப திங்குணர்தற்பாற்றும்.)

''அம்மாயையிற் பிரதிபிம்பித்துள்ள சைதன்யம் ஈஸ்வரனென்றும், அவித்தையிற் பிரதிபிம்பித்துள்ள சைதன்யம் ஜீவனென்றும் சொல்லப்படும். இவ்வார்த்தை ஸ்ரீவித்தியாரண்ய சுவாமிகளாலும் பஞ்சதசி யென்னும் நூலில் (பிரத்தியக்தத்துவ விவேகத்தில்) சொல்லப்பட்டிருக்கின்றது:—'சச்சிதாநந்த வடிவமாகிய பிரஹ்மத்தின் பிரதி பிம்பத்துடன் கூடியதும், சத்துவம் - இராசதம் -

---

(இ - ள்.) மாயை - (இந்த) மாயையானது, அப்பரற்கு உபாதியாகி - அந்தப் பரமேசுவரனுக்கு உபாதியாகப்பொருந்தி, அமோகம் - அமோகத்தைச் செய்வதற்கு, காரணியாம் - காரணமாக விருப்பதாம், பொய்ப்புறும்-(விசாரணைமுகத்துப்) பொய்யாதலைப் பொருந்திய, அவித்தை - அவித்தையானது, (பல வேற்றுமையோடுள்ள தன்னிடத்துப் பிரஹ்ம சைதன்னியம் ஜீவரூபமாய்ப் பிரதிபிம்பிக்க,அதனால்),எண்ணில் - அளவில்லாதுள்ள,போத்துரு பசுவென்று- போத்துரு என்றும் பசுவென்றும், ஓதும் - சொல்லப்படுகின்ற, ஒப்பரும் - (தமக்குயாதும்) ஒப்பாதலில்லாத, சீவர்க்கெல்லாம் - ஜீவரனைவர்க்கும், உபாதியாய் - உபாதியாகப்பொருந்தி, மோகம்செய்யும் - மோகத்தைச் செய்வதாம், எய்ப்புறு - (தத்துவஞானத்தால்) கெடுதலைப்பொருந்திய, பகுதி - பிரகிருதியானது, (போக்கியவடிவத்தன்மையால்), பாசமென - பாசபதார்த்தமென்று கூறப்பட்டு, குணசமமாய் நின்று - குணத்திரய சாமியாவஸ்தையாயிருந்து, (எ - று). மோகம் - விபரீதபுத்தி; அமோகம் - விபரீத புத்தியின்மை. 63

**64.** அவித்தையின் விம்பித் துள்ள வாருயிர் நுகர்ச்சிக் காகத்
துவக்குறு காரி யங்க டோன்றிட வேதிர்கு றித்த
வுவப்புறு மீச னேக்க மாத்திரத் துற்ற லார்ந்து
பவப்படு கால மாகி யதுகோடு பரிணு மித்து.

---

தாமதமென்னும் முக்குண வடிவமுமாகிய பிரகிருதி மாயை அவித்தை யென்னும் வேறுபாட்டால் இருவகைத்தாம். அந்தப் பிரகிருதி சுத்த சத்துவகுணப் பிரதானத்தால் மாயையென்றும், மலின சத்துவ குணப் பிரதானத்தால் அவித்தை யென்றும் சொல்லப்படும்; (1) அம்மாயையிற் பிரதி பிம்பித்துள்ள சைதன்யம் அம்மாயையைத் தன் வசஞ்செய்து சர்வஞ்ஞனுகிய ஈசுவரனுகின்றது; (2) அவித்தையிற் பிரதி பிம்பித்துள்ள சைதன்யம் ஜீவனெனப்படும்; அந்தச் சீவ சைதன்யம் அவ்வவித்தையின் வசமாகி அவ்வவித்தையின் விசித்திரத்தன்மையால் மக்கள் தேவர் முதலிய வடிவங்களால் பலவகையாகின்றது. இங்குக் கருத்திதுவாம்:— முற்கூறிய சத்துவகுணப்பிரதான மாயை ஒன்றே யாகையால் அம்மாயையிற் பிரதிபிம்பித்துள்ள ஈசுவரசைதன்யமும் ஒன்றேயாம்; மலினசத்துவ குணப்பிரதான அவித்தை அம்மலினத் தன்மையின் விசித்திரத்தால் பலவகைப்படும்; ஆகையால், அவ்வவித்தையிற் பிரதிபிம்பித்துள்ள சைதன்யமும் பலவகையேயாம்'' என்று தத்வாநுசந்தானங் கூறுவதுமிங்குணர்தற்பாலதாம்.

**பிரபஞ்ச விளக்கம்.**

பிரகிருதியானது (போக்கிய வடிவத்தன்மையால்) பாசமெனக் கூறப்படுவதாய், (சத்துவம் - இராசதம் - தாமத மென்னும்) குணத்திரய சாமியாவஸ்தையா யிருந்து, (குண மூன்றும் தம்முள் சமமாக விருக்க விருந்து), அவித்தையிற் பிரதி பிம்பித்துள்ள ஜீவர்களது போகாநுபவத்தின் பொருட்டு, தேகாதிப் பிரபஞ்ச காரியமனைத்து முண்டாகவேண்டி யெண்ணிய ஈசுவரன் தன்னை நேரே நோக்கிய வளவிலே விரிந்து மகதாதி சிருஷ்டிக்கிரம வாயிலாகப் பிரபஞ்சத்தைக் கற்பிற்கும். (63-64)

---

(இ - ள்.) அவித்தையின் - அவ்வவித்தையின்கண், விம்பித்துள்ள - பிரதிபிம்பித்திருக்கின்ற, ஆருயிர் - (தேகமுற்றும்) நிறைந்துள்ள ஜீவராது, நுகர்ச்சிக்காக - போகாநுபவத்தின் பொருட்டு, துவக்குறு - (பரஸ்பரம்) சம்பந்தம் பொருந்திய, காரியங்கள் தோன்றிட - (தேகாதிப்பிரபஞ்ச) காரியங்கள் உற்பத்தியாதற்பொருட்டு, எதிர்குறித்த - நேரே சங்கற்பித்த, உவப்பு - ஆநந்தத்தை, உறும்-(தனக்கு வடிவமாகப்) பொருந்தியுள்ள, ஈசன் - பரமேசுவரனது, நோக்கமாத்திரத்து - (பார்த்தலென்னும்) ஈக்ஷண மாத்திரத்தால், உற்றலர்ந்து - (மாறுபாடின்றிப்) பொருந்தி விரிந்து, (முன்னர்), பவப்படுகாலமாகி - (மகத்தத்துவ முதலிய காரியங்கள்) உற்பத்தியாதற்கேதுவாய காலதத்துவமாய், அதுகொடு - அக்காலதத்துவவசத்தினுல், பரிணுமித்து - வேற்றுருவடைந்து, (எ - று).

64



**65.** இருமக தத்து வந்தா னெனநிற்கு மதுதா னீர்பெய்
தரும்விதை முளையா மன்முன் போலிரா தாதல் போலக்
கருவெனும் பகுதி யோடாங் காரமு மாகா மற்போய்
யுரமுறு நிருவி கற்ப வுருநடு வவத்தை யாகும்.

---

**மகதாதி சிருஷ்டிக்கிரமம்.**

வினு:—மகதாதி சிருஷ்டிக் கிரமத்தைக் கூறல் வேண்டும்?

**மகத் தத்துவ உற்பத்தி.**

விடை:—ஈசுவரன் தன்னை நேரே நோக்கிய வளவிலே விரிந்த பிரகிருதியானது கால தத்துவமாம்; அதனுல், தான் பரிணமித்து (வேற்றுருவ மமைந்து), மகத் தத்துவமாம். அம்மகத் தத்துவமானது (பாத்தியில் விதைத்து) நீர்வார்க்க ஊறியுள்ள விதையானது முளையாமலும் முன்போற் செட்டியா யிராமலும் உப்பின வடிவத்தால் மத்தியாவஸ்தை யுடையதாதல்போல, தன் காரணமா யுள்ள பிரகிருதியாகாமலும் தன் காரியமாயுள்ள அகங்கார மாகாமலும் மித்தியா ஞானமுற்ற நிர் விகற்ப வடிவத்தால் மத்தியாவஸ்தை யுடையதாயிருக்கும்.

(நீரிலூறிய விதை முளை வடிவமாகாதும் விதை வடிவ மாகாதும் உப்பியிருத்தலால் அவ்விரண்டிற்கும் நடுவான நிலைமையை யடைந்திருப்பதுபோல, மகத் தத்துவமும் தன் காரிய வடிவ அகங்காரமாகாதும் தன் காரணவடிவப் பிரகிருதியாகாதும் மித்தியாஞான முற்ற நிர்விகற்ப வடிவத்தால் அவ்விரண்டிற்கும் நடுவான நிலைமையை யடைந்திருப்பதா மென்பதிங் குணர்தற்பாலதாம். இம் மகத் தத்துவம் சாமானிய அகங்காரமென்றுங் கூறப்படும். ஒவ்வொருவர்க்கும் அவர் சுழுத்தியவஸ்தையினின்று மெழுந்து ஜாக்கிராவஸ்தை யடைவதற்கு முன் நான் நானென்றுள்ள புத்தி நிர்விகற்ப மித்தியா ஞானமாம். இதுவே நான் அந்தணன், நான் அரசனென்றற் றொடக்கத்து விசேஷ அகங்கார முண்டாதற்குக் காரணமா மென்பதிங் குணர்தற்பாலதாம்.) (65)

---

(இ - ள்.) இருமகதத்துவந்தானென நிற்கும் - பெரிதாகிய மகத்தத்துவமென்று (கூறக்) காரியமாவதாம், அதுதான்-அம்மகத்தத்துவமானது, நீர்பெய்து - (பாத்தியில் விதைத்துத்) தண்ணீர் வார்க்க, (ஊறிய), அரும்விதை - சூக்குமரூப விதையானது, முளையாமல் - முளையாமலும், (அங்குரமாகாமலும்), முன்போலிராது - முன்புபோல இராமலும் (பீச நியாயங் காட்டாமலும்), ஆதல்போல-(உத்பின்னுவஸ்தை யுடையதாய்) இருத்தல்போல, கருவெனும் பகுதியோடு - (பரிணுமியுபாதான) காரணமென்னும் பிரகிருதியும், ஆங்காரமும் - (காரியமென்னும்) அகங்காரமும், ஆகாது - ஆகாமல், பொய்யுரமுறு - மித்தியா ஞானமுற்ற, நிர்விகற்பவுரு - நிர்விகற்பவடிவத்தால், நடு அவத்தையாகும்- மத்தியாவஸ்தை யுடையதாம், (எ - று). (உற்பின்னுவஸ்தை - பிளவுபடுதற்குரிய நிலைமை.)

65

**66.** கோன்மக தத்து வத்திற் குணபேத முருப்போய்ஞ் ஞான
மன்சவி கற்ப மாக வருமுத லத்தி யாச
மேன்முத லாங்கா ரந்தோன் றிடுங்குணஞ் சத்து வந்தான்
பின்வரு மிராச தஞ்சோற் பெருந்தமோ குணமேன் றுகும்.

**67.** உரைப்பருஞ் சத்து வாதி யுருவங்கள் பிரகா சம்பின்
புரைப்பிர விருத்தி மோக மேன்குவர் புகல்கு ணங்க
ணிரைப்பெயர் தான்வை காரி நிகழுந்தை சதம்பூ தாதி
விரிப்பருங் குணங்கண் மூன்றுந் தருவமேல் விளம்ப லுற்றும்.

---

அகங்கார தத்துவ உற்பத்தி.

*அம் மகத் தத்துவத்தினின்றும் (சத்துவம் - இராசதம் - தாமதமென்னும்) குணங்கள் வேற்றுமையாக மித்தியாஞானமுற்ற சவிகற்ப சொரூபமாயுள்ள பிரதம அத்தியாசமென்று கூறப்படும் மூலாங்காரமுண்டாம். (இவ் வகங்காரம் விசேஷ அகங்கார மென்றும் கூறப்படும். சாக்கிராவஸ்தையை யடைந்திருப்பவர்க்கு நான்வேதியன் நான் அரசனென்றற் றொடக்கத்தனவாகவுள்ள புத்தி சவிகற்ப மித்தியா ஞானமாம்.)*

குணத்திரயம்.

**வினா:—அவ் வகங்காரத்தின் குணங்க ளெவை?**

விடை:—*அவை சத்துவம் - இராசதம் - தாமத மென்பனவாம்.* (66)

**வினா:—அவற்றின் வடிவங்க ளெவை?**

---

(இ - ள்.) கொன்மக தத்துவத்தில் - (பின்னர்ப்) பெருமை பொருந்திய அம்மகத்தத்துவத்தினின்றும், குணபேதமுரு - குணபேத முற்று, பொய்ஞ் ஞான மன் - மித்தியாஞான முற்ற, சவிகற்பமாக - சவிகற்பவடிவமாக, வரு - வருகின்ற, முதலத்தியாச மென் - பிரதம அத்தியாசமென்று கூறப்படுகின்ற, முதலாங்காரம் - மூலாங்காரம், தோன்றிடும் - உற்பத்தியாம், குணம் - (அம் மூலாங்காரத்தின்) குணம், சத்துவந்தான் - சத்துவமும், பின்வரும் - (அதன்) பின் (கூறப்பட்டு) வருகின்ற, இராசதம்-இராசதமும், சொல்-(அதன் பின்னர்க்) கூறப்படுகின்ற, பெருந்தமோகுணம் - பெரியதாகிய தாமத குணமும், என்றுகும் - என்று மூன்றும், (எ - று). 66

(இ - ள்.) உரைப்பரும் - (பிரத்தியட்ச பதார்த்தமாகக்) கூறுதலில்லாத, சத்துவாதி - சத்துவ முதலிய குணங்களின், உருவங்கள் - வடிவங்களை, (புலவர் முறையே), பிரகாசம் - பிரகாசமும், பின் புரை - (அதன்) பின்னர்க் களங்கமுடைய, பிரவிருத்தி - பிரவிருத்தியும், மோகம் - மோகமும், என்குவர் - என்று கூறுவர், புகல் - (இவ்வாறு) கூறிய, குணங்கள் - (சத்து வாதி) குணங்களுக்கு, நிரைப்பெயர் தான் - வரிசையாகவுள்ள பரியாய நாமங்கள், நிகழும் - விளங்குகின்ற, தைசதம் - தைசதமும், வைகாரி - வைகாரிகமும், பூதாதி - பூதாதிகமும் (ஆம்), விரிப்பரும் - பிரித்துக் கூறுதற்கரிய, குணங்கள் மூன்றும் - சத்துவாதிகுண மூன்றும், தருவ - தருவனவற்றை, மேல் - இனி, விளம்பலுற்றும் - கூறுவாம், (எ - று). 67



**68.** சத்துவ குணத்திற் றேன்றுந் தயங்குமுட் கரண நான்கும்
புத்தியிந் தியங்க ளைந்தும் போந்துதித் திடுமி ராச
தத்தில்வாக் காதி யைந்துந் தகும்பிரா ணாதி யைந்து
மத்தமோ குணத்திற் றேன்று மகல்விசும் பாதி பூதம்.

---

விடை:—*சத்துவ குணத்தின் வடிவம் பிரகாசமாம்; இராசத குணத்தின் வடிவம் பிரவிர்த்தியாம்; தாமத குணத்தின் வடிவம் மோகமாம்.*

*(பிரகாசம் - ஞானம்; பிரவிர்த்தி - முயற்சி; மோகம் - மயக்கம்.)*

**வினா:—அவற்றின் பரியாய நாமங்க ளெவை?**

விடை:—*சத்துவ குணத்தின் பரியாய நாமம் தைசதமாம்; இராசத குணத்தின் பரியாயநாமம் வைகாரிகமாம்; தாமத குணத்தின் பரியாய நாமம் பூதாதிகமாம்.* (67)

அந்தக்கரண முதலியவற்றின் சிருஷ்டி.

**வினா:—இம் முக்குணங்களினின்றும் எவை யெவை யுண்டாயின?**

விடை:—1. *சத்துவ குணத்தினின்றும் (சத்துவகுண அகங்காரத்தினின்றும்) மன முதலிய அந்தக்கரண நான்கும் சுரோத்திரமுதலிய ஞானேந்திரியம் ஐந்தும் உண்டாயின;* 2. *இராசத குணத்தினின்றும் (இராசதகுண அகங்காரத்தினின்றும்) வாக்கு முதலிய கருமேந்திரிய மைந்தும் பிராணன் முதலிய வாயுவைந்தும் உண்டாயின;* 3. *தாமத குணத்தினின்றும் (தாமதகுண அகங்காரத்தி னின்றும்) ஆகாய முதலிய (சூக்கும) பூதமைந்து முண்டாயின.*

*(சத்துவ குண அகங்காரத்தினின்றும் சமஷ்டியாக அந்தக்கரணமும், வியஷ்டியாக ஞானேந்திரியமும், இராசத குண அகங்காரத்தினின்றும் சமஷ்டியாகப் பிராணாதி வாயுவும், வியஷ்டியாகக் கருமேந்திரியமு முண்டாயின வென்பதிங் குணர்தற் பாலதாம்.)*

---

(இ - ள்.) (அம்முக்குணத்துள்), சத்துவ குணத்தில் - சத்துவகுணத்தினின்றும், தயங்கும் - விளங்குகின்ற, உட்கரண நான்கும் - (மன முதலிய) அந்தக்கரணம் நான்கும், புத்தியிந்தியங்களைந்தும் - (சுரோத்திர முதலிய) ஞானேந்திரியங்களைந்தும், தோன்றும் - உற்பத்தியாம், இராசதத்தில் - இராசத குணத்தினின்றும், வாக்காதியைந்தும் - வாக்கு முதலிய கர்மேந்திரியங்களைந்தும், தகும் - (ஜீவர்கள் பிழைத்திருத்தற்குத்) தகுதியாயுள்ள, பிராணாதியைந்தும் - பிராணன் முதலிய வாயுக்களைந்தும், போந்துதித்திடும் - வந்துற்பத்தியாம், அத்தமோகுணத்தில் - அந்தத் தாமதகுணத்தினின்றும், அகல் - வியாபகமான, விசும்பாதி பூதம் - ஆகாயமுதலிய பூதங்களைந்தும், தோன்றும் - உற்பத்தியாம், (எ - று). 68

**69.** அப்பெரும் பூதம் பஞ்சீ கரித்துல காகி நிற்குஞ்
செப்பிய கரண நான்கின் செயல்களா நினைத்த லந்தப்
பொய்ப்பொரு டுணிதன் மானம் புரிதல்சிந் தித்த றிங்க
டிப்பிய நான்மு கன்கேத் திரிபுராந் தகன்றே வன்றே.

---

"அவ்வியக்தம், அக்ஷரம், அஞ்ஞானம், பிரதானம், சக்தி,முக்குணங்களின் சாம்மியாவஸ்தையாகிய பிரகிருதியென்னும் இவை முதலிய பெயர்களால் பிரசித்தமாயுள்ள மாயையினின்றும் மாயா விசிஷ்ட (மாயையோடு கூடிய) சேதனமாகிய ஈசுவரனது இச்சையினல் சமஷ்டி புத்தியாகிய மகத்தத்துவம் உண்டாயிற்று; அம்மகத்தத்துவமானது இராசதம் - சாத்வீகம் - தாமதமென்னும் பேதத்தால் மூன்றுவிதமான அகங்காரத்தை உண்டாக்கியது" என்று பாலபோதம் கூறுவதும், "(தைசதமென்னும்) சாத்வீக அகங்காரத்தினின்றும் மனமும், சுரோத்திர முதலிய ஞானேந்திரியமைந்துந் தோன்றும்; (வைகாரிகமென்னும்) இராசத அகங்காரத்தினின்றும் வாக்கு முதலிய கன்மேந்திரியமைந்துந்தோன்றும்; (பூதாதிகமென்னும்) தாமத அகங்காரத்தினின்றும் கந்த முதலிய தன்மாத்திரைகளைந்துந் தோன்றும்" என்று சித்தாந்தப்பிரகாசிகை கூறுவதும் இங்குணர்தற்பாலனவாம். (68)

அந்தப் பூதங்கள் பஞ்சிகரணக்கலப்பால் (ஸ்தூல பூதங்களாய்ப் பிரமாண்ட-புவன-சரீர-கடாதிவிஷய வடிவ)உலகமா யிருக்கும்.

### பஞ்சீகரண வகை.

ஆகாசத்தை யிரண்டு பாகமாக்கி ஒருபாகத்தை யுள்ளவாறு வைத்து மற்றைப் பாகத்தை நான்கு பாகஞ் செய்தும், வாயுவை யிரண்டு பாகமாக்கி ஒரு பாகத்தை யுள்ளவாறு வைத்து மற்றைப்பாகத்தை நான்குபாகஞ் செய்தும், தேயுவை யிரண்டு பாகமாக்கி ஒரு பாகத்தை யுள்ளவாறு வைத்து மற்றைப் பாகத்தை நான்கு பாகஞ் செய்தும், அப்புவை யிரண்டு பாகமாக்கி ஒரு பாகத்தை யுள்ளவாறு வைத்து மற்றைப் பாகத்தை நான்குபாகஞ் செய்தும், பிருதிவியை யிரண்டு பாகமாக்கி ஒரு பாகத்தை யுள்ளவாறு வைத்து மற்றைப் பாகத்தை நான்குபாகஞ் செய்தும் விட்டால் ஒவ்வொரு பூதமும் ஐந்தைந்து பகுப்பினதாம்; இப்பூதங்களுள் ஆகாயத்தின் அரைப்பாகத்தோடு அதனது மற்றை யரைப்பாகத்தின் நான்கையுஞ் சேர்க்காமல், அவற்றுள், ஒன்றை வாயுவின் அரைப்பாகத்தோடும், மற்றொன்றைத் தேயுவின் அரைப் பாகத்தோடும் இன்னொன்றை அப்புவின் அரைப்பாகத்தோடும், பிறிதொன்றைப் பிருதிவியின் அரைப்பாகத்தோடுஞ் சேர்த்தல் வேண்டும்

---

(இ - ள்.) அப்பெரும் பூதம் - (பின்னர்) அந்தப் பெரிய பூதங்கள், பஞ்சீகரித்து - பஞ்சீகரணக் கலப்பால், (ஸ்தூல பூதங்களாய்) உலகாகி நிற்கும் - (பிரமாண்ட-புவன-சரீர-கடாதி விஷயவடிவ) உலகமாயிருப்பதாம், செப்பிய-(முன்னர்க்) கூறிய, கரண நான்கின் -(மனம் - புத்தி - அகங்காரம் - சித்தம் என்னும் அந்தக்)கரண நான்கினது, செயல்கள் - வியாபாரங்கள், (முறையே), அந்தப் பொய்ப்பொருள் - (பிரமாண்ட முதலிய) அந்த மித்தியா வஸ்துக்களை, நினைத்தல் - நினைத்தலும், துணிதல் - நிச்சயித்தலும், மானம் புரிதல் - அபிமானித்தலும், சிந்தித்தல் - சிந்தித்தலும், ஆம் - ஆம், (அவ்வந்தக்கரணங்களுக்கு முறையே), திங்கள் - சந்திரனும், திப்பிய நான்முகன் - மேன்மை யுடைய நான்முகக் கடவுளும் (அயனும்),கேத்திரி-க்ஷேத்திரஞ்ஞனும் (அரியும்), புராந்தகன் - புராந்தகனும் (அரனும்), தேவு - அதிதேவதைகள் (ஆவர்), (எ - று). அன்று - ஏ - அசை.கேத்திரி என்பது க்ஷேத்திரி என்பதன் றற்பவமாம். 69



---

இவ்வாறே வாயுவின் அரைப்பாகத்தோடு அதனது மற்றை யரைப்பாகத்தின் நான்கையுஞ் சேர்க்காமல் ஆகாய முதலியவற்றின் அரைப்பாகத்தோடும், தேயுவின் அரைப்பாகத்தோடு அதனது மற்றை யரைப்பாகத்தின் நான்கையுஞ் சேர்க்காமல் ஆகாய முதலியவற்றின் அரைப் பாகத்தோடும், அப்புவின் அரைப் பாகத்தோடு அதனது மற்றை யரைப்பாகத்தின் நான்கையுஞ் சேர்க்காமல் ஆகாய முதலியவற்றின் அரைப்பாகத்தோடும், பிருதிவியின் அரைப்பாகத்தோடு அதனது மற்றை யரைப்பாகத்தின் நான்கையுஞ் சேர்க்காமல் ஆகாய முதலியவற்றின் அரைப்பாகத்தோடும் சேர்த்தல் வேண்டும். இவ்வாறு சேர்த்தல்தான் பஞ்சீகரணமாம். இவ்வாறு பஞ்சீகரணஞ் செய்துள்ள பூதம் ஸ்தூலபூதமெனப்படுகின்றது. ஒவ்வொரு ஸ்தூலபூதத்திலும் தனது சூக்கும பூதத்தின் அம்சம் அரைப்பாகமாகவும் ஏனைய சூக்கும பூதங்களின் அம்சம் அரைப்பாகமாகவு மிருக்கும்.

"ஐந்துபூ தமும்பத் தாக்கி யவைபாதி நந்நான் காக்கி
நந்துதம் பாதி விட்டு நான்கொடு நான்குங் கூட்ட
வந்தன தூல பூதம்"

என்று கைவல்லிய நவநீதங் கூறுகின்றது.

### இருள் - திக்கு - காலம் - ஈசுவரசிருஷ்டி - இரணியகருப்ப சிருஷ்டி.

"இங்ஙனம் அவித்தையினலேயே அந்தகாரமும்(இருளும்)உண்டாகின்றது. அது (இருள்) பாவவடிவமே; ஆவரண வடிவம், சாட்சுஷ ஞானத்திற்கு விரோதி, பிரகாசத்தால் நாசத்தையடைவது, மின்னல் முதலியன போன்று விரைவிற்றோன்றி யழியுந் தன்மையது என்பது சித்தாந்தம்; அந்தகாரம் சம்சாரகாரணமான தேகத்தைக் குறித்து உபாதான (முதற்) காரணமாகாதிருத்தலால், சிருஷ்டிப்பிரகரணத்தில் அது பற்றிச் சுருதிகள் யாதுங்கூறவில்லை. ஆதலால், யாதும் விரோதமின்று. திக்குங் காலமுமோ (உண்டென்பதற்குப்) பிரமாண மில்லாமையால் (அவற்றைப்பற்றியும் சிருஷ்டிப்பிரகரணத்தில் சுருதிகள்) கூறவில்லை; (ஏனெனின்,) ஆகாயமே திக்கென்னும் வியவகாரத்திற்குக் காரணமாகச் சம்பவிப்பதாலும், 'திசாசுரோத்திரம் - திக்குக்களே சுரோத்திரேந்திரியம் (ஆகாயம்)' என்று சுருதி கூறுவதாலு மென்க. காலமோ அவித்தையே; அதுவே சர்வத்திற்கும் ஆதாரமாயிருப்பதால்." என்று சித்தாந்தபிந்து கூறுவதும், "பரமேசுவரன் பஞ்ச தன்மாத்திரையின் (சூட்சும பூதத்தின்) உற்பத்தியிலும், பதினேழு அவயவங்களுடன் கூடிய லிங்க (சூட்சும) சரீரத்தினுற்பத்தியிலும், இரணியகருப்பரது ஸ்தூலசரீர உற்பத்தியிலும் சாட்சாத் (நேரே) கர்த்தா; ஏனைய பிரபஞ்சத்தினுற்பத்தியில் இரணியகருப்பர் வாயிலாகக் கர்த்தா. ... ... ... ...இரணியகருப்பர் மும்மூர்த்திகளினும் வேறானவர்; சிருஷ்டியினாரம்பத்திலுண்டான ஜீவர்" என்று வேதாந்த பரிபாஷை

**70.** இக்கர ணங்க டான மிதயஞா னேந்தி யங்கட்
குய்க்குறுந் தொழிலாங் கேட்ட லுறல்காண்ட லுண்டன் மோத்த
றிக்குமா ருதமே நன்மித் திரனுயர் வருண னேடு
தக்கசு வினியாங் தெய்வந் தானங்கா தாதி யாமே.

---

கூறுவதும், "இரணியகருப்பரோ மகா பூதங்களைக் குறித்துக் காரணமாயிராமையால் பிரஹ்மாவன்று; ஆயினும், (அவர்) ஸ்தூல பூதங்களைச் சிருஷ்டிப்பதால், சிலவிடங்களில் பிரஹ்மாவென்று உபசாரமாகக் கூறப்படுகின்றார்" என்று சித்தாந்தபிந்து கூறுவதும் இங்குணர்தற்பாலனவாம்.

**அந்தக்காண சதுஷ்டயம்.**

**வினு:—அந்தக்காண சதுஷ்டயமேவை?**

விடை:—அவை 1. மனம், 2. புத்தி, 3. அகங்காரம், 4. சித்தமென்பனவாம்.

**வினு:—அவற்றின் வியாபாரங்களேவை?**

விடை:—(விஷயங்களை) நினைத்தல் மனத்தின் வியாபாரமாம்; நிச்சயித்தல் புத்தியின் வியாபாரமாம்; அபிமானித்தல் அகங்காரத்தின் வியாபாரமாம்; சிந்தித்தல் சித்தத்தின் வியாபாரமாம்.

**வினு:—அவற்றிற் கதிதேவதைகளேவை?**

விடை:—மனத்திற்குச் சந்திரன் அதிதேவதையாம்; புத்திக்குப் பிரமன் அதிதேவதையாம்; அகங்காரத்திற்கு க்ஷேத்திரஞ்ஞன் அதிதேவதையாம்; சித்தத்திற்குப் புராந்தகன் (உருத்திரன்) அதிதேவதையாம். சித்தத்திற்கு க்ஷேத்திரஞ்ஞனை (விஷ்ணுவை)யும், அகங்காரத்திற்கு உருத்திரனையும் அதிதேவதையாகக்கூறுவது முண்டு. (69)

**வினு:—இவற்றிற்கு ஸ்தானங்களேவை?**

விடை:—மனத்திற்கு ஸ்தானம் கண்டமாம்; புத்திக்கு ஸ்தானம் முகமாம்; அகங்காரத்திற்கு ஸ்தானம் சர்வாங்கமுமாம்; சித்தத்திற்கு ஸ்தானம் நாபியாம். (ஸ்தானம் - இடம்; நாபி - கொப்பூழ்.)

**ஞானேந்திரிய பஞ்சகம்.**

**வினு:—ஞானேந்திரிய பஞ்சகமேவை?**

விடை:—அவை 1. சுரோத்திரம், 2. துவக்கு, 3. சட்சு, 4. சிங்குவை, 5. கிராணமென்பனவாம்.

**வினு:—அவற்றின் வியாபாரங்களேவை?**

---

(இ - ள்.) இக்கரணங்கள் - இவ்வந்தக்கரணங்களுக்கு, தானம் - இடம், இதயம் - இருதயகோளகமாம், ஞானேந்திரியங்கட்கு - (சுரோத்திரம் - துவக்கு - சட்சு - சிங்குவை - கிராணம் என்னும்) ஞானேந்திரியங்களுக்கு, உய்க்குறும் - (தம்மையுடையவரை விஷயங்களிற்) சேர்க்கும், தொழில் - வியாபாரங்கள், (முறையே), கேட்டல் - கேட்டலும், உறல் - பரிசித்தலும், காண்டல் - பார்த்தலும், உண்டல் - உருசித்தலும், மோத்தல் - ஆக்கிராணித்தலும், ஆம் - ஆம், (அந்த ஞானேந்திரியங்களுக்கு முறையே), திக்கு - திக்கும், மாருதமே - வாயுவும், நன்மித்திரன் - சிறப்புடைய சூரியனும், உயர்வருணனேடு - மேன்மைபொருந்திய வருணனும், தக்க அசுவினி - தகுதிவாய்ந்த அசுவினி குமாரரும், தெய்வமாம் - அதி தேவதைகளாவர், (அவ்விந்திரியங்களுக்கு) தானம் - இடம், காதாதியாம் - செவிமுதலிய கோளகங்களாம், (எ - று). 70



**71.** புத்தியிந் திரியங்க டாமுணரும் விடயம் புறமெனவே யுள்ளு
முணர்ந் திடுஞ்செவிகள் புதைப்பி, னுய்த்தபிரா ணுதியொலி கேட்கை
யன்னு திகளை யுண்ணும்போ தழல்குளிர்ச்சி யறிதல்விழி மூடின்,
மெத்துமக விருளறித லுட்காரா திகளின் விளங்குசுவை கந்தமறிந்
திடன்முறையே யாகும், வைத்தகரு மேந்திரியத் தொழிலுரைத்த
னடத்தல் வழங்கல்விட லாநந்தித் திடுதலென வறியே.

---

விடை:—சத்தத்தைக் கேட்டல் சுரோத்திரத்தின் வியாபாரமாம்; பரிசத்தை யறிதல் துவக்கின் வியாபாரமாம்; ரூபத்தை யறிதல் சட்சுவின் வியாபாரமாம்; சுவையை யறிதல் சிங்குவையின் வியாபாரமாம்; வாசனையை யறிதல் கிராணத்தின் வியாபாரமாம்.

**வினு:—அவற்றிற் கதிதேவதைகளேவை?**

விடை:—சுரோத்திரத்திற்குத் திக்கு அதிதேவதையாம்; துவக்கிற்கு வாயு அதிதேவதையாம்; சட்சுவிற்குச் சூரியன் அதிதேவதையாம்; சிங்குவைக்கு வருணன் அதிதேவதையாம்; கிராணத்திற்கு அசுவினிகுமாரர் அதிதேவதையாவர்.

**வினு:—இவற்றிற்கு ஸ்தானங்களேவை?**

விடை:—சுரோத்திரத்திற்கு ஸ்தானம் காதாம், துவக்கிற்கு ஸ்தானம் உடம்பாம், சட்சுவிற்கு ஸ்தானம் கண்ணும், சிங்குவைக்கு ஸ்தானம் நாக்காம், கிராணத்திற்கு ஸ்தானம் மூக்காம். (70)

**வினு:—சுரோத்திர முதலிய ஞானேந்திரியங்கள் பாகியமாயுள்ள சத்த முதலியவற்றை யறிவதுபோலஆந்தரமாயுள்ள சத்த முதலியவற்றை யறிதலுமுண்டோ?**

---

(இ - ள்.) புத்தியிந்திரியங்கள் - (அந்த) ஞானேந்திரியங்களைந்தும், தாம் உணரும் - தாம் அறிகின்ற, புறம்விடயம் எனவே - பாகிய சத்தாதி விஷயங்களைப்போல, உள்ளும் - தேகத்துள்ளும், உணர்ந்திடும் - (சத்தாதி விஷயங்களை) அறிவனவாம், செவிகள் புதைப்பின் - செவிகளை விரல்களால் மூடியவிடத்து, (சுரோத்திரேந்திரியத்தால்) உய்த்த - (தேகம் இந்திரிய முதலியவற்றைச்) செலுத்துகின்ற, பிராணுதி - பிராணவாயு சாடராக்கினிகளால் (உண்டாகும்), ஒலிகேட்கை - சத்தத்தைக்கேட்டலும், அன்னுதிகளை - சோறு முதலியவற்றை, உண்ணும்போது - புசிக்கின்ற காலத்து, (தொக்கிந்திரியத்தால்), அழல் குளிர்ச்சியறிதல் - உஷ்ணம் சீதம் முதலிய பரிசங்களையறிதலும், விழிமூடின் - கண்களை மூடியவிடத்து, (நேத்திரேந்திரியத்தால்), மெத்தும் - நெருங்கிய, அகவிருளறிதல் - உள்ளிருளையறிதலும், உட்காராதிகளின் - ஏப்பமிடுதல் வாந்தியெடுத்தல்களால், விளங்குசுவை - (உள்ளே) விளங்குகின்ற சுவையினையும், கந்தம் - வாசனையையும், (முறையே நாக்கிந்திரியத்தாலும் மூக்கிந்திரியத்தாலும்), அறிதல் - அறிதலும், முறையேயாகும் - (சுரோத்திர முதலிய இந்திரியங்களுக்குக்) கிரமமாகப் பொருந்துவனவாம், வைத்த - (ஞானேந்திரியங்களுக்குப் பின்னுக) வைத்துக்கூறப்படுகின்ற, கருமேந்திரியத்தொழில் - (வாக்கு-பாதம் - பாணி - பாயுரு - உபஸ்தம் என்னும்) கர்மேந்திரியங்களின் வியாபாரங்கள், (முறையே), உரைத்தல் - வசனித்தலும், நடத்தல் - நடத்தலும், வழங்கல் - (ஏற்றலோடு) இடுதலும், விடல் - (மலஜலங்களை) விடுதலும், ஆநந்தித்திடுதல் - ஆநந்தித்தலும், என - என்று, அறி - (அவற்றை நீ) அறியக்கடவாய், (எ - று). 71

**72.** அங்கிமக பதியிரவி யுடன்மிருத்யு பிரசா பதிதேய்வம் வாய் முதலாங் கோளகங்க டான, மிங்கிவையு ளுட்கரண மிருவகையிந் திரிய மேன்னவரு பதினன்கு மாத்தியான் மிகமாந், தங்குமிவற் றுறு விடய மாதிபௌ திகமாந் தகுமதிதே வதையாதி தெய்வீக மாமிப், புங்கவரே யிந்திரியம் விராட்புருடற் கதுமெய் பொன்கருப்பற் கதுமறைப் பா மந்தரியா மிக்கே.

---

விடை:—உண்டு.

1. செவிகளை விரல்களால் மூடுகின்றபோது பிராணவாயு - ஜாடராக்கினி களாலுண்டாம் சத்தத்தைச் சுரோத்திரேந்திரியம் கேட்பதாம்;

2. அன்னபானுதிகளைப் புசிக்கின்றபோது அவற்றாலுண்டாம் சீதோஷ்ண முதலிய பரிசங்களைத் தொக்கிந்திரியம் அறிவதாம்;

3. கண்களை மூடுகின்றபோது உள்ளிருளைச் சட்சு விந்திரியம் அறிவதாம்;

4. ஏப்பமிடுகின்றபோது உட்சுவையைச் சிங்வை யிந்திரியம் அறிவதாம்;

5. வாந்தியெடுக்கின்றபோது நாற்றத்தைக் கிராணேந்திரியம் அறிவதாம்.

**கர்மேந்திரிய பஞ்சகம்.**

வினு:—**கர்மேந்திரிய பஞ்சகமேவை ?**

விடை:—அவை 1. வாக்கு, 2. பாதம், 3. பாணி, 4. பாயுரு, 5. உபஸ்த மென்பனவாம்.

வினு:—**அவற்றின் வியாபாரங்களேவை ?**

விடை:—வசனித்தல் வாக்கின் வியாபாரமாம்; நடத்தல் பாதத்தின் வியா பாரமாம்; இடுதலேற்றல் பாணியின் வியாபாரமாம்; மலஜலம் விடுதல் பாயுருவின் வியாபாரமாம்; ஆநந்தித்தல் உபஸ்தத்தின் வியாபாரமாம். (71)

வினு:—**அவற்றிற் கதிதேவதைகளேவை ?**

---

(இ - ள்.) (அக்கர்மேந்திரியங்களுக்கு முறையே), அங்கி - அக்கினியும், மகபதி - (வேள்வித்தலைவனென்னும்) இந்திரனும், இரவியுடன் - சூரியனும், மிருத்யு - யமனும், பிரசாபதி - பிரஜாபதியும், தெய்வம் - அதிதேவதை களாவர், (அவ்விந்திரியங்களுக்கு), வாய் முதலாங்கோளகங்கள் - வாய் முத லாகவுள்ள கோளகங்கள், தானம் - இடமாம், இங்கு-இவ்விடத்து, இவையுள் - (அந்தக்கரண முதலிய) இவற்றுள், உட்கரணம் - அந்தக்கரணம் (நான்கு), இருவகையிந்திரியம் - இருவகையாய இந்திந்திரியங்கள் (ஞானேந்திரியமைந்து, கர்மேந்திரியமைந்து), என்னவரு - என்று கூறப்பட்டு வருகின்ற, பதினன் கும் - (அகக்கரணம் - புறக்கணமென்னும்) இப் பதினன்கும், ஆத்தி யான்மிகமாம் - ஆத்தியாத்மிகமாம், தங்கும்-(உடம்பினுள்) அடங்கியுள்ள, இவற் றுறுவிடயம் - இவற்றிற்குப் பொருந்திய விஷயங்கள், ஆதிபௌதிகமாம் - ஆதிபௌதிகமாம், தகும் - தகுதிவாய்ந்த, அதிதேவதை - அதிதேவதைகள், ஆதிதெய்வீகமாம் - ஆதிதெய்வீகமாம், இப்புங்கவரே - இவ்வதிதேவதைகளே, விராட்புருடற்கு - விராட்புருஷனுக்கு, இந்திரியம் - இந்திரியங்களாவர், அது - (அதிதேவதைகளாகிய) அவ்விந்திரியம், பொன் கருப்பற்கு - இரணியகருப்ப னுக்கு, மெய் - சரீரமாம், அது - அந்தச்சரீரம், (தமோ ரூபத்தால்), அந்தரியா மிக்கு - அந்தரியாமிக்கு, மறைப்பாம் - ஆவரணமாம், (எ - று). 72



**73.** நின்றிதயந் தனையடைந்து பிராணனுசு வாச நிசுவாச மியற் றுமபா னன்குதத்தி னுற்றுச், சென்றெழிய மலசலங்க ளொழித்தலுறுஞ் சமானன் சேர்ந்துந்தி யன்னரச முறுப்பனைத்து ம் பகுக்கு, மேன்றுமுதா னன்களமுற் றுற்காரம் புரியு மிருந்தங்க மெங்கும்வியா னன்பரிக்கு முடம்பைக், குன்றுதலி ஞகன்சோம் பாவித்தல் விளைக்குங் கூர்மனல் விக்கலோடு தேக்குவரு மன்றே.

---

விடை:—வாக்கிற்கு அக்கினி அதிதேவதையாம்; பாதத்திற்கு இந்திரன் அதிதேவதையாம்; பாணிக்குச் சூரியன் அதிதேவதையாம்; பாயுருவிற்கு மிருத் தியு அதிதேவதையாம்; உபஸ்தத்திற்குப் பிரஜாபதி அதிதேவதையாம்.

வினு:—**இவற்றிற்கு ஸ்தானங்களேவை ?**

விடை:—வாக்கிற்கு ஸ்தானம் வாயாம்; பாதத்திற்கு ஸ்தானம் காலாம்; பாணிக்கு ஸ்தானம் கையாம்; பாயுருவிற்கு ஸ்தானம் குதமாம்; உபஸ்தத்திற்கு ஸ்தானம் குய்யமாம்.

**ஆத்தியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதி தெய்வீகம்.**

வினு:—**முற்கூறிய இந்திரியம், விஷயம், அதிதேவதை யென்பனவற் றுள், ஆத்தியாத்மிகம் எவை? ஆதிபௌதிகம் எவை? ஆதிதெய்வீகம் எவை?**

விடை:—1. அந்தக்கரண சதுஷ்டயம், ஞானேந்திரிய பஞ்சகம், கர்மேந் திரிய பஞ்சகமென்னும் இப்பதினன்கும் ஆத்தியாத்மிகமாம்;

2. அவற்றின் விஷயம் ஆதிபௌதிகமாம்;

3. அவற்றின் அதிதேவதைகள் ஆதிதெய்வீகமாம்.

(1) ஆத்மாவை யாசிரயித்துள்ள ஸ்தூலசூட்சுமசரீரம் அத்தியான்ம (ஆத்தி யாத்மிக)ம் என்றும், (2) ஆத்மாவினது சரீராதி சங்காதங்களுக்கு வேறாய்ச் சட்சு இந்திரியத்திற்கு விஷயமாயிருப்பது அதிபூத (ஆதிபௌதிக)ம் என்றும், (3) ஆத்மாவினது சரீராதி சங்காதங்களுக்கு வேறாய்ச் சட்சு இந்திரியத்திற்கு விஷயமாகாதிருப்பது அதிதைவ(ஆதிதெய்வீக)ம் என்றும் கூறுவதுண்டு.

---

(இ - ள்.) (பிராணன் - அபானன் - சமானன் - உதானன் - வியானனென் னும் பிராண பஞ்சகத்துள்) பிராணன் - பிராணவாயு, இதயந்தனையடைந்து நின்று - இருதய ஸ்தானத்தைச்சேர்ந்து நின்று, உசுவாச நிசுவாசமியற்றும் - உசுவாசநிசுவாசங்களைச் செய்யும், அபானன் - அபானவாயு, குதத்தினுற்று - குதஸ்தானத்திலிருந்து, மலசலங்கள் - மலமூத்திரங்கள், சென்றெழிய - (வெளி யே) சென்று நீங்க, (அவற்றை), ஒழித்தலுறும் - ஒழிக்கும், சமானன் - சமான வாயு, உந்திசேர்ந்து - நாபிஸ்தானத்தையடைந்து (நின்று), அன்னரசம்-(உண்ட) அன்ன சாரத்தை, உறுப்பனைத்தும் - (கை - கால்முதலிய) அவயவமனைத்திற் கும், பகுக்கும்-பகுத்துக்கொடுக்கும், என்றும் - எப்போதும், உதானன் - உதான வாயு, களமுற்று - கண்ட ஸ்தானத்தைப் பொருந்தி (நின்று), உற்காரம்புரியும் - வாந்தி செய்விக்கும், வியானன் - வியானவாயு, அங்கமெங்குமிருந்து - அங்க (தேக)முற்றுமிருந்து, உடம்பைப்பரிக்கும் - தேகத்தைத்தாங்கி நிலைபெறச் செய்யும், (நாகன் - கூர்மன் - கிருகரன் - தேவதத்தன் - தனஞ்சயனென்னும் உபவாயுக்களுள்), குன்றுதலில் - கெடுதலில்லாத, நாகன் - நாகவாயு, சோம்பு - சோம்பலையும், ஆவித்தல் - கொட்டாவிவிடுதலையும், விளைக்கும் - உண்டாக்கும், கூர்மனல் - கூர்மவாயுவால், விக்கலொடு தேக்குவரும் - விக்கலும் ஏப்பமிடு தலும் உண்டாம், (எ - று). 73

இந்திரிய மூல சமன்வயம்.

வினா:—இந்திரியமூல சமன்வயத்தைக் கூறல்வேண்டும்.

விடை:—1. விராட்புருஷனுக்கு இந்து (சந்திரன்) முதலிய அதிதேவதைகள் இந்திரியங்களாம்;

2. இரணிய கருப்பனுக்கு அவ்விந்திரியங்கள் சரீரமாம்.

(அந்தக்கரணம் - ஞானேந்திரியம், கர்மேந்திரியமென்பன இரணியகருப்பனுக்குச் சரீரமாமென்பதுமுண்டு.)

3. அந்தரியாமிக்கு அச்சரீரம் தமோரூபத்தால் ஆவரணமாம். (72)

பிராண பஞ்சகம்.

வினா:—பிராண பஞ்சகமேவை?

விடை:—அவை 1. பிராணன், 2. அபானன், 3. சமானன், 4. உதானன், 5. வியானன் என்பனவாம்.

பிராணன்.

1. இருதய ஸ்தானத்தையடைந்து நின்று உசுவாச நிசுவாசங்களைச் செய்வது பிராணவாயுமாம்; (வெளிவாயு உள்ளே பிரவேசித்தல் உசுவாசமாம்; உள்ளிருக்கும் வாயுவை வெளியே விடுதல் நிசுவாசமாம்.)

அபானன்.

2. குத ஸ்தானத்திலிருந்து மல மூத்திரங்களைச் சென்றொழியும்படி செய்வது அபான வாயுவாம்;

சமானன்.

3. நாபி ஸ்தானத்திலிருந்து உண்ட அன்ன சாரத்தைச் சர்வாங்கத்திற்கும் பகுத்துக் கொடுப்பது சமான வாயுவாம்;

உதானன்.

4. கண்ட ஸ்தானத்திலிருந்து வாந்தி செய்விப்பது உதான வாயுவாம்;

வியானன்.

5 சர்வாங்கத்திலுமிருந்து தேகத்தை நிலைபெறச் செய்வது வியான வாயுவாம்.

உப வாயுக்கள்.

வினா:—உப வாயுக்களேவை?

விடை:—அவை 1. நாகன், 2. கூர்மன், 3. கிருகரன், 4. தேவதத்தன், 5. தனஞ்சயன் என்பனவாம்.

நாகன்.

1. சோம்பலையும் கொட்டாவியையும் உண்டாக்குவது நாக வாயுவாம்;

கூர்மன்.

2. விக்கலையும் ஏப்பத்தையும் உண்டாக்குவது கூர்ம வாயுவாம்; (73)



**74.** தும்மலுட னிருமல்வருங் கிருகரனா னகுதல் சோல்லுதலாந்
தேவதத்த னாற்சோக மோக, மிம்மைதருந் தனஞ்சயனத் தனஞ்சய
ஞம் வாயு விறந்தவைந்து நாள்காறு மிருந்துநனி வீங்கி, மெய்ம்முழு
தும் வேடித்திடச்சேய் தகலுநா காதி விளம்புபுற வாயுக்க டாங்
கருமேந் தியங்க, டம்மைமிக வியக்கலுறும் பிராணாதி வாயுத் தாமியக்
கும் விடாமன்னா னேந்திரியங் களையே.

கிருகான்.

3. தும்மலையும் இருமலையும் உண்டாக்குவது கிருகர வாயுவாம்;

தேவதத்தன்.

4. சிரித்தலையும் வசனித்தலையும் உண்டாக்குவது தேவதத்த வாயுவாம்;

தனஞ்சயன்.

5. சோகத்தையும் மோகத்தையும் உண்டாக்குவது தனஞ்சய வாயுவாம்.

அத் தனஞ்சய வாயு சரீரத்தினின்றும் பிராணன் நீங்கியபின்னும் அச்சரீரத்தில் ஐந்து நாளிருந்து அதனை வீங்கச்செய்து அதன் தலையை வெடிக்கப் பண்ணிப்போவதாம்.

பிராணாதிவாயுக்கள் ஆப்பியந்தர (உள்) வாயு என்றும், நாகாதி வாயுக்கள் பாகிய (வெளி) வாயு என்றும் கூறப்படுவனவாம்.

1. நாகன் - கூர்மன் - கிருகரன் - தேவதத்தன் - தனஞ்சயனென்னும் பாகிய வாயு வைந்தும் வாக்கு - பாதம் - பாணி - பாயுரு - உபஸ்தமென்னும் கர்மேந்திரிய மைந்தையும் இயங்கச்செய்வனவாம்.

2. பிராணன் - அபானன் - சமானன் - உதானன் - வியானனென்னும் ஆப்பியந்தர வாயு வைந்தும் சுரோத்திரம் - துவக்கு - சட்சு - சிங்குவை - கிராணமென்னும் ஞானேந்திரிய மைந்தையும் இயங்கச்செய்வனவாம். (74)

(இ - ள்.) கிருகரனால் - கிருகரவாயுவால், தும்மலுடனிருமல் வரும் - தும்மலும் இருமலும் உண்டாவனவாம், தேவதத்தனால் - தேவதத்தவாயுவால், நகுதல்சொல்லுதலாம் - சிரித்தலும் பேசுதலுமுண்டாவனவாம், தனஞ்சயன் - தனஞ்சயவாயு, இம்மை - இப்பிறப்பின்கண், (பிறப்புண்டாதற்கேதுவாய), சோகமோகம்தரும் - சோகத்தையும் மோகத்தையும் தருவதாம், அத்தனஞ்சயனும்வாயு - அந்தத் தனஞ்சயனென்னும் வாயு, இறந்தவைந்துநாள் காறும் - (பிராணவாயு) நீங்கிய(பின்) ஐந்து நாள் வரைக்கும், இருந்து - (உடம்பில்) இருந்து, மெய்ம்முழுதும் - உடம்பு முழுவதையும், நனிவீங்கி - மிகவும் வீங்க(ப் பண்ணி), வெடித்திடச்செய்து - (தலையை) வெடிக்கச்செய்து, அகலும் - நீங்குவதாம், புறவாயுக்கள் - பாகிய வாயுக்கள் (என்று), விளம்பு - சொல்லப்படுகின்ற, நாகாதி - நாகன் முதலிய வாயுக்கள், கருமேந்திரியங்கள் தம்மை - வாக்காதி கர்மேந்திரியங்களை, மிக இயக்கலுறும் - மிகுதியாக இயங்கச்செய்வனவாம், பிராணாதிவாயு - (ஆந்தரவாயுக்கள் என்று சொல்லப்படுகின்ற) பிராணன் முதலிய வாயுக்கள், ஞானேந்திரியங்களை - சுரோத்திராதி ஞானேந்திரியங்களை, விடாமல் இயக்கும் - தவிர்தலின்றி யியங்கச்செய்வனவாம், (எ - று). தாம் இரண்டும் - அசை.

74

**75.** சாற்றின்வயி ரம்பன்முக் கியன்பிரபஞ் சனனந் தரியாமி யோடு மகாப் பிராணனெனும் பெயர்கோள், காற்றிவைகள் சீவசம் பந்தமா யேயுட் கரணங்க ளியக்கியிடு மண்முதலைந் திற்கும், பாற்றிகழும் வியா பாரம் பொறைபிண்டீ கரணம் பாகமொடு விரகமிடங் கொடையாகுந் தரும, மாற்றலுறு திண்மைநெகிழ் வழற்சிபரி வெளியா மயனொடரி யரனீசன் சதாசிவன்றே வதைகள்.

---

**ஜீவசம்பந்த வாயுக்கள்.**

**வினா:—ஜீவசம்பந்த வாயுக்கள் எவை ?**

*விடை:—அவை 1. வைரம்பன், 2. முக்கியன், 3. பிரபஞ்சனன், 4. அந்தர்யாமி, 5. மகாப்பிராணனென்பனவாம்.*

*வைரம்பன் - முக்கியன் - பிரபஞ்சனன் - அந்தர்யாமி - மகாப்பிராண னென்னுமிவை ஜீவசம்பந்த முடையனவா யிருந்து உள்ளம் - மனம் - புத்தி - சித்தம் - அகங்காரமென்னு முட்கரணங்களை யியங்கச் செய்வனவாம்.*

*(இயங்கச்செய்தல் - அசையச்செய்தல்). (உள்ளம் ஆகாயத்தின் காரியமாய் அந்தக்கரணத்துள் ஒன்றாயிருப்பதா மென்பதும், உபவாயுக்களும் ஜீவசம்பந்த வாயுக்களும் பிராணவாயுவின் வியாபார பேதங்களாமாகலின் அவை பிராண வாயுவில் அந்தர்க்கதமா மென்பதும் இங்குணர்தற் பாலனவாம்.)*

**பஞ்ச பூதங்கள்.**

**வினா:—பஞ்சபூதங்க ளெவை ?**

*விடை:—அவை 1. பிருதிவி, 2. அப்பு, 3. தேயு, 4. வாயு, 5. ஆகாய மென்பனவாம்.*

**வினா:—அவற்றின் வியாபாரங்க ளெவை ?**

*விடை:—பிருதிவிக்கு வியாபாரம் தாங்குதலாம்; அப்புவிற்கு வியாபாரம் திரட்டுதலாம்; தேயுவிற்கு வியாபாரம் பாகஞ்செய்தலாம்; வாயுவிற்கு வியாபாரம் உலாவலாம், ஆகாயத்திற்கு வியாபாரம் இடங்கொடுத்தலாம்.*

---

(இ - ள்.) சாற்றின் - (இன்னும் வாயுக்களின் வகையைக்) கூறுமிடத்து, வயிரம்பன் - வைரம்பனும், முக்கியன் - முக்கியனும், பிரபஞ்சனன்-பிரபஞ்சன னும், அந்தரியாமியொடு - அந்தரியாமியும், மகாப்பிராணன் - மகாப்பிராணனும், எனும்பெயர்கொள் - என்னும் பெயர்களைக் கொண்டுள்ள, காற்றிவைகள் - வாயுக்களாகிய இவ்வைந்தும், சீவசம்பந்தமாய் - ஜீவனோடு சம்பந்தமுள்ளனவாய் (இருந்து), உட்கரணங்கள் - (மனமுதலிய) அந்தக்கரணங்களை, இயக்கியிடும்- இயங்கச்செய்வனவாம், மண்முதலைந்திற்கும் - பிருதிவி - அப்பு-தேயு - வாயு - ஆகாயமென்னும் பூதங்களைந்திற்கும், பால்-(அவற்றின்) இடமாக(ப்பொருந்தி), திகழும் - விளங்குகின்ற, வியாபாரம் - வியாபாரங்கள் (முறையே), பொறை - (தாரணையென்னும்) தாங்கலும், பிண்டீகரணம் - திரட்டுதலும், பாகமொடு - பாகஞ்செய்தலும், விரகம் - உலாவலும், இடம்கொடை - இடங்கொடுத்தலும், ஆகும்-ஆம், தருமம் - (அப்பூதங்களின்) தருமங்கள், (முறையே), ஆற்றலுறு - நிலைபெற்ற, திண்மை - கடினமும், நெகிழ்வு - நெகிழ்ச்சியும், அழற்சி-வெம்மை யும், பரி(சம்) - பரிசமும், வெளி - வெளியும், ஆம்-ஆம், (அப்பூதங்களுக்கு), அயனொடு - பிரமனும், அரி-விஷ்ணுவும், அரன்-உருத்திரனும், ஈசன்-மகேசுர னும், சதாசிவன் - சதாசிவனும், தேவதைகள் - அதிதேவதைகள் (ஆவர்), (எ - று). எ - அசை. (விரகமென்பதன் பொருள் உலர்த்தலுமாம்.) 75



**76.** கந்தமுத லாயினவே குணங்களவை தம்முட் ககனத்திற் கொலியொன்றே வளிக்கிரண்டூ றுடனே, யந்தழலுக் கொளியொடுமூன் றறற்கிரத மொடுநான் கைந்துமண மொடுபுவிக்கென் றறிகதிரி புடிதான், முந்துஞா துருஞான ஞேயமா மவற்றுண் மூலவகங் காரஞ்சேர் சீவசை தன்னிய, நந்துஞா துருமனத்திற் கதுவறிவு ஞான நவின்றபௌ திக விடய ஞேயமென வறியே.

---

**வினா:—அவற்றின் தருமங்களெவை ?**

*விடை:—பிருதிவியின் தருமம் திண்மையாம்; அப்புவின் தருமம் நெகிழ்ச்சி யாம்; தேயுவின் தருமம் வெம்மையாம்; வாயுவின் தருமம் பரிசமாம்; ஆகா யத்தின் தருமம் வெளியாம்.*

**வினா:—அவற்றின் அதிதேவதைகளெவை ?**

*விடை:—பிருதிவிக்கு அதிதேவதை பிரம்மனும்; அப்புவிற்கு அதி தேவதை விஷ்ணுவாம்; தேயுவிற்கு அதிதேவதை உருத்திரனும்; வாயுவிற்கு அதிதேவதை மகேசுரனும்; ஆகாயத்திற்கு அதிதேவதை சதாசிவனும்.* (75)

**வினா: —அவற்றின் குணங்களெவை ?**

*விடை:—பிருதிவியின் குணம் கந்தமாம்; அப்புவின் குணம் ரசமாம்; தேயுவின் குணம் ரூபமாம்; வாயுவின் குணம் பரிசமாம்; ஆகாயத்தின் குணம் சத்தமாம்.*

*அவற்றுள், 1. ஆகாயம் (பிரதித்தொனி ரூபமான) சத்தகுணமொன்று மாத்திர முடையதாம்;*

*2. வாயு (விஸ் என்னும்) சத்தமும், (வெப்பமும் தட்பமுமின்றிய) ஸ்பரி சமுமாகிய இரண்டு குணமுடையதாம்;*

---

(இ - ள்.) கந்தமுதலாயினவே - கந்தம் - ரசம்-ரூபம் - பரிசம்-சத்தம் என் பனவே, (முறையே அப்பிருதிவி முதலிய பூதங்களின்), குணங்கள் - குணங் களாம், அவைதம்முள் - அக்குணங்களுள், ககனத்திற்கு - ஆகாயத்திற்கு, ஒலி யொன்றே - சத்தமொன்றேயாம், வளிக்கு - வாயுவிற்கு, ஊறுடனே - பரிசத் தோடு, இரண்டு - (சத்தமும், பரிசமுமென) இரண்டாம், அம்தழலுக்கு - அழ குடையதேயுவிற்கு, ஒளியொடு - ரூபத்தோடு, மூன்று - (சத்தமும், பரிசமும், ரூபமுமென) மூன்றும், அறற்கு - அப்புவிற்கு, இரதமொடு - இரசத்தோடு, நான்கு - (சத்தமும், பரிசமும், ரூபமும், ரசமுமென) நான்காம், புவிக்கு - பிரு திவிக்கு, மணமொடு - கந்தத்தோடு, ஐந்து - (சப்தமும், பரிசமும், ரூபமும், ரசமும், கந்தமுமென) ஐந்தாம், என்றுஅறிக - என்று (அப்பூதங்களின் குணங் களை நீ) அறிவாயாக, திரிபுடிதான்-திரிபுடியென்பது, முந்து - தலைமைவாய்ந்த, ஞாதுரு - ஞாதுருவும், ஞானம் - ஞானமும், ஞேயம் - ஞேயமும் (என), ஆம்-மூன்றும், அவற்றுள்-அம்மூன்றனுள், மூலவகங்காரம் - மூலாங்காரத்தில், சேர் - பிரதிபிம்பித்துள்ள, சீவசைதன்யம் - சைதன்னியரூபஜீவன், நந்து - (தத் துவஞானத்தால்) நாசமாதற்குரிய, ஞாதுரு - ஞாதுருவாம், மனத்திற்கதுவு - மனத்திற்பிரதிபிம்பித்துள்ள, அறிவு-சைதன்னியம், ஞானம்-ஞானமாம், நவின்ற - (முன்னர்க்) கூறிய, பௌதிகவிடயம் - (பூதங்களின் காரியமானகடாதி) பௌதிகவிஷயங்கள், ஞேயம் - ஞேயமாம், என-என்று, அறி-(திரிபுடியை நீ) அறியக்கடவாய்,(எ -று). 76

3. தேயு (புகு புகு என்னும்) சத்தமும், (உஷ்ண) ஸ்பரிசமும், (விளக்கமான) வெண்மை ரூபமுமாகிய மூன்று குணமுடையதாம்;

4. அப்பு (புளு புளு என்னும்) சத்தமும், (சீத) ஸ்பரிசமும், (விளக்கமின்றிய) வெண்மை ரூபமும், மதுர ரசமுமாகிய நான்கு குணமுடையதாம்;

5. பிருதிவி (கடகட என்னும்) சத்தமும், (கடின) ஸ்பரிசமும், (நீலாதி) சித்திர ரூபமும், (மதுராதி) நாநா ரசமும், (நற்கந்தம் - துர்க்கந்த மென்னும் இருவகை) கந்தமும் ஆகிய ஐந்து குணமுடையதாம்.

(இவற்றுள் ஆகாயத்திற்குச் சத்தமும், வாயுவிற்கு ஸ்பரிசமும், தேயுவிற்கு ரூபமும், அப்புவிற்கு ரசமும், பிருதிவிக்குக் கந்தமும் பிரதான குணங்களாமென்பதிங் குணர்தற் பாற்றும்.)

திரிபுடி.

வினு:—திரிபுடி எவை?

விடை:—அவை ஞாதுரு (காண்பான்), ஞானம் (காட்சி), ஞேயம் (காணப்படும் பொருள்) என்பனவாம்.

ஞாதுரு.

அவற்றுள், 1. மூலாங்காரத்திற் பிரதிபிம்பித்துள்ள ஜீவ சைதன்னியம் ஞாதுருவாம்;

ஞானம்.

2. மனத்திற் பிரதிபிம்பித்துள்ள சைதன்னியம் ஞானமாம்;

ஞேயம்

3. பூத பௌதிக வடிவ விஷயங்கள் ஞேயமாம். (இங்குப் பூதபௌதிக விஷயாவச்சின்ன சைதன்னியத்தை ஞேய மென்று கொள்ளுதல் வேண்டும். விஷயாவச்சின்ன சைதன்னியம் - விஷயத்தோடு கூடிய அறிவு.)

ஞாதுரு - ஞானம் - ஞேய மென்னுமிம்மூன்று சைதன்னியமும் மூலாங்காரம், மனம், பூதபௌதிக மென்னும் உபாதிகளை யுடையனவாய், இவற்றிற்கு அதிஷ்டானமாயுள்ள சேதன வடிவமாகவே யிருப்பனவாம்.

திரிபுடியென்பதன் பொருள் (தென்னங்காய் போல) மூன்றுபுறமுடையதென்பதாம்; அஃதாவது பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) சம்பந்தமுள்ள மூன்று பொருள்களாம்; அவை ஞாதுரு-ஞானம்-ஞேயம், அல்லது தியாதா-தியானம்-தியேயமென்பனவாம். இவற்றின் விரிவை (யாமெழுதியுள்ள) "மெய்வாய் கண்ணொடு" என்னும் உபநிடதச்செய்யுளினுரையிற் காண்க.

"பரமாத்மாவினின்று முண்டாய புத்தியை உபாதியாகவுடைய ஜீவவடிவ விஞ்ஞானமயகோசம் ஞாதாவாம்; மனோமயகோசமாகிய மனதிற் பிரதிபிம்பத்தையடைந்த மனோமயசப்தத்தின் வாச்சியசைதன்னியம் ஞானமாம்; சப்த ஸ்பரிசாதி ஞேயம் பிரசித்தமாம்" என்று பஞ்சதசி யோகாநந்த உரையில் எழுதப்பட்டிருப்பது இங்குணர்தற்பாலதாம். (76)



**77.** ஈங்குமன மிருபத்து நான்காவ தாகு மிருபத்தைந் தாவதுதான்
மூலவகங் கார, மாங்கதனை யடைதலுறுஞ் சிதாபாச சீவ னறையுமிரு
பத்தாறு மவன்மாயை மருவு, மோங்கொளியா மீசனிரு பத்தேழா
மவனவ் வுயிர்முதலாந் துரியனிரு பத்தேட்டா மவனு, நீங்கலரு
மீசனதிட் டாத்துருவாம் பிரம நிகழ்த்தினிரு பத்தோன்ப தாவதுவா
மன்றே.

---

தத்துவங்கள்.

வினு:—தத்துவங்கள் எத்தனையாம்.

விடை:—அவை இருபத்தொன்பதாம். பூத பஞ்சகம், ஞானேந்திரிய பஞ்சகம், கருமேந்திரிய பஞ்சகம், பிராணாதி பஞ்சகம், அந்தக்கரண சதுஷ்டயமென்பவற்றின் தொகை யிருபத்து நான்காம்; இவற்றுள், மனம் இருபத்து நான்காவது தத்துவமாக விருப்பதாம்;

மூலாங்காரம் இருபத்தைந்தாவது தத்துவமாம்;

அம்மூலாங்காரத்திற் பிரதிபிம்பித்துள்ள சிதாபாசனென்னும் ஜீவன் இருபத்தாறுவது தத்துவமாம்;

மாயாவச்சின்ன (மாயையோடு கூடியுள்ள) ஈசுவரன் இருபத்தேழாவது தத்துவமாம்;

அகங்கார - ஜீவர்கட்கு அதிஷ்டானமாயுள்ள கூடஸ்தன் (ஆத்மா) இருபத்தெட்டாவது தத்துவமாம்;

மாயா - ஈசுவரர்க்கு அதிஷ்டானமாயுள்ள பிரஹ்மம் இருபத்தொன்பதாவது தத்துவமாம்.

(இங்குத் தத்துவ மென்பதன்பொருள் பதார்த்தம் அஃதாவது பதப்பொருள் என்பதாம்.) (77)

---

(இ - ள்.) ஈங்கு - இவ்விடத்து, (பூதபஞ்சகம், ஞானேந்திரியபஞ்சகம், கர்மேந்திரியபஞ்சகம், பிராணாதிபஞ்சகம், அந்தக்கரண சதுஷ்டயமெனக் கூறியவற்றுள்), மனம் - மனம், இருபத்து நான்காவதாகும் - இருபத்து நான்காவது தத்துவமாம், மூலவகங்காரம் - மூலாங்காரம், இருபத்தைந்தாவது - இருபத்தைந்தாவது தத்துவமாம், அதனை - அம்மூலாங்காரத்தை, அடைதலுறும் - (பிரதிபிம்பவடிவமாக) அடைந்துள்ள, சிதாபாசசீவன் - ஜீவசிதாபாசன், அறையும் - சொல்லப்படுகின்ற, இருபத்தாறுமவன் - இருபத்தாறுவது தத்துவமாவன், மாயைமருவும் - மாயோபாதிகனாய, ஓங்குமொளியாமீசன் - உயர்ந்த சித்பிரகாசவடிவ ஈசுவரன், இருபத்தேழாமவன் - இருபத்தேழாவது தத்துவமாவன், அவ்வுயிர் - அந்தச் சீவசிதாபாசனுக்கு, முதலாந்துரியன் - அதிஷ்டானமான கூடஸ்தன், இருபத்தெட்டாமவனும் - இருபத்தெட்டாவது தத்துவமாவன், நீங்கலரும் - (யாண்டும்) நீங்குதவில்லாத, ஈசன் - ஈசுவரனுக்கு, அதிட்டாத்துருவாம் பிரமம் - அதிஷ்டானமான பிரஹ்மம், நிகழ்த்தின் - கூறுமிடத்து, இருபத்தொன்பதாவதுவாம் - இருபத்தொன்பதாவது தத்துவமாம், (எ - று). தான் - ஆங்கு - அன்று - ஏ - அசைகள்.

**78.** தெரித்தகா ரியத்தோற்ற மிருவகையாங் கிரம சிருட்டியுக பற்சிருட்டி யெனமூலப் பகுதி, விரித்தமக தத்வமக முந்தன்மாத் திரையாம் விளங்குசத்தப் பிரகிருதி யாற்பஞ்ச பூத, முரைத்தவற்ருற் பிரமாண்ட பிண்டமுத லாய வுலகுதயந் தான்கிரம சிருட்டிநிறை கடலின், மருத்துவசத் தலையாதி போற்சிவத்தின் மாயா மயநாம வுருவநிகழ் வாமுகபற் சிருட்டி.

---

### சிருஷ்டி.

வினா:—சிருஷ்டி (படைப்பு) எத்தனை வகையாம் ?

விடை:—அது கிரமசிருட்டி, யுகபத் சிருட்டியென இருவகைத்தாம்; அவற்றுள்,

### கிரம சிருஷ்டி.

1. மூலப் பிரகிருதியினின்றும் மகத்தத்துவமுண்டாயிற்று; அம்மகத் தத்துவத்தினின்றும் அகங்காரதத்துவ முண்டாயிற்று; அவ்வகங்கார தத்துவத்தினின்றும் தன் மாத்திரையென்னும் சூக்கும பூதபஞ்சக முண்டாயினவென்புழி, மகத்தத்துவமும் - அகங்காரமும் - சூக்கும பூதபஞ்சகமும் சத்தபபிரகிருதி யென்று கூறப்படுவனவாம். இச் சத்தப் பிரகிருதியுள் சூக்கும பூத பஞ்சகத்தினின்றும் ஸ்தூல பஞ்சபூத முண்டாயின; அந்த ஸ்தூல பூதங்களினின்றும் பிரமாண்டங்கள் பிண்டங்கள் (உடம்புகள்) முதலியன உண்டாயினவென்பது கிரம சிருஷ்டியாம்.

---

(இ - ள்.) தெரித்த - (முன்னர்க்) கூறிய, காரியத்தோற்றம் - காரியோற்பத்தி, கிரம சிருட்டி யுகபற்சிருட்டியென - கிரம சிருட்டியும் யுகபத் சிருஷ்டியுமென்று, இருவகையாம் - இரண்டு பிரகாரமாம், (அவற்றுள்), மூலப்பகுதி - மூலப்பிரகிருதியில், (அம்மூலப் பிரகிருதியினின்றும்), விரிந்த - தோன்றிய, மகதத்வம் - மகத்தத்துவமும், அகமும் - (அம்மகத்தத்துவத்தினிறும் தோன்றிய மூல) அகங்காரமும், தன்மாத்திரை - (அவ்வகங்காரத்தினின்றும் தோன்றிய பஞ்ச) தன்மாத்திரைகளும், ஆம் - இருப்பனவாம், விளங்கு சத்தப்பிரகிருதியால் - (மகத்தத்துவம்-மூலாங்காரம் - பஞ்சதன்மாத்திரை யென) விளங்குகின்ற (இந்தச்) சத்தப்பிரகிருதியுள், (பஞ்ச தன்மாத்திரையினின்றும்), பஞ்சபூதம் - (ஸ்தூல) பஞ்சபூதம் (உண்டாவனவாம்), உரைத்த அவற்ருல் - கூறிய அப்பூதங்களினின்றும், பிரமாண்ட பிண்ட முதலாய - பிரமாண்ட சரீர முதலாகவுள்ள, உலகுதயந்தான் - உலகமுற்பத்தியாதலே, கிரமசிருட்டி - கிரம சிருட்டியாம், நிறைகடலில் - (அலையில்லாது நீர்) நிறைந்துள்ள கடலின்கண், (ஏககாலத்தில்), மருத்துவசத்து-வாயுவின் வசத்தினுல், அலையாதிபோல் - அலை முதலியன (உற்பத்தியாதல்) போல, சிவத்தில் - (சச்சிதாநந்தப்) பிரஹ்மத்தின்கண், (ஏககாலத்தில் மாயையின் வசத்தால்), மாயாமய நாம வுருவநிகழ்வு - மாயாமயமாயுள்ள நாமரூப வடிவ வுலக முற்பத்தியாதலே, உகபற் சிருட்டியாம்-யுகபத் சிருட்டியாம், (எ - று). விரிந்த என்பது எதுகை நோக்கி விரித்தவென்த் திரிந்து நின்றது. பஞ்சதன்மாத்திரை - சூட்சும பூதம்.





---

மகத்தத்துவம், அகங்கார தத்துவம், தன்மாத்திரை யென்னும் சூக்கும பூத பஞ்சகமென்னும் சத்தப்பிரதிருதி தத்தமக்கு முதலாய பொருளை நோக்க விகிருதியாதலும், தங்கட்டோன்றுவனவற்றை நோக்கப் பிரகிருதி யாதலுமுடையனவாம். பிரகிருதி - காரணம்; விகிருதி - காரியம்.

### யுகபத் சிருஷ்டி.

2. நிஸ்தரங்க (அலையின்றிய) சமுத்திரத்தில் வாயுவின் வசத்தால் ஏககாலத்தில் அலை நுரை முதலியன உண்டாதல் போல, சச்சிதாநந்த வடிவப் பிரஹ்மத்தில் மாயையின் வசத்தால் ஏககாலத்தில் (பிரமாண்ட பிண்ட முதலிய வடிவமாயுள்ள) நாமரூப வடிவ ஜகத்துண்டாயிற்றென்பது யுகபத் சிருஷ்டியாம்.

(விதையினின்றும் முளையும், முளையினின்றும் செடியு முண்டாதல் போல, பிரகிருதியினின்றும் மகத்தத்துவமும், மகத்தத்துவத்தினின்றும் அகங்காரதத்துவமும், அகங்கார தத்துவத்தினின்றும் சூக்கும பூதங்களும், சூக்கும பூதங்களினின்றும் ஸ்தூல பூதங்களும், ஸ்தூல பூதங்களினின்றும் பிரமாண்ட - புவன - சரீர - கடாதிப் பிரபஞ்சமு முண்டாயின வென்பது கிரம சிருஷ்டியாம்; கடலில் காற்றின் வசத்தால் ஏககாலத்தில் கிரமமின்றி அலை நுரை முதலியன உண்டாதல் போல, சிவத்தில் மாயையின் வசத்தால் ஏககாலத்தில் கிரமமின்றி நாமரூப வடிவ ஜகத்துண்டாயிற்றென்பது யுகபத் சிருஷ்டியாம்.) இவ் விருவகை சிருஷ்டியையும் சுருதி கூறுதலின், இவ்விரண்டும் அங்கீகரிக்கத் தக்கனவாம்.

(1.) மகத்தத்துவம் அகங்காரதத்துவ முதலியன காரண காரியக்கிரமமாக ஒன்றன்பின் மற்றொன்றுதோன்றுதல் கிரம சிருஷ்டியாம்; (2) அவையனைத்தும் காரண காரியக்கிரமமின்றி ஒரே காலத்தில் தோன்றுதல் யுகபத் சிருஷ்டியாம்; இவற்றுள், முன்னது சிருஷ்டி திருஷ்டி யென்றும், பின்னது திருஷ்டி சிருஷ்டி யென்றும் கூறப்படும். ஞானமுண்டாம் போதே ஞேயமுமுண்டாகின்றதென்பது திருஷ்டி சிருஷ்டி யென்பதன் பொருளாம்.

“சகல பதார்த்தங்களும் சாட்சாத் அவித்தையின் காரியங்களாம்; கிளிஞ்சில் வெள்ளிபோன்று அல்லது சொப்பனம் போன்று அவித்தையின் விருத்தி உபகித சாட்சியினுல் அவற்றின் பிரகாசமுண்டாகின்றது; ஆதலால், சகல பதார்த்தங்களும் சாட்சிபாஸியங்களாம். அவித்தையின் ஞானுகார ஞேயாகார பரிணுமங்கள் ஒரே காலத்திலுண்டாகின்றன; கூடவே நஷ்டமாகின்றன; ஆதலால், எப்போது பதார்த்தம்தோன்றுகின்றதோ அப்போதேதோற்றத்திற்குவிஷயமான பதார்த்த முண்டாகின்றது; வேறு காலத்திலுண்டாவதில்லை. இதனையே திருஷ்டி சிருஷ்டிவாதமென்பார்” என்று விசாரசாகரம் ஆருவது தரங்கத்திற் கூறுவதிங் குணர்தற்பாலதாம். (78)

**79.** சுருதிசித்த மாதலினா லிவையுடன்பா டாகுந் தூயபரப் பிரமமாம் விகாரமிலா விறையாற், றருதலெங்ஙன் காரியங்கள் சடப் பகுதி யென்னிற் றாளிலாக் கதிர்ச்சிலையி லிச்சையிலா தெழுந்த, பரிதி யினா லழல்வரல்போற் பரசிவனான் மூலப் பகுதியிடை மகதாதி காரி யங்கள் வரற்குக், கருதின்முரா ணிலையாகு மெனப்புகல்வ ரறிஞர் காரி யங்க டோற்றுதனால் வகையவையீண் டுரைப்பாம்.

---

சிருஷ்டி திருஷ்டாந்தம்.

வினா:—(மறைபடாத) சுத்தப்பிரஹ்ம சொரூபமாயுள்ள ஈசுவரன் யாதொரு விகாரமுமில்லாதவனா யிருத்தலின், அவனால் ஜடவடிவமாயுள்ள மூலப் பிரகிருதியினின்றும் மகத் தத்துவ முதலிய காரியங்களுண்டாதல் எங்ஙனமாம்?

விடை:—(இதனைச் செய்தல் வேண்டு மென்னும்) இச்சா யத்தன மில்லாது உதயமான சூரியனால் (இவ்வாறுதல் வேண்டு மென்னும்) பிரயத்தன முதலியன வில்லாத சூரிய காந்தக் கல்லினின்றும் அக்கினி உண்டாதல் போல, பரமசிவனால் மூலப் பிரகிருதியினின்றும் மகத்தத்துவ முதலிய காரியங்க ளுண் டாவனவாம்; அதனால், மூலப் பிரகிருதியினின்றும் மகத் தத்துவ முதலிய காரியங்கள் ஈசுவரனாலுண்டாதற்கு யாதொரு விரோதமு மில்லையாம். (79)

---

(இ - ள்.) இவை - (கிரம சிருஷ்டி - யுகபத் சிருஷ்டியென்னும்) இவ் விரண்டும், சுருதி சித்தம் - வேதத்தால் (பிரசித்தமாகக்) கூறப்பட்டனவாம், ஆதலினால் - ஆகையால், உடன்பாடாகும் - அங்கீகரிக்கத்தக்கனவாம், தூய - பரிசுத்தமாய் மறைவில்லாதுள்ள, பரப்பிரமமாம் - பரப் பிரஹ்ம சொரூபமான, விகாரமிலா இறையால் - விகாரமில்லாத பரமேசுவரனால், சடப்பகுதி - ஜடரூபப்பிரகிருதியினின்றும், காரியங்கள் - (மகத்தத்துவ முதலிய) காரியங்கள், தருதல் - உண்டாதல், எங்ஙன் என்னில் - எவ்வாறு மென்று வினாவுவாயாயின், இச்சையிலாதெழுந்த - இச்சை (முதலியன) இல்லாது உதயமான, பரிதியினால் - சூரியனால், தாளிலாத-முயற்சி (முதலியன) இல்லாத, கதிர்ச்சிலையில் - சூரியகாந்தக் கல்லினின்றும், அழல்வரல் போல் - அக்கினியுண்டாதல்போல, பரசிவனால் - பரமேசுவரனால், மூலப்பகுதியிடை - மூலப்பிரகிருதியினின்றும், மகதாதிகாரியங்கள் வரற்கு - மகத்தத்துவ முதலியகாரியங்களுண்டாதற்கு, கருதின் - ஆராய்ந்தறியுமிடத்து, முரணிலையாகுமென - விரோதமில்லையாமென்று, அறிஞர் - புலவர், புகல்வர் - (மகத்தத்துவ முதலியகாரியங்களுண்டாகும் வகையினைக்) கூறுவர், காரியங்கள் தோற்றுதல் - காரியங்களுண்டாதல், நால்வகை - நான்குவிதமாம், அவை - அந்நான்கு விதங்களையும், ஈண்டுரைப்பாம் - இங்குக் கூறுவாம், (எ - று).





**80.** விருத்திபரி ணாமமா ரம்பம்விவர்த் தகமாம் விரிந்தபடங் குடில்பாவம் பாறயிரா கார, முரைத்தலுறு தந்துபட நியாயம்வன் பழுதை யுரகவுரு முறையவற்றின் றிட்டாந்த மாகும், வருத்துகயிற் றரவங்கந் தருவநகர் குற்றி மகன்கனவிந் திரசாலஞ் சுத்திகா ரசதந், தெரித்தவிவை முதலனவாந் திரிதலின்மெய்ப் பொருளிற் றிரிந்திடு பொய்ப் பொருளதுகற் பிதமாதற் குவமை.

---

காரியோதய சதுஷ்டயம்.

வினா:—காரியத் தோற்றம் எத்தனை வகையாம்?

விடை:—அது 1. விருத்தி, 2. பரிணாமம், 3. ஆரம்பம், 4. விவர்த்தமென நால் வகைத்தாம்;

அவற்றுள்,

1. ஆடை வீடுருவமாதல் போல்வது விருத்தி வடிவக் காரியமாம்;
2. பால் தயிர் வடிவ மாதல் போல்வது பரிணாம வடிவக் காரியமாம்;
3. நூல் ஆடையாதல் போல்வது ஆரம்ப வடிவக் காரியமாம்;
4. கயிற்றில் அரவு தோன்றுதல் போல்வது விவர்த்த வடிவக் காரியமாம்.

[1. விருத்தியாவது உபாதான காரணத்தினின்றும் காரியம் சூக்குமத் திரிபா யுண்டாதலாம். இதற்குதாரணம்: ஆடை வீடுருவமாக வமைதல் போல்வதாம்; வீடு மீண்டும் தன் உபாதான காரணமான ஆடையின் வடிவமாவதாம். விருத்தி என்பது இங்குச் சூக்கும பரிணாமமாம். பரிணாமம் - திரிவு.

2. பரிணாமமாவது ஒரு வஸ்து தன் சொரூபத்தை விட்டு வேறு சொரூபத்தை யடைவதாம். இதற்குதாரணம்: பால் தயிராதல் போல்வதாம்; தயிர் மீண்டும் தன் உபாதான காரணமான பால்வடிவ மாவ தில்லையாம். இது ஸ்தூல பரிணாமமாம்.

3. ஆரம்பமாவது பல அவயவங்களாகிய பல காரணங்களினின்றும் பல அவயவங்களோடு கூடிய ஒரு காரிய முண்டாதலாம். இதற்குதாரணம்:

---

(இ - ள்.) விருத்தி பரிணாம மாரம்பம் விவர்த்தகமாம்—(அவை) விருத்தியும் - பரிணாமமும் - ஆரம்பமும் - விவர்த்தமுமாம், அவற்றின் - அந்நால்வகைத் தோற்றங்களுக்கும், விரிந்த படம் - விரிந்துள்ள துகில், குடில்பாவம் - சிறுவீடு வடிவமாதலும், பால்தயிராகாரம் - பால் தயிர் வடிவமாதலும், உரைத்தலுறு - (அவயவவடிவமா மென்று) கூறப்படுகின்ற, தந்து - நூல், நியாயம் - ஒழுங்காய், படம் - ஆடைவடிவமாதலும், வன் பழுதை யுரகவுரு - வலியகயிற்றினின்றும் பாம்பின் வடிவம் தோன்றுதலும், முறை - கிரமமாக, திட்டாந்தமாகும் - திருஷ்டாந்தங்களாம், திரிதலில் - (எஞ்ஞான்றும் உண்மையில்) வேற்றுருவமாதவில்லாத, மெய்ப்பொருளில் - சத்ரூபப் பிரஹ்மத்தில், திரிந்திடு - வேற்றுருவமடைகின்ற, பொய்ப்பொருளது - மித்தியாவஸ்து, கற்பிதமாதற்கு - அத்தியாசமாகத் தோன்றுதற்கு, உவமை - உவமானமென்னும் திருஷ்டாந்தங்கள், வருத்து - (தன்னைக்கண்டஞ்சினவரை) வருத்துகின்ற, கயிற்றரவம் - கயிற்றரவும், கந்தருவநகர்-கந்தர்வநகரமும், குற்றிமகன் - ஸ்தாணு புருஷனும், கனவு - சொப்பன வுலகும், இந்திரசாலம் - இந்திரசால நகரமும், சுத்திகாரசதம் - இப்பி வெள்ளியும், (ஆக), தெரித்த - (இவ்வாறு ஆராய்ந்து) கூறப்படுகின்ற, இவை முதலனவாம் - இவை முதலாயினவாம், (எ - று).

**81**. பொய்ப்பொருள்கற் பிதமாயிற் றவிகாரி யாகப் பொருந்து முயி ரிடத்தேனின்முன் பிராந்தியார்க் கேன்னி, லொப்பில்சதி பதிர திமா லுருவச்சொப் பனந்தா னொருமுனிவன் பாலுதிப்பி னதனாலங் கவனுக்; கெப்பழுது மிலாததுபோற் சான்றுமான் மாவி லிலங்குகுண வுருவமாம் பகுதியினுன் மருளு, மெய்ப்பரிய ஞாதுருவும் பிராந்திஞா னமும்பொய் விடயஞே யமும்வரினு மவற்கிடையூ றிலையே.

---

பல அவயவங்கங்களாகிய பல நூல்களினின்றும் பல அவயவங்களோடு கூடிய ஓர் ஆடை யுண்டாதல் போல்வதாம்.

4. விவர்த்தமாவது ஒரு வஸ்து தன் சொரூபத்தை விடாது வேறு சொரூபத்தைத் தன்னிடத்துக் காட்டுதலாம். இதற்குதாரணம்: கயிற்றி லரவு தோன்றுதல் போல்வதாம். கயிறு தன் சொரூபத்தை விடாது வேறு சொரூபமாகிய அரவைத் தன்னிடத்துக் காட்டுவதறிக. பிரஹ்மத்தினின்று முலக முண்டாதற்குஉதாரணமாகக் கயிற்றரவு,கானனீர் முதலியனவே கொள்ளற் பாலனவாம். பிரஹ்மம் நிர்விகாரமென்றும் நிரவயவமென்றும் சுருதி கூறுதலின், அதினின்று முலகந் தோன்றுதற்கு உதாரணமாக ஆடை வீடுருவமாயமைதல், பால் தயிராதல், நூல் ஆடையாதல் என்பன கொள்ளற்பாலன வன்றும்.]

"உபாதான (முதற்) காரணத்திற்குச் சமானசத்தையுடையதாகிய அவ்வுபாதானத்தின் வேற்றுருவம் பரிணம மெனப்படும்; அது பாலின் பரிணமம் தயிர்போலும்." "உபாதான காரணத்தினும் விஷம (வேற்றச்) சத்தையுடையதாகிய அவ்வுபாதானத்தின் வேற்றுருவம் விவர்த்தமெனப்படும்; அது இரச்சுவிற்றோன்றும் சர்ப்பம் இரச்சு அவச்சின்ன சைதன்னியத்தின் விவர்த்தமாதல் போலும்" என்று தத்துவாநுசந்தானங் கூறுவதிங்குணர்தற்பாலதாம்.

சத்ரூபப்பிரஹ்மத்தில் மித்தியாப் பிரபஞ்சம் கற்பிதமாகத் தோன்றுவதற்கு உதாரணம் கயிற்றரவு, கந்தர்வநகரம், ஸ்தாணு புருஷன் (கட்டையிற் கள்வன்), சொப்பன வுலகம், இந்திரசால நகரம், சுத்திகாரசிதம் (கிளிஞ்சலில் வெள்ளி),

---

(இ - ள்.) அவிகாரியாக - நிர்விகார சொரூபமாக, பொருந்தும் - (அத்வயமாய்ப்) பொருந்தியுள்ள, உயிரிடத்து - ஆத்மாவின்கண், பொய்ப்பொருள் - மித்தியாவஸ்து, கற்பிதமாயிற்று எனின் - கற்பிதமா யிருக்கின்றதென்று கூறின், முன் - முன்பு (கூறிய), பிராந்தி - (அக்கற்பிதவடிவப்) பிராந்தி, யார்க்கென்னின் - எவர்க்காம் என்று வினவுவாயாயின், ஒரு முனிவன் பால்-ஒரு முனிவனிடத்து, (நித்திராதோஷத்தால்), ஒப்பில் - (தமக்குப்பிறர்) ஒப்பாதலில்லாத, சதிபதி - காதலியும் காதலனும், ரதி - (அவனுக்கு அவளோடுகூடல் வேண்டுமென்னும்) விருப்பமும், மால்-(அவன் அவளைக் கூடிப்பெற்ற) பெரிய இன்பமும் (ஆகிய), உருவச்சொப்பனம் - (திரிபுடி) வடிவச்சொப்பனமானது, உதிப்பின்-(கற்பிதமாகத்) தோன்றுமாயின், அதனால் - அச்சொப்பனத்தால், அவனுக்கு - அம்முனிவனுக்கு, எப்பழுதும் - யாதொருதீங்கும், இலாததுபோல் - இல்லாமைபோல, சான்றும் ஆன்மாவில் - (சர்வ) சாட்சியாயுள்ள ஆத்மாவின்கண், இலங்கு - விளங்குகின்ற, குணவுருவமாம் - (முக்) குணவடிவமாயுள்ள, பகுதியினால் - (மூலப்) பிரகிருதியால், மெய்ப்புஅரிய - சத்தாதலில்லாத, மருளும் - (மனம்) மயங்குகின்ற, ஞாதுருவும்-(பிராந்தி) ஞாதுருவும், பிராந்திஞானமும் - பிராந்திஞானமும், விடயப்பொய்ஞேயமும் - விஷயமாகிய பிராந்திஞேயமும், (ஆகிய திரிபுடிவடிவப் பிரபஞ்சமானது), வரினும் - (கற்பிதமாய்த்) தோன்றுமாயினும், (அப்பிரபஞ்சத்தால்), அவற்கு - அவ்வாத்மாவிற்கு, இடையூறில்லை - (யாதொரு) தீங்குமில்லையாம், (எ - று). அங்கு - ஏ - அசை. 81



**82**. இறைவனாற் றோன்றியமா யாமயமா முலக மிருந்தபடி யிருக்குந்தன் வடிவினா லதனுண், மறைவிலாச் சீவபுத்தி விருத்திகற் பிதமா மற்றொருபோக் கியவடிவ மேவிருப்பு விடயம், வெறுவிதாம் வெறுப்புவிட யத்தினோடு நோதுமல் விடயமேனத் திரிவிதமா மவை யாவை யென்னின், முறையின்வனி தாதிபுலி யெழுவாய்வீழ் துரும்பு முதலனவா மெனமொழிவர் முற்றுமுணர்ந் துடையோர்.

---

(நீல ஆகாயம், கானனீர்) முதலாயினவாம். (மேகக்கூட்டத்திற் றோன்றும் நகரம், அல்லது மரணகாலத்திற் றோன்றும் நகரம் கந்தர்வநகரமாம்; இந்திரசால காரண லாக்கப்பட்ட நகரம் இந்திரசால நகரமாம்.) (80)

காரணத்துவ தோஷ பரிகாரம்.

**வினா:—நிர்விகார சொரூபமாயுள்ள ஆத்மாவின்கண் மித்தியாப் பிரபஞ்சம் கற்பிதமாகத் தோன்றி யிருக்கின்றதெனின், ஆத்மாவின்கண் பிரபஞ்சம் கற்பிதமாகத் தோன்றி யிருக்கின்ற தென்னும் பிராந்தி யார்க்குத் தோன்றியது ? அவரைக் கூறல் வேண்டும் ?**

விடை:—ஒரு யோகீச்சுர னிடத்து (ஒரே காலத்தில் நித்திரா தோஷத்தால்) தலைவியும் தலைவனும், அவனுக்கு அவளோடு கூடும் விருப்பமும், அவன் அவளோடுகூடிய இன்பமுமாகிய இம்மூவகை வடிவமாயுள்ள சொப்பனமுண்டாமாயின், அச்சொப்பனத்தால் அந்த யோகீச்சுரனுக்கு யாதொரு கேடுமில்லையாம்; அதுபோல, சாட்சியாயுள்ள ஆத்மாவினிடத்து (ஒரே காலத்தில்) (சத்துவம் - இராசதம் - தாமதமென்னும்) முக்குண வடிவமாயுள்ள பிரகிருதியினால் பிராந்தி ஞாதுருவும்,பிராந்தி ஞானமும்,பிராந்தி ஞேயமுமாகிய இம்மூவகைவடிவமாயுள்ள பிரபஞ்சம் தோன்றினும் அப்பிரபஞ்சத்தால் அதற்கு யாதொரு கேடுமில்லையாம்.

(யோகீச்சுரன் சொப்பனத்தில் தன்னிடத்திற் றோன்றும் திரிபுடிகளைக் காண்பது போல, ஆத்மாவும் தன்னிடத்துத் தோன்றும் திரிபுடிகளைக் காணுகின்றது; யோகீச்சுரனுக்கு அத்திரிபுடிகளால் யாதொரு கேடு மில்லாமைபோல, ஆத்மாவிற்கும் அத் திரிபுடிகளால் யாதொரு கேடு மில்லையா மென்பதிங் குணர்

---

(இ - ள்.) இறைவனால் - பரமேசுவரனால், தோன்றிய - சிருஷ்டியான, மாயாமயமாமுலகம் - மாயாவடிவமான (வியோமாதிப்) பிரபஞ்சம், தன் வடிவினால் - தனது சொரூபத்தோடு, இருந்தபடி - (ஏகப்பிரகாரமாகத்தான்) இருக்கின்றவாறே, இருக்கும் - இருப்பதாம், அதனுள் - அந்தப் பிரபஞ்சத்தில், மறைவிலாத - (நானிருக்கின்றேனென்பதன்கண்) ஆவரணமில்லாத, சீவபுத்திவிருத்தி - ஜீவனது புத்திவிருத்தியினால், கற்பிதமாம் - கற்பிதமான, ஒருபோக்கியவடிவமே - ஒருபோக்கிய ரூபப்பொருளே, விருப்புவிடயம்-பிரீதிக்கு விஷயமும், வெறுவிதாம் - பயனில்லாததாகிய, வெறுப்பு விடயத்தினொடு - துவேஷத்திற்கு விஷயமும், நொதுமல்விடயம் - உபேட்சைக்கு விஷயமும், என - என்று, திரிவிதமாம் - மூன்று வகையாக விருப்பதாம், அவையாவையென்னின் - அவையெவை யென்றால், முறையின் - கிரமமாக, வனிதாதி - (பிரீதிக்கு) வனிதை முதலியனவும், புலி யெழுவாய் - (துவேஷத்திற்கு) புலிமுதலியனவும்,(உபேட்சைக்கு)வீழ்-(வீதியில்) விழுந்துகிடக்கின்ற, துரும்பு முதலன - துரும்பு முதலியனவும், ஆம் - (விஷயங்கள்) ஆகும், என - என்று, முற்றுமுணர்ந்திடையோர் - (வேதாந்த சாஸ்திரப்பொருள்) அனைத்தையும் (உள்ளவாறு) உணர்ந்துள்ள பெரியார், மொழிவர் - (இவ்வாறு விஷயத்திரயத்தைக்) கூறுவர், (எ - று). 82

**83.** ஈசனிரு மிதமான வேகாகா ரமும்பின் னெய்துமுயிர்க் கற்பிதமாம் பலவாகா ரமுமோர், தேசவிட யத்துறுதற் கேவ்வாறிங் கேன்னிற் றிட்டாந்த மீசனிரு மிதமணியா திகடாம், பேசிலொரு தகையாய்ப்போத் துருபுத்தி தன்கற் பிதநாநா விதத்தினா லவைதமைப்பெற் றோனுக், காசைவிட யமதாகிப் பெறாற்குவெறுப் பாகி யரியதுற விக்கு பேட் சாவிட யமாமே.

---

தற் பாலதாம். இதனால், ஆத்மா தன்னிடத்துக் கற்பிதமாகத் தோன்றும் பிரபஞ்சத்திற்குத் தானே சாட்சியாக விருக்கின்ற தென்பது பெறப்பட்டவாறறிக.) (81)

ஈசுவர சிருஷ்டி - ஜீவ சிருஷ்டி.

**வினா:—ஈசுவர சிருஷ்டி யெவ்வாறிருக்கும்? ஜீவ சிருஷ்டி யெவ்வாறிருக்கும்?**

விடை:—ஈசுவரனா லுண்டாய் மாயாமய (மாயையின் காரிய)மான ஆகாய முதலிய பிரபஞ்சம் முன்னுண்டாயபடி தன் சொரூபத்தோடு ஒரு பிரகாரமாகவே யிருப்பதாம்; அந்தப் பிரபஞ்சத்தில் ஜீவர்களது புத்தி விருத்தியால் கற்பிதமான ஒரு போக்கியப் பொருள் பிரீதிக்கு (விருப்பிற்கு) விஷயம், துவேஷத்திற்கு (வெறுப்பிற்கு) விஷயம், உபேட்சைக்கு (விருப்பு வெறுப்பின்றிய தாய நொதுமல்மதிக்கு) விஷயமென மூன்று பிரகாரமாக விருப்பதாம்.

விஷயத்திரயம்.

வினா:—1. அவை யெவை?

விடை:—பெண், பொன், மண் முதலியன பிரீதிக்கு விஷயமாம்;

2. புலி, சிங்கம், பாம்பு முதலியன துவேஷத்திற்கு விஷயமாம்;

3. தெருவிற் கிடக்கும் துரும்பு, சிறு கந்தை முதலியன உபேட்சைக்கு விஷயமாம். (82)

**வினா:—ஈசுவர சிருஷ்டியான ஏகாகாரமும், ஜீவ சிருஷ்டியான அநேகாகாரமும் ஓரிடத்துள்ள ஒரு விஷயத்திலிருத்தற்குத் திருஷ்டாந்தம் எவ்வாறும்? அதனைக் கூறல் வேண்டும்?**

---

(இ - ள்.) ஓர்தேசவிடயத்து - ஓரிடத்துள்ள (அந்த ஒரு) விஷயத்தின்கண், ஈசனிருமிதமான - பரமேசுவரனது சிருஷ்டியான, ஏகாகாரமும் - ஒரு வடிவமும், பின்னெய்தும் - (அவ்வேகாகாரத்தின்) பின்னருண்டாகும், உயிர்க்கற்பிதமாம் - ஜீவர்களதுகற்பிதமான, பலவாகாரமும் - அநேகவடிவமும், உறுதற்கு - பொருந்துதற்கு, திட்டாந்தம் - திருஷ்டாந்தம், இங்கு - இவ்விடத்து, எவ்வாறு என்னின் - எவ்வண்ணமாமென்றால், ஈசனிருமிதம் - ஈசுவர சிருஷ்டியாயுள்ள, மணியாதிகள் - இரத்தினமுதலிய பொருள்கள், பேசில்-(ஆராய்ந்து) கூறமிடத்து, ஒருதகையாய் - ஒருதன்மையனவாய் (இருந்தும்), போத்துரு - போக்தாக்களாகிய ஜீவர்களது, புத்தி கற்பிதம் - புத்திவிருத்தியின் கற்பிதம், நாநாவிதத்தினால் - பலவிதமாயிருத்தலால், அவை - அந்த இரத்தின முதலிய பொருள்கள், தம்மைப்பெற்றோனுக்கு - தம்மைப் பெற்றவனுக்கு, ஆசைவிடயமதாகி - பிரீதிக்குவிஷயமாயும், பெறாற்கு - பெறாதவனுக்கு, வெறுப்பாகி - துவேஷத்திற்கு விஷயமாயும், அரியதுறவிக்கு - (பெறுதற்கு) அரிய விரக்தனுக்கு, உபேட்சாவிடயமாம் - உபேட்சைக்கு விஷயமாயுமிருப்பனவாம், (எ-று), தாம்-தன்-ஏ - அசை. 83



**84.** அப்பொருடானே விளங்கித் தோன்றுறுதற் கின்னு மறைது மோர் திட்டாந்தந் தோன்றியவோர் மாது, மெய்ப்பரிசோர் திறமாகப் போத்துருக்கள் புத்தி விருத்திகற் பிதத்தினாற் றாதைக்கு மகளாய்த், தப்பில்கொழு நற்குக்கா தலியாகி மகற்குத் தாயாகி மாதுலற்கு மருகியா யிருப்ப, ளிப்பரிசு விடயமெலா மிறைவனிரு மிதமு மிலங்குயிர்க்கற் பிதமுமென விருதிறத்துற் றிடுமே.

---

விடை:—ஈசுவர சிருஷ்டியாயுள்ள இரத்தின முதலியன ஒருவிதமாகவே யிருப்பனவாம்; அவ்வாறிருந்தும், ஜீவர்களது புத்தி கற்பிதம் பலவிதமா யிருத்தலால், அவை தம்மைப் பெற்றவனுக்குப் பிரீதிக்கு விஷயமாயும், பெறாதவனுக்குத் துவேஷத்திற்கு விஷயமாயும், விரக்தனுக்கு (வைராக்கிய முடையவனுக்கு) உபேட்சைக்கு விஷயமாயு மிருப்பனவாம். (83)

**வினா:—அவ் விருவகைச் சிருஷ்டியும் இன்னும் விளக்கமாகத் தோன்றுதற்கு வேறு திருஷ்டாந்த மிருக்குமாயின், அதனையுங் கூறல் வேண்டும்?**

விடை:—ஈசுவர சிருஷ்டியாயுள்ள ஒரு ஸ்திரீயின் உடம்பின் தன்மை (மாம்ச மயமான வடிவமாய்) ஒருவிதமாகவே யிருப்பதாம்; அவ்வா றிருந்தும், அந்த ஸ்திரீ ஜீவர்களின் புத்தி விருத்தியினது கற்பித ஆகாரத்தால் தந்தைக்கு மகளாயும், கணவனுக்கு மனைவியாயும், மகனுக்குத் தாயாயும், மாமனுக்கு மருமகளாயு மிருக்கின்றாள். இவ்வாறு (ஏகாகாரமாயும் அநேகாகாரமாயுமுள்ள) விஷயமனைத்தும் ஈசுவர சிருட்டியும் ஜீவசிருஷ்டியு மென இரண்டு தன்மையனவாக விருப்பனவாம். (இதனால், ஈசுவர சிருஷ்டி ஒருவிதமாயிருக்கும்; ஜீவசிருஷ்டி பலவிதமா யிருக்குமென்பது நன்குவிளங்குவதாம்.) (84)

**வினா:—இவ் விருவகைச் சிருஷ்டியுள் நீக்கத்தக்கது யாதாம்?**

விடை:—ஈசுவர சிருஷ்டியாயுள்ள பிரபஞ்சம் மோட்ச மடைய விரும்புகின்றவனுக்குப் பாதகமா யிராமையாலும், சுருதி வடிவமாயும் சற்குரு வடிவமாயு மிருத்தலால் மோட்ச சாதனமா யிருத்தலாலும், அவன்தன்னால் விடுதற்கு முடியாததா யிருத்தலாலும், அப்பிரபஞ்சம் அங்ஙனமே இருக்கட்டும்; ஜீவ சிருஷ்டியாயுள்ள பிரபஞ்சம் அநேகாகாரமா யிருத்தலின், அதுவே நீக்கத்தக்கதாம்.

---

(இ - ள்.) அப்பொருள்தானே - (ஈசுவரனிருமிதமான) அந்த ஏகாகாரப் பொருளே, விளங்கித் தோன்றுறுதற்கு - (பிரீதி - துவேஷம் - உபேட்சை என்பனவற்றிற்கு விஷயமாக) விளங்கித்தோன்றுவதற்கு, இன்னும் - இன்னமும், ஓர் திட்டாந்தம் - ஒரு திருஷ்டாந்தம், அறைதும் - கூறுவாம், தோன்றிய - (ஈசுவரசிருஷ்டியில் சிறந்து) விளங்குகின்ற, ஓர் மாது - ஒருபெண்ணினது, மெய்ப்பரிசு - (மாம்சமயமான) தேகத்தின் தன்மை, ஓர் திறமாக-ஒருபிரகாரமாகவிருக்க, (அந்தப் பெண்), போத்துருக்கள் - போக்துருக்களது, புத்தி விருத்தி - புத்தி விருத்தியின், கற்பிதத்தினால் - கற்பிதாகாரத்தால், தாதைக்கு மகளாய் - பிதாவிற்குப் புத்திரியாயும், தப்பில் - தவறுதலில்லாத, கொழுநற்கு - கணவனுக்கு, காதலியாகி - மனைவியாயும், மகற்குத்தாயாகி - மகனுக்கு மாதாவாயும், மாதுலற்குமருகியாய் - மாமனுக்கு மருமகளாயும், இருப்பள் - இருக்கின்றாள், இப்பரிசு - இவ்விதமாக, (ஏக அநேகப் பிரகாரமாகிய), விடயமெலாம் - (மாயாமய) விஷயமனைத்தும், இறைவனிருமிதமும் - ஈசுவர சிருஷ்டியும், இலங்கு - விளங்குகின்ற, உயிர்க்கற்பிதமும் - ஜீவசிருஷ்டியும், என - என்று, இருதிறத்து - இரண்டு பிரகாரமாக, உற்றிடும் - பொருந்தி யிருப்பனவாம், (எ - று). போக்துருக்கள் - ஜீவர்கள். 84

**85.** அண்ணனிரு மிதப்பிரபஞ் சந்தான்வா திப்ப தல்லாமை
யானுநூ லாசிரிய வடிவாய், நண்ணலரு முத்திசா தனமாயுந் தன்னு
னழுவவோண்ணு மையினுனு மனையதுதா னிற்க, வெண்ணரிய சீவ
கற் பிதமாய வதுதா னிருபிரபஞ் சங்கள்சாத் திரத்தோடசாத் திரமாங்,
கண்ணுமசாத் திரப்பிரபஞ் சங்கோலிரு திறனுங் கழறிற்றீ விரமந்த
மெனவவையீண் டுரைப்பாம்.

---

"இரண்டு புருஷாது இரண்டு புத்திரர் தேசாந்தரஞ் சென்றிருந்தனர்; அவர்தம்முள் ஒருவனிறந்து போனுன், மற்றவன் அளவிறந்த பொருளைச் சம்பாதித்தான்; அவன் ஒருவனிடத்து யான் அளவிறந்த பொருள் சம்பாதித்திருக்கின்றே னென்று என் தந்தையினிடத்துக் கூறல் வேண்டு மென்றும், என்னுேடு வந்தவ னிறந்தன னென்று அவன் தந்தையினிடத்துக் கூறல் வேண்டு மென்றும் கூறி அவனையனுப்பினுன். அவன் வஞ்சகனுதலால், பிழைத்துள்ளவனது தந்தையினிடத்து உன் மகனிறந்தானென்றும், இறந்தவனது தந்தையினிடத்து உன் மகன் பிழைத்திருக்கின்ருனென்றும், அளவின்றிப் பொருள் சம்பாதித்திருக்கின்ரு னென்றும், சீக்கிரமாக யானை மீதேறிப் பெருங் கூட்டத்துடன் வருவானென்றும் கூறினுன்; அவனது வஞ்சக வார்த்தையைக் கேட்டு, பிழைத்திருப்பவனது தந்தை அழுது பெருந்துயரமடைந்தான்; இறந்தவனது தந்தை பெருமகிழ்ச்சி யடைந்தான். இவ்வாற்ருல், தேசாந்தரத்தில் (1) ஈசுவர சிருஷ்டியாகிய மகன் பிழைத்திருந்தும் மனுே மய மகனிறந்து போனுன்; அதனுல், அவன் தந்தைக்குத் துக்க முண்டாயிற்று; (2) ஈசுவர சிருஷ்டியாகிய பிழைத்திருப்பவனது தந்தைக்குச் சுகமுண்டாகவில்லை; அங்ஙனமே,(1) இரண்டாவதான ஈசுவர சிருஷ்டியான மகனிறந்தனன்; அதனுல், அவன் தந்தைக்கு துக்க முண்டாகவில்லை; (2) மனுேமய மகன் பிழைத்திருத்தலால், சுக முண்டாயிற்று; ஆதலால், ஜீவ சிருஷ்டியே சுகதுக்கங்களுக்குக் காரணமாம்; ஈசுவர சிருஷ்டி சுகதுக்கங்களுக்குக் காரணமன்ரும்" என்று விசாரசாகரம் ஆருவது தரங்கத்திற் கூறுவதிங்குணர்தற்பாற்ரும்.

---

(இ - ள்.) அண்ணல் நிருமிதம் - ஈசுவர சிருஷ்டியாக விருக்கின்ற, பிரபஞ்சம் - (மாயாமயப்) பிரபஞ்சமானது, வாதிப்பதல்லாமையானும் - (அதிகாரி புருஷனுக்குப்) பாதகமாகாதிருத்தலாலும், நூலாசிரிய வடிவாய் - சுருதி குரு வடிவமாய் (இருக்கும் ரூபத்தால்), நண்ணலரு - (தத்துவஞானத்தாலன்றிப் பிறிதொன்ருல்) அடைதற்கரிய, முத்திசாதனமாயும்-மோட்ச சாதனமாகப் பொருந்துதலாலும், தன்னுல் - (அவ்வதிகாரி புருஷனுகிய) தன்னுல், நழுவவொண்ணுமையினுனும் - (அதனைத்) தளரவிடுதல் கூடாமையாலும், அனையது - அவ்வீசுவர சிருஷ்டியாக விருக்கின்ற பிரபஞ்சம், நிற்க - (அவ்வாறே) இருக்கட்டும், எண்ணரிய-(இவ்வளவென்றளவு செய்து) கணித்தற்கரிய, சீவகற்பிதமாயவது - ஜீவகற்பிதப் பிரபஞ்சம், சாத்திரத்தொடு அசாத்திரம் - சாஸ்திரப் பிரபஞ்சமும் அசாஸ்திரப் பிரபஞ்சமும் (என), இருபிரபஞ்சங்கள் ஆம் - இரண்டு பிரபஞ்சங்களாம், (அவற்றுள்), கழறில் - (ஆராய்ந்து) கூறுமிடத்து, கண்ணும் - (தன்னை யுடையவரை) வருத்தும், அசாத்திரப்பிரபஞ்சம் - அசாஸ்திரப்பிரபஞ்சம், தீவிரமந்தமென - தீவிரமும் மந்தமுமென்று, இருதிறனும் - இருவகைத்தாம், அவை - அவற்றை, ஈண்டுரைப்பாம் - இவ்விடத்துக்கூறுவாம், (எ - று). தான் இரண்டும் - அசை. கொல் - அசை. பாதகம் - விரோதம். ஆயவது என்பதனுள் அகரம் - விரித்தல் விகாரமாம். 85



**86.** சீவபர விசாரணையே யுரைத்தலரி தாஞ்சாத் திரப்பிரபஞ்
சங்காமா திகளே தீவிரமாங், காவலுறு சாதிகரு மாதிகமோ டேதான்
கருதுமனக் கற்பிதமே மந்தமசாத் திரத்தின், மேவுறுமிவ் விருதிறமு மாரு
யிர்மெய்க் காட்சி விரோதிகளா தலின்ஞானம் பயிறற்கு முன்ன, மோவு
வசாத் திரப்பிரபஞ் சந்தான்மெய்ஞ் ஞான வுதவியா யான்மக்காட் சியின்
பின்விடு வதுவாம்.

---

பிரபஞ்சத்துவயம்.

வினு:—ஜீவ சிருஷ்டியாயுள்ள பிரபஞ்சம் எத்தனை வகையாம்?

விடை:—அது சாஸ்திரப் பிரபஞ்சம், அசாஸ்திரப் பிரபஞ்ச மென இரு வகைத்தாம்; அவற்றுள், அசாஸ்திரப் பிரபஞ்சம் தீவிரம் - மந்தமென இரு திறத்ததாக விருக்கும். (85)

சாஸ்திரப் பிரபஞ்சம்.

ஆத்மப் பிரஹ்ம விசாரமே (ஆத்மா இத்தன்மையது; பிரஹ்மம் இத்தன்மைய தென்னும் ஆராய்ச்சியே) சாஸ்திரப் பிரபஞ்சமாம்.

அசாஸ்திரப் பிரபஞ்சம்.

1. காமக் குரோதாதிகள் (காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதமென்பன) தீவிர அசாஸ்திரப் பிரபஞ்சமாம்;

2. மனுே கற்பிதமாயுள்ள ஜாதி (ஆசார) கரும முதலியன மந்த அசாஸ்திரப் பிரபஞ்சமாம்.

இந்த அசாஸ்திரப் பிரபஞ்ச மிரண்டும் ஆத்ம சாட்சாத் காரத்திற்கு (ஆத்மாவை உள்ளவாறு பிரஹ்மமாகப் பிரத்தியட்ச மாக அறிதற்கு) விரோதி (தடை) களா யிருப்பனவாதலின், ஞானுப்பியாசத்திற்கு முன்னர் விடத்தக்கன வாம்; சாஸ்திரப் பிரபஞ்சமானது தத்துவ ஞான முண்டாதற்குச் சிறந்த சாதனமா யிருத்தலின், ஆத்ம சாட்சாத்கார முண்டாய பின் (முற்றும்) விடத்தக்கதாம். (86)

---

(இ-ள்.) சீவபரவிசாரணையே - ஆத்மப்பிரஹ்மவிசாரமே, உரைத்தலரிதாம்- (வேதாந்த சாஸ்திரவிசாரமில்லாதவர்) கூறுதற்கரியதாகிய, சாத்திரப்பிரபஞ்சம் - சாஸ்திரப்பிரபஞ்சமாம், (அசாஸ்திரப் பிரபஞ்சத்துள்), காமாதிகளே-காமக்குரோத முதலியனவே, தீவிரமாம் - தீவிரப் பிரபஞ்சமாம், காவல் - (ஒருவன் தனக்கு) சிறைச்சாலை ஆக, உறு - பொருந்துகின்ற, சாதிகரு மாதிகமொடு - (தன்) சாதி (ஆசாரத்திற்குரிய) கருமங்களுடனே, கருது - நினைக்கின்ற, மனக்கற்பிதமே - மனத்தின் சங்கற்பமே, மந்தம் - மந்தப் பிரபஞ்சமாம், அசாத்திரத்தில் - அசாஸ்திரப்பிரபஞ்சத்துள், மேவுறும் - பொருந்துகின்ற, இவ்விருதிறமும் - (தீவிரம் - மந்தமென்னும்) இவ்விருவகைப் பிரபஞ்சங்களும், (கடத்தில் மண்போல எங்கும்), ஆருயிர்-நிறைந்துள்ள ஆத்மாவினது, மெய்க்காட்சி - உண்மையான தரிசனத்திற்கு, விரோதிகளாதலின் - விரோதிகளாக விருத்தலின், ஞானம்பயிறற்கு முன்னம் - (தத்துவ) ஞானுப்பியாசத்திற்கு முன்னே, ஓவுவ - விடத்தக்கனவாம், சாத்திரப்பிரபஞ்சம் - சாஸ்திரப்பிரபஞ்சமானது, மெய்ஞ்ஞானம் - தத்துவஞானத்தை (அடைதற்கு), உதவியாய்-சாதனமாய் (இருத்தலின்), ஆன்மக் காட்சியின்பின் - ஆத்ம சாட்சாத்காரத்தின் பின்னர், விடுவதுவாம் - விடத்தக்கதாம், (எ - று). ஏ - தான்-அசை. 86

**87.** தீவிரமந் தங்களுயிர்க் காட்சியுற்ற பின்னுந் திகழ்முத்தி
பெறற்பொருட்டு விடுவனவேன் றறிக, பாவமுறு மவச்சின்னே பாதி
பதிவிம்போ பாதியுட னத்தியா சோபாதி யெனவே, மேவுமுபா திக
ளோருமூன் றுளவவற்றை முறையே விளம்பியிடிற் சுழுத்தியுரு வாம
வித்தை தானே, யாவரண வவச்சின்னே பாதியாம் பிரத்திய கான்மா
விற் கதனதுகா ரியமாம்புத் தியினில்.

---

**வினா:—தீவி அசாஸ்திரப் பிரபஞ்சத்தையும் மந்த அசாஸ்திரப் பிரபஞ்சத்தையும் ஆத்ம சாட்சாத்கா முண்டாய பின் கோண்டால் வரும் குற்றம் யாது ? அதனைக் கூறல்வேண்டும்?**

*விடை:—ஆத்ம சாட்சாத்கார முண்டாய பின் அவ் வசாஸ்திரப் பிரபஞ்சங்களைக் கொண்டால், அவ்வாத்ம சாட்சாத்காரம் கெட்டுப்போம்; போகவே, ஆத்ம சாட்சாத்காரத்தின் பயனாய மோட்சம் சித்திப்ப தில்லையாம்; அதனால், அவ் விரண்டு பிரபஞ்சங்களும் ஆத்ம சாட்சாத்கார முண்டாய பின்னும் மோட்சமடைதற் பொருட்டு விடத்தக்கனவாம். (சாஸ்திரப் பிரபஞ்சம் ஆத்ம சாட்சாத்கார முண்டாய பின் பயனற்றதா யிருத்தலின், அதுவும் விடத்தக்கதா மென்க.)*

உபாதித் திரயம்.

வினா:—உபாதி எத்தனை வகையாம்?

*விடை.—அஃது அவச்சின்னோபாதி, பிரதிபிம்போபாதி, அத்தியாசோபாதி யென மூன்றும்; அவற்றுள்,*

அவச்சின்னோபாதி.

*1. பிரத்தியகான்மாவிற்குச் சுழுத்தி வடிவமாயுள்ள அஞ்ஞானமே மறைப்பு வடிவ அவச்சின்னோபாதியாம்; (ஆத்மா சுழுத்தி வடிவாயுள்ள அஞ்ஞானத்தோடு கூடியிருத்தலே அதற்கு அவச்சின்னோபாதியா மென்க.)* (87)

---

(இ-ள்.) தீவிரமந்தங்கள்-(அசாஸ்திரப்பிரபஞ்சத்தின் வகையாயுள்ள)தீவிரப் பிரபஞ்சமும் மந்தப்பிரபஞ்சமும், உயிர்க்காட்சி-ஆத்மதரிசனத்தை, உற்றபின்னும்-அடைந்தபிறகும், திகழ்முத்திபெறற்பொருட்டு-(எஞ்ஞான்றும் ஒரு தன்மையதாய்) விளங்குகின்ற மோட்சமடைதற் பொருட்டு, விடுவன - (முற்றும்) விடத்தக்கனவாம், என்றறிக-என்று (சாஸ்திர அசாஸ்திரப்பிரபஞ்சத்தினியல்பினை நீ) அறிவாயாக, மேவும் - (கற்பிதமாகப்) பொருந்திய, உபாதிகள்-உபாதிகள், பாவமுறும் - பாவனை வடிவமாகப் பொருந்தியுள்ள, அவச்சின்னோபாதி - அவச்சின்னோபாதியும், பதிவிம்போபாதியுடன்-பிரதிபிம்போபாதியும், அத்தியாசோபாதி-அத்தியா சோபாதியும், என-என்று, மூன்றுள - மூன்றிருக்கின்றன, அவற்றை - அவ்வுபாதிகளை, முறையே - கிரமமாக, விளம்பியிடின் - கூறுமிடத்து, பிரத்தியகான்மாவிற்கு-பிரதியக்ஆத்மாவிற்கு, சுழுத்தியுருவாம் அவித்தைதானே - சுழுத்தி வடிவமாயுள்ள அவித்தையே, ஆவரணம்-மறைப்பு வடிவமாயுள்ள, அவச்சின்னோபாதியாம் - அவச்சின்னோபாதியாம், அதனது காரியமாம் - அவ்வவித்தையின் காரியமான, புத்தியினில் - புத்தியின்கண், (எ - று). ஒரு - அசை. 87



**88.** பற்றியவான் மாப்பதிவிம் பித்திடுதே றனே பதிவிம்போ பாதி
யாம் புத்திகத மாய, முற்றுசுக துக்கங்க ளுயிர்நுகர்தல் போல முயலு
தலே யத்தியா சோபாதி யாகு, முற்றவத்தி யாசவிலக் கணமாம்வே
றுென்றி லோன்றுணர்த லாமிப்பி வெள்ளியது போல, மற்றதுநால்
வகைப்படுமோல் மித்தையுட னிதர மற்றிதரே தரஞ்சத்தி யங்களினு
லன்றே.

---

பிரதிபிம்போபாதி.

*2. அவ் வஞ்ஞானத்தின் காரியமாயுள்ள புத்தியின்கண் அவ்வாத்மா (சிதாபாச வடிவமாகப்) பிரதிபிம்பித்திருத்தலே அவ்வாத்மாவிற்குப் பிரதி பிம்போபாதியாம்;*

அத்தியாசோபாதி.

*3- அப் புத்தியின்கண் இருக்கின்ற சுக துக்கங்களை ஆத்மா அனுபவிப்பது போன்றிருத்தலே அதற்கு அத்தியாசோபாதியாம்.*

அத்தியாசம்.

**வினா:—அந்தியாசத்தின் இலக்கணங் கூறல் வேண்டும்?**

*விடை:—ஒரு பொருளின்கண் மற்றொரு பொருளை யறிதல் அத்தியாசத்தினிலக்கணமாம்-*

வினா:—இதற்கு உதாரணங் கூறல் வேண்டும்?

*விடை:—அஃது இப்பியின்கண் (முத்துச் சிப்பியின்கண்) வெள்ளியை யறிதல் போல்வதாம்-*

*(இப்பியின்கண் வெள்ளி தோன்றுதல் அர்த்தாத்தியாசமாம்; அதனை யறிதல் ஞானத்தியாசமாம்.)*

வினா:—அவ்வத்தியாசம் எத்தனை வகையாம்?

*விடை:—அது மித்தியாத்தியாசம், இதராத்தியாசம், இதரேதராத்தியாசம், சத்தியாத்தியாச மென நான்கு வகைத்தாம்.* (88)

---

(இ-ள்.) பற்றிய - (எங்கும் வியாபகமாகப்) பொருந்திய, ஆன்மா - ஆத்மா, பதிவிம்பித்திடுதல் தானே - பிரதி பிம்பித்தலே, பதிவிம்போபாதியாம் - பிரதிபிம்போபாதியாம், புத்திகதமாய - (அந்தப்)புத்தியின் தருமமாயிருப்பனவாய, சுகதுக்கங்கள் முற்றும் - சுகதுக்கமனைத்தையும், உயிர் நுகர்தல்போல - ஆத்மா அனுபவித்தல்போல, முயலுதலே-முயற்சி செய்தலே, அத்தியாசோபாதியாகும்-அத்தியாசோபாதியாம், உற்ற - (இவ்வாறு) பொருந்துகின்ற, அத்தியாச விலக்கணம் - அத்தியாசத்தினிலக்கணம், ஒன்றில் - ஒருபொருளில், வேறொன்றுணர்தலாம் - மற்றொரு பொருளை யறிதலாம், (அதற்குதாரணம்), இப்பி வெள்ளியது போல ஆம் - இப்பியின்கண் வெள்ளியை (அறிவது) போலவாம், அது - அவ்வத்தியாசம், மித்தையுட னிதர மற்றிதரே தரஞ்சத்தியங்களினுல் - மித்தியாத்தியாசம் - இதராத்தியாசம் - இதரேதராத்தியாசம் - சத்தியாத்தியாசம் என்னும் வியவகாரத்தால், நால்வகைப்படும் - நான்குவிதமாம், (எ - று). மற்று - ஆல் - அன்று - ஏ - அசைநிலைகள். 88

**89.** நெருப்பினேடு புணர்ச்சியாற் புனற்கழற்சி வரல்போ னித்த
முறு மான்மசந் நிதியதனின் முறையே, சரிப்பினேடு காண்டனினே
வுறலறிதல் வரலாற் றகுந்தூல மெய்மித்தி யாத்தியா சந்தா, னிரிப்பரு
மிந் தியங்களே யிதராத்தி யாச மிதரேத ராத்தியா சங்கரண மாகுந்,
தரிப்பரிய மூலவகங் காரமது தானே சத்தியாத் தியாசமெனச் சாற்றுவர்
தக் கவரே.

---

வினு:—மித்தியாத்தியாச முதலிய நான்கையும் கூறுதல் வேண்டும்?

மித்தியாத்தியாசம்.

விடை:—1. அக்கினியின் சம்பந்தத்தால் ஜலத்திற்கு உஷ்ண முண்டாதல்போல, நித்தியமா யுள்ள பிரத்தியக் ஆத்மாவின் சந்நிதானத்தில் (சம்பந்தத்தால்) முறையே ஸ்தூல சரீரத்திற்கு நடத்தல், காண்டல், நினைத்தல், அறிதலென்பன உண்டாதலின், ஸ்தூல சரீரம் மித்தியாத்தியாசமாம்.

(பிரத்தியக் ஆத்மாவின் சந்நிதான விசேஷத்தால் ஸ்தூல சரீரத்திற்கு நடத்தலும், இந்திரியங்களுக்குக் காண்டலும், மனத்திற்கு நினைத்தலும், புத்திக்கு அறிதலுமுண்டாகின்றன; இவை அவற்றிற் குண்டாதலே மித்தியாத்தியாசமாம். காண்டல், நினைத்தல், அறிதலென்பன முறையே இந்திரியங்களுக்கும், மனத்திற்கும், புத்திக்கு முரியனவா மாயினும், அவை ஸ்தூல சரீரத்தை முன்னிட்டு நிகழ்தலின், அவையும் ஸ்தூல சரீரத்திற் குரியனவாகக் கூறப்பட்டன வென்க-)

இதராத்தியாசம்.

2. ஞானேந்திரிய பஞ்சகம், கருமேந்திரிய பஞ்சகம் என்னும் இருவகை இந்திரியங்களும் (பிரத்தியக் ஆத்மாவின்கண்) இதராத்தியாசமாம்.

(இந்திரியங்களில் பிரத்தியக் ஆத்மா சொரூபமாக அத்தியாச மாகாது, அதன்கண் இந்திரியங்கள் சொரூபமாக அத்தியாசமா யிருத்தலின், அவை பிரத்தியக் ஆத்மாவின்கண் இதராத்தியாசமாம்.

இதராத்தியாசம் - அந்நியதராத்தியாசமாம். இரண்டில் ஒன்றனது அத்தியாசம் அந்நியதராத்தியாசமாம். அந்நியதரம் - இரண்டில் ஒன்றும்.)

---

(இ - ள்.) நெருப்பினெடு புணர்ச்சியால் - அக்கினியினது சம்பந்தத்தால், புனற்கு அழற்சிவரல்போல் - தண்ணீர்க்கு உஷ்ண முண்டாதல்போல, நித்தமுறுமான்மசந் நிதியதனில் - நித்தியமாகப் பொருந்திய (பிரத்தியக்) ஆத்மாவினது சந்நிதானத்தில், முறையே - கிரமமாக, சரிப்பினெடு - (காலால்) நடத்தலும், காண்டல் - (கண்ணுல்) பார்த்தலும், நினைவுறல் - (மனத்தால்) நினைத்தலும், அறிதல் - (புத்தியால்) அறிதலும், வரலால் - உண்டாதலின், தகும் - (போகானுபவத்திற்குத்) தகுதியாயுள்ள, தூலமெய் - (நடத்தல் முதலிய சத்திகளையுடைய) ஸ்தூல சரீரமே, மித்தியாத்தியாசம் - மித்தியாத்தியாசமாம், இரிப்பரும் - (தத்துவஞான முண்டாமளவும்) கெடுதலில்லாத, இந்திரியங்களே - (ஞானேந்திரிய - கர்மேந்திரியங்களாகிய) இந்திரியவர்க்கமே, இதராத்தியாசம் - இதராத்தியாசமாம், கரணம் - அந்தக்கரணமே, இதரேதராத்தியாசமாகும் - இதரேதராத்தியாசமாம், தரிப்பரிய-(விசாரணையில்) நிலைபெறுதலில்லாத, மூலவகங் காரமதுதானே - மூலாங்காரமே, சத்தியாத்தியாசம் - சத்தியாத்தியாசமாம், என - என்று, (அந்நான்கு அத்தியாசங்களையும்), தக்கவர் - மேலோர், சாற்றுவர் - கூறுவர், (எ - று). 89



**90.** ஆங்காரான் மாவிற்கு நானெனலாற் கயிற்றி னரவமென
நிருபாதி காத்தியா சந்தா, ஞங்கார வியலான்மா விற்குநான் கருத்தா
வாமெனலாற் சிவப்புவலம் போற்சோபா திகமா, மீங்காகுங் கரணதரு
மான்மாவிற் கிச்சை யினேனுனேன் றிருத்தலினு லலைபுனலிற் புக்க,
வீர்ங்கதிரின் விம்பமெனத் தத்தருமாத் தியாச மெனவுரைப்பர் நான்
குடும்ப வானெனநிற் கையினுல்.

---

இதரேதராத்தியாசம்.

3. மனம், புத்தி, அகங்காரம், சித்த மென்னும் அந்தக்கரணங்கள் (பிரத்தியக் ஆத்மாவின்கண்) இதரேதராத்தியாசமாம்.

(யான் கர்த்தா போக்தா என்னு மிடத்து அந்தக்கரணத்தின் விசேஷணமாயுள்ள கருத்திருத்துவமும் போக்திருத்துவமும் பிரத்தியக் ஆத்மாவிடத்திலும், அந்தக்கரணம் இருக்கின்றது விளங்குகின்றது என்னு மிடத்துப் பிரத்தியக் ஆத்மாவின் விசேஷணமாயுள்ள இருத்தலென்னும் சத்தும் விளங்குத லென்னும் சித்தும் அந்தக்கரணத்திலும் அத்தியாசமா யிருத்தலின், அந்தக்கரணத்திற்கும் பிரத்தியக் ஆத்மாவிற்கு முள்ள அத்தியாசம் இதரேதராத்தியாசமாம். இதரேதராத்தியாசம்—அந்நியோந்நியாத்தியாசமாம். ஒன்றற் கொன்று அத்தியாசமாதல் அந்நியோந்நியாத்தியாசமாம்.)

சத்தியாத்தியாசம்.

4. (பிரதம அத்தியாச மென்று கூறப்படும்) மூலாங்காரம் (பிரத்தியக் ஆத்மாவின்கண்) சத்தியாத்தியாசமாம்.

(சுருதி சம்பந்த ஞானம், யுக்தி சம்பந்த ஞானம், உலக சம்பந்த ஞானமென்னு மூன்றனுள் உலக சம்பந்த ஞானத்தால் மூலாங்காரம் (அல்லது மாயை) சத்தியமாக வியவகரிக்கப் படுதலின், அது சத்தியாத்தியாச மென்று கூறப்படுகின்றது. கயிற்றின்கண் அரவுபோலப் பிரத்தியக் ஆத்மாவின்கண் கற்பிதமாயுள்ள மூலாங்காரத்தை (அல்லது மாயையை) ஆத்மாநாத்ம விவேகமில்லாதவர் பிரத்தியக் ஆத்மாவைப் போலச் சத்தியப்பொருளாக வியவகரித்தலின், அது சத்தியாத்தியாசமா மென்று கூறப்படுகின்ற தென்க). (89)

---

(இ - ள்.) நானெனலால் - (நான்) நான் என்னும் வியவகாரத்தில், ஆங்காரான்மாவிற்கு - அகங்காரத்தோடு (பிரத்தியக்) ஆத்மாவிற்கு (உள்ள சம்பந்தம்), கயிற்றினரவமென - இரச்சுச்சர்ப்பமென்பதுபோல, நிருபாதிகாத்தியாசம் - நிருபாதிகாத்தியாசமாம், நான் கருத்தாவாமெனலால் - நான் கருத்தாவாவனென்னும் வியவகாரத்தில், ஆங்கார இயலான்மாவிற்கு - அகங்கார தருமத்தோடு (பிரத்தியக்) ஆத்மாவிற்கு (உள்ள சம்பந்தம்), சிவப்புவலம்போல் - செந்நிறம் படிகமணியின்கண் (தோன்றுதல்)போல, சோபாதிகமாம் - சோபாதிகாத்தியாசமாம், இச்சையினேனுனென்றிருத்தலினுல் - நான் இச்சையுடையே னென்று (வியவகாரம்) இருத்தலின், (அதில்), இங்காகும் - இவ்வுடம்பின்கண் பொருந்தியிருக்கின்ற, கரணதருமஆன்மாவிற்கு - அந்தக்கரண தருமத்தோடு (பிரத்தியக்) ஆத்மாவிற்கு (உள்ள சம்பந்தம்), அலைபுனலிற் புக்க - அலைகளையுடைய (பிரவாக) நீரிற்றோன்றிய, ஈர்ங்கதிரின் விம்பமென - குளிர்ச்சி யமைந்த கிரணங்களையுடைய சந்திரனது பிரதிபிம்பம்போல, தத்தருமாத்தியாசம் - தத்தருமாத்தியாசமாம், என - என்று (அவற்றினிலக்கணங்களை), உரைப்பர் - (மேலோர்) கூறுவர், நான் குடும்பவானென நிற்கையினுல் - நான் குடும்பியெனக் கூறும் வியவகாரம் இருத்தலின், (அதில்), (எ - று). வலம் - படிகமணி. 90

விஞ:—இவ்வத்தியர்சங்க ளன்றி வேறு அத்தியாசங்களிருக்குமாயின், அவற்றையும் கூறுதல்வேண்டும்?

விடை:—மித்தியாத்தியாச முதலிய நான்கு அத்தியாசமே யன்றி வேறு நான்கத்தியாசங்களுமுண்டு. அவை நிருபாதிகாத்தியாசம், சோபாதிகாத்தியாசம், தத்தருமாத்தியாசம், சம்பந்த மாத்திராத்தியாச மென்பனவாம்.

### நிருபாதிகாத்தியாசம்.

5. அகங்காரத்தையும் பிரத்தியக் ஆத்மாவையும் ஒன்ருக்கொண்டு நானென்று கூறுதலால், அகங்காரத்திற்கும் பிரத்தியக் ஆத்மாவிற்கு முள்ள சம்பந்தம் ரச்சுச்சர்ப்பம் (கயிற்றரவுசம்பந்தம்) போல நிருபாதிகாத்தியாசமாம். (மயக்க காலத்தில் நானென்னுஞ் சொல்லுக்குப் பொருளாக அகங்காரத்தையும் பிரத்தியக் ஆத்மாவையும் வேருக அறியாது கயிற்றரவுபோல ஒன்ருக அறிதல் நிருபாதிகாத்தியாசமாம்.)

### சோபாதிகாத்தியாசம்.

6. நான் கருத்தா வென்று கூறுமிடத்து அகங்காரத்தின் தருமம் பிரத்தியக் ஆத்மாவின்கண் படிகமணியில் செவ்வரத்தம் பூவின்தருமம் (சிகப்பு) தோன்றுதல்போலத் தோன்றுதலால், அகங்காரத்தின் தருமம் பிரத்தியக் ஆத்மாவின்கண் தோன்றுதல் சோபாதிகாத்தியாசமாம்.

(படிக மணியில் செவ்வரத்தம் பூவி னிறம் கற்பிதமாக விளங்குதல்போல, நான் கருத்தா வென்னுமிடத்து அகங்காரத்தின் தருமமாகிய கருத்திருத்துவம் பிரத்தியக் ஆத்மாவின்கண் கற்பிதமாக விளங்குதல் சோபாதிகாத்தியாசமாம்.

கயிற்றின்க ணரவு தோன்றுதல் நிருபாதிகாத்தியாச மென்றும், படிக மணியின்கண் செவ்வரத்தம் பூவினிறம் தோன்றுதல் சோபாதிகாத்தியாச மென்று மிங்குணர்தல் வேண்டும். கயிற்றைக்கண்ட விடத்து அரவு தோன்ருதொழிதலின், கயிற்றரவு திருஷ்டாந்தம் நிருபாதிகாத்தியாசத்திற்காம்; படிக மணியைக் கண்ட விடத்தும் அதன்கண் செவ்வரத்தம் பூவின்நிறம் தோன்றுதலின், படிகமணியிற் சிவப்புத்தோன்றும் திருஷ்டாந்தம் சோபாதிகாத்தியாசத்திற்காம்.)

### தத்தருமாத்தியாசம்.

7. யான் இச்சிக்கின்றேன் என்று கூறுவதன்கண் பிரவாக ஜலத்தின்கண் படிந்த சந்திரனது பிரதிபிம்பம்போல, அந்தக்கரண தருமம் பிரத்தியக் ஆத்மாவின்கண் தோன்றுதலால், அது (அந்தக்கரண தருமம்) பிரத்தியக் ஆத்மாவின்கண் தோன்றுதல் தத்தருமாத்தியாசமாம்.

(யான் இச்சிக்கின்றே னென்று கூறுவதன்கண் அந்தக்கரணத்தின் தருமம் (இச்சை) நானென்னும் சொல்லிற்கு யதார்த்தப்பொருளாயுள்ள பிரத்தியக் ஆத்மாவின்கண் நீரிற் பிரதிபிம்பித்துள்ள சந்திரனது பிரதிபிம்பம் போன்று அத்தியாசமாய்த்தோன்றுதல் தத்தருமாத்தியாசமாம். அந்தக்கரணத்தின் தரும மாத்திரம் பிரத்தியக் ஆத்மாவின்கண் அத்தியாசமாகத் தோன்றுதல் தத்தருமாத்தியாசமா மென்க. தத் - என்பது அந்தக்கரணமாம்; தருமம் - அதனது இச்சையாம்; அத்தியாசம்-அத்தருமம் பிரத்தியக் ஆத்மாவின்கண் மித்தையாகத் தோன்றுதலாம்.)





**91.** மைந்தர்முத லாயிஞ ருடஞன்மா விற்கு மண்ணுலகிற்
பஃறியத்தர் விவகார மேனவே, யந்தமுறு சம்பந்த மாத்திராத் தியாச
மாமேன்ப ரிவ்வத்தி யாசங்க டம்மா, னந்துநிரு விகாரியான் மாவேன்
றல் பேற்று நவிறருமைந் தவத்தையுள வவையாவை யேன்னிற்,
ருேந்தமுறு நனவோடுசோப் பனஞ்சுழுத்தி துரியந் துரியாதீ தந்தாஞ
மவற்றியல்பு மோழிவாம்.

### சம்பந்த மாத்திராத்தியாசம்.

8. நான் குடும்பி (யான் புத்திரர் முதலிய குடும்பத்தை யுடையவன்)என்று கூறுவதன்கண் புத்திரர் முதலாயிஞரோடு பிரத்தியக் ஆத்மாவிற்குள்ள சம்பந்தம் ஓடத்திலிருப்பவர் வியவகாரம் போலச் சம்பந்த மாத்திராத்தியாசமாம்.

(நான் குடும்பி யென்னுமிடத்துப் பிரத்தியக் ஆத்மாவிற்கும் புத்திரர் முதலாயிஞேர்க்கு முள்ள சம்பந்தம் ஓடம் அல்லது தோணி முதலியவற்றி லேறிப் பிரயாணஞ்செய்பவரது வியவகாரம் போன்று இருத்தலின், இது சம்பந்த மாத்திராத்தியாசமாம்.)

விஞ:—இவ்வாறு எண் வகை அத்தியாசங்களையும் உணர்வதால் பெறப்படுவது யாது?

விடை:—நடத்தல் முதலிய வியவகாரங்களுள் யாதும் பிரத்தியக் ஆத்மாவிற்கில்லை யென்பது மித்தியாத்தியாச முதலியவற்றை யுணர்வதால் பெறப்படுதலின், அது (அவ்வாத்மா) நிர்விகாரி (விகாரமற்றது) என்பது பெறப்படுவதாம்.

### காரண அத்தியாசம்-காரிய அத்தியாசம்.

அதிஷ்டானத்தின் (கயிற்றின்) விஷம(வேருய)சத்தின் (பாம்பின்) அவபாசம் (தோற்றம்) அத்தியாசமாம்; அல்லது (பாம்பு) தனது அபாவ அதிகரணத்தில் (கயிற்றில்) அவபாசம் அத்தியாசமாம். இது காரணுத்தியாசம், காரியாத்தி

---

(இ - ள்.) மைந்தர் முதலாயிஞருடன் - புத்திரர் முதலாயிஞரோடு, ஆன்மாவிற்கு - ஆத்மாவிற்கு (உள்ள சம்பந்தம்), மண்ணுலகில் - (இப்)பூலோகத்தின்கண், பஃறியத்தர் - ஓடத்தி லிருப்போரது, விவகாரமென - வியவகாரத்தைப்போல, அந்தம் உற - முடிவுள்ள, சம்பந்த மாத்திராத்தியாசமாம் - சம்பந்த மாத்திராத்தியாசமாம், என்பர் - என்றதனைக்கூறுவர் (மேலோர்), இவ்வத்தியாசங்கள் தம்மால் - இவ்வெட்டத்தியாசங்களால், நந்து - ஆக்கமுள்ள, ஆன்மா - ஆத்மா, நிருவிகாரியென்றல் - நிர்விகாரியா மென்பதை, பெற்றும் - பெற்றனம், நவில்தரும் - (சாஸ்திரங்கள்) கூறுகின்ற, ஐந்தவத்தையுள - பஞ்சாவஸ்தையுண்டு, அவையாவை யென்னில் - அவ்வவஸ்தைகள் எவை யென்ருல், தொந்தம் உற - (தம்முள்) தொடர்புள்ள, நனவொடு - சாக்கிரமும், சொப்பனம் - சொப்பனமும், சுழுத்தி - சுழுத்தியும், துரியம் - துரியமும், துரியாதீதம் - துரியாதீதமும், ஆம் - (பஞ்சாவஸ்தைகள்) ஆம், அவற்றியல்பு - அவ்வவஸ்தைகளி னிலக்கணத்தை, மொழிவாம் - கூறுவாம், (எ - று). தான் - அசை.

யாசமென விருவகைத்தாம். (1) பிரபஞ்சத்திற்கு உபாதான (முதற்) காரணமாய மாயை சுத்தசேதனத்தில் (சிவத்தில்) தான் அத்தியாசமா யிருத்தற்குத் தானேகாரணமாயிருப்பதாம்; அதனால், அது காரணாத்தியாசமெனப்படுகின்றது. இது விளக்குத் தனது பிரகாசத்திற்கும் பிறவற்றினது பிரகாசத்திற்கும் தானே காரணமா யிருப்பதுபோல்வதாம். (2) அக்காரணாத்தியாசவடிவமாயையால் பிரபஞ்சம் சுத்தசேதனத்தில் அத்தியஸ்த (கற்பித)மா யிருத்தல் காரியாத்தியாசமாம். ஒன்றன்கண் பிறிதொன்றனது தோற்றம் அத்தியாசமாம்; அல்லது சத்தியவஸ்துவும் மித்தியாவஸ்துவும் சேர்ந்து தோன்றுவது அத்தியாசமாமென்பது காரணாத்தியாசத்திற்கும் காரியாத்தியாசத்திற்கும் பொதுவிலக்கணமாம். மித்தியாத்தியாச முதல் சம்பந்த மாத்திராத்தியாசமளவாயுள்ள அத்தியாசமெட்டும் காரியாத்தியாசமாம். ஸ்மிருதிரூபமாக வேறோரிடத்தில் முன்பார்த்த வஸ்துவின் தோற்றம் அத்தியாசமா மென்பது காரியாத்தியாசத்தி னிலக்கணமாம்.

### கேவல சம்பந்தாத்தியாசம் முதலியன.

"பிராந்தி (மயக்க)ஞானத்திற்கு விஷயமாகிய மித்தியாவஸ்துவிற்கும்(கயிற்றிற் றோன்றிய பாம்பிற்கும்) அதனது பிராந்தி ஞானத்திற்கும் அத்தியாசமென்று பெயராம். இவ்வத்தியாசம் அர்த்தாத்தியாசம் ஞானாத்தியாசமென விரண்டுவகைப்படும். கயிற்றிற் றோன்றிய பாம்பு அர்த்தாத்தியாசமாம் ; அதன் ஞானம் ஞானாத்தியாசமாம். இவ்விரண்டனுள், அர்த்தாத்தியாசம்: (1) கேவல சம்பந்தாத்தியாசம், (2) சம்பந்தசகித சம்பந்தியத்தியாசம், (3) கேவல தர்மாத்தியாசம், (4) தர்மசகித தர்மியத்தியாசம், (5) அன்னியோன்னியாத்தியாசம், (6) அன்னியதராத்தியாசம் என் றறுவகையாம்.

### (1) கேவல சம்பந்தாத்தியாசம்.

வெள்ளியில் கிளிஞ்சலின் தாதாத்மிய சம்பந்தாத்தியாச முண்டாவது போல, அநான்மாவி (ஜடத்தி)ல் ஆன்மாவின் அத்தியாச முண்டாகின்றது. ஆண்டு அநான்மாவில் ஆன்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாகாது அதனது தாதான்மிய (ஒற்றுமை வடிவ) சம்பந்தம் அத்தியஸ்தமாம்; ஆகவே, அநான்மாவில் ஆன்மாவின் சம்பந்தம் கேவல சம்பந்தாத்தியாசமாம். [அநாத்மாவில் ஆத்மாவின் சம்பந்த மிருப்பதாகத் தோன்றுதல் மயக்கத்தா லாவதன்றி உண்மையி லின்றெனப திதன் கருத்தாம்.] வானவளைவில் வானத்தின் சம்பந்தமிருக்கின்றதென்பது மிதற் குதாரணமாம்.

### (2) சம்பந்த சகித சம்பந்தியத்தியாசம்.

கயிற்றினிடத்து (அதிற்றோன்றிய) பாம்பின் சம்பந்தமும் அதன் (பாம்பின்) சொரூபமுமாகிய இரண்டும் அத்தியஸ்தமாதல் (கற்பனையாயிருத்தல்) போல, ஆன்மாவில் அநான்மாவின் சம்பந்தமும் (அதன்) சொரூபமுமாகிய இரண்டும் அத்தியாசமாகின்றன. ஆதலால், ஆன்மாவில் அநான்மாவின் சம்பந்த சகித (சம்பந்தத்தோடு கூடிய) சம்பந்தியி னத்தியாசமுண்டாகின்றது. சம்பந்தத்தையுடையது சம்பந்தியாம்.

### (3) கேவல தர்மாத்தியாசம்.

நான் வெளுத்தேன் - நானிளைத்தேன் என்னு மிடத்து ஸ்தூல தேகத்தின் வெண்மை முதலியனவும், நான் பார்த்தேன்-நான் கேட்டேன் என்னுமிடத்துச்



சூட்சும தேகத்தின் பார்வை முதலியனவுமாகிய தர்மங்கள் ஆத்மாவில் அத்தியஸ்தமாகின்றன; அத்தேகங்களின் சொரூபம் அத்தியஸ்தமாவதில்லை. ஆதலால், ஆத்மாவில் ஸ்தூல சூக்கும தேகங்களின் கேவலதர்மத்தி னத்தியாசமுண்டாகின்றது. வேறொன்றனையாசிரயித்ததாய் (பற்றுக் கோடாக வுடைதாய்)ச் சுதந்தரமின்றி யிருப்பது தர்மமெனப்படும். வெண்மை, இளைத்தல், பார்த்தல், கேட்டல் முதலியன தர்மங்களாம்.

### (4) தர்மசகித தர்மியத்தியாசம்.

நான் கர்த்தா-நான் போக்தா என்னுமிடத்துக் கர்த்திருத்துவமும் (கர்த்தாவாந் தன்மையும்), போக்திருத்துவமும் (போகத்தை யநுபவிக்குந் தன்மையும்) ஆத்மாவின் தர்மமாயிராது அந்தக்கரணத்தின் தர்மமா யிருக்கின்றன. ஆத்மா நிர்விகாரமா யிருத்தலால், அதன்கண் யாதொரு விகாரமு மின்றாம்; ஆயினும், அந்தக்கரணத்தின் கர்த்திருத்துவாதி தர்மங்களும் (அதன்) சொரூபமுமாகிய இரண்டும் ஆத்மாவில் (கிளிஞ்சலில் வெள்ளித்தன்மைத் தர்மமும் அதன் சொரூபமும் கற்பனையா யிருத்தல் போல) அத்தியஸ்தமா யிருக்கின்றன. ஆதலால், ஆத்மாவில் அந்தக்கரணத்தின் தர்ம சகித தர்மியின் அத்தியாசமுண்டாகின்றது. தர்மத்தையுடையது தர்மியெனப்படும்.

### (5) அன்னியோன்னியாத்தியாசம்.

காய்ச்சிய இரும்பில் இரும்பின் தன்மை அக்கினியிலும் அக்கினியின் தன்மை இரும்பிலும் இருத்தல்போல, ஆத்மாவில் அநாத்மாவின் அத்தியாசமும், அநாத்மாவில் ஆத்மாவின் அத்தியாசமும் இருத்தல் அன்னியோன்னியாத்தியாசமாம். ஒன்றற்கொன் றத்தியாசமாதல் அன்னியோன்னியாத்தியாசத்தின் வடிவமாம்.

(1) சத்து, (2) சித்து, (3) ஆநந்தம், (4) அத்வைதத்துவம் (இரண்டென்னுந் தன்மையின்மை) என்னும் நான்கு விசேடணங்களும் ஆத்மாவிற் குரியனவாம்; (1) அசத்து, (2) ஜடம், (3) துக்கம், (4) துவைத சகிதத்துவம் (இரண்டோடு கூடி யிருக்குந்தன்மை) என்னும் நான்கு விசேடணங்களும் அநான்மாவிற் குரியனவாம். இவற்றுள், அநான்மாவின் துக்கம் துவைதசகிதத்துவம் என்னுமிவ்விரண்டு விசேடணங்களும் ஆத்மாவின் ஆநந்தத்தையும் அத்வைதத்துவத்தையும் மறைக்கின்றன; அம்மறைத்தலினால் ஆத்மாவில் 'நான் ஆநந்தரூபனும் அத்வைத ரூபனுமு மிருக்கின்றேன்' என்னும் ஞானமுண்டாகாது, 'நான் துக்கியாயும் ஈசுவராதிகளிலும் வேறானவனுயு மிருக்கிறேன்' என்னும் ஞானமுண்டாகின்றது. ஆன்மாவின் சத்து - சித்து என்னு மிவ்விரண்டு விசேடணங்களும் அநான்மாவின் அசத்துவத்தையும் ஜடத்துவத்தையும் மறைக்கின்றன; அதனால், அநான்மாவாகிய அகங்காராதிகளில் இஃது 'அசத்தாயும் ஜடமாயுமிருக்கின்றது' என்னும் ஞானமுண்டாகாது, 'இருக்கின்றது, விளங்குகின்றது' என்னும் ஞானமுண்டாகின்றது. இவ்வாறு ஆன்மாநான்மாக்களுக்குப் பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) அத்தியாச மிருக்கின்றமை காண்க.

இருத்தலென்பது சத்து; விளங்குதலென்பது சித்து.

(6) அன்னியதராத்தியாசம்.

இரண்டில் ஒன்றனது அத்தியாசம் அன்னியதராத்தியாசமாம். (அன்னியதரம்—இரண்டிலொன்று.) அரவில் கயிற்றின் சொரூபம் அத்தியஸ்தமாகாது கயிற்றில் அரவின் சொரூபம் அத்தியஸ்தமாதல் போல, அநான்மாவில் ஆன்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாகாது ஆன்மாவில் அநான்மாவின் சொரூபம் அத்தியஸ்தமாதல் அன்னியதராத்தியாசமாம்.

இங்குக் கூறிய ஆறுவகை யத்தியாசமும் கீழ்க்கூறப்படும் இருவகை யத்தியாசத்துள் அடங்கும்.

அவை (1) சொரூபாத்தியாசம் (2) சம்சர்க்காத்தியாசமென்பனவாம்.

1. சொருபாத்தியாசம்.

தத்துவ ஞானத்தால் பொய்யென்று நிச்சயிக்கத்தக்க வஸ்து (பாம்பு) அதிஷ்டானத்தில் (கயிற்றில்) சொரூபமாக அத்தியஸ்தமாயிருக்கின்றது. தேகாதிப் பிரபஞ்ச அநான்மாவிற்கு அதிஷ்டான (ஆன்ம) ஞானத்தால் பாதம்(பொய்யென்று நிச்சயித்தல்) உண்டாதலால், ஆன்மாவில் அதன் சொரூபாத்தியாசமுண்டாகின்றது. ஒன்றன் முழுவடிவமும் மற்றொன்றில் அத்தியஸ்தமாதல் சொரூபாத்தியாசமாம்.

2. சம்சர்க்காத்தியாசம்.

பாதிக்க (பொய்யென்று நிச்சயிக்க)த் தகாத வஸ்துவின் சொரூபம் அத்தியஸ்தமாவதின்று; ஆனால், அதன் சம்பந்தம் அத்தியஸ்தமாம். ஆதலால், அநான்மாவில் ஆத்மாவின் சம்சர்க்காத்தியாச முண்டாகின்றது. ஆகவே, இது சம்சர்க்காத்தியாசமாம். சம்சர்க்கம்—சம்பந்தம்.

(1) கேவல தர்மாத்தியாசம், (2) தர்ம சகித தர்மியத்தியாசம், (3) அந்நியதராத்தியாச மென்னு மிம்மூன்றும் சொரூபாத்தியாசத்தி லந்தர்க்கதமாம்; (4) கேவல சம்பந்தாத்தியாசம் சம்சர்க்காத்தியாசமேயாம்; (5) சம்பந்த சகித சம்பந்தி யத்தியாசம் சம்சர்க்காத்தியாசசகித சொரூபாத்தியாசமாம்; (6) அந்நியோந்நியாத்தியாசத்தில் சம்சர்க்காத்தியாசம் சொரூபாத்தியாசமென்னு மிரண்டுமுளவாம். ஏனெனின், ஆத்மாவின் சொரூபம் சத்தியமாகலின் (பாதிக்கத்தக்கதன்றாகலின்), அஃதத்தியஸ்த மாவதின்று; ஆனால், அதன் தாதாத்மிய சம்பந்தம் அநாத்மாவில் அத்தியஸ்தமாம்; ஆகையால், அதன் சம்கர்க்காத்தியாச முண்டாகின்றது. அநாத்மாவின் சொரூபம் மித்தையாகையால், அஃதாத்மாவில் அத்தியஸ்தமாகின்றது; ஆதலால், அதன் சொரூபாத்தியாச முண்டாகின்றது.'' என்று நாநாஜீவவாதக்கட்டளையின் குறிப்புரையி லெழுதப்பட்டிருப்பது இங்குணர்தற்பாலதாம்.

பஞ்சாவஸ்தை.

வினா:—பஞ்சாவஸ்தைகள் எவை?

விடை:—அவை சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியா தீதமென்பனவாம்.

(91)



**92.** பெருந்தூல வைம்பூத மீரைந்திந் திரியம் பிராணபஞ் சக
மோடுநாற் கரணமிவை யுருவா, மருந்தூல சரீரத்திற் சாத்துவித குண
மோ டகரவெழுத் தரிதெய்வம் விழியிடமே யாக, விருந்தாக விதயமல
ரட்டதள கதியில் விசுவசீ வனும்விராட் டிறையுமொருங் கடைந்து,
வருந்தாவில் விடயங்கள் கரணமனைத் தானு மருவிநுகர்ந் திடுதல்சாக்
கிரமதா மன்றே.

சாக்கிரம்.

1. சாக்கிராவஸ்தை - ஸ்தூல பஞ்ச பூதம், (ஞானேந்திரிய பஞ்சகம், கருமேந்திரிய பஞ்சக மென்னும்) தசேந்திரியம், பிராணாதிவாயு பஞ்சகம், அந்தக்கரண சதுஷ்டய மென்னும் இவ்விருபத்து நான்கு தத்துவ வடிவமாயுள்ள ஸ்தூல சரீரத்தின்கண் நிகழ்வதாம்; இச் சாக்கிராவஸ்தைக்குச் சத்துவம் குணமாம், அகரம் எழுத்தாம், அதிதெய்வம் விஷ்ணுவாம், நேத்திரம் ஸ்தான (இட)மாம். இவ் வவஸ்தையில் இருதய கமலத்துள்ள அஷ்ட தளத்தில் விசுவனென்னும் ஜீவனும் விராட்டென்னும் ஈசுவரனும் ஏகமாய்க் கூடிப் பொருந்தி வனிதாதி விஷயபோக மனைத்தையும் (அந்தக்கரண சதுஷ்டயம், ஞானேந்திரிய பஞ்சகம், கருமேந்திரியபஞ்சகம் என்னும்) எல்லாக்கரணங்களாலும் அனுபவிப்பர். இவர்களிவ்வாறு போகங்களை யனுபவிக்குஞ்சமயமே சாக்கிரா வஸ்தையாம். (கமலம் - தாமரை மலர்; அஷ்டதளம் - எட்டிதழ்; வனிதாதி - மனைவி முதலாயினோர்.) (92)

(இ - ள்.) பெருந்தூல ஐம்பூதம் - பெரிய ஸ்தூல பஞ்சபூதமும், ஈரைந்திந்திரியம்-(ஞானேந்திரிய பஞ்சகம் - கர்மேந்திரிய பஞ்சகமென்னும்) தசேந்திரியமும், பிராண பஞ்சகமொடு - பிராணாதி வாயு பஞ்சகமும், நாற்கரணம் - அந்தக்கரண சதுஷ்டயமும் (என்னும்), இவையுருவாம் - இவ்விருபத்து நான்கு தத்துவ வடிவமாகவுள்ள, அருந்தூல சரீரத்தில் - (கருமத்தாலன்றி மற்றொன்றால் நேரே பெறுதற்கு) அரிய ஸ்தூல சரீரத்தில் (சாக்கிராவஸ்தை பொருந்துவதாம்; அச்சரீரத்தில்), சாத்துவித குணமோடு - சத்துவ குணத்துடன், அகரவெழுத்து - அகரம் அட்சரமும், அரிதெய்வம் - விஷ்ணு அதிதெய்வமும், விழி-நேத்திரம், இடம் - ஸ்தானமும், ஆக-ஆக, இருந்து - (அமைந்து) இருந்து, ஆகம் - ஸ்தூல தேகத்தின்கண் (உள்ள), இதயமல ரட்டதள கதியில் - இருதயகமலத்தினது எட்டிதழ்களினிடத்தில் (சேர்ந்து), விசுவ சீவனும் - விசுவனென்னும் ஜீவனும், விராட்டிறையும் - விராட்டென்னும் ஈசுவரனும், ஒருங்கடைந்து - ஏகமாகப் பொருந்தி, வருந்தா - வருத்தமுற்று, இல் - (இல்லாளென்னும்) மனைவி (முதலிய), விடயங்கள் - விஷயங்களை, கரண மனைத்தானும் - (ஞானேந்திரிய பஞ்சகம் - கர்மேந்திரிய பஞ்சகம் - அந்தக்கரண சதுஷ்டய மென்னும்) கரணமெல்லா வற்றாலும், மருவி - பொருந்தி, நுகர்ந்திடுதல் - அனுபவிக்குஞ்சமயமே, சாக்கிரமதாம் - சாக்கிராவஸ்தையாம், (எ - று). கதி - இடம் - இல் - ஏழனுருபு, அன்று - ஏ - அசை. 92

**93.** பஞ்சபூ தமுஞ்சித்த புத்தியுநின் றொழிந்த பதினேழின் மய மாஞ்சூக் குமதனுவி னின்று, விஞ்சுரசோ குணமுகர மெழுத்ததிதெய் வந்தான் விரிஞ்சனிடங் களமாக நல்லிதய மென்னுங், கஞ்சமலர்க் கன்னிகா கதியிற்றை சதனுங் கனககர்ப் பனுமருவி நனவின்வா தனையை, நெஞ்சமெனுங் கரணத்தா லநுபவிக்கை தானே நிகழ்ந்திடுஞ் சோப் பனமென்று நிகழ்த்துவர்மு தறிஞர்.

---

சோப்பனம்.

2. சொப்பன வஸ்தை - முற்கூறிய இருபத்து நான்கு தத்துவங்களுள், ஸ்தூல பஞ்ச பூதமும் சித்தமும் புத்தியு மொழிந்துள்ள (மனம், அகங்காரம், ஞானேந்திரிய பஞ்சகம், கருமேந்திரிய பஞ்சகம், பிராணாதி பஞ்சக மென்னும்) பதினேழு தத்துவ வடிவமா யுள்ள சூட்சும சரீரத்தின்கண் நிகழ்வதாம்; இச் சொப்பனவஸ்தைக்கு இராசதம் குணமாம், உகரம் எழுத்தாம், அதிதெய்வம் பிரஹ்மாவாம், களம் (கண்டம்) ஸ்தானமாம். இவ்வவஸ்தையில் இருதய கமல கர்ணிகையின்கதியில் தைசதனென்னும் ஜீவனும் இரணிய கருப்பனென்னும் ஈசுவரனும் ஏகமாய்க் கூடிப் பொருந்தி, ஜாக்கிரவாசனா விஷய போகங்களை மனமென்னுங் கரணத்தால் அனுபவிப்பர். இவர்களிவ்வாறு போகங்களை யனுப விக்குஞ் சமயமே சொப்பனவஸ்தையாம்.

(கர்ணிகை - இதழ்களின்பற்றிடமாகிய பொகுட்டு; கதி—இடம். ஜாக்கிர வாசனா விஷயபோகங்கள் - ஜாக்கிராவஸ்தையின் வாசனையா லுண்டாய விஷ யங்களின் வாயிலாக வரும் சுகதுக்கங்கள்). (93)

---

(இ - ள்.) பஞ்ச பூதமும் சித்த புத்தியும் நின்று - (முற்கூறிய இருபத்து நான்கு தத்துவங்களுள்) ஸ்தூல பஞ்சபூதமும் சித்தமும் புத்தியும் (ஆகிய இவற் றின்) நின்றும், ஒழிந்த - நீங்கிய, பதினேழின் மயமாம் - பதினேழு தத்துவங் களின் வடிவமாயுள்ள, சூக்கும தனுவில் - சூட்சும சரீரத்தில் (சொப்பனா வஸ்தை யிருப்பதாம்; அச்சூட்சும சரீரத்தில்), நின்று - இருந்து, விஞ்சு - மிக்கு வளர்கின்ற, ரசோகுணம் - இராசதகுணத்தோடு, உகரமெழுத்து - உகரம் அட் சரமும், விரிஞ்சன் - பிரமன், அதிதெய்வம் - அதிதெய்வமும், இடம் - ஸ்தா னம், களம் - கண்டமும், ஆக - ஆக, நல்லிதய மென்னும் - சிறந்த இருதய மென்று கூறப்படுகின்ற, கஞ்சமலர்க் கன்னிகாகதியில் - தாமரைமலர்ப் பொகுட் டிடத்தில், தைசதனும் - தைசத னென்னும் ஜீவனும், கனக கர்ப்பனும் - இர ணிய கருப்ப னென்னும் ஈசுவரனும், மருவி - (ஏகமாய்க்) கூடி, நனவின் வாச னையை - சாக்கிராவஸ்தையின் வாசனையாலுண்டாய விஷயபோகத்தை, நெஞ்ச மெனுங்கரணத்தால் - மனமென்னும் கரணத்தால், அநுபவிக்கை தானே - அனுபவிக்குஞ்சமயமே, நிகழ்ந்திடும்-(நிலை பேறின்றி) விளங்குகின்ற, சொப்பன மென்று - சொப்பனவஸ்தையா மென்று (அதனை), முதறிஞர் - பேறறிவுடை யோர், நிகழ்த்துவர் - கூறுவர், (எ - று). 93



**94.** மேய்ந்துதிரி பார்ப்படக்கி யுறங்களகு போல விரிந்தகா ரியங் களையுட் கொண்டுவோ சனையோ, டாய்ந்தவான் மாசிரயத் தவத்தை யற விருக்கு மரும்பகுதி மயமாங்கா ரணவுடம்பிற் றமமே, யேய்ந்த குண மகரவெழுத் தரன்றெய்வ மிதய மிடமாகக் கமலமலர்ப் பொகுட்டு நடுக் கதியி, லோர்ந்தபிராஞ் ஞனும்பரனு மாய்ப்பிரமா நந்த முறுமாயா விருத்தியெனு நுண்கரணந் தன்னால்.

---

சுழுத்தி.

3. சுழுத்தியவஸ்தை பறந்து மேய்ந்து திரிகின்ற தனது குஞ்சுகளனைத்தை யும் தனது சிறையி லடக்கிக்கொண்டு நித்திரை செய்கின்ற அளகு (பெட்டைக் கோழியைப்)போல, தனது காரியமனைத்தையும் தன்னுளடக்கிக்கொண்டு அவற் றின் வாசனையுடனே ஆத்மாசிரயத்தின்கண் சாக்கிரம் - சொப்பன மென்னும் சகலாவஸ்தையொழிய (நிரவஸ்தையாக)இருக்கும் பிரகிருதி வடிவமான காரண சரீரத்தின்கண் நிகழ்வதாம். இச்சுழுத்தி அவஸ்தைக்குத் தாமதம் குணமாம்; மக ரம் எழுத்தாம்; அதிதெய்வம் உருத்திரனும்; இருதயம் ஸ்தானமாம்; இவ்வவஸ்தை யில் அக்கமல கர்ணிகையின் மத்தியகதியில் பிராஞ்ஞனென்னும் ஜீவனும் அந்தர் யாமி யென்னும் ஈசுவரனும் ஏகமாய்க் கூடிப்பொருந்திப் பிரஹ்மாநந்த வடிவ விஷயபோகத்தை மாயா விருத்தி யென்னும் சூக்கும கரணத்தால் அனுபவிப்பர். இவர்களிவ்வாறு போகத்தை யனுபவிக்குஞ்சமயமே சுழுத்தி அவஸ்தையாம்.

(ஆத்மாசிரயம் - ஆத்மாவாகிய ஸ்தானம். சாக்கிரத்தில் போகம் இந்திரிய விருத்தியாலும், சொப்பனத்தில் போகம் மனோ விருத்தியாலும், சுழுத்தியில் போகம் மாயா விருத்தி அல்லது அவித்தியா விருத்தியாலும் ஜீவேசுவரர்களால் அனுபவிக்கப் படுகின்றன வென்பது இங்கு உணர்தற் பாலதாம்.)

"சுரோத்திர முதலிய ஞானேந்திரியங்களால் சப்த முதலிய விஷயங்க ளெக்காலத்தி லறியப்படுகின்றனவோ அக்காலம் சாக்கிராவஸ்தையாம்."

---

(இ - ள்.) மேய்ந்து திரி - (பறந்து) மேய்ந்து திரிகின்ற, பார்ப்படக்கி - குஞ்சுகள் (அனைத்தையும் தனது பட்ச மென்னும் சிறையில்) அடக்கிக்கொண்டு, உறங்கு அளகுபோல - நித்திரை செய்கின்ற பெட்டைக் கோழியைப்போல, விரிந்த காரியங்களை - (நாம - ரூப வடிவமாக) விரிந்துள்ள காரிய மனைத்தையும், உட்கொண்டு - (தன்) உள்ளடக்கிக்கொண்டு, வாசனையோடு - (அக்காரியங் களின்) சம்ஸ்காரத்துடன் (கூடி), ஆய்ந்த - (மிகச்) சிறந்துள்ள, ஆத்மா சிர யத்து - ஆத்மாசிரயத்தில், அவத்தையற - (சாக்கிரம் - சொப்பனமென்னும்) அவஸ்தை யொழிய (நிரவஸ்தையாக), இருக்கும் - இருக்கின்ற, அரும்பகுதி மயமாம் - (தத்துவஞான முண்டாமளவும் கெடுதல்) இல்லாத பிரகிருதி வடிவமா யிருக்கின்ற, காரண வுடம்பில் - காரண சரீரத்தில் (சுழுத்தியிருப்பதாம்; அச் சரீரத்தில்), ஏய்ந்த தம குணம்-பொருந்திய தாமதகுணத்தோடு, மகாவெழுத்து- மகாரம் அட்சரமும், அரன் தெய்வம் - உருத்திரன் அதிதெய்வமும், இதயமிடம் - இருதயம் இடமும், ஆக - ஆக, கமல மலர்ப்பொகுட்டு நடுக்கதியில் - (அந் தத்) தாமரைப் பூப் பொகுட்டின் நடுவிடத்தில், ஓர்ந்த - ஆராய்ந்தறிதற் குரிய, பிராஞ்ஞனும் - பிராஞ்ஞனென்னும் ஜீவனும், பரனும் - அந்தர்யாமி யென்னும் ஈசுவரனும், ஆய் - (ஏகம்) ஆய் (இருந்து), பிரமாநந்தம் - பிரஹ்மாநந்த (விஷய போக)த்தை, உறும் - பொருந்திய, மாயா விருத்தியெனும்-மாயா விருத்தியென் னும், நுண்காணந்தன்னால் - சூட்சும காரணத்தால், (எ - று). (பிரகிருதி - அவித்தை; மாயாவிருத்தி - அவித்தியா விருத்தி.) ஏ - அசை. 94

**95.** அநுபவித்தல் சுழுத்தியா மிந்நனவா திகண்மூ வவத்தையோடு முத்தாம முப்புரமுத் தானம், பினுமுத்தே யங்களெனும் பரியாய நாமம் பெறுமுரைத்த சாக்கிரத்தே யகக்கமல மழிந்து, மனவழக்கந் தவிர்ந் துபரந் தனைச்சிந்தித் திடலே வருதுரிய மப்பரமான் மாவின்மன மடங் கன், முனமுரைத்தல் செய்துரியா தீதமெனப் புகல்வர் மொழிந்தவற் றுட் டாவரங்கள் பெறுதலிருட் சுழுத்தி.

---

*"சாக்கிராவஸ்தையில் பார்க்கப்பட்ட பொருள்களாலும் கேட்கப்பட்ட பொருள்களாலும் உண்டாகிய வாசனையால் நித்திராகாலத்தில் எதில் பிரபஞ்சம் தோன்றுகின்றதோ அது சொப்பனவஸ்தையாம்."*

*"யான் ஒன்றுமறியேன்; நித்திரை யென்னுற் சுகமாயனுபவிக்கப்பட்டதென் னும் நினைவிற்கு ஏதுவாகிய அநுபவகாலம் சுழுத்தி அவஸ்தையாம்."*

*என்று தத்துவபோதம் கூறுவது மிங்குணர்தற்பாலதாம்.* (94)

**சகல கேவலங்களின் பரியாயநாமம்.**

*(சகலம் - சாக்கிரம் சொப்பனம்; கேவலம் - சுழுத்தி.)*

*இந்தச் சாக்கிர முதலிய அவஸ்தை மூன்றும் அவஸ்தாத்திரயம், தாமத்திரயம், புரத்திரயம், ஸ்தானத்திரயம், தேசத்திரய மென்னும் பரியாய நாமங்களுடையனவாம்.*

**துரியம்.**

*4. அதிகாரி புருஷன் முற்கூறிய ஜாக்கிராவஸ்தையின்கண் அந்த இருதய கமலம் நெகிழ்ந்து மனோ வியாபாரமின்றி யிருக்க (பிரஹ்மைவாகம் - பிரஹ்மமே நானென்று) பரமாத்ம சிந்தனை செய்வதே அவனுக்குத் துரிய அவஸ்தையாம். (இது சவிகற்ப சமாதி யென்று கூறப்படுவதாம்.)*

---

*(இ - ள்.) அநுபவித்தல் - அநுபவிக்குஞ்சமயமே, சுழுத்தியாம் - சுழுத்தி அவஸ்தையாம், இந்நனவாதிகள் - இச்சாக்கிர முதலிய அவஸ்தைகள், மூவவத்தையொடு - அவஸ்தாத்திரயத்துடன், முத்தாமம் - தாமத்திரயமும், முப்புரம் - புரத்திரயமும், முத்தானம் - ஸ்தாநத்திரயமும், பினும் - பின்னும், முத்தேயங்கள் - தேசத்திரயமும், எனும் - என்று கூறப்படுகின்ற, பரியாய நாமம் - பரியாயப் பெயர்களை, பெறும் - பெறுவனவாம், உரைத்த - (அவஸ்தாத்திரயத்துள் முதலாவதாகக்) கூறப்படுகின்ற, சாக்கிரத்தே - ஜாக்கிராவஸ்தையில், அகக்கமலமழிந்து - (அந்த) இருதயதாமரை மலர் மாறி (நிற்கவும்), மனவழக்கம் தவிர்ந்து - மனோவியாபாரம் நீங்கிப்(போகவும்), பரந்தனைச் சிந்தித்திடலே- பரமாத்மாவை (தானாக)ப் பாவனைசெய்தலே, வரு - (அதிகாரி புருஷர்க்குவசமாக) வருகின்ற, துரியம் - துரியாவஸ்தையாம், அப்பரமான்மாவில் - (துரியாவஸ்தையில்) அந்தப் பரமாத்மாவின்கண், மனமடங்கல் - மனம் (பதைப்பற்று) அடங்கிப்போதலே, முன முரைத்தல்செய் - முன்னர்க் கூறிய, துரியாதீதமெனு - துரியாதீதமா மென்று, (அதனை மேலோர்), புகல்வர் - கூறுவர், மொழிந்த அவற்றுள் - கூறிய அப்பஞ்சாவஸ்தைகளுள், தாவரங்கள் - (விருட்ச முதலிய) தாவரப்பொருள்கள், பெறுதல் - அடைவது, இருள் - அந்தகாரவடிவமாயுள்ள, சுழுத்தி - சுழுத்தி அவஸ்தையாம், (எ - று).* 95



**96.** விலங்குமுத லனபெறுவ சுழுத்தியொடு கனவால் விண்ணவர்க்கு நனவுநரர்க் கம்மூன்று மாகும்,கலங்கலறு மருளர்க்குத் துரியமகா யோகி கட்குவரு வதுதுரியா தீதமுதன் மூன்று, மலங்கலுறு மநுடர்க்குத் தமிற்றுமே தோன்றி வருபந்த மாமேனை யிரண்டுமியோ கத்தா, லிலங்கு முத்தி சாதனமா மவையொன்றி லேயொன் றிலாமையினுற் காலதே சங் கணிய மம்போய்.

---

**துரியாதீதம்.**

*5. அவ்வதிகாரி புருஷன் அத்துரியாவஸ்தையின்கண் விளங்கும் பிரத்தியக் ஆத்மாவின்கண் மனம் (செயலற்று) ஒடுங்கி நிற்க இருத்தலே அவனுக்குத் துரியாதீத அவஸ்தையாம் (இது நிர்விகற்ப சமாதியென்று கூறப்படுவதாம்.)*

**பஞ்சாவஸ்தைகளின் பகுப்பு.**

*1. இப்பஞ்சாவஸ்தைகளுள், புல் மர முதலிய தாவரங்கள் பெறுவது சுழுத்தி அவஸ்தையாம் ;* (95)

*2. பசு பட்சி முதலியன பெறுவன சொப்பனவஸ்தையும் சுழுத்தி அவஸ்தையுமாம்;*

*3. இந்திரன் முதலிய இமையவர் பெறுவது சாக்கிராவஸ்தையாம்;*

*4. நர ரென்னும் மக்கள் பெறுவன சாக்கிராவஸ்தையும், சொப்பனவஸ்தையும், சுழுத்தி அவஸ்தையுமாம்;*

*5. உலக நோக்கமின்றி உன்மத்தர்போலிருக்கும் சாதக புருஷர் பெறுவது துரியாவஸ்தையாம்;*

*6. சிவஞான யோகிகள் பெறுவது துரியாதீத அவஸ்தையாம்.*

---

*(இ - ள்.) விலங்கு முதலன - மிருக முதலிய பிராணிகள், சுழுத்தியொடு கனவு - சுழுத்தியவஸ்தையையும் சொப்பனவஸ்தையையும், பெறுவ-அடைவனவாம், விண்ணவர்க்கு - (இந்திரன் முதலிய) இமையவர்க்கு, நனவு - சாக்கிராவஸ்தை (ஒன்றே யுண்டாவதாம்), நரர்க்கு - மக்களுக்கு, அம்மூன்றுமாகும் - அம்மூன்றவஸ்தையு முண்டாவனவாம், கலங்கலறும் - (சித்தங்) கலங்குதலில்லாத, மருளர்க்கு - உன்மத்தர்க்கு, துரியம் - துரியாவஸ்தை (உண்டாவதாம்), மகாயோகிகட்கு - பெருமை பொருந்திய சிவயோகிகளுக்கு, வருவது - உண்டாவது, துரியாதீதம்- துரியாதீத அவஸ்தையாம், முதல் மூன்றும் - (அப்பஞ்சா வஸ்தையுள்) முதற்கண்ணுள்ள மூன்றவஸ்தைகளும், மலங்கலுறும் - சஞ்சலமுடைய, மநுடர்க்கு - மக்களுக்கு, தமிற்றுமே தோன்றி - தம்மில் தாமேயுண்டாய், வரு - வருகின்ற, பந்தமாம் - (சம்சார) பந்த (சாதன)மாம், ஏனையிரண்டும் - மற்றைய விரண்டவஸ்தைகளும், யோகத்தால் - யோகாப்பியாசத்தால் (உண்டாய்), இலங்குமுத்திசாதனமாம் - (மாறுது) விளங்குகின்ற மோட்ச சாதனமாம், அவை - அவ்வவஸ்தைகள், ஒன்றிலே ஒன்று - ஓரவஸ்தையில் மற்றோரவஸ்தை இலாமையினுல் - இல்லாமையாலும், காலதேச நியமம் - காலதேச நியமத்தில், (இலாமையினுல் - தோன்றுவதில்லாமையாலும்),; பொய் - மித்தையாம், (எ - று), ஆல் - அசை.* 96

**97.** சோற்றவவத் தைகளிலனு சூதனு யறியுந் துரியனே யுள
ளனவு கனவிலறி வுண்மை, பெற்றனமச் சுழுத்தியினிற் பெறலுரைப்பி
னெழுந்து பிறிதோன்று மறியாது சுகத்துறங்கி னேனேன், றுற்றவிரு
நினைவுமநு பவஞ்சுழுத்தி யதனி லுறுதுவரா வேனுமருத்தா பத்தியினுற்
பொருள்கண், முற்றுமடக் கிருள்விழிகாண் குதலெனக்கா ரியங்கண்
முழுதையுமுட் கொண்டபே ரவித்தையிரு ளினையும்.

இவ்வவஸ்தையைந்தனுள் முன்னுள்ள சாக்கிரம் - சொப்பனம் - சுழுத்தி யென்னும் அவஸ்தை மூன்றும் மக்களுக்குத் தம்மிற்றுமே தோன்றி (அவர்களுக்குப்) பந்த சாதனமா யிருப்பனவாம்; பின்னுள்ள துரியம் - துரியாதீத மென்னும் அவஸ்தை யிரண்டும் மக்களுக்கு யோகாப்பியாச பலத்தால் தோன்றி (அவர்களுக்கு) மோட்ச சாதனமா யிருப்பனவாம்.

அவஸ்தா மித்தியாத்துவம்.

அப்பஞ்சாவஸ்தைகளுள் சாக்கிரத்தில் மற்றைய நான்கும், சொப்பனத்தில் மற்றைய நான்கும், சுழுத்தியில் மற்றைய நான்கும், துரியத்தில் மற்றைய நான்கும், துரியாதீதத்தில் மற்றைய நான்கு மில்லாமையாலும், அவ்வவஸ்தைகள் காலதேச நியமங்களில் தோன்றுமையாலும், அவை யைந்தும் மித்தையாம். 96

ஆத்ம சித்தி.

வினு:—கூறிய அவஸ்தைகளில் ஆத்மா உண்டேன்பது எங்ஙனம்?

(இ - ள்.) சொற்ற - (மித்தையாமெனக்) கூறிய, அவத்தைகளில் - (சாக்கிர முதலிய) பஞ்சாவஸ்தையிலும், அனுசூதனுய் - நீங்காதவனுய் (இருந்து), அறியும் - (அவ்வவஸ்தைகளை மாறுதலின்றி) அறிகின்ற, துரியனேயுளன் - கூடஸ்தனே யிருக்கின்றுன், (அதனுல்), நனவுகனவில் - சாக்கிராவஸ்தையிலும் சொப்னுவஸ்தையிலும், அறிவுண்மை - அறிவுண்டென்பதை (பிரசித்தமாக), பெற்றனம் - பெற்றும், அச்சுழுத்தியினில்-அந்தச்சுழுத்தியவஸ்தையில், பெறலுரைப்பின்-(அறிவுண்டென ஏற்கப்) பெறுதலைக் கூறமிடத்து, எழுந்து-(சுழுத்தியினின்றும் விழித்து) எழுந்து, பிறிதொன்றுமறியாது-வேறென்றையும் அறியாமல், சுகத்துறங்கினேன்-(நான்) சுகமாகத்தூங்கினேன், என்றுற்ற-என்று பொருந்திவருகின்ற, இருநினைவும் - இருவகை நினைப்பும், சுழுத்தியதனில் - சுழுத்தியவஸ்தையில், அனுபவம்-அனுபவமானது, உறுது - பொருந்தாது, (இல்லாமல்), வாரா - உண்டாக மாட்டாவாம், எனும் அருத்தாபத்தியினுல் - என்னும் அருத்தாபத்திப் பிரமாணத்தால், பொருள்கள் முற்றும் - (கடபட முதலிய) பொருள்களனைத்தையும், அடக்கு - (தன்னுள்) அடக்கிக்கொண் டிருக்கின்ற, இருள் - அந்தகாரத்தை, விழிகாண்குதலென - கண் பார்ப்பதுபோல, காரியங்கள் முழுதையும்-(தனது) காரியமாய நாமரூபப்பிரபஞ்ச மனைத்தையும், உட்கொண்ட - (தன்னுள்) அடக்கிக்கொண்டிருக்கின்ற, பேரவித்தையிருளினையும் - பெரிய அவித்தையாகிய அந்தகாரத்தையும், (எ - று). 97



**98.** அந்தவவித் தையினதுசூக் குமவிருத்தி தன்னி லலையுமரத்
திலையிடையில் வெண்ணிலாத் துளிபோல், வந்திலங்கி யடங்குநிசா
நந்தக்கூற் றினையும் வருகரணுந் தராபேட்சை யின்றியே யான்மா,
முந்துரைசெய் சுழுத்தியினி லநுபவிக்கை யாலே மொழிந்ததனி லறி
வுளதா மேதுமறி யாம, னந்துசுகத் துறங்கினே னெனற்கேது விடய
ஞானமிலா மையுங்குடும்ப நிவிர்த்தியுமா முறையே.

விடை:—(சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதமென்னும் அவஸ்தை யைந்தும் ஓரறிவிற்கு விஷயமாயிருத்தலின்) அவ்வவஸ்தை யைந்திலும் அநுசூதமாய் (தொடர்ச்சியாயிருந்து) அவற்றை யறியும், (அவிநாசியும், சாட்சியும், அசங்கமுமாயுள்ள) துரியவடிவ ஆத்மா இருக்கின்றது; (இதனுல், நம்மனோரது அனுபவத்திற்குச் சாக்கிரம் - சொப்பனம் - சுழுத்தியென்னும் அவஸ்தாத்திரயத்துள்)சாக்கிரத்திலும் சொப்பனத்திலும் ஆத்மாவுண்டென்பதுவெளிப்படையாகப் பெறப்படுவதாம்.

வினு:—சுழுத்தியில் ஆத்மா உண்டேன்பது எங்ஙனம்?

விடை:—(ஒவ்வொருவர்க்கும்) சுழுத்தியினின்றும் எழுந்த காலத்து நான் பிறிதொன்றும் அறியாது சுகமாகத் தூங்கினேனென் றுண்டாய இருவகை நினைவும் சுழுத்தியின்கண் பிறிதொன்று மறியாமை, சுகமாகத் தூங்குதல் என்னுமிவற்றின் அனுபவமின்றி யுண்டாதல் கூடாது என்னும் அருத்தாபத்திப் பிரமாணத்தால், கடபட முதலிய பொருளனைத்தையும் தன்னுளடக்கிக் கொண்டுள்ள இருளை நேத்திரேந்திரியம் காணுதல்போல, (தனது) காரிய மனைத்தையும் தன்னு ளடக்கிக் கொண்டுள்ள அவித்தை யென்னும் இருளையும், அந்த அவித்தையின் சூக்குமவிருத்தியி னிடையில் காற்றினு லலைகின்ற விருட்சத்தின் இலைகளினிடையில் சந்திரிகா லேசங்கள் தோன்றி விளங்கி மறைவது போலத் தோன்றி விளங்கி மறையும் (ஜீவனது) நிஜ (சொரூபமாயுள்ள பிரத்

(இ - ள்.) அந்த வவித்தையினது - அவ்வவித்தையின், சூக்கும விருத்தி தன்னில் - சூட்சும விருத்தியில், அலையுமரத்திலையிடையில் - (காற்றுல்) அசைகின்ற விருட்சத்தினது இலைகளின் நடுவில், (தோன்றி விளங்கி மறையும்), வெண்ணிலாத்துளிபோல் - வெண்மையாகிய நிலாவினது துளிகளைப்போல, வந்திலங்கியடங்கும் - தோன்றி விளங்கி மறையும், நிசாநந்தக்கூற்றினையும் - நிஜாநந்தத்தினது அம்சங்களையும், வரு - (சாக்கிர - சொப்பனங்களில் தொடர்ந்து) வருகின்ற, காணுந்தராபேட்சை-வேறு கரணங்களின் அபேட்சை, இன்றி - இல்லாமல், ஆத்மா - ஆத்மாவானது, முந்துரைசெய் - முன்னர்க் கூறிய, சுழுத்தியினில் - சுழுத்தியவஸ்தையில், அனுபவிக்கையால் - அனுபவித்துக்கொண்டிருத்தலின், மொழிந்தஅதனில் - கூறிய அச்சுழுத்தியவஸ்தையில், அறிவுளதாம் - அறிவு உளதாம் (எனல் சத்தியமாம்), ஏதுமறியாமல் - (நான்) எதனையும் அறியாமல், நந்து - விளங்குகின்ற, சுகத்து உறங்கினேன் - சுகமாகத்தூங்கினேன், எனற்கேது - என்று கூறுதற்குக்காரணம், முறையே - கிரமமாக, விடயஞானமிலாமையும் - (கடபடாதி) விடயங்களின் ஞானமில்லாமையும், குடும்ப நிவிர்த்தியும் - சம்சார (துக்க) நிவிருத்தியும், ஆம் - ஆகும், (எ - று). ஏதுமறியாமைக்கேது விடயஞானமில்லாமையாம்; சுகத்துறங்கினேனென்றற்கேது குடும்ப நிவிர்த்தியாம். காணுந்தராபேட்சை என்பது கரண - அந்தர - அபேட்சை யெனப் பிரிபடும். கரணம் - அகக்கரணம், புறக்கரணம்; அந்தரம் - வேறு; அபேட்சை - சகாயம். 98

**99.** மன்றசுழுத் தியிலதற்குக் கரியாமா நந்த மயவுயிருண் டெனிலொருவ ராகிலுமாண் டறிந்தே, னென்றலில தேதுகா ரணமே னிலோர் பொருளை யெடுப்பநீர் மூழ்கினோ னுண்டுளதென் பதுமேற், சென்றலது புகலவொணா ததுபோலக் கருமச் செயலினா லெழுந்து துணை யாங்கரணங் கூடி, னன்றியதி லறிந்தபொருள் கூறொணா தாகு மாதலினா லுயிர்சச்சி தாநந்த வொளியாம்.

---

தியக் ஆத்மாவினது) ஆநந்தாம்சங்களையும், (மாயாவிருத்தி யென்னும் சூக்கும கரணத்தை யபேட்சித்து நின்ற ஞானேந்திரியம், அந்தக்கரணமென்னும்) வேறு கரணங்களை யபேட்சித்த லில்லாது, ஆத்மா சுழுத்தி யவஸ்தையில் அனு பவித்துக்கொண்டிருப்பதால், அச்சுழுத்தி அவஸ்தையில ஆத்மா உண்டென்பது பெறப்படுவதாம்.

(அருத்தாபத்திப் பிரமாணத்தால் சுழுத்தி அவஸ்தையில் ஆத்மா உண் டென்பது பெறப்படுவதாமென்று கொள்க. பகலுண்ணாதவன் பருத்திருக்கின்றா னென்னுமிடத்துப் பருமை யிரவுண்டலால் பொருந்து மன்றி வேறோராற்றாற் பொருந்தாமைபோல, சுழுத்தியினின்று மெழுந்தவன் நான் பிறிதொன்றுமறி யாது சுகமாகத் தூங்கினே னென்று நினைக்கு மிடத்து, அவ் விருவகை நினைவும் சுழுத்தியில் பிறிதொன்று மறியாமை, சுகமாகத் தூங்குதலென்னு மவற்றின் அனுபவத்தால் பொருந்து மன்றி வேறோராற்றாற் பொருந்தா; அதனால், அவற்றை யறியும் ஆத்மா சுழுத்தியி லுண்டென்பது அருத்தாபத்திப் பிர மாணத்தால் விளங்கியவா றறிக. இங்ஙனமன்றாயின், இது கூடாதென்று உணர்வது அருத்தாபத்தியின் வடிவமாம். சுழுத்தியில் நான் பிறிதொன்று மறியாது சுகமாகத் தூங்கினேனென்னு மனுபவமிருப்பதன்றாயின், சுழுத்தி யினின்றும் விழித்தகாலத்து நான் பிறிதொன்று மறியாது சுகமாகத் தூங் கினே னென்னும் நினைப்பு வருதல் கூடா தென்பது இங்கருத்தாபத்தியாம்.

---

(இ - ள்.) மன்ற - நிச்சயமாக, சுழுத்தியில் - சுழுத்தியவஸ்தையின்கண், அதற்கு - அச்சுழுத்தியவஸ்தைக்கு, கரியாம் - சாட்சியாகிய, ஆநந்தமயவுயிர் - ஆநந்த வடிவ ஆத்மா, உண்டெனில் - இருக்கின்றதெனின், ஆண்டு - அச் சுழுத்தியவஸ்தையில், ஒருவராகிலும் - (நம்மனோருள்) ஒருவரும், அறிந்தே னென்றல் - (நான் ஆத்மாவை) அறிந்தேனென்று கூறுதல், இலது - (இது காறும்) இல்லையாம், காரணம் ஏது எனில் - (இதற்குக்) காரணம் யாது என் றால், ஓர்பொருளை - (கிணற்றில்விழுந்துள்ள) ஒருபொருளை, எடுப்ப - எடுக்கும் படி, நீர்மூழ்கினோன் - (அக்கிணற்று) நீரில் முழுகினவன், ஆண்டுளதென்பது - அக்கிணற்று நீரில் (அப்பொருள்) இருக்கின்றதென்பதை, மேற்சென்றலது - (அந்நீரினின்றும்) மேலே வந்தாலல்லாமல், புகலொணாது - கூறுதல்முடியா தாம், அதுபோல - அதுபோல, (ஜீவன்), கருமச்செயலினால் - (கால) கரும வசத்தால், எழுந்து - (சுழுத்தியவஸ்தையினின்றும் விழித்து) எழுந்து, துணை யாங்கரணம் - (தனக்குத்) துணையாகிய கரணங்களோடு, கூடினன்றி - கூடினாலல் லாமல், அதில் - அச்சுழுத்தியவஸ்தையில், அறிந்தபொருள் - (தான்) அறிந்த பொருளை, கூறொணாதாகும் - கூறுதல் முடியாதாம், ஆதலினால் - ஆகையால், உயிர் - (சர்வாவஸ்தைக்கும் சாட்சியாயுள்ள) ஆத்மா, சச்சிதாநந்த வொளியாம் - சச்சிதாநந்த சுவயம் பிரகாச வடிவமாம், (எ - று). ஒருவரும் என்பது ஒருவரா கிலும் எனத் திரிந்து நின்றது. 99



**100.** அன்னமோடு பிராணன்மனம் விஞ்ஞான மிக்க வாநந்த மயமாமைங் கோசமுள வவைதாஞ், சொன்னமுறை சுக்கிலசோணிதத் தாகி நின்ற தூலவுடம் பன்னமய கோசஞ்சூக் குமமெய், மன்னலுறும் பிராணனும்வாக் காதியுமே பிராண மயகோச மனமுஞா னேந்தியமும் புணரிற், பன்னுமனோ மயகோசந் துரியன்சிற் சாயை பதிதலொடு லோ காந்த குந்தமே போன்று.

---

இதனால், அனுபவமின்றி நினைப்பு வருதல் கூடாதாகலின், நினைவுக்கேதுவாய அனுபவம் அத்தியாவசியகமாக விருத்தல் வேண்டுமென்பது பெறப்பட்ட தென்க.)

வினா:—சுழுத்தி அவஸ்தையில் நான் பிறிதொன்று மறியாது சுகமாகத் தூங்கினே னென்பதற்குக் காரண மென்ன?

விடை:—விஷயஞான மில்லாமை பிறிதொன்றுமறியாமைக்குக் காரண மாம்; சம்சார துக்க நிவிர்த்தி சுகமாகத் தூங்குதற்குக் காரணமாம். (97-98)

வினா:—சுழுத்தியவஸ்தையில் அதற்கு (அவித்தைக்கு)ச் சாட்சியா யுள்ள ஆநந்த வடிவ ஆத்மாவிருக்குமாயின், எவரேனுமொருவர் அச்சுழுத்தி அவஸ்தையில் ஆத்மாவை யானறிந்தே னென்று கூறுதலில்லையாம்; அவர் அங்ஙனங் கூறாமைக்குக் காரணம் யாது?

விடை:—ஒரு பொருளை யெடுத்தற்பொருட்டு, (கிணறு-குள முதலியவற் றிலுள்ள) நீரில் முழுகினவன் அவ்விடத்து அப்பொருளிருக்கின்றது (இல்லை) என்பதை (அங்கிருந்து) மேலே வந்தா லல்லது கூறுதல் முடியாதாம்; அது போல, சுழுத்தி அவஸ்தையை யடைந்தவன் கால கருமங்களின் வசத்தால் சுழுத்தி அவஸ்தையினின்றும் எழுந்து (தனக்குத்) துணையாயுள்ள ஞானேந்திரி யம், கருமேந்திரியம், அந்தக்கரணமென்னும் கரணங்களோடு கூடினாலல்லது அச்சுழுத்தி யவஸ்தையில் தானறிந்த பொருளைக் கூறுதல் முடியாததாம். அதனால், (சர்வாவஸ்தைக்கும் சாட்சியாயுள்ள பிரத்தியக்) ஆத்மா சச்சிதாநந்த சுவயம்பிரகாசமென்பது அநுபவ சித்தமாம்.

---

(இ - ள்.) அன்னமொடு - அன்னமயமும், பிராணன் - பிராணமயமும், மனம் - மனோமயமும், விஞ்ஞானம் - விஞ்ஞானமயமும், மிக்க - (இவற்றிற்கு) மேலாயுள்ள, ஆநந்தமயம் - ஆநந்தமயமும் (என), ஐங்கோசமுள - பஞ்ச கோசங்களிருக்கின்றன, அவை - அவையாவன, சொன்னமுறை - கூறிய கிரம மாக, சுக்கிலசோணிதத்து - (பிதா - மாதாக்களது) சுக்கிலசோணிதங்களால், ஆகிநின்ற - உண்டாயிருக்கின்ற, தூலவுடம்பு-ஸ்தூலசரீரம், அன்னமயகோசம் - அன்னமயகோசமாம், சூக்குமமெய் - சூட்சும சரீரத்தில், மன்னலுறும் - பொருந்தியிருக்கின்ற, பிராணனும் - பிராணவாயுவும், வாக்காதியும் - வாக்கு முதலிய கர்மேந்திரியமும் (கூடின்), பிராணமயகோசம்-பிராணமயகோசமாம், மனமும் - மனமும், ஞானேந்திரியமும்-ஞானேந்திரியமும், புணரின் - கூடின், பன்னும் - (இவற்றிற்கு உயர்வாகச்) சொல்லப்படுகின்ற, மனோமயகோசம்-மனோ மயகோசமாம், துரியன் - பிரத்தியக் ஆத்மாவின், சிற்சாயை - சைதன்யச்சாயை, பதிதலொடு - பொருந்துதலுடன், லோகாந்தகுந்தமே போன்று - லோகத்தை (இரும்பை) நுனியிலுடைய ஈட்டியைப்போல, (எ-று). ஆம்-தாம்-சாரியை. 100

**101.** இருந்தவாங் காரமுஞா னேந்தியமுங் கூடி னிசைதலுறும் விஞ்ஞான மயகோச மாகும், போருந்துகா ரணதேக ரூபாவித் தையுந் தாம் புகல்விடய தரிசனசா மிப்பியசை யோகந், தரும்பிரிய மோதமோடு பிரமோத மேன்னத் தக்கவையு மானந்த மயகோச நானேன்,றரந்தைதரு விஞ்ஞான மயகோச வடிவா மாங்காரந் தனையான்மா வேன்பரறி விழந்தோர்.

---

*(நீரில் முழுகினவன் அங்குள்ள பொருளை அறியும் அறிவிருந்தும், அதனை நீரென்னு முபாதியால் அங்கே கூறுதற்கு முடியாமைபோல, சுழுத்தி அவஸ்தையை யடைந்தவனும் அங்குள்ள ஆத்மாவை யறியும் அறிவிருந்தும், அதனைச் சுழுத்தி யென்னு முபாதியால் அங்கே கூறுதற்கு முடியாதவனு யிருக்கின்றானென்பது இங்குணர்தற் பாலதாம்.)*

*மரணத்தையும் மூர்ச்சையையும் சிலர் சாக்கிரத்திலும், சிலர் சுழுத்தியிலும் அடக்கிக் கூறுகின்றனர்; சிலர் மரணத்தைச் சாக்கிரத்திலும் மூர்ச்சையைச் சுழுத்தியிலும் அடக்கிக்கூறுகின்றன ரென்பது இங்குணர்தற்பாலதாம்.* (99)

பஞ்சகோச விவேகம்.

வினா:—பஞ்சகோசம் எவை?

*விடை:—அவை அன்னமயகோசம், பிராணமய கோசம், மனோமயகோசம், விஞ்ஞானமய கோசம், ஆநந்தமய கோசம் என்பனவாம். (மயம் - காரியம்; கோசம் - உறை.) அவற்றுள்,*

அன்னமய கோசம்.

1. *தந்தையின் சுக்கிலமும் தாயின் சோணிதமும் கூடியதா லுண்டாகிய ஸ்தூல சரீரம் அன்னமய கோசமாம்.*

பிராணமய கோசம்.

2. *சூக்கும சரீரத்துள்ள பிராணவாயுவும் கருமேந்திரியங்களும் கூடின், பிராணமய கோசமாம்.*

---

*(இ - ள்.) இருந்த-இருக்கின்ற, ஆங்காரமும்-அகங்காரமும், ஞானேந்திரியமும்-ஞானேந்திரியமும், கூடின் - கூடினால், இசைதலுறும் - பொருந்துகின்ற, விஞ்ஞானகோசமாகும் - விஞ்ஞானமயகோசமாம், பொருந்து - (கூறிய நான்கு கோசத்திற்கும் ஆதியாகப்) பொருந்துகின்ற, காரண தேக ரூபாவித்தையும் - காரணதேக ரூபமான அவித்தையும், புகல்-(மூன்று வகையாகக்) கூறப்படுகின்ற, விடய தரிசனம் - (வனிதாதி) விஷயங்களைக் காண்டல், சாமிப்பியம் - அடைதல், சையோகம் - அனுபவித்தல், (என்பனவற்றால் கிரமமாக), தரும் - உண்டாகின்ற, பிரியம் - பிரியமும், மோத மொடு பிரமோதம் - மோதமும் பிரமோதமும், என்னத்தக்கவையும் - என்று கூறத்தக்க திரிவித சுக விருத்திகளும் (கூடின்), ஆநந்தமயகோசம் - ஆநந்தமயகோசமாம், நானென்று - (ஜீவனைத் தேகேந்திரிய முதலியவற்றுள் யாதாவதொன்றன்கண் நான்) நான் என்று (கருதுமாறு செய்து அதனால் அவனுக்கு), அரந்தைதரும் - துன்பத்தைத் தருகின்ற, விஞ்ஞானமய கோசவடிவாம் - விஞ்ஞானமயகோச வடிவமாயுள்ள, ஆங்காரந்தனை - அகங்காரத்தினை, அறிவிழந்தோர் - ஆத்மா நாத்ம விவேக சூனியர், ஆன்மா வென்பர் - (நான் என்னும் தமதனுபவத்தால்) ஆத்மா வென்று கூறுவர், (எ - று). ரூபாவித்தை என்பது ரூப † அவித்தை யெனப் பிரிபடும். தாம்- சாரியை.* 101



---

மனோமய கோசம்.

3. *மனமும் ஞானேந்திரியங்களும் கூடின், மனோமய கோசமாம்.* (100)

விஞ்ஞானமய கோசம்.

4. *பிரத்தியக் ஆத்மாவினது சிற்சாயை சேர்தலுடன் லோகாந்த குந்தம் போல இருக்கின்ற அகங்காரமும் ஞானேந்திரியங்களும் கூடின், விஞ்ஞானமய கோசமாம். (லோகாந்த குந்தம் - இரும்பை நுனியிலுடைய ஈட்டி.)*

(1.) *பிராணமயகோசம் கேவலம் இராசதகுணத்தின் அவஸ்தையாம்;* (2) *மனோமயகோசம் ஞானேந்திரியங்களால் வியவகாரஞ் செய்வதாலும் இச்சை முதலிய இராசதகுண விருத்தியோடு கூடியிருத்தலாலும் சத்துவ - இராசத மென்னு மிரண்டு குணங்களின் அவஸ்தையாம்;* (3) *விஞ்ஞானமயகோசம் சத்துவகுண மாத்திரத்தின் அவஸ்தையாம். இங்ஙனம் அவஸ்தைகளின் பேதத்தால் ஒரே சூக்கும சரீரத்தில் மூன்று கோசங்கள் வெவ்வேறாகக் கூறப்படுகின்றன வென்பது இங்குணர்தற்பாற்றும்.*

ஆநந்தமய கோசம்.

5. *காரண சரீர வடிவ அவித்தையும், சாக்கிராவஸ்தையில் வனிதாதி விஷயங்களைக் காண்டலால் வரும் பிரியமும், (அவற்றை) அடைதலால் வரும் மோதமும், (அவற்றை) அனுபவித்தலால் வரும் பிரமோதமு மென்னும் திரிவித சுக விருத்திகளும் கூடின், ஆநந்தமய கோசமாம்.*

*(இஷ்ட விஷயத்தின் தரிசனத்தா லுண்டாகும் விருத்தி பிரியமாம்; அதன் லாபத்தா லுண்டாகும் விருத்தி மோதமாம்; அதனை அனுபவித்தலா லுண்டாகும் விருத்தி பிரமோதமாம்.)*

ஸ்தூல சரீரம்.

1. *பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களால் (ஸ்தூல பூதங்களால்) ஆகியதும், கருமத்தாற் றோன்றியதும், சுகதுக்காதிபோகத்திற் கிடமாவதுமாய, பிறத்தல் - இருத்தல் - வளர்தல்-திரிதல் - குறைதல் - கெடுதலென்னும் ஆறு விகாரங்களையுமுடைய சரீரம் ஸ்தூல சரீரமாம்.*

சூட்சும சரீரம்.

2. *அபஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களால் (சூக்கும பூதங்களால்) ஆகியதும், கருமத்தாற் றோன்றியதும், சுகதுக்காதி போகத்திற்குச் சாதனமாகியதுமாய், ஞானேந்திரிய பஞ்சகம், கர்மேந்திரிய பஞ்சகம், அந்தக்கரண சதுஷ்டயம், பிராணாதி பஞ்சகமென்னும் பத்தொன்பது கலைகளோடுங் கூடியிருப்பது சூட்சும சரீரமாம்.*

காரண சரீரம்.

3. *அநிர்வாச்சியமாய், அநாதியாய், அவித்தியா வடிவமாய், ஸ்தூல சூட்சும சரீர மிரண்டற்குங் காரணமாத்திரமா யிருக்கும் சுவசொரூப அஞ்ஞானமாகிய நிர்விகற்பவடிவம் காரண சரீரமாம்.*

அகங்காரத்தின் ஆத்மத்துவ கண்டனம்.

வினா:—ஆத்ம அநாத்ம விவேகமில்லாதவர் இப் பஞ்சகோசங்களுள் எதனை ஆத்மா வென்று கூறுகின்றனர்?

*விடை:—அவர் (தானல்லாத உடம்பை யானென்று கொள்ளச் செய்தல் வாயிலாகச் சீவர்க்குத் துன்பத்தைத் தரும்) விஞ்ஞான மயகோச வடிவமாயுள்ள அகங்காரத்தை (அகமென்னும் தமது அனுபவத்தால்) ஆத்மாவென்று கூறுகின்றனர்.* (101)

**102.** நீலகுண விசேடமோடுற் பலவிசே டியந்தா னிகழ்தர வேத் தியமாதல் போலிளைத்தே னெனினுன், றூலதனு வோடுங்கேட்ப னெனெனினிந் தியத்துஞ் சூழ்வனு னெனிற்கரண முடனும்வேத் தியமாய்ச், சாலவுயர் துரியனிற் கையினுலாங் காரந் தானுன்மா வன்ருகி லசேதனவாங் காரஞ், சீலமோடு புறவிடய மறிவதென் னெனிலூ சிக்கலின்முன் னூசிசேட் டித்திடுதல் போலும்.

---

*நீலோற்பல மென்னு மிடத்து ஒருவனுக்கு நீலகுணமாகிய விசேடணத் துடனே உற்பலமாகிய விசேஷியமும் விஷயமாதல்போல, யான் இளைத்தேன் என்னுமிடத்து ஸ்தூல சரீரத்தோடும், யான் கேட்பன் என்னுமிடத்து இந்திரியங்களோடும், யான் சூழ்வன் (ஆலோசிப்பேன்) என்னுமிடத்து அந்தக்கரணங்களோடும்கூடி அகங்காரம் பிரத்தியக் ஆத்மாவிற்கு விஷயமா யிருத்தலின், அகங்காரம் ஆத்மாவன்றும்.*

*(உற்பலம் நீலகுணத்துடன்கூடி ஒருவனுக்கு விஷயமாதல்போல, அகங்காரமும் தேகம் - இந்திரியம் - அந்தக்காணங்களுடன் கூடிப் பிரத்தியக் ஆத்மாவிற்கு விஷயமா யிருக்கின்றது; அதனுல், விஷயமான அகங்காரமும் விஷயியான ஆத்மாவும் ஒன்ருகா வென்பதாம்.*

*நீலோற்பலம் - கருங்குவளைமலர். உற்பலமாகிய விசேஷியத்திற்கு நீல குணம் விசேஷணமா யிருத்தல்போல யானென்னும் அகங்காரமாகிய விசேஷியத்திற்கு ஸ்தூல சரீரமும், இந்திரியங்களும், அந்தக்கரணங்களும் விசேஷணமா யிருக்கின்றனவென்பதிங் குணர்தற்பாலதாம். நீலகுணம் - நீல நிறமாகிய குணம்.)*

---

(இ - ள்.) (ஒருவன் நீலோற்பல மென்னுமிடத்து அவனுக்கு) நீல குண விசேஷணமொடு - நீல குணமாகிய விசேஷணத்துடனே, உற்பல விசேடியம்- உற்பலமாகிய விசேஷியமும், நிகழ்தர - விளங்க, வேத்தியமாதல்போல்-விஷயமாதல்போல, நான் இளைத்தேன் எனின்-யானிளைத்தே னென்னுமிடத்து, தூல தனுவொடும் - ஸ்தூல சரீரத்தோடும், நான் கேட்பன் எனின் - யான்கேட்பே னென்னுமிடத்து, இந்தியத்தும்-(சுரோத்திர) இந்திரியத்தோடும், நான் சூழ்வன் எனின் - யான் நினைப்பேனென்னு மிடத்து, காணமுடனும் - அந்தக்காணத் தோடும் (கூடி), வேத்தியமாய் - விஷயமாய், சாலவுயர் - மிகவுயர்ந்த, துரியன் - பிரத்தியக் ஆத்மாவிற்கு, நிற்கையினுல் - இருத்தலால், ஆங்காரம் - அகங்காரம், (எவ்வகையாலும்), ஆன்மாவன்று - ஆத்மா அன்றும், ஆகில் - அங்ஙனமாயின், அசேதனவாங்காரம் - ஜடவடிவ அகங்காரம், சீலமொடு - ஒழுங்காக, புறவிடயம் - பாகிய விஷயங்களை, அறிவது - அறிவது, என்னெனில்-எங்ஙனமென்றூல், ஊசிக்கலின் முன் - காந்தக்கல்லின் சந்நிதானத்தில், ஊசி - இரும்பூசி, சேட்டித்திடுதல்போலும்-அசைதல்போலவும், (எ - ற). வேத்தியம் - அறியப்படுவது. தான் - அசைநிலை.

102



**103.** வெயிலினிடைக் காட்டுபடி மக்கலமுண் மனையை விளக்குதல்போ லுந்துரியன் றன்றிருச்சந் நிதியி, லியலுறுதற் சைதந்யப் பதிவிம்பந் தன்பா லெய்தலும்பெற் றிடுதலினு லச்சடவாங் காரம், பயில்விடய வுணர்விஞெடு நனவுகன வுழன்று பகர்சுழுத்தி தனிலடங்கு மவ்வழக்க முரைப்பிற், செயிர்தருமாங் காரமடங் குறுசுழுத்தி தன்னிற் செறியவித்தை யுட்சுவருந் துயிற்கதவு மன்றி.

---

விஞ :—அங்ஙனமாயின், அசேதன (ஜட) வடிவ அகங்காரம் (உள்) வேளி விஷயங்களை யறிவ தெங்ஙனமாம்? (102)

*விடை :—காந்தக்கல்லினது சந்நிதானத்தில் இருப்பூசி அசைதல்போலவும், சூரிய கிரணத்தின்கண் காட்டும் கண்ணுடி வீட்டின் உட்பாகத்தை விளக்குதல் போலவும், பிரத்தியக் ஆத்மாவினது சந்நிதானத்தில் அவ் வாத்மாவின் பிரதிபிம்பம் தன்னிடத்துச் சேர்தலைப் பெற்றிருத்தலால், அச்சடவடிவமாயுள்ள அகங்காரம் (பாகிய) விஷய அறிவுடன் கூடிச் சாக்கிர சொப்பனங்களிற் சஞ்சரித்து, சுழுத்தியில் அடங்குவதாம்.*

விஞ :—பிரத்தியக் ஆத்மாவின் பிரதிபிம்பத்தோடு கூடியுள்ள அவ்வகங்காரம் கேவலாவஸ்தையி லடங்கிச் சகலாஸ்தையில் வேளியாதும் கிரமத்தை விளக்கமாகக் கூறல்வேண்டும்?

*விடை :—சேதனப் பிரதி பிம்பத்தோடு கூடியுள்ள அகங்காரம் அடங்கும் சுழுத்தி யவஸ்தையிலுள்ள அவித்தையென்னும் உள் வீட்டுச் சுவரும் நித்திரை யென்னும் கதவுமாகிய இரண்டனையுமன்றி, அசல வடிவமாயுள்ள தன்னையும் தானே விளங்கச் செய்வது பிரத்தியக் ஆத்ம சோதியாம்; பின்னர்க் கால கருமங்கள் காரணமாக வெழுகின்ற சமீரண வாயுவினது பிரேரகத்தால் தாமச*

---

(இ - ள்.) வெயிலினிடைக்காட்டு - சூரிய கிரணத்தின்கண் (பிடித்துக்) காட்டுகின்ற, படிமக்கலம் - கண்ணுடி, உள் மனையை விளக்குதல்போலும் - உள்வீட்டினிருளை நீக்குதல்போலவும், துரியன்தன் றிருச்சந்நிதியில் - பிரத்தியக் ஆத்மாவின் அழகிய சந்நிதானத்தில், இயலுறு - தகுதியாகப் பொருந்தியிருக்கின்ற, தத் சைதந்யப்பதிவிம்பம் - அந்தச் சைதன்னியத்தின் பிரதிபிம்பம், தன்பால் - தன்னிடத்து, எய்தல் - அடைதலை, பெற்றிடுதலினுல் - பெற்றிருத்தலால், அச்சடவாங்காரம் - அந்தச் சடவடிவ அகங்காரம், பயில் - (பாகியத்தில்) பொருந்தியிருக்கின்ற, விடய வுணர்விஞெடு - (கடாதி) விஷயங்களின் அறிவோடு (கூடி), நனவு கனவு உழன்று - (சகலமென்னும்) சாக்கிர சொப்பனங்களில் சஞ்சரித்து, பகர் - (இருள்வடிவமா யிருப்பதென்று) கூறப்படுகின்ற, சுழுத்திதனிலடங்கும் - (கேவலமென்னும்) சுழுத்தியில் அடங்குவதாம், அவ்வழக்க முரைப்பின் - (அகங்காரம்) அவ்வாறு நிகழுதலைக் கூறின், செயிர்தரும் - குற்றத்தைத்தருகின்ற, ஆங்காரமடங்குறு - அகங்காரம் ஒடுங்குகின்ற, சுழுத்திதன்னில் - சுழுத்தியவஸ்தையில், செறி - பொருந்தியிருக்கின்ற, அவித்தையுட் சுவரும் - அவித்தையென்னும் உள் வீட்டுச் சுவரும், துயிற்கதவும் - நித்திரை யென்னும் கதவும், (என்னும் இவ்விரண்டையும்), அன்றி - அல்லாமல், (எ - ற). எய்தலும் என்பதில்உம் அசைநிலையாம். 103

**104.** நடுக்கமறு தீபமாந் தனைத்தானே விளக்க னவில்பிரத்ய கான்மாவின் சோதியாம் பின்னர்த், தொடக்கிவரு காலகரு மாதிசமீ ரணனுற் றுயிற்கதவந் திறந்திடவவ் வவித்தையது தன்னி, லடுக்குமுத லவத்தைமக தத்துவமாந் தெற்றி யடுத்திருந்தாங் காரமெனும் வெண் பளிங்கு மணிதான், படைத்தலருந் துரியசுடர்ப் பதிவிம்பம் பதியப் பட்டுமுனம் போற்சீவ னென்னவே நின்று.

---

வடிவமாயுள்ள நித்திரையென்னும் கதவு திறக்க, பின்னர் அந்த அவித்தையின் கண் அடுத்துள்ள பிரதமாவஸ்தையாகிய மகத் தத்துவமென்னும் வாயிற்படியின் கண் சேர்ந்திருக்கின்ற சாத்துவிக வடிவமாயுள்ள அகங்காரமென்னும் படிகமணி அந்தப் பிரத்தியக் ஆத்ம சோதியின் பிரதிபிம்பத்தை யடைதலால் முன்போல ஜீவனாகவிருந்து, சொப்பனமென்னும் நடு வீட்டை விளங்கச்செய்து, பின் இந்திரியங்களென்னும் பலகணி வாயில்களால் வெளியே வந்து, சாக்கிரமென்னும் பாகிய முற்றத்தையும் விளங்கச்செய்வதாம்; பின்னர்க் கால கருமங்கள் காரணமாக எழுகின்ற சமீரண வாயுவினது பிரேரகத்தால் நித்திரையென்னும் கதவு மூடிய வுடனே மகத்தத்துவத்தின் காரியயாயுள்ள அவ்வகங்கார மென்னும் படிகமணி(தனக்குக் காரணமாயுள்ள மகத்தத்துவத்துடன்) அவித்தையின்கண் சென்றடங்கலால் சாக்கிரமென்னும் பாகியமுற்றமும், சொப்பனமென்னும் நடுவீடும் அந்தகாரமயமாம்; (இவ்வாறவை அந்தகாரமயமாக) அகங்காரமென்னும் அந்தப்படிக மணியிற்

---

(இ - ள்.) நடுக்கமறு தீபமாம் தனை - அசைவற்ற தீபமாகிய தன்னையும், தானே விளக்கல் - தானே விளங்கச்செய்வது, நவில் - (சர்வாதாரமாகக்) கூறப்படுகின்ற, பிரத்யகான்மாவின் சோதியாம் - பிரத்தியக் ஆத்ம சோதியாம், பின்னர் - பின்பு, தொடக்கிவரு - (சங்கிலிபோலத்) தொடர்ந்து வருகின்ற, கால கருமாதி - கால கருமங்கள் காரணமாக (எழுகின்ற), சமீரணனால்- சமீரண வாயுவால், துயிற்கதவம் - (தாமச வடிவமாயுள்ள) நித்திரை யென்னும் கதவு, திறந்திட - திறக்க, (பின்னர்), அவ்வவித்தையது தன்னில் - அந்த அவித்தையின்கண், அடுக்கும் - பொருத்தமாயுள்ள, முதலவத்தை - முதலவஸ்தையாகிய, மகதத்துவமாந்தெற்றி - மகத்தத்துவ மென்னும் வாயிற்படியின் கண், அடுத்திருந்த - சேர்ந்திருக்கின்ற, ஆங்கார மெனும் வெண்பளிங்கு மணி - (சாத்துவிக) அகங்கார மென்று கூறப்படுகின்ற வெண்மையாகிய படிகமணியானது, படைத்தலரும் - (ஒருவர்) உண்டாக்குத லில்லாத (அநாதியான), துரிய சுடர் - (அந்தப்) பிரத்தியக்காத்ம தீபத்தின், பதிவிம்பம் - பிரதிபிம்பம், பதியப்பட்டு - பொருந்தப் பெற்று, முனம்போல - முன்போல, சீவனென்னவே நின்று - ஜீவனென்று கூறுமாறு நிலைபெற்று நின்று, (எ - று). அடுத்திருந்த என்பதனுள் அகரம் தொக்குநின்றது. தான் - அசை. சமீரண வாயு - மகாப்பிராண வாயு. 104



**105.** சொற்பனமா நடுமனையை விளக்கியே பொறியாஞ் சுருங் கையினிற் போந்துநன வெனுமுன்றில் விளக்கு, முற்பகருங் காலகரு மாதிசமீ ரணனான் மூடலுமத் துயிற்கதவங் காரியவாங் கார, நற்படிக மணியவித்தை தனிலடங்கச் சென்று நனவுகன வெனுமுன்றி னடு மனைக ளிருளுந், தற்படிக மணிக்கதுவு மறிவொளிதன் முதலாந் தனித் துரிய விளக்கையடைந் தேகமா மன்றே.

---

பிரதி பிம்பித்துள்ள சிற் பிரகாசம் தனக்கு மூல பூதமாயுள்ள பிரத்தியக் ஆத்ம சோதியை யடைந்து ஏகமாகவே (பிரத்தியக் ஆத்மாவாகவே) யிருக்கும்.

(அசலம் - அசைவின்மை; பிரேரகம் - செலுத்துதல்; தாமசம் - இருள்; சாத்துவிகம் - பிரகாசம்.

பலகணி - ஜன்னல்; பாகியம் - வெளி; முற்றம் - முன்னிடம்; அந்தகாரம் - இருள். சமீரணவாயு - ஜீவசம்பந்த வாயுக்களுள் ஒன்றாயுள்ள மகாப் பிராண வாயுவாம்.) (103-104-105)

இவ்விதமாக, சாக்கிரம் - சொப்பனம் - சுழுத்தியென்னும் அவஸ்தாத்திரயங்களில் அகங்காரத்தின் பாவாபாவங்களை நிர்விகாரமா யிருந்தறியும் ஆத்மா வொன்று இதற்கு வேறாக விருத்தலால், எப்போதும் அகங்காரம் ஆத்மா அன்றாம்.

(பாவாபாவம் என்பது பாவ - அபாவம் எனப் பிரிபடும்; பாவம் - உண்மை, அபாவம் இன்மை.)

---

(இ - ள்.) சொற்பனமா நடுமனையை விளக்கி - சொப்பனாவஸ்தையாகிய நடு வீட்டை விளங்கச் செய்து, (பின்னர்), பொறியாஞ்சுருங்கையினில் - இந்திரியங்களென்னும் பலகணிவாயில்களால், போந்து - (வெளியே) வந்து, நனவெனு முன்றில் - சாக்கிராவஸ்தையாகிய (பாகிய) முற்றத்தையும், விளக்கும் - விளங்கச் செய்வதாம், (பின்னர்), முற்பகரும் - முன்னர்க்கூறிய, காலகருமாதி - கால கருமங்கள் காரணமாக (எழுகின்ற), சமீரணனால் - சமீரணனென்னும் வாயுவால், அத்துயிற்கதவம் - அந்த நித்திரையாகிய கதவு, மூடலும் - மூடவும், (உடனே), காரிய வாங்கார நற்படிகமணி - காரியமாகிய (அந்த) அகங்காரமென்னும் சிறந்த படிகமணி, அவித்தைதனில் - (காரணமாகிய) அவித்தையின் கண், சென்று அடங்க - சென்று (அடங்குவதாம்,) அடங்கவே, நனவு கனவெனும் - சாக்கிரம் சொப்பனமென்னும், முன்றில் நடுமனைகள் - (பாகிய) முற்றமும் நடுவீடும் (ஆகிய இரண்டும்), இருளும் - அந்தகாரமயமாம், (இவ்வாறவை அந்தகாரமயமாக), தற் படிகமணி - அந்த அகங்கார மென்னும் படிக மணியின்கண், கதுவும் - பிரதிபிம்பித்திருந்த, அறிவொளி - சித்பிரகாசமானது, தன் முதலாம் - தனக்கு மூல பூதமான, தனித்துரிய விளக்கை யடைந்து - ஒப்பற்ற பிரத்தியக் ஆத்ம தீபத்தை யடைந்து, ஏகமாம் - ஐக்கியமாம், (எ - று). முற்றம் - வீட்டின் முன்னிடம். அன்று - ஏ - அசை. 105

**106**. இத்திறமிங் ககமினது பாவாபா வங்க ளிலங்குநன வாதி
களி லவிகார மாகி, யுய்த்துணரு முயிர்வேறேன் றிருத்தலினு லென்று
முரைத்தவக மான்மாவன் றெனவறிக புறம்பு, வைத்தவிட யங்கட
மக் கான்மாவாய்ப் பரமான் மாவிற்கு வேத்தியமா தலிற்சடா சடமா,
யத்தமதின் முன்பின்போ லோளியிலதா மகந்தைக் காகஞ்சிற் சாயை
யான் மாவுடனும் புணர்ச்சி.

---

**அகங்கார சொரூபம்.**

வினு:—**அகங்காரத்தின் சொரூபம் எவ்வாறிருக்கும்?**

விடை:—அகங்காரம் பாகியத்துள்ள விஷயங்களுக்கு ஆத்மாவாய், ஆந்தரத்துள்ள பிரத்தியக் ஆத்மாவிற்கு விஷயமாயிருப்பதாம்; அதனுல், ஜட அஜட (சித்) வடிவமாய், கண்ணுடியின் முன்புறமும் பின்புறமும் போலப் பிரகாச அப்பிரகாச சொரூபமாக விருப்பதாம்.

(கண்ணுடியின் பின்புறம் அப்பிரகாசமாயும் முன்புறம் பிரகாசமாயுமிருத்தல்போல, அகங்காரத்தின் பின்புறம் அப்பிரகாசமாயும் முன்புறம் பிரகாசமாயுமிருத்தலின் அகங்காரத்திற்கு முன்புறம் சேதன வடிவமாகவும், பின்புறம் அசேதன வடிவமாகவு மிருக்கு மென்பதாம்; பிரத்தியக் ஆத்மாவின் பிரதிபிம்பத்தோடு கூடியுள்ள அகங்காரம் காமாதி விஷயங்களை யறியு மியல்பினதா யிருக்கின்றது; பிரத்தியக் ஆத்மாவை யறியு மியல்பினதாகாது; ஆனுல், அதனுல் விளங்கு மியல்பினதா யிருக்கின்றதென்ப திங்குணர்தற் பாலதாம்.)

**தாதாத்மியத் திரயம்.**

**அகங்கார சம்பந்தம்.**

வினு:—**அகங்காரம் எவற்றேடு சம்பந்த முடையதா யிருக்கின்றது?**

விடை:—அது தேகம், சிற்சாயை, பிரத்தியக் ஆத்மாவென்னும் இம் மூன்றேடும் சம்பந்தமுடையதா யிருக்கின்றது; அச் சம்பந்தம் முறையே கருமஜம், சகஜம், பிராந்தி ஜந்நியம் என்று கூறப்படும். அவற்றுள், (106)

---

(இ - ள்.) இத்திறம்-இவ்வாருக, இங்கு-இவ்வியாவகாரிக தசையின்கண், இலங்கு-விளங்குகின்ற, நனவாதிகளில் - சாக்கிர முதலிய அவஸ்தைகளில், அகமினது-அகங்காரத்தினது, பாவாபாவங்கள் - உண்மையின்மைகளை, அவிகாரமாகி-நிர்விகாரமாய், உய்த்துணரும் - பொருந்தியறிகின்ற, உயிர் ஒன்று-ஆத்மாவொன்று, வேறு - (இதற்கு) வேருக, இருத்தலினுல் - இருத்தலால், என்றும் - எப்போதும், உரைத்த அகம் - (இது காறும்) கூறப்பட்டு வந்த அகங்காரம், ஆன்மாவன்றென - ஆத்மாவன்றென்று, அறிக - (அதனை நீ) அறிவாயாக, புறம்பு வைத்த - பாகியத்துள்ள, விடயங்கள் தமக்கு ஆன்மாவாய் - விஷயங்களுக்கு ஆத்மாவாய், (ஆந்தரத்துள்ள), பரமான்மாவிற்கு - பிரத்தியக் ஆத்மாவிற்கு, வேத்தியமாதலின்-விஷயமாயிருத்தலால், சடாசடமாய் - ஜடசித் வடிவமாய், அத்தமதின் - (தருப்பணமென்னும்) கண்ணுடியின், முன்போல் - முன்புறம்போல, ஒளி (ஆய்) - ஒளியுடையதாய், பின் (போல்) - பின்புறம்போல, (ஒளி) இலதாம் - ஒளியில்லாததா யிருக்கின்ற, அகந்தைக்கு - அகங்காரத்திற்கு, ஆகம் - (ஸ்தூல) தேகமும், சிற் சாயை - சிற்சாயையும், ஆன்மாவுடன் - ஆன்மாவும் (என்னும் இம்மூன்றன்) ஓடும், புணர்ச்சியாம் - சம்பந்தமுண்டு, (எ - று). 106



**107**. வெப்பினே னனெனலாற் சிற்பதிவிம் பந்தான் மேவுமாங்
காரசம் பந்தத்தா றால, மெய்ப்படுவ வெம்மைமுத லனவறிதல்
கரும விளைவாகிக் கருமசமா நானறிந்தே னெனலாற், றப்பரிய சிற்
சாயை யுடனவ்வாங் கார சம்பந்தஞ் சிருட்டிமுதன் முத்தியள வாகப்,
பொய்ப்பரிசி லியல்பாகு நான்கருத்த னெனலாற் புணர்ச்சியிலான்
மாவினுட னனையதின்சம் பந்தம்.

---

**கருமஜம்.**

1. ஜீவன் நான் தபிக்கின்றேன் என்று கூறுவதால், பிரத்தியக் ஆத்மாவின் பிரதிபிம்பத்தைப் பெற்றுள்ள அகங்காரத்தின் சம்பந்தத்தால் ஸ்தூலதேகத்திற்றேன்றும் உஷ்ண முதலியவற்றை யறிதல் கருமஜமாம்; (கருமஜம் - கருமத்தாலுண்டாயது.)

**சகஜம்.**

2. நான் அறிகின்றேனென்று கூறுவதால், சிற்சாயையோடு அகங்காரத்திற்குள்ள சம்பந்தம் சிருஷ்டி தொடங்கி மோட்ச பரியந்தம் கெடா திருத்தலின் சகஜமாம்; (சகஜம் - இயல்பா யுண்டாயது.)

**பிராந்திஜந்நியம்.**

3. நான் கருத்தா (யான் செய்கின்றேன்) என்று கூறுவதால், அசங்கமாயுள்ள பிரத்தியக் ஆத்மாவோடு அவ் வகங்காரத்திற்குள்ள சம்பந்தம் பிராந்தி ஜந்நியமாம். (பிராந்தி ஜந்நியம் - பிராந்தியா லுண்டாயது.)

---

(இ - ள்.) (அவற்றுள்,) நான் வெப்பினேனெனலால் - நான் தாப மடைகின்றேனென்று கூறுவதனுல், சிற்பதி விம்பம் - சித்தினது பிரதிபிம்பத்தை, மேவும் - பொருந்தியிருக்கின்ற, ஆங்கார சம்பந்தத்தால் - அகங்காரத்தினது சம்பந்தத்தால், தூலமெய் - ஸ்தூல சரீரத்தில், படுவ - உண்டாகின்ற, வெம்மை முதலன - உஷ்ண முதலியவற்றை, அறிதல் - உணர்தல், கரும விளைவாகி - கருமத்தாலுண்டாகி (இருக்கின்ற), கருமசமாம் - கருமஜமாம், நானறிந்தே னெனலால் - (இதனை) நானறிகின்றேனென்று கூறுவதால், தப்பரிய - கெடுதலில்லாத, சிற்சாயையுடன் - சித்தினது சாயையோடு, அவ்வாங்கார சம்பந்தம் - அவ்வகங்காரத்திற்குள்ள சம்பந்தம், சிருட்டி முதல் - (பிரபஞ்ச) சிருஷ்டி தொடங்கி, முத்தியளவாக - (ஜீவர்கள்) மோட்சமடையும் அளவாக, பொய்ப்பரிசில் - பொய்யாந்தன்மை யில்லாமையின், இயல்பாகும் - சகஜமாம், நான்கருத்தனெனலால் - (இதற்கு) நான் கருத்தா வென்று கூறுவதால், புணர்ச்சியில் - (எதனேடும் எவ்வகையாலு முண்மையில்) சம்பந்தமில்லா திருக்கின்ற, ஆன்மாவினுடன் - பிரத்தியக் ஆத்மாவோடு, அனையதின் சம்பந்தம் - அவ்வகங்காரத்திற்குள்ள சம்பந்தத்தை, (எ - று). தான் - அசை. 107

(1) அகங்காரத்திற்கு ஸ்தூலதேகத்தோடுள்ள சம்பந்தம் கர்மஜமாம்;

(2) அகங்காரத்திற்குச் சிற்சாயையோடுள்ள சம்பந்தம் சகஜமாம்;

(3) அகங்காரத்திற்குப் பிரத்தியக் ஆத்மாவோடுள்ள சம்பந்தம் பிராந்தி ஜந்நியமாம்.

கர்மத்தால் பிரத்தியக் ஆத்மாவின் பிரதிபிம்பத்தோடுகூடிய அகங்காரத்திற்கு ஸ்தூல தேகத்தோடு சம்பந்த முண்டாதலின், ஸ்தூல தேகத்திலுண்டாகும் உஷ்ண முதலியன அதற்கு விஷயமாகின்றன வென்றும், அகங்காரத்திற்கும் பிரத்தியக் ஆத்மாவின் பிரதிபிம்பத்திற்குமுள்ள சம்பந்தம் சிருஷ்டி தொடங்கி மோட்சபரியந்தம் கெடா தியல்பாக விருத்தலின், யானறிகின்றே னென்றற் றொடக்கத்து வியவகாரம் பிரத்தியக் ஆத்மாவின் பிரதிபிம்பத்தோடு கூடித் தப்தாய பிண்டம் (காய்ந்துள இரும்பு) போல எக வடிவமாக விளங்கும் அகங்காரத்திற்கு விஷயமாகின்றதென்றும், அகங்காரத்திற்கும் பிரத்தியக் ஆத்மாவிற்குமுள்ள சம்பந்தம் கயிற்றாவு சம்பந்தம்போலப் பிராந்தியுள்ள வளவுமிருத்தலின், யான் செய்கின்றே னென்றற் றொடக்கத்து வியவகாரம் பிரத்தியக் ஆத்மாவினும் வேறுகாது விளங்குகின்ற அகங்காரத்திற்கு விஷயமாகின்றதென்றும் இங்குணர்தல்வேண்டும். (பிராந்தி - மயக்க வுணர்வு.)

"சிதாபாச தேக சாட்சிகளோடு கிரமமாகச் சகஜம் - கர்மஜம் - பிரமஜம் என்னும் வேறுபாட்டால் அகங்காரத்தின் தாதாத்மிய அத்தியாசம் மூன்றுவகையாம். (1) சிதாபாசனோடுள்ள அகங்காரத்தின் தாதாத்மியம் சகஜதாதாத்மிய அத்தியாசமாம்; ஏனெனின், அகங்காரமும் சிதாபாசனும் கூடவே தோன்றிக் கெடுதலால். (2) வர்த்தமான தேகத்தோடுள்ள அகங்காரத்தின் தாதாத்மியம் கர்மஜ (பிராரப்த கர்மத்தாலுண்டாகிய) தாதாத்மிய அத்தியாசமாம்; ஏனெனின், ஜீவித்திருக்கும் அவஸ்தையில் 'நான் மனிதன்' என்று யாவர்க்கும் அனுபவமிருக்கின்றது. பிராரப்த கர்மமாகிய உபாதி குறையத் தேகத்தோடுள்ள தாதாத்மியம் குறைதலால், தேகம் விழுந்தபின் தேகத்தில் நானென்று கூறுதல் முதலிய வியவகாரம் காணப்படுவதில்லை; ஆதலால், அது கர்மஜந்நியமாம். (3) அசங்கசாட்சி சேதனத்தோடுள்ள அகங்காரத்தின் தாதாத்மியம் பிரமஜ அஞ்ஞானத்தாலாகிய பூர்வபூர்வப் பிராந்தியினால் சித்தித்துள்ள தாதாத்மிய அத்தியாசமாம். தத்துவ ஞானத்தால் பிராந்தி நிவிர்த்தியாயின், தாதாத்மிய மில்லாமையால் ஞானிக்குச் சாட்சியினிடத்தி 'நான் கர்த்தா போக்தா, சுகிதுக்கி' என்னும் அபிமான மில்லை; ஆகையால், அது பிரமஜமாம்." என்று பஞ்சதசி - சித்திர தீபத்தின் குறிப்புரையி லெழுதப்பட்டிருப்பது இங்குணர்தற் பாலதாம். இன்னுமிவற்றின் விரிவை (யாமெழுதியுள்ள) உபநிடத வுரையிற் காண்க. தாதாத்மியம்- ஒருமைப்பாடு.

(107)



**108.** இசைப்பிலது பிராந்திசன் னியமாகு மேன்னு மிவை
முழுதுஞ் செப்புதிரு சியவிவே கந்தான், மிசைப்புகல்வ வஞ்ஞான மாவ
ரண மிக்க விட்சேபம் பரோட்சமப ரோட்சஞா னம்பின், வசைப்படுதே
லுறுஞ்சோக நிவிர்த்தியதன் மீது வருநிரங் குசதிருத்தி யெனுமவத்தை
யேழுந், திசைப்புறுத லுறுஞ்சீவர்க் காவனவா மிவற்றின் றிறமனைத்து
முறைபிறழா தினியெடுத்து மொழிவாம்.

இதுகாறும் கூறிய இவையனைத்தும் திருசிய விவேகமாம்.
இனிக் கூறத்தக்கவை ஜீவ சப்தாவஸ்தை முதலியனவாம்.

---

### சாதன சாத்திய விவேகம்.

#### ஜீவ சப்தாவஸ்தை.

வினா:—ஜீவ சப்தாவஸ்தை எவை?

விடை:—அவை அஞ்ஞானம், ஆவரணம், விட்சேபம், பரோட்ச ஞானம், அபரோட்ச ஞானம், சோக நிவிர்த்தி, நிரங்குசதிருப்தி யென்பனவாம். இவ்வேழும் ஜீவர்க்குரியனவா யிருத்தலின், ஜீவ சப்தாவஸ்தையென்று கூறப்படுகின்றன. அவற்றுள், (108)

#### அஞ்ஞானம்.

1. (சாதல் பிறத்தலென்னும் சங்கடத்தை யடைதற்கேதுவாயுள்ள இருவினைகளைச் செய்த லென்னும்) புன்னெறியை மேற்கொண்டு, சம்சாரப் பற்றுள்ளவனாய், (அவித்தையின் பெருக்கத்தால் தனது நிஜவடிவத்தை யறிதற்

---

(இ - ள்.) இசைப்பில் - (ஆராய்ந்து) கூறுமிடத்து, அது—அச்சம்பந்தம், பிராந்திசன் னியமாகும்-பிராந்தி ஜந்நியமாம், என்னு மிவை முழுதும்-என்றிதுகாறும் கூறப்பட்டு வந்த இவ்விஷய மனைத்தும், செப்பு - (மித்தையா மென்று) கூறப்படுகின்ற, திருசியவிவேகம் - திருசியவிவேகமாம், மிசைப்புகல்வ - இனிக் கூறப்படுவன, அஞ்ஞானம் - அஞ்ஞானமும், ஆவரணம் - ஆவரணமும், மிக்க - (துன்பத் தோற்றம்) மிகுதியாகவுள்ள, விட்சேபம் - விட்சேபமும், பரோட்சம் - பரோட்ச ஞானமும், அபரோட்ச ஞானம் - அபரோட்ச ஞானமும், பின் - (இவற்றிற்குப்) பின்னர், வசைப்படுதலுறும்- இகழ்ச்சி யடைதல் பொருந்திய, சோகநிவிர்த்தி - சோகநிவிர்த்தியும், அதன்மீது வரும் - அதற்குப்பின்னே (சொல்லப்பட்டு) வருகின்ற, நிரங்குச திருத்தி - நிரங்குசதிருப்தியும், எனும் - என்று கூறப்படுகின்ற, அவத்தையேழும் - அவஸ்தையேழும், திசைப்புறுதலுறும் - மயக்கமடைந்திருக்கின்ற, சீவர்க்காவனவாம் - ஜீவர்களுக்குப் பொருந்தியிருப்பனவாம், இவற்றின் - இவ்வேழவஸ்தைகளின். திறமனைத்தும் - வகையனைத்தையும், முறை பிறழாது - கிரமந்தவறாது, இனி யெடுத்து மொழிவாம் - இனி யெடுத்துச் சொல்வாம், (எ - று). தான் - அசை. திகைப்பு என்பது எதுகை நோக்கித் திசைப்பு எனத் திரிந்து நின்றது.
108

**109.** புன்னெறிகோள் குடும்பியாய் வலியறுமோர் சித்துப் போலி யாஞ் சீவனுயர் சுருதிவிசா ரத்தின், முன்னமொரு தன்சொருப மாகி யபே ரொளியா முதற்றுரிய நிலையறியா திருந்திடலஞ் ஞானம், பின் னொருகா லுயிரியல்பு கூறுமிடத் தின்று பிரத்தியகான் மாத்தோன்ரு தெனுங்கலக்க மிரண்டும், பன்னியவஞ் ஞானகா ரியமாகு மென்னப் பகர்தருமா வரணமேன்பர் பலகலைகற் றுணர்ந்தோர்.

---

குரிய) ஆற்றலின்றியுள்ள சித்துப்போலி யென்னும் ஜீவன் (சற்குருவின் வாயி லாக 'நானுர் இப்பவமெனக்கு வந்தவாறென்கொல் நசிப்ப தெவரால்?' என்று) சுருதி விசாரம் செய்வதற்கு முன்னர்த் தனது நிஜவடிவமாயுள்ள சுவயம்பிரகாச பிரத்தியக் ஆத்மாவை அறியா திருந்தமையே அஞ்ஞானமாம்.

(சுருதி - வேதம்; அஃ திங்கு உபநிஷத்தாம்.)

### ஆவரணம்.

2. அவன்பின் பொருசமயம் பெரியார் பிரத்தியக் ஆத்மாவினிலக்க ணத்தைக் கூறமிடத்து அதனைக் கேட்டு, பிரத்தியக் ஆத்மா இல்லை, அஃதிருந் தால் தோன்ருதா? என்னும் இருவகையான மறைப்பும் அவ்வஞ்ஞான காரியமா யுள்ள ஆவரணமாம்.

(1). பிரத்தியக் ஆத்மா இல்லை என்னும் வியவகாரத்திற்குக் காரணமா யிருப்பது அசத்துவாபாதக ஆவரணமாம். அசத்துவாபாதகம் - அசத்துத் தன்மையைச் சம்பாதித்தல்.

(2). அஃதிருந்தால் தோன்ருதா என்னும் வியவகாரத்திற்குக் காரணமா யிருப்பது அபானு பாதக ஆவரணமாம்; அபானு பாதகம் - விளக்கமின்மை யைச் சம்பாதித்தல். இவை முறையே நாஸ்தியென்றும் நபாதியென்றும் கூறப் படும். ஆவரணம் - மறைப்பு. (109)

---

(இ - ள்.) புன்னெறிகொள் - (அவ்வவஸ்தைகளுள்) தீ நெறியிற் செல்லு தலை மேற்கொண்டுள்ள, குடும்பியாய் - சம்சாரப்பற்றுள்ளவனுய், வலியறும் - (தனது நிஜவடிவத்தையறிதற்குரிய)வல்லமையற்றிருக்கின்ற, ஓர்சித்துப்போலி யாம் சீவன்-ஒரு சிதா பாசனுகிய ஜீவன், உயர்-(வித்தைகளுள் மிக) உயர்ந்துள்ள, சுருதி விசாரத்தின் முன்னம் - வேத விசாரஞ்செய்வதற்குமுன், ஒரு - ஒப்பற்ற, தன் சொருபமாகிய - தனது (நிஜ) வடிவமாக விருக்கின்ற, பேரொளியாம் - மிக்க (சுவயம்) பிரகாசமாகிய, முதல் - (திருசியத்தோற்றத்திற்குக்) காரணமாய, துரிய நிலை - துரிய நிலை யென்னும் பிரத்தியக் ஆத்மாவை, அறியாதிருந் திடல் - அறியாதிருந்தமையே, அஞ்ஞானம் - அஞ்ஞானமாம், பின் - பின்னர், ஒருகால் - (ஓரான்) ஒருவேளை, (பெரியார்), உயிரியல்பு கூறுமிடத்து - சிதாத் மாவின் இலக்கணத்தைப் பிரசங்கிக்குமிடத்து, பிரத்தியகான்மா இன்று - பிரத்தியக் ஆத்மா இல்லை, ( இருந்தால்), தோன்ருது - தோன்ருதா, எனும் - என்று கூறுகின்ற, கலக்க மிரண்டும் - மறைப்பிரண்டையும், பல கலை - நூல் பலவற்றை, கற்றுணர்ந்தோர் - (ஐயந்திரிபறக்) கற்றுணர்ந்த பெரியார், பன் னிய - (முதலாவதாகக்) கூறிய, அஞ்ஞானகாரியமாகு மென்ன - அஞ்ஞானத் தின் காரியமா மென்று, பகர்தரும் - கூறப்படுகின்ற, ஆவாண மென்பர் - ஆவரணமென்று கூறுவர், (எ - று). தோன்ருதா என்னும் ஆகாரம் தொக்கு நின்றது.

109



**110.** கருத்தனுமோண் கருமபல போத்துருவுந் தானுய்க் கருதி யுடம் பபிமானி யாஞ்சீவன் ருனே, யுரைத்தலரும் விட்சேபஞ் சுருதி குரு வுண்மை யுரையாலுண் டியிரேனவே யறிதலசத் தேன்னு, நிரைத்த முத லாவரண நிவர்த்தகமாம் பரோட்ச நீபிரம மேனும்வேத மோழி விசா ரத்தால், வரத்துரியன் ருனேனவே யறிந்திடுத லபானு வரண நிவர்த் தகமாகு மபரோட்ச ஞாநம்.

---

### விட்சேபம்.

3. கருத்தாவும் கரும பலத்தை யனுபவிக்கும் போக்தாவும் தானேயாகத் தன்னை யெண்ணித் தேகாபிமானியா யுள்ள ஜீவனே விட்சேபமாம்.

(கருத்தா-கருமத்தைச் செய்பவன்; போக்தா - சுக துக்கவடிவப் போகங் களை யனுபவிப்பவன். ஜீவன் தேகாபிமானியாய்த் தன்னைக் கருத்தா போக்தா வாகக் கருதுவதே விட்சேபமாமென் றுணர்க. விட்சேபம் - தோற்றம்.)

### பரோட்ச ஞானம்.

4. அவன் சுருதியும் சற்குருவும் கூறுகின்ற சத்திய வசன விசுவாசத்தால் பிரத்தியக் ஆத்மா உண்டென்று அதனிருப்பை அறிதல் பிரத்தியக் ஆத்மா இல்லைஎன்னும் முதலாவதான அசத்தாவரணத்தை நிவிர்த்திப்பதாகிய பரோட்ச ஞானமாம்.

### அபரோட்ச ஞானம்.

5. பின்பவன் நீயே பிரஹ்மமென்று கூறும் வேதவாக்கிய விசாரப் பெருக்கத்தால் நானே பிரத்தியக் ஆத்மாவென்று தன்னைப் பிரத்தியக் ஆத்மா வாக அறிதல் ஆத்மா இருந்தால் தோன்ருதா என்னும் இரண்டாவதான அபானுவரணத்தை நிவிர்த்திப்பதாகிய அபரோட்ச ஞானமாம்.

---

(இ - ள்.) கருத்தனும் - (கருமத்தைச்செய்யும்) கருத்தாவும், ஒள் - சிறந்த, கருமபலம் - கருமத்தின்பலத்தை (அனுபவிக்கும்), போத்துருவும், - போக் தாவும், தானுய்க்கருதி - 'தானுகவெண்ணி, உடம்பபிமானியாம் சீவனே - தேகாபிமானியாயிருக்கின்ற ஜீவனே, உரைத்தலரும் விட்சேபம் - சொல்லு தற்கரிய விட்சேபமாம், சுருதிகுரு - வேதமும் ஆசிரியரும் (கூறுகின்ற), உண்மையுரையால் - சத்தியவசன விசுவாசத்தினுல், உயிருண்டென அறிதல் - பிரத்தியக் ஆத்மா என ஒன்று இருக்கின்றதென்றுணர்தல், நிரைத்த - (முன் னர்க்) கூறிய, அசத்தென்னும் - (பிரத்தியக் ஆத்மா) இல்லையென்னும், முதலா வரணம் - முதலாவதாகிய ஆவரணத்தை, நிவர்த்தகமாம் - நிவிர்த்திப்பதாகிய, பரோட்சம் - பரோட்சஞானமாம், நீ பிரமமெனும் - நீயே பிரஹ்மமென்று கூறு கின்ற, வேதமொழி விசாரத்தால் - வேதத்தின் (மகா) வாக்கிய விசாரணையால், வரம் - (எவற்றினும்) மேன்மை பொருந்திய, துரியன்தானெனவே யறிந்திடு தல் - பிரத்தியக் ஆத்மாவே தானென்றுணர்தல், அபானுவரணம் - (பிரத்தியக் ஆத்மா இருந்தால் தோன்ருதாவென்னும்) அபானுவரணத்தை, நிவர்த்தக மாகும் - நிவிர்த்திப்பதாகிய, அபரோட்சஞானம்-அபரோட்சஞானமாம், (எ - று). தான் - அசை. பானம் - விளங்குதல் ; அபானம் - விளங்காமை. 110

**111.** துரியநிலை யடைந்ததற்பி னன்கருத்த னன்போத் துருவென் னுஞ் சீவவுருத் துக்கமகன் றிடுத, லரியதெனு மச்சோக நிவிர்த்தியாஞ் செய்தே யடைதலுறும் பலனனைத்து மடைந்தனமென் றமைதல், பரி விணிரங் குசதிருத்தி யிரண்டுமப ரோட்ச பலமாகு மறிவுருவா மான்மா விற் கென்றுந், தெரியுமப ரோட்சமுள தாதலினு லவற்குச் சேர்தலெவ் வா றஞ்ஞான முதலனவிங் கென்னில்.

---

(ஆத்மாவி னிருப்பை மறைப்பதாகிய ஆவரணத்தைக் கெடுப்பது பரோட்ச ஞானமென்றும், அதன் விளக்கத்தை மறைப்பதாகிய ஆவரணத் தைக் கெடுப்பது அபரோட்ச ஞானமென்று மிங்குணர்தல்வேண்டும்.) (110)

**சோக நிவிர்த்தி.**

6 ஜீவன் பிரத்தியக் ஆத்மாவின் (அபரோட்ச ஞானமென்னும்) சாட்சாத் காரத்தை யடைந்ததன் பின்னர், நான் கரும கருத்துரு, நான் கரும பல போக் துரு என்னும் ஜீவத்துவரூப துக்கம் நீங்குதல் சோக நிவிர்த்தியாம்.

(சாட்சாத்காரம் - பிரத்தியட்ச ஞானம்; கரும கருத்துரு - கருமத்தைச் செய்பவன்; கரும பல போக்துரு - கருமத்தின் பயனை யனுபவிப்பவன்.)

**நிரங்குசதிருப்தி.**

7. அதன் பின் ஜீவன் செய்யத்தக்கனவா யுள்ள கருமமனைத்தையுஞ் செய்து, அதனுல் அடையத் தக்கனவாயுள்ள பயனனைத்தையும் யாமடைந்து விட்டனமென்று இயல்பாகச் சுக வடிவமாகப் பொருந்தி யிருத்தல் நிரங்குச திருப்தியாம்.

சோக நிவிர்த்தி, நிரங்குசதிருப்தி யென்னு மிரண்டவஸ்தையும் அப ரோட்ச ஞானத்தின் பயனும்.

(சோகம் - ஜனனமரண முதலியவற்ருல் வரும் துக்கம்; நிரங்குச திருப்தி - தடையற்ற ஆநந்தம்.)

---

(இ - ள்.) துரியநிலையடைந்து - பிரத்தியக் ஆத்ம சாட்சாத்காரத்தைப் பெற்று, அதன்பின் - அதற்குப்பின்னே, நான்கருத்தன் - நான் கருமத்தைச் செய்பவன், நான் போத்துரு - நான் (கர்மபல)போகத்தையனுபவிப்பவன், என்னும் - என்று கருதுகின்ற, சீவவுருத்துக்கம் - ஜீவத்துவ வடிவ துக்கம், அகன்றிடுதல் - நீங்குதலே, அரியதெனும் - (அதிகாரிகளல்லாதார் பெறுதற்கு) அருமையானதாமென்று கூறப்படுகின்ற, அச்சோக நிவிர்த்தியாம் - அந்தச் சோக நிவிர்த்தியாம், செய்து - (யாம்செய்தற்குரிய கருமமனைத்தையும்) செய்து, அடைதலுறும் - பெறுதற்குரிய, பலனனைத்தும் - பயனனைத்தையும், அடைந் தனமென்று - பெற்றனமென்று, அமைதல் - (சகச சந்தோஷமாகப்) பொருந்தி யிருப்பதே, பரிவில் - துன்பமில்லாத, நிரங்குசதிருத்தி - நிரங்குசதிருப்தி யாம், இரண்டும் - (சோகநிவிர்த்தி - நிரங்குசதிருப்தியென்னும் இந்த) இரண் டும், அபரோட்சபலமாகும் - அபரோட்ச ஞானத்தின் பயனும், அறிவுருவா மான்மாவிற்கு - (சுவயம்பிரகாச) சித்வடிவமாயுள்ள (பிரத்தியக்) ஆத்மாவிற்கு, என்றும் - எப்போதும், தெரியும் - (சர்வத்தையும்) அறிதற்கியைந்த, அப ரோட்சமுளதாதலினுல் - அபரோட்சஞான மிருக்கின்றமையால், அவற்கு - அவ்வாத்மாவிற்கு, இங்கு - இவ்வியாவகாரிகதசையின்கண், அஞ்ஞானமுதலன - அஞ்ஞானமுதலிய சப்தாவஸ்தைகள், சேர்தல் - பொருந்துதல், எவ்வாறு - எங்ஙனமாம், என்னில் - என்று வினுவின், (எ - று). ஏ - அசை. 111



**112.** கடந்துநதி பதின்மர்தமை யெண்ணுங்கா லொருவன் கண் டுநவ புருடரைப்பத் தாமவன்ரு னெனவே, யடைந்தறியா திருத்தலே யஞ்ஞானம் பத்தா மவனிலைகா ணப்படா னென்னுமிரு பிராந்தி, யிடும்பைதரு மாவரண நதியுளவ னிறந்தா னெனுந்துக்கம் விட்சேபம் வேறுரியன் மொழியாற், கிடந்ததோரு துறக்கமென வுளனெனவே யறி தல் கிளர்ந்தவவ னிலையென்ற லொடுபகைத்த பரோட்சம்.

---

வினு:—சின்மாத்திர வடிவமாயுள்ள பிரத்தியக் ஆத்மாவிற்கு எப்போ தும் அபரோட்ச ஞான மிருக்கின்றதாதலின், அவ்வாத்மாவிற்கு அஞ்ஞான முதலிய சப்தாவஸ்தை உண்டாதல் எங்ஙனமாம்? (111)

**சப்தாவஸ்தா சமன்வயம்.**

**(தசமன் கதை.)**

விடை:—பிரத்தியக் ஆத்மாவிற்கு அஞ்ஞான முதலிய சப்தாவஸ்தை யுண்டாதல் கூடுமென்பது கீழ்வரும் தசமன் கதையால் நன்கு விளங்குவதாம்.

**அஞ்ஞானம்.**

(1) பதின்மர் ஒன்ருகக்கூடி நீந்திக் கடத்தற் குரியதொரு நதியை நீந் திக் கடந்து அதன் கரைமீதேறி நின்று தம்மை யெண்ணுமிடத்து, அவர் தம்முள் ஒருவன் ஒன்பதின்மரை எண்ணி அறிந்து, பத்தாமவன் தானுகவே யிருந்தும், தன்னைப் பத்தாமவனென் றறியாததே அஞ்ஞானமாம்.

**ஆவரணம்.**

(2) அவன் பின்னர்த் தசமனில்லை, அவனிருந்தால் காணப்படானு? என்னும் இருவகையான பிராந்தியும் (மறைப்பும்) அவ்வஞ்ஞான காரியமாயுள்ள ஆவரணமாம்.

---

(இ - ள்.) (இச்சீவசப்தாவஸ்தைக்குத் திருஷ்டாந்தம்), பதின்மர் - பத்துப் புருஷர் (ஒன்ருகக்கூடி), நதிகடந்து - (பெருக்குள்ள ஓர்) ஆற்றை (நீந்திக்) கடந்து (சென்று), தமையெண்ணுங்கால் - தம்மை எண்ணும் சமயத்தில், ஒரு வன் - (அவருள்) ஒருவன், நவபுருடரை - ஒன்பது புருஷரை, கண்டு - (எண்ணிப்) பார்த்து, பத்தாமவன் - பத்தாவது புருஷன், தானென - தானென்று, அடைந்து - பொருந்தி, அறியாதிருத்தலே - (தன்னை) அறியா திருந்தமையே, அஞ்ஞானம் - அஞ்ஞானமாம், (பின்), பத்தாமவனிலை - பத் தாவது புருஷனில்லை, (இருந்தால்), காணப்படான்-காணப்படானு, என்னும் - என்கின்ற, இருபிராந்தி - இருவகைப்பிராந்தியே, இடும்பைதரும் - துன்பத் தைக்கொடுக்கின்ற, ஆவரணம் - (அவ்வஞ்ஞானத்தின் காரியமாய)ஆவரணமாம், (பின்), நதியுளவனிறந்தான் - (அந்த) ஆற்றிலே அப்பத்தாவது புருஷனிறந் தனன், எனுந்துக்கம் - என்கின்றதுக்கமே, விட்சேபம் - விட்சேபமாம், (பின்), வேறு உரியன்மொழியால் - (மார்க்கத்திற்செல்லும்) மற்ருேர் ஆப்தனது வச னத்தால், ஒரு துறக்கம் கிடந்ததென - சுவர்க்கமென்பதொன் றிருக்கின்ற தென்று (ஆகமப்பிரமாணத்தாலதனை அறிவதுபோல), உளனெனவேயறிதல் - (பத்தாவது புருஷன்) இருக்கின்ருனென்று (அவனை) அறிவதே, கிளர்ந்த - கூறிய, அவன் - அப்பத்தாவது புருஷன், இலையென்றலொடு - இல்லையென் னும் (முதல்)ஆவரணத்திற்கு, பகைத்த - விரோதியான, பரோட்சம் - பரோட்ச ஞானமாம், (எ - று). காணப்படானு என்னும் ஆகாரம் தொக்கு நின்றது. 112

**113.** சங்கநவ புருடரோடு முறையெண்ணி நீயே தசமனெனத்
தனைத்தானே யிருந்தபடி யறித, லிங்குவரு தசமன்கா ணப்படா னெனெ
லோ டிகலுமப ரோட்சமா நதியுளிறந் தனனென், றங்குவரு துயரகறல்
சோகநிவிர்த் தியதா மடைந்துதன தியனிலையிற் சுகித்திருத்த லுனே,
துங்கநிரங் குசதிருத்தி யென்றறிக வினிமேற் றொல்வேத வாக்கியமாம்
விசாரமெடுத் துரைப்பாம்.

---

விட்சேபம்.

(3) பின்பவன் நதியுள் அந்தத் தசமன் மூழ்கி யிறந்தனனென்று வருந்தி யடைந்த துக்கமே விட்சேபமாம்.

பரோட்ச ஞானம்.

(4) பின்பவன் மார்க்கத்திற் செல்லும் மற்றோராப்தன் தசமனிருக்கின்றானென்று மொழிய, அம் மொழியினால் சுவர்க்க முண்டென்று அதனைச் சாஸ்திரப் பிரமாணத்தா லறிவது போலத் தசமனிருக்கின்றானென்று அவனை யறிவதே தசமனில்லை என்னும் முதலாவதான அசத்தாவரணத்தை நிவிர்த்திப்பதாகிய பரோட்ச ஞானமாம். (கடமிருக்கின்றது, படமிருக்கின்றது என்றறிதலுடைக்கத்து ஞானம் பரோட்ச ஞானமாம்.) (112)

அபரோட்ச ஞானம்.

(5) பிறகு அவ்வாப்தன் அத்தசமனை ஒன்பதின்மருடன் கூட்டிக் கிரமமாக வெண்ணி நீயே தசமனென்று தெரிவிக்க, அவன் தன்னைத் தானே முன்னிருந்த வண்ணம் தசமனென்று அறிவதே ‘அவனிருந்தால் காணப்படான்’ என்னும் இரண்டாவதான அபானுவரணத்தை நிவிர்த்திப்பதாகிய அபரோட்ச ஞானமாம். (இதுகடம், இதுபடம் என்றறிதலுடைக்கத்து ஞானம் அபரோட்ச ஞானமாம்.)

சோக நிவிர்த்தி.

(6) பின்பவன் நதியுள் அத்தசமன் மூழ்கியிறந்தனனென்று வருந்தி யடைந்த துக்கம் நீங்குதலே சோக நிவிர்த்தியாம்.

---

(இ - ள்.) சங்கநவபுருடரொடு - (பின் அவன்) கூட்டமாயுள்ள ஒன்பது புருஷருடன் (அவனைக்கூட்டி), முறையெண்ணி - கிரமமாகவெண்ணி, நீயே தசமனென - நீயே பத்தாவது புருஷனென்றுகூற (அவன்தெளிவடைந்து), தனைத்தானே - தானேதன்னை, இருந்தபடியறிதல் - உள்ளபடி (பத்தாவது புருஷனென்று) அறிதலே, இங்குவரு - இவ்வியவகார தசையின்கண் வாரா நின்ற, தசமன் - பத்தாவது புருஷன், காணப்படானெனலோடு - (இருந்தால்) காணப்படான் என்னும் (இரண்டாவது) ஆவாணத்திற்கு, இகலும் - விரோதியான, அபரோட்சமாம் - அபரோட்சஞானமாம், (பின்), நதியுள் - (தசமன்) ஆற்றில், இறந்தனனென்று - இறந்துவிட்டானென, அங்குவரு - அவ்விடத்து வந்த, துயரகறல் - துக்கம் நீங்குவதே, சோகநிவிர்த்தியதாம் - சோகநிவிர்த்தியாம், (பின் அவன்), தனதியனிலையில் - தனது நிஜஸ்திதியின்கண், அடைந்து - பொருந்தி, சுகித்திருத்தலே - சுகமாயிருப்பதே, துங்கம் - மேன்மைபொருந்திய, நிரங்குசதிருத்தி - நிரங்குசதிருப்தியாம், என்றறிக - என்று (இத்திருஷ்டாந்தத்தை நீ) அறிவாயாக, இனி - இனி, மேல்தொல் - மேன்மையும் பழைமையும் (பொருந்திய), வேதவாக்கியவிசாரம் - வேதவாக்கிய விசாரத்தை, எடுத்துரைப்பாம் - எடுத்துக் கூறுவாம் (எ - று). தான் - ஆம் - அசை. 113



**114.** விரிந்தவிதி நிடேதஞ்சித் தார்த்தபோ தகமாய் வேதவாக்
கியமூன்று திறனாகு மவற்றுள், வருந்திமக முதலனசெய் கென்றல்விதி
விடுக மதுபானா திகளென்கை நிடேதம்விதி யின்றித், திருந்துசிவ வுயி
ரயிக்கப் பொருடனையே தெருட்டல் சித்தார்த்த போதகவாக் கியமாகு
மென்பர், பொருந்துமறை நான்கினுநான் குளவாஞ்சித் தார்த்த போதக
மா கியமகா வாக்கியங்க ளன்றே.

---

நிரங்குசதிருப்தி.

(7) பின்பவன் தான் பத்தாமவனென்னும் தனது நிஜநிலையில் சுகவடிவமாக விளங்குதலே நிரங்குசதிருப்தியாம்.

இத்தசமன் கதையால் பிரத்தியக் ஆத்மாவின்கண் அஞ்ஞான முதலிய சப்தாவஸ்தை சம்பவித்தல் கூடுமென்பது செவ்வையாக விளங்குவதாம்.

(இச்சப்தாவஸ்தையி னியல்பை யின்னும் விரிவாக அறிய விரும்புவோர் யாமியற்றி யுள்ள கைவல்லிய நவநீத வசன வினாவிடையிற் காண்க.)

வேத வாக்கிய விசாரத்தால் ஆத்மஞான முண்டாவதா யிருத்தலின், அதனை அவசியஞ் செய்தல்வேண்டும். (113)

வேதவாக்கியத்திரயம்.

வினா :—வேத வாக்கியம் எத்தனை வகையாம்?

விடை :—அது விதிவாக்கியம், நிஷேத வாக்கியம், சித்தார்த்த போதக வாக்கிய மென மூவகைத்தாம்.

வினா :—அவற்றை விளக்கமாகக் கூறல்வேண்டும்?

விதி வாக்கியம்.

விடை :—(1) வேதம் யாகாதி கருமங்களைச் செய்தல்வேண்டுமென்று கூறுவது விதிவாக்கியமாம்.

---

(இ - ள்.) வேதவாக்கியம் - வேதவாக்கியமானது, விரிந்த - விரிவாகவுள்ள, விதிநிடேதஞ்சித்தார்த்தபோதகமாய் - விதிவாக்கியமும் நிஷேத வாக்கியமும் சித்தார்த்தபோதகவாக்கியமுமாக, மூன்றுதிறனாகும் - மூன்றுவகையாம், அவற்றுள் - அவ்வாக்கிய மூன்றனுள், வருந்தி - வருத்தமுற்று, மகமுதலன - யாகாதி கருமங்களை, செய்க என்றல் - செய்யக்கடவாயென்று கூறுவது, விதி - விதிவாக்கியமாம், மதுபானாதிகள் - கள்ளுண்டல் முதலியவற்றை, விடுக - விடக்கடவாய், என்கை - என்று கூறுவது, நிடேதம் - நிஷேதவாக்கியமாம், விதியின்றி - விதி (நிஷேத) சூன்யமாய், திருந்து - (குற்றமின்றித்) திருந்தியுள்ள, சிவவுயிர் - பிரஹ்மத்திற்கும் பிரத்தியக் ஆத்மாவிற்கும், அயிக்கப்பொருள் தனையே - ஐக்கியார்த்தத்தை மாத்திரம், தெருட்டல் - தெளிவாகக்கூறுவது, சித்தார்த்தபோதக வாக்கியமாகும் - சித்தார்த்தபோதக வாக்கியமாம், என்பர் - (மேலோர்) என்றிங்ஙனம் வேதவாக்கியத்திரயத்தைக் கூறுவர், பொருந்தும் - (குற்றமற்று மோட்ச சாதனமாகப்) பொருந்தியுள்ள, மறைநான்கினும் - (இருக்கு - யசுர் - சாமம் - அதர்வணமென்னும்) நான்கு வேதங்களிலும், (கிரமமாகப் பிரஞ்ஞானம் பிரஹ்மம், அகம்பிரஹ்மாஸ்மி, தத்துவமசி, அயமாத்மாப் பிரஹ்மம் என), சித்தார்த்தபோதகமாகிய - சித்தார்த்தபோதக வாக்கியமென்னும், மகாவாக்கியங்கள் - மகாவாக்கியங்கள், நான்குளவாம் - நான்குண்டு, (எ - று). அன்று - ஏ - அசைநிலைகள். 114

**115.** உரைத்தவையுட் சிறந்ததுநற் சாமமறை புகலு மோங்கு தத்வ மசிமகா வாக்கியமங் கதற்குப், பரத்தலுறு தற்பதந்தோம் பதத் தோடசி பதமாய்ப் பதமூன்றுஞ் சிவமுயிரங் கவற்றயிக்க முறையே, யருத்தமேன லாம்பதமே பதார்த்தமோடு வாக்கி யார்த்தங்க டமக்குச்சம் பந்தமுறை மூன்றும், விரிக்கிலவை தாஞ்சமா னுதிகர ணம்பின் விசேடவிசே டியமிலக் கியமோடிலக் கணமாம்.

---

நிஷேத வாக்கியம்.

(2) சுராபானம் (கள் குடித்தல்) முதலியவற்றை விடுதல்வேண்டுமென்று கூறுவது நிஷேத வாக்கியமாம்.

சித்தார்த்த போதக வாக்கியம்.

(3) விதி நிஷேதமின்றிப் பிரஹ்மாத்ம ஐக்கிய வடிவ அர்த்தத்தை மாத்திரம் தெளிவாகக் கூறும் வேத வாக்கியம் சித்தார்த்த போதக வாக்கியமாம்.

(சித்தித்த பொருளைக் கூறும் வாக்கியம் சித்தார்த்த போதக வாக்கியமாம்.)

மகாவாக்கியம்.

அச் சித்தார்த்த போதக வாக்கியம் மகாவாக்கியமென்று கூறப்படுவதாம். அஃது இருக்கு, யசுர், சாமம், அதர்வணமென்னும் நான்கு வேதங்களிலும் முறையே பிரஞ்ஞானம் பிரஹ்மம், அகம் பிரஹ்மாஸ்மி, தத்துவமசி, அயமாத்மாப் பிரஹ்மமென நான்காக விருப்பதாம்.

(பிரஞ்ஞானம் பிரஹ்மம் - ஞானவடிவ ஆத்மாப் பிரஹ்மம்; அகம் பிரஹ்மாஸ்மி - நான் பிரஹ்மமா யிருக்கின்றேன்; தத்துவமசி - அது நீயா யிருக்கின்றாய்; அயமாத்மாப்பிரஹ்மம் - இந்த ஆத்மாப் பிரஹ்மம்) (114)

---

(இ - ள்.) உரைத்த அவையுள் - கூறிய அந்நான்கு வாக்கியங்களுள், சிறந்தது - சிறந்து விளங்குவது, நற்சாமமறை புகலும் - சிறந்த சாமவேதங் கூறும், ஓங்கு - (உபதேச வாக்கியமாக) உயர்ந்திருக்கின்ற, தத்வமசி மகாவாக்கியம் - தத்துவமசி மகாவாக்கியமாம், அங்கு - அவ்வேதத்தில் (உள்ள), அதற்கு - அத்தத்துவமசி வாக்கியத்திற்கு, பரத்தலுறு - (பொருள்) விரிதல் பொருந்தியுள்ள, தற்பதந்தொம்பதத்தொடசிபதமாய் - தத்பதமும் - துவம்பதமும் - அசிபதமுமாக, பதமூன்றும் - பதமூன்றண்டு, அங்கு - அவ்வாக்கியத்தில் (உள்ள), அவற்று(க்கு) - (தத் - துவம் - அசியென்னும்) அப்பதங்களுக்கு, முறையே - கிரமமாக, சிவம் உயிர் அயிக்கம் - பிரஹ்மமும் - ஆத்மாவும் - ஐக்கியமும், அருத்தமெனலாம் - பொருளாமெனக்கூறல் பொருந்துவதாம், பதம் பதார்த்தம் வாக்கியார்த்தங்கள் தமக்கு - பதமும் பதார்த்தமும் வாக்கியார்த்தமுமென்னு மிவற்றிற்கு, முறை - கிரமமாக, சம்பந்தமூன்றும் - சம்பந்தமூன்றண்டு, விரிக்கில் - (அவற்றை) விரித்துக்கூறமிடத்து, அவை-அச்சம்பந்தங்கள், சமானுதிகரணம் - சாமானுதிகாணிய சம்பந்தம், பின் - பின்னர், விசேட விசேடியம் - விசேஷண விசேஷிய சம்பந்தம், இலக்கியமொடிலக்கணம் - லட்சிய லட்சண சம்பந்தம், (என), ஆம் - ஆகும், (எ - று). ஏ - ஒடு-தாம் - அசைநிலை. 115



---

வினா:—இந்நான்கு மகா வாக்கியங்களுள் சிறந்தது யாது?

விடை:—சாமவேதம் (சாந்தோக்கிய உபநிஷத்து ஆறுவது பிரபாடகத்திற்) கூறும் தத்துவமசி மகாவாக்கியமாம்.

வினா:—அஃதெத்தனை பதமுடையதாம்; அப்பதங்களின்பொருள்என்ன?

விடை:—அம் மகாவாக்கியம் தத்பதம்-துவம்பதம்-அசிபதமென மூன்று பதமுடையதாம்; அப்பதங்களுக்குப் பொருள் முறையே பிரஹ்மமும், ஆத்மாவும், ஐக்கியமுமாம். [அம் மகாவாக்கியத்தின் பொருள் அது (அந்தப் பிரஹ்மம்) (ஆத்மாவாகிய) நீயா யிருக்கின்றாய் என்பதாம்.]

மகாவாக்கியார்த்த சம்பந்தத் திரயம்.

வினா:—அவற்றின் சம்பந்தமுறை யெப்படியாம்?

விடை:—தத் துவம் என்னும் பதங்களுக்கும், அவற்றின் பொருளுக்கும், தத்துவம் என்னும் வாக்கியத்தின் பொருளுக்கும் கிரமமாகச் சம்பந்தம் மூன்றண்டு. அவை சாமாநாதிகரணிய சம்பந்தம், விசேஷண விசேஷியபாவ சம்பந்தம், லட்சிய லட்சணபாவ சம்பந்த மென்பனவாம்.

[தத்துவமசி யென்னும் மகாவாக்கியத்திலுள்ள தத் துவம் என்னும் பதமிரண்டிற்கும் பரஸ்பரம் சாமாநாதிகரணிய சம்பந்தமும், அவ்விரு பதங்களின் அருத்தமிரண்டற்கும் பரஸ்பரம் விசேஷண விசேஷியபாவ சம்பந்தமும், தத்துவம் என்னும் வாக்கியத்திற்கும் அல்லது அதன் பொருளுக்கும் அகண்ட சைதன்யத்தோடு லட்சிய லட்சண பாவ சம்பந்தமு முண்டென்பதிங் குணர்தல் வேண்டும்.]

அவை வருமாறு:—

“சாமாநாதிகரணியம், விசேஷண விசேஷியபாவம், இலக்ஷிய லக்ஷண பாவமென்னு மிம்மூன்று சம்பந்தங்களும் மகாவாக்கியத்திற்குச் சககாரிகளாம். தத்துவமஸி என்னும் வாக்கியத்திலுள்ள தத் துவம் என்னு மிரு பதங்கட்கும் பரஸ்பரம் சாமாநாதிகரணிய சம்பந்தமும், இவ்விரு பதங்களி னர்த்தங்கட்குப் பரஸ்பரம் விசேஷண விசேஷியபாவ சம்பந்தமும், இவ்விரு பதங்கட்கும் அல்லது இவ்விரு பதங்களி னர்த்தங்கட்கும் அகண்ட சைதன்யத்தோடு இலக்ஷிய லக்ஷணபாவ சம்பந்தமும் உளவாம்.

சாமாநாதிகாணிய சம்பந்தம்.

1. பின்ன பின்னமாய பிரவிருத்திக்கு நிமித்தங்களாய சப்தங்கட்கு எவ்வேகார்த்தத்தில் பிரவிருத்தி யுண்டோ அதுவே இச்சப்தங்கட்குப் பரஸ்பரம் சாமாநாதிகரணிய சம்பந்தமாம்.

ஸோயம் தேவதத்தः என்புழி, ஸः-சப்தமோ அத் தேச கால விசிட்ட தேவதத்தனது வாசகமாம்; அயம் சப்தமோ இத் தேச கால விசிட்ட தேவதத்தனது வாசகமாம்; ஆண்டு ஒரே தேவதத்தனிடத்து ஸः-சப்தத்தின் பிரவிருத்திக்கு நிமித்தம் அத் தேச கால விசிட்டத்துவமும், அயம் சப்தத்தின் பிரவிர்த்திக்கு நிமித்தம் இத் தேச கால விசிட்டத்துவமுமாம். இவ்விரு சப்தங்களும் பாகத்தியாக இலக்ஷணையால், அத் தேச கால விசிட்டத்துவ இத் தேச கால விசிட்டத்துவ அம்சங்களைப் பரித்யாகஞ்செய்து ஒரே தேவதத்த பிண்டத்தைப் போதிப்பனவாம். இதுவே ஸோயம் என்னும் இரு சப்தங்கட்கும் பரஸ்பரம் சாமாநாதிகரணிய சம்பந்தமாம்.

விசேஷண விசேஷிய பாவ சம்பந்தம்.

2. முற்கூறிய வாக்கியத்திலேயே இரு சப்தங்களின் அர்த்தங்கட்குமுள்ள பரஸ்பர விரோதத்தை நிவிர்த்திப்பது விசேஷண விசேஷியபாவ சம்

பந்தமாம். ஆண்டு, ஸஃ-சப்தத்தினர்த்தம் விசேஷியமும், அயம் சப்தத்தி னர்த்தம் விசேஷணமும், ஸோயமென்னும் வாக்கியப் பிரயோகத்திலாம். அயம் சப்தத்தினர்த்தம் விசேஷியமும், ஸஃ சப்தத்தினர்த்தம் விசேஷணமும், அயம்ஸஃ என்னும் பிரயோகத்திலாம்.

### இலட்சிய லட்சணபாவ சம்பந்தம்.

3. முற்கூறிய வாக்கியத்தின்கண்ணுள்ள இருசப்தங்களின் பாகத்தியாக லட்சணையால் அத் தேச காலவிசிட்டத்துவ இத் தேச கால விசிட்டத்துவங்களாய இரு விரோதியம்சங்களைப் பரித்தியாகஞ்செய்து அவிருத்த தேவதத்த பிண்ட மாத்திரம் அவ்வாக்கியத்தாற் போதிப்பிக்கப் படுகின்றது; ஆதலால், தேவதத்த பிண்டமாத்திரமே ஸோயம் வாக்கியத்திற்கு இலக்ஷியார்த்தமாம். இவ்வாறு வாக்கியார்த்தரூப லக்ஷிய தேவதத்தனோடு ஸோயம் என்னும் இரு பதங்கட்கும் பதார்த்தங்கட்கும் இலக்ஷிய லக்ஷணபாவ சம்பந்தமாம்.

ஈண்டு, அறிவிப்பது லட்சணமும் அறிய யோக்கிமாயது இலக்ஷியமுமாம். ஸோயம் என்னும் இரு பதங்களால் அல்லது இரு பதங்களி னர்த்தங்களால் அத் தேவதத்த பிண்டம் அறியப்படுவதாம்; ஆதலால், பதங்களும் அர்த்தங்களும் இலக்ஷணமாம்; அத் தேவதத்த பிண்டம் இலக்ஷியமாம்.

1. அங்ஙனமே, தத்துவமஸி என்னும் மகாவாக்கியத்திலுள்ள தத்பதமோ பரோக்ஷத்துவ சர்வஞ்ஞத்துவாதி தர்மவிசிட்ட ஈசுவரசைதன்யத்தின்வாசகமாம்; துவம்பதமோ, அபரோக்ஷத்துவ அற்பஞ்ஞத்துவாதி தர்ம விசிட்ட ஜீவசைதன்யத்தின் வாசகமாம். ஆண்டுத் தற்பதத்தின் பிரவிருத்திக்குநிமித்தம் பரோக்ஷத்வாதி தர்மவிசிட்டத் தன்மையாம்; துவம்பதத்தின் பிரவிர்த்திக்கு நிமித்தம் அபரோக்ஷத்துவாதி தர்ம விசிஷ்டத்தன்மையாம். ஆதலால், தத் துவம் என்னும் இருபதங்களின் பிரவிருத்திக்கு நிமித்தம் பிந்நபிந்நங்களாம். இவ்விரு பதங்கள் பாகத்தியாக இலக்ஷணையால் ஓர் அகண்ட சைதன்யத்தின் போதகமாம். இதுவே அப்பதங்களின் பரஸ்பரம் சாமாநாதிகரணிய சம்பந்தமாம்.

2. தத்பதார்த்தரூப ஈசுவர சைதன்யத்திற்கும் துவம்பதார்த்தரூப ஜீவ சைதன்யத்திற்கும் பரஸ்பரம் பேதப் பிராந்தியை நிவிர்த்தி செய்வதாயுள்ளது விசேஷண விசேஷியபாவ சம்பந்தமாம். தத்துவமஸி என்னும் வாக்கியப் பிரயோகத்தில் தத்பதார்த்தம் விசேஷியமாம்; துவம்பதார்த்தம் விசேஷணமாம் - துவந்தத்தசியென்னு மிவ்வாறுய வாக்கியப் பிரயோகத்திலோ துவம்பதார்த்தம் விசேஷியமாம், தத்பதார்த்தம் விசேஷணமாம். இங்ஙனம் தத்துவம் பதார்த்தங்கட்குப் பரஸ்பரம் அபேத ரூபத்தால் விசேஷண விசேஷியபாவம் செய்வதால், இரண்டனது பேதமயல் நீங்கும். [தத்பதார்த்தத்தில் பரோக்ஷத் தன்மையின் மயக்கம் நீக்கத் தத்பதார்த்தத்தை யுத்தேசித்துத் துவம்பதார்த்தத் தன்மை விதேயமாம்; துவம்பதார்த்தத்தில் பரிச்சிந்நத்தன்மையின் மயக்கம் நீக்கத் துவம்பதார்த்தத்தை யுத்தேசித்துத் தத்பதார்த்தத்தன்மை விதேயமா (அமைக்கப்பட்டதா)ம்.]

3. தத் துவம் என்னும் இருபதங்கட்கும் அவ்விரு பதங்களினர்த்தரூபமான ஈசுவர ஜீவர்கட்கும் வாக்கியார்த்தபூத அகண்ட சைதன்யத்தோடு இலட்சிய இலக்ஷணபாவ சம்பந்தமாம். அவ்விரு பதங்களும் பதார்த்தங்களும் பரோக்ஷத்வ அபரோக்ஷத்துவாதி விருத்தாம்சங்களைப் பரிகரித்து அவிருத்த அகண்ட சைதன்யமாத்திரத்தையே அறிவிப்பதாம்; ஆதலால், அப்பதங்களினும் அவ்வர்த்தங்களிலுமோ இலக்ஷண ரூபத்தன்மையும் அவ்வகண்ட சைதன்யத்தில் லக்ஷிய ரூபத்தன்மையும் உளவாம்." என்று தத்வாநுசந்தானம் கூறுகின்றது. (115)



**116.** அறைதலுறு பதங்கடமக் கிருபொருளிங் குளவா மவை வாச்சி யார்த்தமிலக் கியார்த்தமென வவற்றுண், முறைமைதரு விராட் புருடன் முதலாகி நின்ற மூவுருவ வீசனுமப் பிரமமுமொன் றாகிப், பிறிதலற நிற்புழித்தற் பதத்திற்கெய் துறுவ பெயர்வாச்சி யார்த்தமுக்கி யார்த்தமபி தார்த்த, நெறிகோள்விசு வாதிகளுந் துரியனுமொன் றாகி நிற்புழித்தோம் பதத்திற்கு வருமம்மூ வகையும்.

---

### தத் துவம் பத வாச்சியார்த்தம்.

வினா:—தத் துவம் பதங்களின் அர்த்தம் எத்தனை வகையாம்?

விடை:—அவை வாச்சியார்த்தம், லட்சியார்த்தமென இருவகையாம். அவற்றுள், விராட் புருஷன் முதலாகவுள்ள மூன்று வடிவமாக விளங்கும் ஈசுவரனும், பிரஹ்மமும் ஏகமாய்ப் பிரிவின்றி நிற்குமிடத்து, அவற்றைத் தப்தாய பிண்டம்போல ஏகாகாரமாகக் காண்டல் தத் பதத்தின் வாச்சியார்த்தமாம். இது முக்கியார்த்தமென்றும் அபிதார்த்த மென்றும் (சக்கியார்த்த மென்றும்) சொல்லப் படுவதாம்.

(தனுத்திரய சமஷ்டி வடிவினராய விராட் புருஷன், இரணிய கருப்பன், அந்தர்யாமி யென்னும் மூவுருவ ஈசுவரனையும் பிரஹ்மத்தையும் கூட்டித் தப்தாய பிண்டம்போல ஏக வடிவமாகக் காண்டல் தத்பதத்தின் வாச்சியார்த்தமாம். தனுத்திரயம் - ஸ்தூல-சூக்கும - காரண சரீரங்கள். வாச்சியார்த்தம் - இயற் பெயர்ப் பொருள். தப்தாயபிண்டம் - காய்ந்துள இரும்பு.)

விசுவன் முதலாக உள்ள மூன்று வடிவமாக விளங்கும் ஜீவனும் பிரத்தியக் ஆத்மாவும் ஏகமாய்ப் பிரிவின்றி நிற்குமிடத்து, அவற்றைத் தப்தாய பிண்டம் போல ஏகாகாரமாகக் காண்டல் துவம் பதத்தின் வாச்சியார்த்தமாம்.

(தனுத்திரய வியஷ்டி வடிவினராய விசுவ - தைசத - பிராஞ்ஞனென்னும் மூவுருவ ஜீவனையும் பிரத்தியக் ஆத்மாவையுங் கூட்டித் தப்தாய பிண்டம் போல ஏகவடிவமாகக்காண்டல் துவம் பதத்தின் வாச்சியார்த்தமாம்.) (116)

---

(இ - ள்.) இங்கு - இத்தத்துவமசி மகாவாக்கியத்துள், அறைதலுறு - கூறப்படுகின்ற, பதங்கள் தமக்கு - தத்துவமென்னும் பதங்களுக்கு, இருபொருளுள - இரண்டு பொருளுண்டு, அவை-அப்பொருள்கள், வாச்சியார்த்தம் இலக்கியார்த்தமென ஆம் - வாச்சியார்த்தம் இலட்சியார்த்தமென்றும், அவற்றுள்- அவ்விரண்டனுள், முறைமைதரு - கிரமமாய் நிகழுகின்ற, விராட்புருடன் முதலாகிநின்ற - விராட்புருஷனாதியான, மூவுருவ ஈசனும் - மூன்று வடிவமாக விளங்கும் ஈசுவரனும், அப்பிரமமும் - அந்தப் பிரஹ்மமும், ஒன்றாகி - (தப்தாயபிண்டம்போல) ஏகாகாரமாய், பிறிதலறநிற்புழி - பிறிதலொழிய நின்றவிடத்து, தத்பதத்திற்கு - தத்பதத்தின் பொருளுக்கு, எய்துறுவபெயர் - பொருந்துவனவாய பெயர்கள், வாச்சியார்த்தம் முக்கியார்த்தம் அபிதார்த்தம் - வாச்சியார்த்தம் - முக்கியார்த்தம் - அபிதார்த்தம் என்பனவாம், நெறிகொள் - (கிரமமாய் நிகழ்தலென்னும்) முறைமையைக்கொண்டுள்ள, விசுவாதிகளும் - விசுவன்முதலிய மூன்று ஜீவரும், துரியனும்-பிரத்யக் ஆத்மாவும், ஒன்றாகி-(தப்தாய பிண்டம்போல) ஏகாகாரமாய், நிற்புழி (பிரிதலொழிய) நின்றவிடத்து, தொம் பதத்திற்கு - துவம்பதத்தின் பொருளுக்கு, அம்மூவகையும்-(வாச்சியார்த்த முதலிய) அம் மூவகைப் பெயர்களும், வரும் - (பொருந்தி) வருவனவாம், (எ - று).

**117.** தற்பதத்தி னுக்குவிராட் புருடாதி யகன்ற தனிநிருபா திகப்பிரம மேயிலக்கி யார்த்தஞ், சோற்பரவு சோதிததற் பதார்த்தமேன நிற்குந் தோம்பதத்திற் குற்றவிசு வாதிகளின் வேறும், போற்பினிரு பாதிகமாந் துரியனிலக் கியார்த்தம் போருந்துறுசோ திததோம்ப தார்த்த மேன லாகும், விற்பரவு மிலக்கணைவிட் டதுவும்விடா ததுவும் விட்டு விடா ததுவுமேன மூவகையா மன்றே.

---

### தத் துவம் பத லட்சியார்த்தம்.

விராட் புருஷன் முதலிய மூவரினும் வேறாகிய நிருபாதிகப் பிரஹ்மமே தத்பதத்தின் இலட்சியார்த்தமாம்; இது சோதித (சுத்த) தற்பதார்த்தமென்றும் சொல்லப்படுவதாம். (நிருபாதிகப் பிரஹ்மம் - மாயோபாதி யின்றிய சுத்த சேதன வடிவப் பிரஹ்மமாம். இலட்சியார்த்தம் - ஆகுபெயர்ப் பொருள் )

விசுவன் முதலிய மூவரினும் வேறாகிய நிருபாதிகப் பிரத்தியக் ஆத்மாவே துவம்பதத்தின் லட்சியார்த்தமாம்; இது சோதித (சுத்த) துவம்பதார்த்தமென்றும் சொல்லப்படுவதாம். (நிருபாதிகப் பிரத்தியக் ஆத்மா - அவித்தியோபாதி யின்றிய சுத்த சேதன வடிவ ஆத்மாவாம்.)

### லட்சணையின் பேதம்.

வினா:—லட்சணை யெத்தனை வகையாம்?

விடை:—அது விட்ட லட்சணை, விடாத லட்சணை, விட்டு விடாத லட்சணை யென மூவகைத்தாம்; இவற்றுள், விட்ட லட்சணை ஜகத் லட்சணையென்றும், விடாத லட்சணை அஜகத் லட்சணை யென்றும், விட்டு விடாத லட்சணை ஜகதஜகத் லட்சணை யென்றும் சொல்லப்படுவனவாம். (117)

---

(இ - ள்.) தற்பதத்தினுக்கு - தத்பதத்திற்கு, விராட்புருடாதியகன்ற - விராட்புருஷன் முதலிய மூன்றும் நீங்கிய, தனி - ஏகமாயுள்ள, நிருபாதிகப் பிரமமே - (மாயையென்னும்) உபாதியில்லாத பிரஹ்மமே, இலக்கியார்த்தம் - இலட்சியார்த்தமாம், (அது), சொற்பரவு - புகழமைந்த, சோதிததற்பதார்த்தமென - சோதித (சுத்த) தத்பதார்த்தமெனவும், நிற்கும் - நிலைபெற்று விளங்குவதாம், தொம்பதத்திற்கு - துவம்பதத்திற்கு, உற்ற - (கிரமமாகப்) பொருந்திய, விசுவாதிகளின் - விசுவன் முதலிய மூன்றற்கும், வேறும் - வேறாகவுள்ள, பொற்பின் - (மாறாது விளங்குதலென்னும்) அழகினை யுடைய, நிருபாதிகமாம் - (அவித்தை யென்னும்) உபாதி யில்லாததாகிய, துரியன் - பிரத்யக் ஆத்மா, இலக்கியார்த்தம் - இலட்சியார்த்தமாய், (அதனை), பொருந்துறு - (எதனோடும் கலவாமையைப்) பொருந்தியுள்ள, சோதித தொம்பதார்த்தமெனலாகும் - சோதித (சுத்த) துவம்பதார்த்தமெனக் கூறுதலும் பொருந்துவதாம், விற்பரவு மிலக்கணை - (இலக்கணநூலிலும் தருக்கநூலிலும்) விளக்கம் பொருந்திய இலக்கணையானது, விட்டதுவும் - விட்ட விலக்கணையும், விடாததுவும் - விடாத விலக்கணையும், விட்டுவிடாததுவும் - விட்டுவிடாத விலக்கணையும், என - என்று, மூவகையாம் - மூன்று விதமாம், (எ - று). அன்று - ஏ - அசை. 117



**118.** கங்கையினி லிடைச்சேரி மருவலுறுஞ் சோல்லுங் கவன் குந்த மோடுசோயந் தேவதத்த னெனுஞ்சோ, லிங்கிவைக ளுதாரணமா மவற்றினுக்குக் கங்கை யெனுமோழிநீர் வடிவாந்தன் முக்கியார்த் தத்தைத், தங்குமிடைச் சேரிதனக் கிடமாகா மையினுற் றணந்துகரை காட்டுந்தன் முக்கியார்த் தத்தைத், துங்கமுறு குந்தமோழி விடாமற்குந் தத்தைச் சுமப்பவனைக் காட்டுமேன வுணர்ந்திடுகே துணிந்தே.

---

வினா:—இந்த லட்சணைகளுக்கு உதாரணங்களேவை?

விடை.—(1) கங்கையின்கண் இடைச் சேரி யிருக்கின்றதென்பது விட்ட லட்சணைக்கு உதாரணமாம்; (2) குந்தம் (ஈட்டி) செல்லுகின்றதென்பது விடாத லட்சணைக்கு உதாரணமாம்; (3) சோயந் தேவதத்தன் (அவனேயித் தேவதத்தன்) என்பது விட்டு விடாத லட்சணைக்கு உதாரணமாம்.

வினா:—இவற்றை விளக்கமாகக் கூறல்வேண்டும்.

### விட்ட லட்சணை.

விடை:—1. கங்கையின்கண் இடைச்சேரி யிருக்கின்றதென்னு மிடத்து, கங்கை யென்னும் பதம் தனது முக்கியார்த்தமாகிய தேவநதிப் பிரவாகம் இடைச்சேரியிருப்பதற்கு இடமாகா திருத்தலால், அத்தேவ நதிப்பிரவாகமாகிய தனது முக்கியார்த்தத்தைவிட்டு அத் தேவ நதியின் கரையைத் தெரிவிப்பதாம். இங்ஙனம் கூறுவது விட்ட லட்சணையாம்.

(கங்கையின்கண் இடைச்சேரி யிருக்கின்ற தென்னுமிடத்து, கங்கை யென்னும் பதம் தனது முக்கியார்த்தமாகிய தேவ நதிப் பிரவாகத்தைவிட்டு, அதன் சம்பந்தியாகிய கரையைத் தெரிவித்தலின், இது விட்டலட்சணைக்கு உதாரணமாம். இங்குக் கங்காபதத்தின் முக்கியார்த்தத்திற்கு (தேவநதிப் பிரவாகத்

---

(இ - ள்.) கங்கையினில் - கங்கா நதியின்கண், இடைச்சேரி - இடைச்சேரியானது, மருவலுறும் - பொருந்தியிருக்கின்றது, (என்னும்) சொல்லும் - என்று கூறும் வாக்கியமும், குந்தம்கவனமோடு - ஈட்டி செல்லுகின்றது என்று கூறும் வாக்கியத்தோடு, சோயந் தேவதத்தன் - அவனே இத்தேவதத்தன், எனும்சொல் - என்று கூறும் வாக்கியமும், (ஆகிய), இவைகள் - இம்மூன்று வாக்கியங்களும், இங்கு-இவ்விடத்து, அவற்றினுக்கு - அம்மூன்றிலக்கணைகளுக்கும் (முறையே), உதாரணமாம் - திருஷ்டாந்தங்களாம், (கங்கையிலிடைச்சேரியிருக்கின்றதென்பதில்), கங்கையெனுமொழி-கங்கையென்னும் பதம்,(தன்முக்கியார்த்தமாய பிரவாகம்), தங்கும் - (கரையின்கண்) பொருந்தியுள்ள, இடைச்சேரி தனக்கு - இடைச்சேரிக்கு, இடமாகாமையினால் - ஆசிரியமாகாமையால், நீர் வடிவாம் - பிரவாகவடிவமாயுள்ள, தன்முக்கியார்த்தத்தை - தனது முக்கியார்த்தத்தை, தணந்து - விட்டு, கரைகாட்டும் - (அதனையடுத்து அதனோடு சம்பந்தமுடையதாயுள்ள) கரையினைக் காட்டுவதாம், (ஈட்டி செல்லுகின்றதென்பதில்); துங்கமுறு - உயர்ச்சி பொருந்திய, குந்தமொழி - ஈட்டி யென்னும் பதம், தன் முக்கியார்த்தத்தை - தனது முக்கியார்த்தமாகிய ஈட்டியை, விடாமல் - விடாமல், குந்தத்தைச் சுமப்பவனை - ஈட்டியைச் சுமந்துகொண்டு செல்லுகின்றவனையும், காட்டும் - காட்டுவதாம், என-என்று, துணிந்து-துணிவாக (இவற்றை முறையே விட்ட லட்சணைக்கும் விடாத லட்சணைக்கும் உதாரணமாக), உணர்ந்திடுக - (நீ) உணர்வாயாக, (எ - று). கவனமென்பது கவனென விகாரப்பட்டு நின்றது; அதன்பொருள் இங்கு நடையென்பதாம். 118

**119.** முன்னமொழி தருஞ்சோயந் தேவதத்த னென்னு மொழி யுண்முத லவனென்னு மொழியிறந்த காலந், தன்னில்வரு தேசவயோ விசிட்டனுந் தேவ தத்தனைக்காட் டிடுமிவனென் மொழிநிகழ்கா லத்தி, லுன்னவரு மவையுடைய தேவதத்தன் றன்னை யுணர்த்திடுமிவ் விருத்த தரு மப்பொருள்க ளிரண்டு, மன்னுதல்செ யயிக்கமுறு மையினலப் பொருட்கண் வருவிருத்த தருமங்க ளனைத்தினையும் விட்டே.

---

திற்கு) அதன் (அந்தப் பிரவாகத்தின்) சம்பந்தியாகிய கரையோடுள்ள சம்பந்தம் விட்ட லட்சணையாம்; அதனு லறியப்படுங் கரை லட்சியார்த்தமாம். தேவநதிப் பிரவாகத்தில் இடைச்சேரி யிருப்பது கூடாதாகலின், அது விடப்பட்டது.)

விடாத லட்சணை.

2. குந்தம் செல்லுகின்ற தென்னுமிடத்து, குந்த மென்னும் பதம் ஈட்டியாகிய தனது முக்கியார்த்தத்தை விடாமல், குந்தத்தைச் சுமப்பவனையும் தெரிவிப்பதாம். இங்ஙனம் கூறுவது விடாத லட்சணையாம்-

(குந்தம் செல்லுகின்ற தென்னுமிடத்து, குந்தமென்னும் பதம் தனது முக்கியார்த்தமாகிய ஈட்டியை விடாது அதன் (அந்த ஈட்டியின்) சம்பந்தியாகிய சுமப்பவனையுந் தெரிவித்தலின், இது விடாத லட்சணைக்கு உதாரணமாம். இங்குக் குந்த பதத்தின் முக்கியார்த்தத்திற்கு (ஈட்டிக்கு) அதன் (அந்த ஈட்டியின்) சம்பந்தியாகிய சுமப்பவனேடுள்ள சம்பந்தம் விடாத லட்சணையாம். அதனு லறியப்படும் சுமப்பவன் லட்சியார்த்தமாம். குந்தம் என்னும் பொருளுக்குச் செல்லுத லென்னுந் தொழில் கூடாதாகலின், அதனேடு சுமப்பவனும் கொள்ளப்பட்டா னென்க.) (118)

விட்டுவிடாத லட்சணை.

3. சோயந் தேவதத்தனென்னு மிடத்து, அவ்வாக்கியத்துள்ள (ஸ: என்னும்) அவனென்னும் பதமானது இறந்தகாலம், தூரதேசம், பாலிய வயது என்பவற்ரேடு கூடிய தேவதத்தனைத் தெரிவிப்பதாம்; (அயம் என்னும்) இவனென்னும் பதமானது நிகழ்காலம், சமீபதேசம், விருத்த வயது என்பவற்ரேடு கூடிய தேவதத்தனைத் தெரிவிப்பதாம்.

---

(இ - ள்.) முன்னமொழிதரும் - முன்னர்க் கூறிய, சோயந்தேவதத்த னென்னுமொழியுள் - சோயந்தேவதத்தனென்னும் வாக்கியத்தில், முதல்-முதலிலுள்ள, அவனென்னுமொழி - (ஸஃவடிவ) அவனென்னும் பதம், இறந்த காலந் தன்னில் வரு - இறந்தகாலத்தில் (பொருந்தி) வந்த, தேசவயோ விசிட்டனும் - தேசத்தோடும் வயதோடும் கூடினவனுகிய, தேவதத்தனைக்காட்டிடும் - தேவதத்தனைக் காட்டுவதாம், இவனென்மொழி - (அயம் வடிவ) இவனென்னும் பதம், நிகழ்காலத்தில் - நிகழ்காலத்தில், உன்னவரும் - ஆராய்ந்தறியவருகின்ற, அவையுடைய - அத்தேச வயதுகளையுடைய, தேவதத்தன்தன்னை யுணர்த்திடும் - தேவதத்தனையறிவிப்பதாம், இவ்விருத்த தருமப்பொருள்களிரண்டும் - (இறந்தகாலம் நிகழ்காலம் என்றற்ரொடக்கத்து) இவ்வுபய விரோததரும முடைய (அவன் இவன் என்னும் தேவதத்தாகிய) இரண்டுபொருள்களுக்கும், மன்னுதல்செய் - நிலைபெறுதலைச்செய்கின்ற, அயிக்கமுறுமையினல் - ஐக்கியம் பொருந்தாமையால், அப்பொருட்கண் - அவ்விருபொருளிடத்தும், வரு - (பொருந்தி) வருகின்ற, விருத்ததருமங்க ளனைத்தினையும் - விரோத தருமமனைத்தையும், விட்டு - விட்டு, (எ - று). 119



**120.** விருத்தமறு தருமமாந் தேவதத்தன் றனையே விடாது கோளி னவனிவனே யிவனவனே யென்னுந், தெரித்தலரி தாயதாதான் மியங்கூ றுமாற் றேரினிதை விட்டுவிடா விலக்கணையி னேடோ, னருத்தவிலக் கணைபாகத் தியாகவிலக் கணையென் றறைதலினு லிது வேதத் துவமசிவாக் கியத்திற், குரைத்திடுவே றுதாரணமா யுரியதென வுண்மை யுணர்ந்துடையோ ரஃதெவ்வா றெனின்முறையே யுரைப்பாம்.

---

(இறந்த காலம், தூர தேசம் - பாலிய வயது என்பவற்ரேடு கூடிய தேவ தத்தன், நிகழ் காலம் - சமீபதேசம் - விருத்த வயது என்பவற்ரேடு கூடிய தேவ தத்தனென்பதன்கண்) இம்மாறுய தருமங்களுடைய இரண்டு பொருள்களுக்கும்ஐக்கிய முண்டாகாமையால், அவ்விரண்டுபொருள்களிலுமுள்ள இறந்தகாலம், நிகழ்காலம், தூரதேசம், சமீபதேசம், பாலிய வயது, விருத்த வயது என்னும் மாறுய தருமமனைத்தையும்விட்டு, மாறுய தருமமில்லாதுள்ள தேவதத்தனை மாத்திரம் விடாதுகொண்டால், அத் தேவதத்தனே இத் தேவதத்தன், இத்தேவதத்தனே அத் தேவதத்தனென் றுணரும் தாதாத்மியம் (ஐக்கியம்) அவ்விருவர்க்கும் பொருந்துவதாம். இங்ஙனம் கூறுவது விட்டுவிடாத லட்சணையாம். இஃது அர்த்த லட்சணையென்றும், பாகத் தியாக லட்சணை யென்றும், (கண்ட லட்சணை யென்றும்) சொல்லப்படுவதாம். சோயந்தேவதத்த னென்னும் இப்பாகத்தியாக லட்சணு வாக்கியமே தத்துவமசி மகாவாக்கியத்திற்கு உதாரணமாம். (119-120)

தத்துவமசி மகாவாக்கியார்த்தம்.

வினு:—அஃதெவ்வாறம்? அதனை விளக்கமாகக் கூறல்வேண்டும்?

விடை:—தத்துவமசி மகாவாக்கியத்துள், தத் என்னும் பதமானது தனது வாச்சியார்த்தமாயுள்ள சர்வஞ்ஞத்துவ முதலிய சட் (ஆறு) குணங்களைக் கொண்டுள்ள பரோட்சனுகிய ஈசுவரனையே தெரிவிப்பதாம்; துவம்

---

(இ - ள்.) விருத்தமறு - விரோத மில்லாத, தருமமாம் - தருமமுடையவனுகிய, தேவதத்தன்றனையே - தேவதத்தனையே, விடாதுகொளின்-விடாதுகொண்டால், அவனே இவன் - அத்தேவதத்தனே இத்தேவதத்தன், இவனே அவன் - இத்தேவதத்தனே அத்தேவதத்தன், என்னும் - என்று கூறுவதாகிய, தெரித்தல் - (சாஸ்திர வுணர்ச்சியில்லாதவர்க்கு எளிதாக) அறிவித்தல், அரிதாய - அரியதாய, தாதான்மியம் - (அபேதமாகிய) தாதாத்மியம் (ஐக்கியம்), கூடுறும் - பொருந்துவதாம், தேரின் - ஆராய்ந்துணருமிடத்து, இதை - (சோயந்தேவதத்தனென்னும் வாக்கியத்திற்கு) இவ்வாறு பொருள் கூறுவதை, விட்டுவிடா விலக்கணையினேடு - விட்டுவிடாத இலக்கணையுடன், அருத்தவிலக்கணை பாகத்தியாக விலக்கணையென்று - அருத்த விலக்கணையும் பாகத்தியாக விலக்கணையுமென்று, அறைதலினுல் - (மேலோர்) கூறுவதால், உண்மையுணர்ந்துடையோர்-உண்மைப்பொருளையறிந்துள்ள பெரியார், இதுவே - (சோயந்தேவதத்தனென்னும்) இவ்வாக்கியமே, தத்துவமசி வாக்கியத்திற்கு - தத்துவமசி மகாவாக்கியத்திற்கு, உதாரணமாயுரியதென - திருஷ்டாந்தமாகத் தக்கதாயிருக்கின்றதென்று, உரைத்திடுவர்-(அவ்வாக்கியத்தைக்) கூறுவர், அஃதெவ்வாறெனின் - அவ்விட்டுவிடாத விலக்கணை (தத்துவமசி மகாவாக்கியத்தில்) எவ்வாறு (பொருந்துகின்றது) என்றல், (அதனை), முறையே - கிரமமாக, உரைப்பாம் - கூறுவாம், (எ - று). ஏகாரங்கள் பிரித்துக்கூட்டப்பட்டன. ஆல் - தான் - அசைநிலை. 120

**121.** தற்பதம்வாச் சியார்த்தமா மெலாமறிதன் முதலாஞ் சட் குணங்கொள் பரோட்சனுஞ் சிவன்றனையே யுணர்த்து, முற்பகருந்துவம் பதமுக் கியமாஞ்சிற் றுணர்வு முதலாய வீனகுண விசிட்டவப ரோட்ச, கற்பிதசீ வனையுணர்த்து மிம்முரண்கொள் பொருட்கே கத்து வங்கூ டாமையினவ் விருபொருளு மடையும், பற்பலவாம் பரோட்ச முட னபரோட்ச மாகும் பகைத்ததரு மத்திறங்க ளனைத்தினையும் விட்டே

---

பதமானது தனது வாச்சியார்த்தமாயுள்ள கிஞ்சிஞ்ஞத்துவ முதலிய ஈன குணங்களுடன் கூடியுள்ள அபரோட்சனுகிய ஜீவனையே தெரிவிப்பதாம்; (சர்வஞ்ஞத்துவ முதலிய குணங்களுடன் கூடியுள்ள பரோட்ச ஈசுவான் கிஞ்சிஞ்ஞத்துவ முதலிய குணங்களுடன் கூடியுள்ள அபரோட்ச ஜீவனென்பதன்கண்) இம் மாறுப தருமங்களைக்கொண்டுள்ள இரண்டு பொருள்களுக்கும் ஐக்கிய முண்டாகாமையால், அவ் விரண்டு பொருள்களும் அடைந்துள்ள பரோட்சத்துவம் அபரோட்சத்துவ முதலிய மாறுய தரும மனைத்தையும்விட்டு, மாறுய தரும மில்லாது சின்மாத்திரமாயுள்ள (தத்துவம் பதங்களின்) லட்சியார்த்தமாகிய பிரஹ்மத்தையும் பிரதியக் ஆத்மாவையும் விடாதுகொண்டால், அதுவே (அந்தப் பிரஹ்மமே) இது(இந்தப்பிரத்திபக் ஆத்மா);இதுவே(இந்தப்பிரத்திபகாத்மாவே) அது (அந்தப்பிரஹ்மம்) என்றுணரும் தாதாத்மியம் (ஐக்கியம்) பிரஹ்மத்திற்கும் பிரத்தியக் ஆத்மாவிற்கும் பொருந்துவதாம்; அசிபதமானது (தத்துவம் பதங்களின்) இந்த லட்சியார்த்தமாகிய பிரஹ்மத்திலும் பிரத்தியக் ஆத்மாவிலு முள்ள பரோட்சமும் அபரோட்சமும் மாயா கற்பிதமாமென்று தெரிவிப்பதாம். இதுவே அசி பதத்தின் பயனும்.

இம்முறையால் அகண்ட சச்சிதாநந்த சிவ சொரூப மொன்றே சத்தியமாமென்பது தத்துவமசி மகா வாக்கியத்தின் தாற்பரியப்பொருளாம். (விட்ட லட்சணை முதலியவற்றி னியல்பினை மிகு விரிவாக அறியவிரும்புவோர் கைவல்லிய நவநீத வசன வினு விடையின் தத்துவ விளக்கப்படலத்திற் காண்க.)(121-122)

---

(இ-ள்.) (தத்துவமசி மகாவாக்கியத்திலுள்ள தத்-துவம்-அசி என்னும் பதம் மூன்றனுள்) தற்பதம் - தத்பதமானது, வாச்சியார்த்தமாம் - (தனது) வாச்சியார்த்தமாயுள்ள, எலாமறிதல் முதலாம்-சர்வஞ்ஞத்துவ முதலிய, சட்குணங்கொள் - ஆறு குணங்களைக்கொண்டுள்ள, பரோட்சனும் - பரோட்சனுகிய, சிவன்றனையே - ஈசுவரனையே, உணர்த்தும் - அறிவிப்பதாம், முற்பகரும் - (துவந்தத்அசி மகாவாக்கியத்தில்) முன்னர்க் கூறப்படுகின்ற, துவம்பதம் - துவம்பதமானது, முக்கியமாம் - (தனது) வாச்சியார்த்தமாயுள்ள, சிற்றுணர்வு முதலாய - கிஞ்சிஞ்ஞத்துவ முதலிய, ஈனகுணவிசிட்ட - ஈன குணங்களுடன் கூடியுள்ள, அபரோட்சம் - அபரோட்சனுகிய, கற்பித சீவனையுணர்த்தும் - சிதாபாச ஜீவனையே அறிவிப்பதாம், இம்முரண்கொள் - இவ்வுபய விரோத தருமங்களைக் கொண்டுள்ள, பொருட்கு - (ஈசுவர ஜீவரென்னும்) பொருள்களுக்கு, ஏகத்துவம் கூடாமையின் - (ஒன்றுந் தன்மை யென்னும்) ஐக்கியம் பொருந்தாமையால், அவ்விருபொருளும் - (ஈசுவர - ஜீவரென்னும்) அவ்விரண்டு பொருள்களும், அடையும் - அடைந்துள்ள, பற்பலவாம் - பலபலவாயுள்ள, பரோட்சமுடன் - பரோட்சத்தோடு, அபரோட்சமாகும் - அபரோட்சமுமாகிய, பகைத்த - விரோதமான, தருமத்திறங்களனைத்தினையும் - தருமக்கூறுபாடுகளெல்லாவற்றையும், விட்டு - விட்டு, (எ-று). 121



**122.** இகலிலா வறிவுமாத் திரமாகி நின்ற விலக்கியமாம் பிரமகூடத்தவுயிர் கொள்ளிற், புகரிலா வதுவிதுவே யிதுவதுவே யென்னப் பொருந்துதா தான்மியம்வந் துறுமெனவே யறிக, பகவிலா வசிபதமிவ் விலக்கியார்த் தத்திற் பரோட்சவப ரோட்சங்கண் மாயாகற் பிதமென், றுகவிலா துணர்த்தியுறு பலமாமிம் முறையா லொன்றுகு மறிவேயுண் டெனல்வாக்கி யார்த்தம்.

---

தத்துவமசி மகா வாக்கியத்திற்குத் திருஷ்டாந்தம்.

வினு:—தத்துவமசி மகாவாக்கியத்தினுலே ஜீவப் பிரஹ்மங்களுக்கு ஐக்கிய முண்டென்பது எவ்வாறு? அதனைத் திருஷ்டாந்த வாயிலாகக் கூறல் வேண்டும்?

விடை:—தத்துவமசி மகாவாக்கியத்தினுலே ஜீவப் பிரஹ்மங்களுக்கு ஏகத்துவமென்னும் ஐக்கியமுண்டென்பது கடம்பட முதலிய உபாதிகளையொழித்து ஆகாயமொன்றே யென்றும், மனிதத் தன்மையை நீக்கிச் சீராமபிரானை நோக்கி

---

(இ-ள்.) இகலிலா(து) - விரோதமில்லாது, அறிவுமாத்திரமாகி - சின்மாத்திரமாய், நின்ற - (நிலைபெற்று) இருக்கின்ற, இலக்கியமாம் - (தத்-துவம் பதங்களின்) இலட்சியார்த்தங்களாகிய, பிரமகூடத்தவுயிர் - பிரஹ்மத்தையும் பிரத்தியக் ஆத்மாவையும், கொள்ளின் - (அங்கீகரித்துக்) கொண்டால், புகரிலா(த) - குற்றமில்லாத, அதுவேஇது - அந்தப் பிரஹ்மமே இந்தப் பிரத்தியக் ஆத்மா, இதுவே அது - இந்தப் பிரத்தியக் ஆத்மாவே அந்தப் பிரஹ்மம், என்ன - என்று, பொருந்து - (குற்றமின்றி) அமைகின்ற, தாதான்மியம் - (அபேதமான) தாதாத்மியம்(ஐக்கியம்), வந்துறும்-(அந்தப்பிரஹ்மாத்மாக்களுக்கு) வந்துபொருந்துவதாம்,எனவேயறிக-என்று (அவ்வைக்கியத்தை நீ) அறிவாயாக, பகவிலா(த) - (தத்துவமசி மகாவாக்கியத்தினின்றும்) பிரிதலில்லாத, அசிபதம்-அசிபதமானது, இவ்விலக்கியார்த்தத்தில் - (தத்-துவம் பதங்களின்) இவ்விலட்சியார்த்தங்களாகிய பிரஹ்ம - பிரத்தியக் ஆத்மாக்களில், பரோட்ச அபரோட்சங்கள் - பரோட்சத்துவ அபரோட்சத்துவங்கள், மாயாகற்பிதமென்று - மாயையாற் கற்பிக்கப்பட்டனவாமென்று, (அவற்றை), உகவிலாதுணர்த்தி - நிலைகெடுதலில்லாது தெரிவித்து, உறுபலமாம் - (ஜீவப் பிரஹ்ம ஐக்கியத்தைப் போதிப்பதில்) மிகுபயனுடையதாக விருப்பதாம், இம்முறையால் - (தத்-துவம் - அசி என்பனவற்றிற்குப்பொருள் கூறிய) இக்கிரமத்தினுல், ஒன்றுகுமறிவே - ஏகமாயுள்ள அறிவே, உண்டு - (பாரமார்த்திக சத்தாக) இருப்பதாம், (ஏனையவை மித்தையாம்), எனல் - என்று சித்தாந்தம் செய்வதே, வாக்கியார்த்தம் - தத்துவமசி மகாவாக்கியத்தின் பொருளாம், (எ-று).

**123**. தூயதத்வ மசிமகா வாக்கியத்தி ஞலே துரியபரற் குள
தேகத் துவமேன்கை கடாதி, யாயவுபா திகளகற்றி விசும்போன்றே
யெனவு மகற்றிமநு டத்தன்மை யிராமனைநீ தானே, மாயவன்கா ணென
வுங்கன் னனைவேடு கழித்து மகன்குந்திக் கேனவுமோரு தசமனைமாய்
துயரம், போயகல வொழித்துநீ யேதசம னெனவும் புகலுதல்போற்
சுபாவசித்த மாகுவதே யன்றி.

நீயே திருமாலென்றும், வியாதபாவத்தை(வேட்டுவச்சாதித் தன்மையை)க் கழித்துக் கர்ணனை நோக்கி நீ குந்தி மகனென்றும், மரண துக்கத்தை யகற்றித் தசமனை நோக்கி நீயே தசமனென்றும். கூறுவதுபோலவாம். இவ்வாறு ஜீவப் பிரஹ்ம ஐக்கியம் சுபாவ சித்தமா யிருப்பதாம். (இச் சுபாவசித்த ஜீவப் பிரஹ்ம ஐக்கியத்தையே தத்துவமசி மகாவாக்கியம் அறிவிக்கின்றது.) சுபாவசித்தம்-இயல்பாகப் பெறப்பட் டிருத்தல்·

"எங்ஙனம் நிர்விகார குந்திபுத்திரனுகிய கர்ணனிடத்தில் இராதாபுத்திரனென்னும் அடிமைத்தன்மையின் தோற்ற முண்டாயிற்ருே, அங்ஙனமே நிர்விகார சிதாநந்தகனமாகிய பிரஹ்மத்தில் அவித்தையினுல் ஜீவத்தன்மையின் தோற்ற முண்டாகின்றது; ஆகையால், எல்லோரும் எப்போதும் பிரஹ்மவடிவமா யிருத்தலால், வாஸ்தவமாக ஜன்ம முதலிய சம்சாரமில்லவே யில்லை; என்ருலும், அவித்தையினுலாகிய ஜீவத்தன்மையால் அஞ்ஞானிகளுக்குத் தம்மில் பிறப்பு முதலியவற்றின் தோற்றமுண்டாகின்றது; சூரியனது வசனத்தால் கர்ணனுக்குக் குந்திபுத்திரத் தன்மையின் ஞானத்தால் இராதா புத்திரனென்னும் தன்மை நீங்கியதுபோல, ஞானிக்குக் குருவுபதேசத்தால் நிர்விகாரமாகிய தனது பிரஹ்மத் தன்மையின் ஞானத்தால் நேத்திரத்தை மறைக்கும் தோஷத்தைப் போலத் தன்னை மறைக்கும் அவித்தையின் அம்சம் நீங்குதல் வாயிலாக ஜன்ம முதலிய சம்சாரத்தின் நிவிருத்தி தோற்றுகின்றதென்பது தாத்பரியம்." என்று பஞ்சதசி பஞ்சகோச விவேகத்தின் குறிப்புரையி லெழுதப்பட்டிருப்பதிங் குணர்தற்பாற்ரும்; இதன் விரிவை விருத்திப்பிரபாகரம் எட்டாவது பிரகாசத்திற்காண்க. (123)

(இ - ள்.) தூயதத்வ மசிமகா வாக்கியத்தினுலே - (உண்மையை யுரைப்பதால் மிகு) பரிசுத்தமாயுள்ள தத்துவமசி மகாவாக்கியத்தாலே, துரியபரற்கு - பிரத்தியக் ஆத்மாவிற்கும் பிரஹ்மத்திற்கும், ஏகத்துவம் உளது - ஐக்கியமிருக்கின்றது, என்கை - என்று கூறுதல், கடாதியாய - கடம் முதலியனவாகிய, உபாதிகளகற்றி - உபாதிகளை நீக்கி, விசும்பொன்றே யெனவும் - ஆகாயம் ஒன்றே யென்றும், மநுடத்தன்மையகற்றி - மனிதத் தன்மையை நீக்கி, இராமனை - இராமச்சந்திரனை (நோக்கி), நீ தானே மாயவனெனவும் - நீயே திருமாலென்றும், வேடுகழித்து - வேட்டுவச்சாதித் தன்மையை நீக்கி, கன்னனை - கர்ணனை (நோக்கி நீ), குந்திக்குமகனெனவும் - குந்தியினது புத்திரனென்றும், மாய்துயரம் போயகல - மரணதுக்கம் நீங்கி யொழிய, ஒழித்து - (அதனை) நீக்கி, ஒருதசமனை - ஒப்பற்ற தசமனை (நோக்கி), நீயே தசமனெனவும் - நீயே தசமனென்றும், புகலுதல்போல் - கூறுவதுபோல, சுபாவ சித்தமாகுவதே யன்றி - சுபாவசித்தமாயிருப்பதே யல்லாமல், (எ - று). மாய்வு என்பது மாய் என விகாரப்பட்டுவந்தது. மாய்வு - மரணம். காண் - அசை. 123



**124**. ஒருமலர்க்குத் துறக்கமேனல் போன்முத்தி விருப்ப முத
வருத்த வாதமேழிற் பதுமையைத்தே வேனல்போ, லிருமைதரு முபா
சனு பரமநுடன் றன்னை யிந்திரனேன் பதுபோலத் துதிபரமா ளினையே,
யருமரசேன் பதுபோல வுபசாரி கந்தா னக்கிநிமா ணவகனேனும் வாக்
கியமே போல, வுரிமைதரு சகுணசா திரிசமிது கோவி னுடம்பேன்கை
போற்சாதி வியத்தியா மன்றே.

மகா வாக்கியார்த்தப் பிரதிபத்தி (விவாத) நிராகரணம்.

(11 - பேத வாத மறுப்பு.)

**வினு:— தத்துவமசி மகாவாக்கியத்திற்கு இவ்வாறு பொருள்கூறுவதன்றி வேறுவகையாகப் பொருள் கூறுவாரு மிருக்கின்றனரோ?**

விடை:—இருக்கின்றனர். அவர் தம்முள் மாறுபட்டு, மகாவாக்கியம் (1) ஒரு மலர்கொண்டு அரனை யருச்சிக்கின்றவனுக்குச் சுவர்க்கம் சித்திக்கு மென்று கூறும் வாக்கியம்போல மோட்ச விச்சையை யுண்டாக்கும் அருத்தவாத வாக்கியமா மென்றும், (2) சிவலிங்க முதலிய விக்கிரகங்களைத் தெய்வமாக உபாசனை செய்யுமாறு கூறும் வாக்கியம்போல உபாசனுபர வாத வாக்கியமாமென்றும், (3) மக்களுள் மேன்மையுற்றுள்ள ஒருவனை இந்திரனென்று ஸ்துதி செய்து கூறும் வாக்கியம்போல ஸ்துதிபர வாத வாக்கியமா மென்றும், (4) அடிமையாயுள்ள ஒருவனை அரசனென் றுயர்த்திக் கூறும் வாக்கியம்போல உபசார வாத வாக்கியமா மென்றும், (5) சுத்தமாயிருத்தல் பற்றி அக்கினி இம்மாணவனென்று

(இ - ள்.) ஒருமலர்க்கு - (பரமேசுவரனை) ஒருமலர்கொண்டருச்சிக்கின்றவனுக்கு, துறக்கமெனல்போல் - சுவர்க்கலோகத்தை யடைதலுண்டாவதாமென்னும் வாக்கியம்போல, முத்திவிருப்பமுதவு - மோட்சவிச்சையை யுண்டாக்குகின்ற, அருத்தவாதம் - அருத்தவாதமும், எழிற்பதுமையைத் தேவெனல்போல் - அழகமைந்த விக்கிரகத்தைக் கடவுள் வடிவமென்று கூறும் வாக்கியம்போல, இருமைதரும் - இம்மை மறுமைப் பயன்களைத் தருகின்ற, உபாசனுபரம் - உபாசனுபர வாதமும், மநுடன்தன்னை - (ஒருசாமானிய) மனிதனை, (இவன்), இந்திரனென்பதுபோல - இந்திரனென்று கூறும் வாக்கியம்போல, துதிபரம் - ஸ்துதிபரவாதமும், ஆளினை - (ஓர்) அடிமையாளை, (இவன்), அருமாசென்பதுபோல - (பெறுதற்கு) அரிய அரசனென்று கூறும் வாக்கியம்போல, உபசாரிகம்-உபசார வாதமும், அக்கினி மாணவகனென்னும் வாக்கியமேபோல - (இம்)மாணவன் - அக்கினியென்று கூறும் வாக்கியம்போல, உரிமைதரு - பெருமையைத் தருகின்ற, சகுணசாதிரிசம் - குணசாதிருசியவாதமும், இது கோவினுடம்பென்கைபோல் - இது கோவின்தேகமென்று கூறும் வாக்கியம்போல, சாதிவியத்தி - ஜாதிவியக்திபரவாதமும், (எ - று). தான் - ஆம் - அன்று - ஏ - என்பன அசைநிலைகள். உபசாரிகம் - ஔபசாரிகம். ச - என்பது கூடியதென்னும் பொருள்தரும் உபசர்க்கமாம். 124

**125.** கடத்தோமேட் கநியமேன் வாக்கியமே போலக் காரியகா ரணநீலோற் பலமேனும்வாக் கியம்போல், விடுப்பில்குண குணிதயிர் பாற் கபேதமேனல் போல விகாரமே வாரிகணங் கட்கேக மேனல்போ, லடுத்தவஞ்சாஞ் சிகம்விம்பப் பதிவிம்பங் களினுக் கயிக்கமேனல் போல்விம்பப் பதிவிம்ப வாத, மேடுத்துணரி லேனவிங்ஙன் பேதபர மாக விசைப்பனவே லாஞ்சுருதி விரோதமேன வறியே.

---

கூறும் வாக்கியம்போலச் குண சாதிருசியவாத வாக்கியமாமென்றும், (6) (பிரிந்துதோன்றுமைபற்றி) இது (இக்கோத் தன்மை) கோவினுடம் பென்று கூறும் வாக்கியம்போலச் சாதி வியக்திபரவாத வாக்கியமா மென்றும், (7) (ஒற்றுமைபற்றி) (காரிய மாயுள்ள) கடம் (அதன் காரணமா யுள்ள) மண்ணிற்கு வேறுய தன்றென்று கூறும் வாக்கியம் போலக் காரியகாரண வாத வாக்கியமா மென்றும், (8) நீலோற்பலம் (கருங்குவளை மலர்) என்று கூறும் வாக்கியம் போலக் குண குணிவாத வாக்கியமா மென்றும, (9) (பாலின்திரிபே தயிரா யிருத்தலின்) பால் தயிரோடு அபேதமா யிருக்கின்றதென்று கூறும் வாக்கியம் போல விகார வாத வாக்கியமா மென்றும், (10) (கடல் அவயவியாயும் அலை அதன் அவயவமாயு மிருத்தலின்) கடலும் அலையும் ஏகமாமென்று கூறும் வாககியம்போல அம்சாம்சிகவாத வாக்கியமாமென்றும், (11) பிம்பத்திற்கும் பிரதி பிம்பத்திற்கும் ஐக்கிய மிருக்கின்ற தென்று கூறும் வாக்கியம் போலப் பிம்பப் பிரதிபிம்பவாத வாக்கியமா மென்றும் கூறி, அதற்குப் பேதபரமாகப் பொருள் கொண்டனர். அவரிவ்வாறு கூறும் பொருளனைத்தும் "சத்தியம் அத்வைதம்", "இங்குப்பேதம் சிறிதுமில்லை", "இவை யாவும் சொப்டனம் போலப் பொய்யாம்" என்றற் றெடக்கத்தனவற்றைக் கூறும் சுருதிக்கு முற்றும் விருத்தமானவையாம். (அதனல் அவர் மகாவாக்கியத்திற்குக்கூறும் பொருள்கள் தள்ளத்தக்கனவாம்.)

---

(இ - ள்.) கடத்தொடுமெட்கு - கடத்தோடு மண்ணுக்கு, அநநியம் - அந்நியமில்லையாம், என்வாக்கியமேபோல - என்று கூறும் வாக்கியம்போல, காரிய காரணம் - காரியகாரணவாதமும், நீலோற்பலமெனும் வாக்கியம்போல் - நீல நிறமுடையது உற்பலமென்று கூறும் வாக்கியம்போல, விடுப்பில் - நீக்குத லில்லாத, குணகுணி - குணகுணிவாதமும், தயிர்பாற்கு அபேதமெனல்போல - தயிர்பாலுக்கபேதமா யிருக்கின்றதென்று கூறும் வாக்கியம்போல, விகாரம் - விகாரவாதமும், வாரிகணங்கட்கு - கடல் அலை முதலிய கூட்டங்களோடு, ஏக மெனல்போல் - ஒருவடிவமாயிருக்கின்றதென்று கூறும் வாக்கியம்போல, அடுத்த - பொருந்திய, அஞ்சாஞ்சிகம் - அம்சாம்சிகவாதமும், விம்பப்பதிவிம்பங் களினுக்கு - பிம்பப்பிரதிபிம்பங்களுக்கு, அயிக்கமெனல்போல் - ஐக்கியமுண் டென்று கூறும் வாக்கியம்போல, விம்பப்பதிவிம்பவாதம் - பிம்பப்பிரதிபிம்ப வாதமும், என - என்று, பேதபரமாக - பேததாற்பரியமாக, இங்ஙன் - இவ்விடத்து, இசைப்பனவெல்லாம் - கூறுவனவெல்லாம், எடுத்துணரில் - (அவற்றையாராய்ந்து) எடுத்துக்கூறுமிடத்து, சுருதி விரோதமென - வேதவிருத் தமாமென்று, அறி - (அர்த்தவாத முதலியவற்றை நீ) அறிவாயாக, (எ - று).



---

### 1. அர்த்த வாதம்.

ஒரு மலர் கொண்டு பரமேசுவரனை யர்ச்சிப்பவனுக்குச் சுவர்க்க (மோட்ச)ஞ் சித்திக்குமென்று மோட்சவிச்சையைப் பத்தர்க் குண்டாக்குகின்ற வாக்கியம் போல்வது அர்த்தவாதமாம்; இது ஸ்துதியர்த்தவாதமாம். ஸ்துதியையாவது நிந்தையையாவது அறிவிக்கும் வாக்கியம் அர்த்தவாதமாம். மகாவாக்கியம் ஸ்துதியையாவது நிந்தையையாவது அறிவியாது, சுபாவ சித்தமாயுள்ள ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தை யறிவித்தலின், அஃதர்த்தவாதமன்றும்.

### 2. உபாசனபர வாதம்.

பிரதிமையைத் தேவதைவடிவமாக உபாசிக்குமாறு கூறும் வாக்கியம் போல்வது உபாசனபர வாதமாம். உபாசனையால் மோட்ச முண்டாமென்று கூறும் வாக்கியம் உபாசனபரவாதமாம். மகாவாக்கியம் உபாசனையால் மோட்ச முண்டாகுமென் றறிவியாது, சுபாவசித்தமாயுள்ள ஜீவப் பிரஹ்ம ஐக்கியத்தை யறிவித்தலின், அஃது உபாசனபரவாத மன்றும்- மோட்சம் ஜீவப்பிரஹ்ம ஐக்கிய ஞானத்தா லன்றி உபாசனையால் சித்தியாதென்பது இங்குணர்தற்பாலதாம். உபாசனை - தியானம்.

### 3. ஸ்துதிபர வாதம்.

மக்களுள் மேன்மையுள்ள ஒருவனை நோக்கி, இவ னிந்திரனென்று கூறும் வாக்கியம்போல்வது ஸ்துதிபர வாதமாம். ஒருவனை ஸ்துதிபற்றி உயர்த்திக் கூறும் வாக்கியம் ஸ்துதிபரவாதமாம். மகாவாக்கியம் ஜீவனை ஸ்துதி பற்றிப் பிரஹ்மமாகக் கூறுது சுபாவசித்தமாயுள்ள ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தைக் கூறுதலின், அது ஸ்துதிபரவாதமன்றும்.

### 4. உபசார வாதம்.

(4) அடிமையாளாயுள்ள ஒருவனை நோக்கி இவன் அரசனென்று கூறும் வாக்கியம், போல்வது உபசார வாதமாம். ஒன்றன் றன்மையை மற்றென் றன்மே லேற்றிக் கூறும் வாக்கியம் உபசார வாதமாம். மகாவாக்கியம் பிரஹ்மத்தின் தன்மையை ஜீவன்மேலேற்றி, ஜீவன் பிரஹ்மமாமெனக் கூறுது, சுபாவ சித்தமாயுள்ள ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தைக் கூறுதலின், அஃது உபசாரவாத மன்றும்.

### 5. குணசாதிருசிய வாதம்.

சுத்தமுடைய மாணவகனெருவனை நோக்கி, இம் மாணவகன் அக்கினி யென்று கூறும் வாக்கியம்போல்வது குணசாதிருசிய வாதமாம். சாதிருசியம் - ஒப்பு. ஒருபொருளோடு மற்றொரு பொருளைக் குணவொப்புமை நோக்கி அபேத மாக்கிக் கூறும் வாக்கியம் குணசாதிருசிய வாதமாம். மகாவாக்கியம் பிரஹ்மத்தோடு ஜீவனைக் குணவொப்புமை நோக்கி அபேதமாக்கிக் கூறுது, சுபாவ சித்தமாயுள்ள ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தைக் கூறுதலின், அது குணசாதிருசிய வாதமன்றும். தத்பதலட்சியார்த்தமாயுள்ள பிரஹ்மமும், துவம்பத லட்சியார்த்தமாயுள்ள ஜீவ (கூடஸ்த)னும் நிர்க்குணமா யிருத்தலின், அவற்றிற்கு ஐக்கியங் கூறுதல் குணவொப்புமை பற்றியாமென்பது ஒருவாற்றானும் பொருந்துமாற்றேடு பொருந்துவதன்றும். பொருந்துமாறு - யுக்தி.

### 6. ஜாதிவியக்திப வாதம்.

இது கோவி(ஆவி)னுடம்பு என்று கூறும் வாக்கியம்போல்வது ஜாதிவியக்திபர வாதமாம். இவ்வாக்கியத்தின் திரண்ட பொருள் கோத்தன்மை யுடையது இக்கோவினுடம் பென்பதாம். ஜாதிக்கும் வியக்திக்கு முள்ள சமவாய (ஒற்றுமைச்) சம்பந்தத்தைக் கூறும் வாக்கியம் ஜாதிவியக்திபாவாதமாம். தருக்க நூலார் "சாமானியமாவது நித்தமாய், ஒன்றாய், பலவற்றின் ஒருங்குசேறலை யுடைய சாதி" என்று ஜாதிக்கு இலக்கணங் கூறுவர். கோத்தன்மை யுடையது கோ(பசு)என்புழி, கோத்தன்மை ஜாதியாம்; அதனை யுடைய கோ வியக்தியாம். ஜாதி யுடையது வியக்தியெனப்படும். மகாவாக்கியம் ஜாதிக்கும் வியக்திக்கும் சமவாய சம்பந்த மிருப்பதுபோல, ஜீவ (கூடஸ்த)னுக்கும் பிரஹ்மத்திற்கும் சமவாய சம்பந்த மிருக்கின்றதென்று கூறாது, சுபாவசித்தமாயுள்ள ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தைக் கூறுதலின், அது ஜாதிவியக்திப வாதமன்றாம். ஜாதி யென்பதை ஊகித்து நோக்குமிடத்து அது குணத்தினும் வேறன்றா மென்பது நன்கு விளங்குவதாம். இது பின்னே கூறப்படும் குணகுணி வாதத்திலடங்குவதாம்.

### 7. காரியகாரண வாதம்.

காரியமாயகடம் காரணமாய மண்ணிற்கு அந்நிய மன்றாமென்று கூறும்வாக்கியம் போல்வது காரிய காரண வாதமாம். காரியம் காரணத்திற்கு வேறாயிருப்பதன்றாமென்னும் வாக்கியம் காரியகாரண வாதமாம். இங்குக் காரணமென்றது முதற்காரணத்தை. "எது (மண்) காரியத்தின் (கடத்தின்) சுவரூபத்தில் பிரவேசிக்கின்றதோ, எதனை (மண்ணை) விட்டுக் காரியம் (கடம்) சித்திக்கின்றதில்லையோ அஃது உபாதான (முதற்) காரண மெனப்படும்" என்பது முதற்காரணத்தி னிலக்கணமாம்; இம்முதற்காரணத்தினிலக்கணத்தால் காரியம் (முதற்)காரணத்திற்கு அநந்நியமாம்(அன்னியமா யிருப்பதன்றாம்)என்பது நன்கு விளங்குவதாம். மகாவாக்கியம் காரியமாய கடமும் காரணமாய மண்ணும் அநந்நியமா யிருத்தல்போல, காரியமாய ஜீவ (கூடஸ்த)னும் காரணமாய பிரஹ்மமும் அநந்நியமா யிருக்கின்றனவென்று கூறாது சுபாவசித்தமாயுள்ள ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தைக் கூறுதலின், அது காரிய காரணவாத மன்றாம். கடாகாசம் மகாகாசம் என்புழிக்கடாகாசம் காரியமும்,மகாகாசம் காரணமுமாவன வன்றாம்; அங்ஙனமே ஜீவ(கூடஸ்த)ன் பிரஹ்ம மென்புழியும் ஜீவன் காரியமும் பிரஹ்மம் காரணமுமாவன வன்றா மென்க. ஆகாயம் உபாதி நோக்கத்தால் கடாகாசம் மகாகாசமென விளங்குதல்போல, சேதனமும் உபாதி நோக்கத்தால் ஜீவ(கூடஸ்த)ன் பிரஹ்மமென விளங்குகின்றன வென்பது இங்குணர்தற்பாலதாம். இதனால், சேதனம் உண்மையிலொன்றாக வன்றி இரண்டாக விருப்பதில்லையா மென்பது பெறப்படுவதாம்.

### 8. குணகுணி வாதம்.

நீலோற்பல மென்று கூறும் வாக்கியம்போல்வது குணகுணிவாதமாம். குண குணிகட்குள்ள அபேதத்தைக் கூறும் வாக்கியம் குணகுணிவாதமாம். நீலோற்பலமென்பது நீல + உற்பலமெனப் பிரிபடுவதாம். இவற்றுள், நீல மென்பது குணமாம்; உற்பலமென்பது குணியாம், நீலோற்பலமென்பதன் பொருள் நீலமாகிய உற்பலம் என்பதாம். நீலோற்பலமென்பது கருங்குவளை யென்பது போலப் பண்புத்தொகையாம்; இது தொகைநிலைவகையாற் றொடர்ந்த வாக்கியமாம். மகாவாக்கியம் நீலமாகிய குணமும் உற்பலமாய குணியும் அபேதமாயிருத்தல்போல, ஜீவனாகிய குணமும் பிரஹ்மமாகிய குணியும் அபேதமா யிருக்கின்றனவென்று கூறாது சுபாவசித்தமாயுள்ள ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தைக் கூறுதலின், அது குணகுணி வாதமன்றாம். குணமுடையது (குணத்தோடு) அநித்தியமா மென்பது நியமமாம் ஜீவன் குணமும் பிரஹ்மம் குணியுமாயின், அவ்விரண்டும் அநித்தியமாம்; அதனால், மகாவாக்கியத்தைக் குணகுணிவாதமாகக் கொள்வார்க்கு வரும் பயன் அநர்த்தமேயாம்.



### 9. விகார வாதம்.

பால் தயிர்க்கு அபேதமா மென்று கூறும் வாக்கியம் போல்வது விகாரவாதமாம். காரணம் காரியமாக விகாரமடைந் திருக்கின்ற தென்று கூறும் வாக்கியம் விகாரவாதமாம். விகாரம், பரிணாமம், திரிபென்பன ஒருபொருட்கிளவிகளாம். காரணமென்றது இங்கு முதற்காரணத்தை. மகாவாக்கியம் பாலாகிய காரணம் தயிராகிய காரியமாகத் திரிந்து அதனோடு அபேதமா யிருப்பதுபோல், பிரஹ்மமாகிய காரணம் ஜீவ (கூடஸ்த)னாகிய காரியமாகத் திரிந்து அதனோடு அபேதமாயிருக்கின்ற தென்று கூறாது, சுபாவசித்தமா யிருக்கின்ற ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தைக் கூறுதலின், அது விகாரவாதமன்றாம். விகாரமடைவது அநித்தியமா மென்பது மிகு பிரசித்தமாம். பிரஹ்மம் ஜீவனாக விகாரமடையுமாயின், அஃதநித்தியமா மென்பது ஒருதலையாம்.

### 10. அம்சாம்சிக வாதம்.

நீரும் அலைகளும் ஏகமா (ஒன்றா) யிருக்கின்றனவென்று கூறும் வாக்கியம் போல்வது அம்சாம்சிக வாதமாம். அம்சமும் அம்சியும் ஏகமாமென்று கூறும் வாக்கியம் அம்சாம்சிக வாதமாம். அம்சம் - கூறு; அம்சி - கூற்றையுடையது. அம்சம் - அங்கம் - அவயவம் - உறுப்பு என்பனவும், அம்சி - அங்கி - அவயவி - உறுப்பியென்பனவும் ஒருபொருட்கிளவிகளாம். மகாவாக்கியம் நீரும் அலையும் அம்சாம்சிக பாவத்தால் ஏகமா யிருத்தல்போல, ஜீவ (கூடஸ்த)னும் பிரஹ்மமும் அம்சாம்சிகபாவத்தா லேகமாயிருக்கின்றனவென்று கூறாது, சுபாவசித்தமாயுள்ள ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தைக் கூறுதலின், அஃது அம்சாம்சிக வாதமன்றாம். பிரஹ்மம் நிரவயவமென்பது மிகுபிரசித்தமா யிருத்தலின், அதனை நீர்போல (கடல்போல) அவயவியாகவும். ஜீவனை அலைபோல அவயவமாகவும் கூறுதல் ஒருவாற்றானும் பொருந்தாதாம். "காரியம் அவயவத்தால் கண்டனங் கடாதி போல" என்னும் பிரயோகத்தை நன்குணர்ந்துநோக்குவார்க்கு அவயவமுடையது அநித்தியமேயாமென்பது நன்குவிளங்குவதாம்.

### 11. பிம்பப்பிரதிபிம்ப வாதம்.

பிம்பப்பிரதிபிம்பங்களுக்கு ஐக்கியமுண்டென்று கூறும் வாக்கியம்போல்வது பிம்பப்பிரதிபிம்ப வாதமாம். பிம்பமே பிரதிபிம்பமாமென்று கூறும் வாக்கியம் பிம்பப்பிரதிபிம்ப வாதமாம். ஒருவனது முகம் கண்ணாடியிற்றோன்றுமிடத்து, அவனது முகம் பிம்பமாம்; கண்ணாடியிற்றோன்றும் முகம் பிரதிபிம்பமாம். மகாவாக்கியம் பிரதிபிம்ப முகத்திற்கும் பிம்பமுகத்திற்கும் ஐக்கியமிருத்தல்போல, ஜீவ (கூடஸ்த)னுக்கும் பிரஹ்மத்திற்கும் ஐக்கியமிருக்கின்றதென்று கூறாது, சுபாவ சித்தமாயுள்ள ஜீவப்பிரஹ்ம ஐக்கியத்தைக் கூறுதலின், அது பிம்பப்பிரதிபிம்ப வாதமன்றாம். ஜீவ (கூடஸ்த)னும் பிரஹ்மமும் கடஜலப் பிரதிபிம்பாகாசமும் கடாகாசமும்போலிராது, கடாகாசமும் மகாகாசமும்போலிருத்தலின், அவற்றினது ஐக்கியத்தைப் பிம்பப்பிரதிபிம்பங்களுக்குள்ள ஐக்கியம்போல்வதென்று கூறுவது ஒருவாற்றானும் பொருந்துவதன்றாம்.

### முக்கிய சாமானாதிகரணியம் - பாதசாமானாதிகரணியம்.

"சிஷ்யனே! 'நான் பிரஹ்மம்' என்னும் ஞானம் புத்திசகித ஆபாசனுக்குண்டாகின்றது; கூடஸ்தனுக்குண்டாகின்றதில்லை; ஆயினும், அந்த ஆபாசன் கூடஸ்தனையும் தன்ஸ்வரூபத்தையும் தன்னுத்மாவாக அஃதாவது தானுகவே யறிகின்றான். அந்த ஆத்மா நானென்னுஞ் சொல்லால் கிரகிக்கப்படுகின்றது; அதுவே, 'அகம் - நான்' என்னும் சொல்லிற்குப் பொருளாம். (1) அந்த 'நான்' என்னும் சப்தத்தில் விளங்குகின்ற கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு எப்போதும் அபேதமிருக்கின்றது. அது கடாகாசத்திற்கும் மகாகாசத்திற்கும் எப்போதும் அபேதமிருப்பதுபோலாம். இக்காரணத்தால் கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு முக்கிய சாமானாதிகரணியம் வேதாந்த சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது. எந்த வஸ்துவிற்கு எந்தவஸ்துவோடு எப்போதும் அபேதமிருக்கின்றதோ அந்த வஸ்துவிற்கு அதனேடு முக்கிய சாமானாதிகரணியம் சொல்லப்படுகின்றது. எங்ஙனம்:—கடாகாசத்திற்கு மகாகாசத்தோடு எப்போதும் அபேதமிருக்கின்றது; ஆதலால், கடாகாசம் மகாகாசமாயிருக்கின்றது. இவ்வாற்றால் கடாகாசத்திற்கு மகாகாசத்தோடு முக்கிய சாமானாதிகரணிய முண்டு. இவ்வாறு கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு முக்கிய சாமானாதிகரணியமுண்டு; ஏனெனின், கூடஸ்தனுக்கும் பிரஹ்மத்திற்கும் எப்போதும் அபேதமிருக்கின்றது; ஆதலால், 'நான்' என்னும் சப்தத்தில் விளங்குகின்ற கூடஸ்தனுக்குப் பிரஹ்மத்தோடு எப்போதும் அபேதமுண்டு. (2) 'நான்' என்னும் சப்தத்தில் விளங்குகின்ற ஆபாசனுக்குப் பிரஹ்மத்தோடு தன் ஸ்வரூபத்தைப் பாதிக்க (பொய்யென்று நிச்சயிக்க) அபேதமுண்டாகின்றது. எங்ஙனம்:—முகத்தின் பிரதிபிம்பத்திற்குப் பிம்பசொரூபமான முகத்தோடு பிரதிபிம்பமுகத்தைப் பாதிக்க அபேதமுண்டாகின்றது. இக்காரணத்தால் வேதாந்த சாஸ்திரத்தில் ஆபாசனுக்குப் பிரஹ்மத்தோடு பாதசாமானாதிகரணியம் சொல்லப்பட்டிருக்கின்றது. எந்த வஸ்துவிற்குப் பாதமுண்டாக எதனேடு அபேதமுண்டாகின்றதோ அந்த வஸ்துவிற்கு அதனேடு பாதசாமானாதிகரணியம் சொல்லப்படுகின்றது. எங்ஙனம்:—முகத்தின் பிரதிபிம்ப முகத்திற்குப் பாதமுண்டாக முகத்தோடு அபேதமுண்டாகின்றது. ஆதலால், பிரதிபிம்பம் முகமாம், வேறன்று. இவ்வாறு பிரதிபிம்பத்திற்கு முகத்தோடு பாதசாமானாதிகரணியமுண்டு. * * ஆதலால், 'நான்' என்னும் சப்தத்தில் விளங்குகின்ற ஆபாசன் பிரஹ்மமாம்; வேறன்று. இத்தன்மைய பாதசாமானாதிகரணியம் ஆபாசனுக்குப் பிரஹ்மத்தோடுண்டாகின்றது. இவ்வாற்றால், சிஷியனே! (1) 'நான்' என்னும் சப்தத்தில் விளங்குகின்ற கூடஸ்தனுக்கு முக்கிய அபேத முண்டு; (2) ஆபாச (ஜீவ)னுக்குப் பாதத்தால் அபேதமுண்டு" என்று விசாரசாகரம் நான்காவது தரங்கத்திற் கூறுவதிங் குணர்தற்பாலதாம்.

(124-125)



**126.** அவ்வகிலங் கட்கேலாம் போய்ம்மையே புகலு மரியதாம்
வேதாந்த பக்கமதி லினைய, வெவ்வமறு சுருதிவிசா ரத்தினு லுண்மை
யெனுமுத்தி கூடுமென லெவ்வாறிங் கேன்னி, லவ்வியமென் சோப்
பனமா தணைவினன் மெய்ம்மை யாயவீ ரியவோழிவுங் கற்பிதமாம் வடி
விற், சேவ்வியவோண் கடவுள்வழி பாட்டினு லிட்டஞ் சேர்தலும்
போ னூலுணர்வான் முத்தியுஞ்சித் திக்கும்.

---

### முத்திசம்சய நிரசநம்.

வினு:—சர்வப் பிரபஞ்சத்திற்கும் மித்தியாத்துவத்தைக் கூறுகின்ற வேதாந்த பட்சத்தில் சுருதி (உபநிஷத்) விசார ஞானத்தினுல், சத்தியமான முத்தி யெவ்வாறு சித்திப்பதாம்?

விடை:—ஒருவன் தனது நித்திரா தோஷத்தாலாய சொப்பனத்தின்கண் தோன்றும் ஸ்திரீயைக்கூடுதலால், அவனுக்குச் சத்தியமான வீரிய வீழ்ச்சி யுண்டாதல் போலவும், மக்கள் இவ்வடிவம் கணபதி, இவ் வடிவம் செவ்வேள் என்றற்றெடக்கத்தனவாகச் சிற்பியால் கற்பிக்கப்பட்டுள்ள விக்கிரகங்களைத் தெய்வமாகப் பாவித்து வணங்குதலால் அவர்தமக்குச் சத்தியமான இஷ்டப் பிராப்தி யுண்டாதல்போலவும் (மித்தியா வடிவப் பிரபஞ்சத்துள்) அதிகாரி புருஷர்க்குச் சுருதி விசார ஞானத்தால் பரமார்த்தமான முத்தியும் சித்திப்பதாம். (இதனுல் மித்தியா வடிவப் பிரபஞ்சத்துள் சுருதி விசார ஞான முடையவர்க்குச் சத்தியமான முத்தி சித்திக்குமென்பதற்குத் தடையென்ப தொன்று மின்று மென்பது பெறப்படுவதாம்.) 126

### முத்தி விக்கினத்திரயம்.

வினு:—சர்வ துக்க நிவிர்த்தி பரமாநந்தப் பிராப்தி வடிவ முத்தியடைவதற்கு விக்கினமா (தடையா) யிருப்பன எவை?

---

(இ - ள்.) அவ்வகிலங்கட்கெலாம் - (முற்கூறிய திருசிய வடிவ) அந்தப் பிரபஞ்சமனைத்திற்கும், பொய்ம்மையேபுகலும் - மித்தியாத்துவத்தையே கூறுகின்ற, அரியதாம் வேதாந்த பக்கமதில் - (அநதிகாரிகள் அறிதற்கு) அரியதாய வேதாந்த பட்சத்தில், இனைய - இத்தன்மையதாய, எவ்வம்அறு - குற்றமற்ற, சுருதி விசாரத்தினுல் - சுருதி (வேதாந்த சாஸ்திர) விசாரஞானத்தால், உண்மையெனுமுத்தி - (பாரமார்த்திக) சத்தியமாமென்று கூறப்படுகின்ற மோட்சம், கூடுமெனல் - சித்திக்குமென்று கூறுவது, இங்கு - இங்கே, எவ்வாறென்னில் - எப்படி பொருந்துவதாமென்று வினவின், (ஒருவன் தனது), அவ்வியம் என் - (தனக்கென்றொரு) வடிவமில்லாததென்று கூறப்படுகின்ற, சொப்பனமாதணைவினுல் - சொப்பனத்தில் (தோன்றும்) ஸ்திரியைக்கூடுவதால், (அவனுக்கு), மெய்ம்மையாய வீரியவொழிவும் - சத்தியமான வீரிய வீழ்ச்சியும், கற்பிதமாம் வடிவில் - (சிற்பியினுல்) கற்பிக்கப்படும் (தெய்வவடிவ) விக்கிரகங்களினின்றும், (ஒருவன் அவற்றை), செவ்விய-செவ்விதாய, ஒண்மை-விளக்கம் (பொருந்திய), கடவுள்வழிபாட்டினுல் - கடவுளாகப்பாவித்து வழிபாடு செய்தலினுல், (அவனுக்கு), இட்டம் சேர்தலும்-விரும்பியபொருள் கிடைத்தலும், போல் - (வாய்ப்பது)போல, நூலுணர்வால் - (அதிகாரிபுருஷனுக்கு) வேதாந்த சாஸ்திர விசார ஞானத்தால், முத்தியும் - (பாரமார்த்திக சத்தியமான) மோட்சமும், சித்திக்கும் - சித்திப்பதாம், (எ - று). வியம் - வடிவம்; அவ்வியம் - வடிவமின்மை.

**127.** அருமையெனு முத்திவிலக் காகமூன் றுளவா மஞ்ஞான
மையம்விப ரீதமெனவவற்றுட், பிரமமல நானேன்கை யஞ்ஞானநானப்
பிரமமோ வலனேவென் றிடலையஞ் சுருதி, வருமினிய வுத்திகளா னான்
பரமா யினுமுன் வளர்சீவ பாவமுண்டேன் குதல்விபரீ தந்தான், றரு
முறைமை லஞ்ஞான திகட்குமுர ணுகுஞ் சவணமோடு மனனநிதித்தியாச
னங்க ளன்றே.

---

*விடை:—அவை அஞ்ஞானம், சந்தேகம், விபரீத மென்பனவாம்; இவை முறையே அசம்பாவனை, சம்சய பாவனை, விபரீத பாவனை யென்றும் கூறப் படுவனவாம். அவற்றுள்,*

**அஞ்ஞானம்.**

1. (*நினைவரிய ஒரு பிரஹ்மம் நீயே என்று கூறிய சற்குருவினுபதேசத் தைக் கேட்ட அதிகாரி புருஷன் தன்னிடத்துப் பிரஹ்மத்தின் தருமங்களான சர்வஞ்ஞத்துவ முதலியவற்றைக் காணாது) நான் பிரஹ்ம மல்லன் என்று பாவனை செய்வதே அஞ்ஞானமாம்.*

**சந்தேகம்.**

2. (*விட்டுவிடாத லட்சணையால் தத்துவமசி முதலிய மகா வாக்கியப் பொருளை யறிந்தும், விசுவாசக் குறைவால்) நான் அந்தப் பிரஹ்மமாவேனோ? அல்லனாவேனோ? என்று பாவனை செய்வதே சந்தேகமாம்.*

**விபரீதம்.**

3. *சுருதிப் பிரமாணத்தாலும் யுக்திகளாலும் நான் பிரஹ்மமேயா யிருக் கின்றே னென்பது எனக்கு விளங்குகின்றது; அவ்வாறு விளங்கினாலும், எனக்கு யானென்ன தென்னும் அபிமான வடிவ ஜீவத்துவ மின்னும் நீங்காதிருக் கின்றது; அதனால், நான் ஜீவனே யென்று பாவனை செய்வதே விபரீதமாம்.*

---

*(இ - ள்.) அருமையெனும் - (அநதிகாரிகள் அறிதற்கு) அருமையானதா மென்று கூறப்படுகின்ற, முத்தி - முத்தியைப்பெறுதற்கு, விலக்காக - பிரதி பந்தமாக, அஞ்ஞானம் ஐயம் விபரீதமென - அசம்பாவனையும் சம்சயபாவனை யும் விபரீதபாவனையுமென்று, மூன்றுளவாம் - மூன்றுள்ளனவாம், அவற்றுள் - அந்தப் பிரதிபந்த மூன்றனுள், நான் பிரமமல என்கை - யான் பிரஹ்மமல்ல னென்று பாவனை செய்திருப்பதே, அஞ்ஞானம் - அசம்பாவனையாம், நானப் பிரமமோ அலனோவென்றிடல் - யான் அந்தச் சின்மாத்திரப் பிரஹ்மமாவேனோ அல்லனாவேனோவென்று சந்தேகித்திருப்பதே, ஐயம் - சம்சயபாவனையாம், சுருதி-வேதாந்த வாக்கியங்களாலும், வரும் - (அவற்றால்) உண்டாகின்ற, இனிய வுத்திகளால் - (சிந்திக்கச் சிந்திக்க) இனிமையாகவுள்ள யுக்திகளாலும், நான் பரமாயினும் - யான் பிரஹ்மமாவேனாயினும், முன்வளர் - பழைமை (அநாதி)யாக வளர்ந்துவருகின்ற, சீவபாவம் - ஜீவத்துவம், உண்டு - (என்னினின்றும் நீங் காது) இருக்கின்றது, (அதனால் யான் ஜீவனே), என்குதல் - என்று பாவித் திருப்பதே, விபரீதம் - விபரீத பாவனையாம், தருமுறையில் - (இவ்வாறு) பொருந்திய கிரமப்படி, அஞ்ஞானாதிகட்கு - அசம்பாவனை முதலியவற்றிற்கு, சவணமொடு - சிரவணத்தோடு, மனநிதித்தியாசனங்கள் - மனனமும் நிதித்தி யாசனமும், முரணாகும் - பகையாயிருப்பனவாம், (எ - று). தான் - அன்று - ஏ - என்பன அசைநிலைகள்.* 127



**128.** சூதகா திகளினிடைச் சுருதிவிசா ரத்தாற் றுணிவுதோன்
றுதலெனவே சிவமொடுயி ரயிக்க, மோதுமா ரணமொழியின் றாற்பரியங்
கேட்கை யுயர்சவணங் கேட்டபொரு ளுத்தியிற்சிந் தித்த, றீதின்மா
மனனமவற் றாற்றுணிந்த பொருளிற் சித்தமசை வறவிருத்த னிதித்தியா
சனந்தான், மேதையா கியசவண ஞானத்தா லான்மா மெய்ம்மையா
முக்கியத்தாற் சவணமங்கி யெனலாம்.

---

**முத்தி விக்கினத்திரய பரிகாரம்.**

வினா.—இம்முத்தி விக்கினத் திரயங்களுக்குப் பகையா யிருப்பன எவை?

*விடை:—அவை சிரவணம், மனனம், நித்தியாசன மென்பனவாம்; அவற்றுள்,* (127)

**சிரவணம்.**

1. *சுருதியின் கருமகாண்ட விசாரணையால் சூதக முதலியவற்றில் ஸ்திர புத்தி யுண்டாதல்போல, ஸ்திரபுத்தியுண்டாக ஜீவப் பிரஹ்ம ஐக்கியத்தைக் கூறுகின்ற(ஞானகாண்ட)வேத வாக்கியத்தின் தாற்பரியத்தைக் கேட்டலே சிர வணமாம். (ஒருவன் சுருதியின் கருமகாண்ட விசாரணையால் நிச்சயமாக நான் சூதக முதலியவற்றை யுடையவ னென்று நம்புதல்போல, அதிகாரி புருஷன் ஞான காண்ட விசாரணையால் நிச்சயமாக நான் பிரஹ்மமேயென்று நம்பி, உப நிஷத் வாக்கிய தாத்பரியத்தைக் கொள்ளுவதே சிரவணமாம். இஃது அசம் பாவனை யென்னும் அஞ்ஞானத்தைக் கெடுப்பதாம்.)*

**மனனம்.**

2. *அங்ஙனம் சிரவணஞ்செய்த (கேட்ட) வேத வாக்கியத்தின் தாத்பரியப் பொருளை யுத்தி தருக்க அனுமானங்களால் ஆராய்ச்சி செய்து நோக்குதலே மனனமாம். (இது சம்சய பாவனை யென்னும் சந்தேகத்தைக் கெடுப்பதாம்.)*

---

*(இ - ள்.) சுருதி விசாரத்தால் - (ஆப்தன்வாயிலாகச் செய்யும் கரும காண்ட) வேதவாக்கிய விசாரணையால், சூதகாதிகளினிடை - ஆசௌச முதலிய வற்றின்கண், துணிவுதோன்றுதலென - நிச்சயபுத்தி யுண்டாதல்போல, சிவ மொடுயிரயிக்கமோதும் - பிரஹ்மத்தோடு பிரத்தியக் ஆத்மாவிற்கு ஐக்கியத் தைக் கூறுகின்ற, ஆரணமொழியின் தாற்பரியங்கேட்கை - (ஞானகாண்ட) வேதவாக்கியத்தின் தாற்பரியத்தை (நல்லாசிரியர் வாயிலாக நிச்சயபுத்தியுடன்) கேட்டுக்கொள்ளுவதே, உயர்சவணம் - மேலாய சிரவணமாம், கேட்டபொருள் - (இவ்வாறு) கேட்ட (ஜீவப்பிரஹ்ம ஐக்கிய) அர்த்தத்தை, உத்தியிற்சிந்தித்தல் - (தருக்கத்தோடு) யுத்தியினால் ஆராய்ச்சிசெய்து நோக்குதல், தீதில்மாமனனம் - குற்றமற்ற பெரிய மனனமாம், அவற்றால் - (சிரவண - மனனமென்னும்) அவ் விரண்டனாலும், துணிந்தபொருளில் - நிச்சயித்த (ஜீவப்பிரஹ்ம ஐக்கியவடிவ) அர்த்தத்தின்கண், சித்தமசைவற விருத்தல் - சித்தம் நிச்சலமாகவிருப்பது, நிதித்தியாசனம் - நிதித்தியாசனமாம், மேதையாகிய - மேன்மையைத் தருவதா கிய, சவணஞானத்தால் - சிரவணத்தாலாகிய (ஜீவப்பிரஹ்ம ஐக்கிய) ஞானத் தால், ஆன்மா மெய்ம்மையாம் - ஆத்மாவினுண்மைத் தரிசன முண்டாவதாம், முக்கியத்தால் - (இங்ஙனம்) முக்கியமாயிருத்தல்பற்றி, (தத்துவஞானத்திற்குச் சககாரிகாரணமாயுள்ள சிரவணாதிகளுள்), சவணம்-சிரவணம், அங்கியெனலாம்- அங்கியென்று கூறப்படுவதாம், (எ - று). தான் - அசை. சூதகம் - தீட்டு.* 128

**129.** ஏனையவோ ரிரண்டுமதன் றுணையெனலா லங்க மேனை
லாகு மஃதெவ்வா றெனிற்பொருள்க டிகழ்த்து, மானதோர் சுடரசை
விற் கருமவலி யின்ரு மாதலினல் வளிதடுக்குந் திரையெனலா மனன,
மேனிமிர்வான் றிரிதூண்டி யொளிர்வித்தல் போலும் விளம்புநிதித்
தியாசனமேன் றறிந்திடுக தெரிந்து, மோனையா மெனவுரைத்த சிரவணத்
திற் குள்ள முறையிலறு வகையிலிங்க தாற்பரிய முரைப்பாம்.

---

### நிதித்தியாசனம்.

3. *அச்சிரவண மனனங்களால் நிச்சயித் தறிந்த பொருளின்கண் சித்தம்நிச்சலமா யிருத்தலே நிதித்தியாசனமாம். (சிரவண மனனங்களால் நிச்சயித்தறிந்த பொருளைச் சித்தம் உலகவெண்ண மின்றித் தியானஞ் செய்து, பிரஹ்மாகாரமா யிருப்பதே நிதித்தியாசனமாம். இது விபரீத பாவனையென்னும் விபரீதத்தைக் கெடுப்பதாம்.)*

*"(1) யுக்தியினல் வேதாந்த வாக்கியத்தின் தாற்பரியத்தை நிச்சயம் செய்வது சிரவணமாம்; (2) ஜீவப்பிரஹ்மங்களின் அபேதத்திற்குச் சாதனமான யுக்திகளாலும் பேதத்திற்குப் பாதகமான யுக்திகளாலும் அத்விதீயப்பிரஹ்மத்தைச் சிந்தனை செய்தல் மனனமாம்; (3) அநாத்மாகார விருத்தியின் மறைப்பின்றிய பிரஹ்மாகார விருத்தியின் ஸ்திதி நிதித்தியாசனமாம்" என்று விசாரசாகரம் முதலாவது தரங்கத்திற் கூறுவது மிங்குணர்தற்பாலதாம்.*

---

*(இ - ள்.) ஏனைய - மற்றைய, ஓரிரண்டும் - ஒப்பற்ற மனனநிதித்தியாசனமென்னு மிரண்டும், அதன் - அச்சிரவணத்திற்கு, துணையெனலால் - சககாரிகளாமென்று கூறப்படுதலால், அங்கமெனலாகும் - அங்கங்களென்று கூறப்படுவனவாம், அஃதெவ்வாறெனின் - (சிரவணம் அங்கியும், அதற்கு மனன நிதித்தியாசனங்கள் அங்கமுமாமென்னும்) அஃது எப்படி பொருந்துவதாமெனின், பொருள்கள் - (இருட்டிலுள்ள கடமுதலிய) பொருள்களை, திகழ்த்துமானது - விளக்குவிப்பதாகிய, ஓர்சுடர் - ஒருதீபமானது, அசைவில் - (காற்றால்) சலிக்குமிடத்து, (அதற்கு), கருமவலியின்றாம் - (பொருள்களைவிளக்குவதாய) காரிய சாமர்த்தியமில்லையாம், ஆதலினல்-ஆதலால், மனனம்-மனனத்தை, வளி - (அத்தீபம் சலித்தற்குக் காரணமாய) வாயுவின் சஞ்சாரத்தை, தடுக்கும்-தடுக்கின்ற, திரையெனலாம் - திரைபோல்வதென்று (சிரவணத்திற்குச் சககாரியாகக்) கூறலாம், விளம்பு-(சித்தஜயசாதனங்களுள் சிறப்புடையதென்று) கூறப்படுகின்ற, நிதித்தியாசனம் - நிதித்தியாசனமானது, மேல்நிமிர்வான் - (அத்தீபம் ஒளி மழுங்குமிடத்து, அது) மேலோங்கிப் பிரகாசித்தற்பொருட்டு, திரி - (அத்தீபத்தின்) திரியை, தூண்டி - (தூண்டுகோலால்) தூண்டிவிட்டு, ஒளிர்வித்தல்போலும் - (அத்தீபத்தைப்) பிரகாசிக்கச்செய்வது போல (அச்சிரவணத்திற்குச்சககாரியாக) இருப்பதாம், என்றதெரிந்து அறிந்திடுக - என்று (சிரவண முதலியவற்றினியல்பினை நீ) ஆராய்ந்தறிவாயாக, மோனையாமென - (தத்துவஞான சாதனங்களுள்) தலைமையானதாமென்று, உரைத்த - கூறப்படுகின்ற, சிரவணத்திற்கு - சிரவணத்திற்கு, உள்ளமுறையில் - (பொருத்தமாக) உள்ள கிரமப்படி, அறுவகையிலிங்கதாற்பரியம் - சட்விதலிங்கதாற்பரியத்தை, உரைப்பாம் - கூறுவாம், (எ - று).* 129



---

### சிரவண சககாரி காரணம்.

**வின :—சிரவண - மனன - நிதித்தியாசனங்களுள், அங்கி எது? அங்கம் எவை?**

*விடை :—சிரவணத்தா லுண்டாகிய ஜீவப்பிரஹ்ம ஐக்கிய ஞானத்தால் ஆத்ம சாக்ஷாத்கார முண்டாவதாம்; அம்முக்கியத்தால் சிரவணம் அங்கியாம்; ஏனைய மனனமும் நிதித்தியாசனமும் அச் சிரவணத்தா லுண்டாய ஞானம் கெடாதிருத்தற்குச் சககாரிகளா யிருத்தலின், அதற்கு அங்கங்களாம்.* (128)

**வின :—சிரவணம் அங்கியாம்; மனனமும் நிதித்தியாசனமும் அதற்கு அங்கமா மென்பதைத் திருஷ்டாந்த வாயிலாகக் கூறல் வேண்டும்?**

*விடை :—பொருள்களை விளங்கச் செய்கின்ற விளக்குக் காற்றாலசையுமாயின், அதற்கு (பொருள்களை விளங்கச்செய்யும்) காரிய சாமர்த்திய மில்லையாம்; அதனல், காற்றைத் தடுக்கும் திரை போல்வதாம் மனனம்; அவ்விளக்கு மேலோங்கிப் பிரகாசிக்கும்படி அதனது திரியைத் தூண்டுகோலால் தூண்டிவிட்டு அவ்விளக்கைப் பிரகாசிக்கச் செய்தல் போல்வதாம் நிதித்தியாசனம்.*

*(விளக்குக் காற்றாலசையாதிருத்தற் பொருட்டு, அதற்குத் திரையிட்டு, அது கொழுந்துவிட் டோங்கிப் பிரகாசித்தற் பொருட்டு அதன் திரியைத் தூண்டுகோலால் தூண்டுதலை யொக்கும் சிரவணத்திற்கு மனனமும் நிதித்தியாசனமு மென்றிங் குணர்தல் வேண்டும்.)*

*சிரவணம் விளக்குப்போல்வதாம்; மனனம் திரைபோல்வதாம்; நிதித்தியாசனம் தூண்டுகோல் போல்வதாம்; லோகவாசனை, தேகவாசனை, சாஸ்திர வாசனை யென்பன காற்றப்போல்வனவாம்.*

*[சிரவணம் அங்கி (பல) சிரவணம், அங்க (சாதன) சிரவண மென்றிரு வகைத்தாம்; அவற்றுள், (1) சற்குரு கூறும் மகாவாக்கியத்திற்கும் சீடனது சுரோத்திரத்தி (காதி)ற்கு முள்ள சம்பந்தம் அங்கி சிரவணமாம்; (2) அவ்வாக்கியார்த்தத்தின் விசாரவடிவ சிரவணம் அங்க சிரவணமாம். இங்குக்கூறிய சிரவணம் அங்க சிரவணமாம்.]*

### சட்வித லிங்க தாற்பரியம்.

**வின :—சிரவண தாற்பரியம் எவற்றல் நிச்சயிக்கப்படும்?**

*விடை :—சட்வித லிங்கங்களால்.*

**வின :—அவற்றைக் கூறல்வேண்டும்.** (129)

**130.** அவைகளுபக் கிரமமுப சங்கார முடனேயப்பியா சம்பினபூர்
வதைபலமோ டுற்ற, நவிலருத்த வாதமுப பத்தியென லாகு நற்சிருட்டி
முன்சகமெய்ப் பரமாயிற் றென்றுஞ், சிவமதற்குச் சுவகதா திகளில்லை
யென் றகண்டஞ் செப்புவதே யுபக்கிரமஞ் சகஞ்சிவத்தின் மாய்த்துப்,
பவமகலத் துரியற்குப் பிரமமுட னயிக்கம் பகர்ந்தத்து விதங்கூற லுப
சங்கா ரந்தான்.

---

விடை :—அவை உபக்கிரம உபசங்காரம், அப்பியாசம், அபூர்வதை, பலம், அருத்தவாதம், உபபத்தி யென்பனவாம்; அவற்றுள்,

உபகிரம உபசங்காரம்.

1. சாந்தோக்கிய முதலிய உபநிஷத்துக்கள் முதலில் சிருஷ்டிக்குமுன் பிரபஞ்சம் சத் ரூபப் பிரஹ்மமாக விருந்தது ; அந்தச் சத் ரூபப் பிரஹ்மத்திற்குச் சுவகதமுதலிய பேதத்திரயங்களில்லை யென்று அதற்கு அகண்டாகாரத்தைக் கூறுவதே உபக்கிரமமாம் ;

கடையில் (நாம ரூப வடிவமாகவுள்ள) பிரபஞ்சத்தைச் சத்ரூபப் பிரஹ்மத்திலே (காரணகாரிய ஆராய்ச்சி வாயிலாக) இலயஞ்செய்து, பிரத்தியக் ஆத்மாவிற்குச் சத்ரூபப் பிரஹ்மத்தோடுள்ள ஐக்கியத்தைப் போதித்து அந்தப் பிரஹ்மம் அத்வைதமாம் (இரண்டாவ தில்லாததாம்) என்று அத்வைதத்தைக் கூறுவதே உபசங்காரமாம். இவை இரண்டும் ஒரு லிங்கமாம். (130)

அப்பியாசம்.

2. இடையில்பிரத்தியக் ஆத்மாவே பிரஹ்மமாமென்று அதனைத்தத்துவமசி முதலிய மகாவாக்கியங்களால் மீண்டும் மீண்டும் (அடிக்கடி) தெளிவுண்டாகக் கூறுவதே அப்பியாசமாம் ;

---

(இ - ள்.) அவைகள் - அச்சட்விதலிங்கதாற்பரியங்கள், உபக்கிரமமுபசங்காரமுடன் - உபக்கிரம உபசங்காரமும், அப்பியாசம் - அப்பியாசமும், பின் - பின்னர், அபூர்வதை - அபூர்வதையும், பலமொடு - பலமும், உற்ற - (தகுதியாகப்) பொருந்திய, நவில் - (ஸ்துதி - நிந்தையெனவிருவகையாகக்) கூறப்படுகின்ற, அருத்தவாதம் - அருத்தவாதமும், உபபத்தி - உபபத்தியும், என லாகும் - என்று கூறப்படுவனவாம், (அவற்றுள்), (சாந்தோக்கிய முதலிய உபநிஷத்துக்கள் பிரகரண ஆரம்பத்தில்), நற்சிருட்டிமுன் - (ஜீவர்களது) நன்மைக்கேதுவாய சிருஷ்டிக்கு முன்னர், சகம் - (நாமரூபவடிவமாயுள்ள)பிரபஞ்சம், மெய்ப்பரமாயிற்றென்றும் - (அத்விதீய) சத்ரூபப்பிரஹ்மமா யிருந்ததென்றும், சிவமதற்கு - அச்சத்ரூபப் பிரஹ்மத்திற்கு, சுவகதாதிகளில்லையென்று(உம்) - சுவகத முதலிய பேதத்திரயங்களில்லையென்றும், அகண்டம் செப்புவதே - (பிரஹ்மத்தின்) அகண்ட சொரூபத்தைக் கூறுவதே, உபக்கிரமம் - உபக்கிரமமாம், (பிரகரணமுடிவில்), சகம் - பிரபஞ்சத்தை, சிவத்தின்மாய்த்து - அந்தப் பிரஹ்மத்தின்கண் விலயஞ்செய்து, பவமகல - (ஜீவர்க்குப்) பிறவியொழியுமாறு, துரியற்கு - பிரத்தியகாத்மாவிற்கு, பிரமமுடன் - அந்தப்பிரஹ்மத்தோடு (உள்ள),அயிக்கியம் பகர்ந்து - ஐக்கியத்தைக்கூறி, அத்துவிதங்கூறல் - (அந்தப் பிரஹ்மம் அத்துவிதமாமென்று அந்த)அத்துவிதத்தைக் கூறுவதே, உபசங்காரம் - உபசங்காரமாம், (எ - று). தான் - அசை. 130



**131.** கூறுமிவை யிரண்டுமோ ரிலிங்கமென வறிக கூடத்த
னேபிரம மெனமறித்து மறித்துந்,தேறவுரைத் திடலப்பி யாசமாந் துரியன்
றிகழ்பிரமா ணுதீத னென்கையபூர் வதையாம், பாறிலுயி ரோன்றறித
லெலாமறித லென்கை பலம்பிரத்திய கான்மவுரு வாம்பிரமந் தனக்கு,
மாறரிய வைந்தொழிற்கர்த் துருத்துவஞ்செப் புறுதல் வயங்கருத்த வாத
மென மதித்திடுக தெரிந்தே.

---

அபூர்வதை.

3. அந்தப் பிரத்தியக் ஆத்மா (உபநிஷத் பிரமாணத்தா லன்றி மற்றைய) பிரத்தியட்ச முதலிய பிரமாணங்களுக்கு விஷயமாகா தென்று அதனைக் கூறுவதே அபூர்வதையாம்; (பிரத்தியக் ஆத்மா உபநிஷத் பிரமாணத்தாலன்றி வேறு பிரமாணங்களாலறிதற் குரிய தன்று மென்பதிங் குணர்தற் பாலதாம்.)

பலம்.

4. பிரத்தியக் ஆத்மா வொன்றனை யறியவே சர்வமும் அறியப்பட்டனவாமென்று அதனைக் கூறுதலே பலமாம் ;

அருத்தவாதம்.

5. பிரத்தியக் ஆத்மவடிவ நிர்விகாரப் பிரஹ்மத்திற்குச் சிருஷ்டி - ஸ்திதி - சங்காரம் - திரோபவும் - அநுக்கிரகம் என்னும் பஞ்சகிருத்திய கர்த்திருத்துவங் கூறுதலே அருத்தவாதமாம்.

(பிரத்தியக் ஆத்மவடிவமாயுள்ள பிரஹ்மம் நிர்விகாரமா யிருத்தவின், அது யாதொன்றனையும் செய்வது மில்லையாம், செய்விப்பது மில்லையாம்; அங்ஙனமுள்ள அதற்குச் சகத்தின் சிருஷ்டி முதல் அநுக்கிரக மீறுயுள்ள பஞ்சகிருத்திய கர்த்திருத்துவங் கூறுதலே அருத்தவாதமா மென்க.) (131)

---

(இ - ள்.) கூறமிவையிரண்டும் - கூறிய இவ்விரண்டும், ஓரிலிங்கமென - ஒருலிங்கமாமென்று, அறிக - (அவற்றை நீ) அறிவாயாக, (பிரகரணத்தினிடையே தத்துவமசி முதலிய மகாவாக்கியங்களால்), கூடத்தனே பிரமமென - பிரத்தியக் ஆத்மாவே பிரஹ்மமாமென்று,மறித்தும் மறித்தும்-பின்னும்பின்னும், தேற - (அதனைத்) தெளிவாகவறிய, உரைத்திடல் - கூறுவதே, அப்பியாசமாம் - அப்பியாசமாம், துரியன் - (பிரத்தியக் ஆத்மா என்னும் அந்தக்)கூடஸ்தன், திகழ் - (வியாவகாரிக தசையில் சத்தியமாக) விளங்குகின்ற, பிரமாணுதீதனென்கை - (பிரத்தியட்ச முதலிய) பிரமாணங்களுக்கு அதீதமாயிருப்பவனென்று (அவனைக்) கூறுவதே, அபூர்வதையாம் - அபூர்வதையாம், பாறில் - (எஞ்ஞான்றும்) கெடுதலில்லாத, உயிரொன்றறிதல் - (அந்தப்)பிரத்தியகாத்மாவொன்றனையறிதல், எலாமறிதலென்கை - சர்வத்தையுமறிதலாமென்று கூறுவதே, பலம் - பலமாம், பிரத்யகான்மவுருவாம் பிரமந்தனக்கு - பிரத்தியக் ஆத்மவடிவமாயுள்ள (நிர்விகாரப்) பிரஹ்மத்திற்கு, மாறரிய - தவறுதலில்லாத, ஐந்தொழில் - பஞ்சகிருத்தியங்களுக்கு, கர்த்திருத்துவம் - கருத்தாவாந்தன்மையை, செப்புறுதல் - கூறுவதே, வயங்கு - விளங்குகின்ற, அருத்தவாதமென - அருத்தவாதமாமென்று, (அதனை நீ), தெரிந்துமதித்திடுகெ - ஆராய்ந்தறிவாயாக, (எ-று).

**132.** கடத்தினுக்கு மண்ணினையு நூற்குலண்டு தனையுங் கார
ணமென் பதுபோலப் பிரமமே முன்னம், படைத்தசகத் காரணமென்
கின்றதுப பத்தி பகருத்தி தருக்கமனு மானமிவை மூன்று, மடுத்து
வரு மனனசக காரிகளா மவற்று ளாருயிர்க ளநேகம்வியா பகமெனவே
கூறுங், தடுப்பரிய சாங்கியமே முதலாய மதத்துட் சாற்றுமுயி ரெலாமு
டம்பு தோறும்புணர்ச்சி யுறலால்.

---

உபபத்தி (திருஷ்டாந்தம்).

*6. கடத்திற்கு மண்ணும் நூலுக்குக் கோசகாரப் புழுவும் காரணமா யிருக்கின்றன வென்று அவற்றைக் கூறுதல்போல, உலகத்திற்குப் பிரஹ்மமே காரணமா யிருக்கின்றதென்று அதனைக் கூறுதலே உபபத்தியாம்.*

*(கோசகாரப் புழு - பட்டுப்பூச்சி, நூல் - பட்டு நூல். கடத்திற்கு மண் முதற் காரணமாம்; பட்டு நூற்குப் பட்டுப்பூச்சி முதற்காரணமும் நிமித்த காரணமுமாம்.)*

*"உபநிஷத் வடிவ வேதத்தின் உபக்கிரம உபசங்கார முதலியன அத்விதீயப் பிரஹ்மத்தின்கண்ணும்; ஆதலால், அத்விதீயப் பிரஹ்மத்தில் அவற்றிற்குத் தாற்பரிய முண்டு.*

*எங்ஙனம்: சாந்தோக்கியத்தின் ஆறாவது அத்தியாயத்தினது உபக்கிரம (ஆரம்ப)த்தில் அத்விதீயப் பிரஹ்ம மிருக்கின்றது; உபசங்காரத்திலும் (முடிவிலும்) அத்விதீயப்பிரஹ்ம மிருக்கின்றது. எந்த அர்த்தம் ஆரம்பத்திலுளதோ அதுவே முடிவிலும் உளதாயின், ஆண்டு உபக்கிரம உபசங்காரங்களின் ஏகரூபத்வம் சொல்லப்படுகின்றது.*

*அடிக்கடி சொல்லுதலே அப்பியாச மென்பர். சாந்தோக்கியத்தின் ஆறாவது அத்தியாயத்தில் ஒன்பது முறை 'தத்துவமசி' வாக்கிய மிருக்கின்றதாகலின் அத்விதீயப் பிரஹ்மத்தில் அப்பியாச மிருக்கின்றது.*

*வேறு பிரமாணங்களினால் அறிப்படாத தன்மையினை அபூர்வதை யென்பர். உபநிஷத்து வடிவச் சப்தப் பிரமாணத்தின் வேறுப பிரமாணங்கட்கு*

---

(இ - ள்.) கடத்தினுக்கு மண்ணினையும் - கடத்திற்குமண்ணையும், நூற்குலண்டுதனையும் - பட்டு நூலுக்குக் கோசகாரப்புழுவையும், காரணமென்பதுபோல - காரணமென்று கூறுவதுபோல, முன்னம்படைத்த - முன்னர்ச்சிருஷ்டித்த, சகத் - பிரபஞ்சத்திற்கு, பிரமமே காரணம்-பிரஹ்மமே காரணமாம், என்கின்றது - என்றுகூறுவதே, உபபத்தி - (திருஷ்டாந்தமென்னும்) உபபத்தியாம், பகர் - (நியாயநூலார் சிறப்பித்துப்) பேசுகின்ற, உத்திதருக்கமனுமானமிவைமூன்றும் - யுத்தியும் தருக்கமும் அநுமானமுமென்னு மிம்மூன்றும், அடுத்துவரு - (சிரவணத்தை)அடுத்து வருகின்ற, மனனசககாரிகளாம் - மனனத்திற்குச் சககாரிகளாயிருப்பனவாம், அவற்றுள் - அம்மூன்றனுள், ஆருயிர்கள் - (உடம்பின்கண்) நிறைந்துள்ள ஜீவர்கள், அநேகம் - பலவாம், வியாபகம் - வியாபகமாம், என - என்று, கூறும் - (அவற்றைக்) கூறுகின்ற, தடுப்பரிய - (வேதாந்திகளல்லாதார்) மறுப்பதற்கரிய, சாங்கியமே முதலாய மதத்துள் - சாங்கிய முதலிய சமயங்களுள், சாற்றும் - சொல்லப்படுகின்ற, உயிரெலாம் - ஜீவரனைவரும், உடம்புதொறும் - தேகந்தோறும் (ஒவ்வொரு தேகத்திலும்), புணர்ச்சியுறலால் - சம்பந்தமுற்றிருத்தலால், (எ - று). (132)



*அத்விதீயப் பிரஹ்மம் விஷய மன்றாகலின், அத்விதீயப் பிரஹ்மத்தில் அறியப்படாத தன்மை வடிவ அபூர்வதை யிருக்கின்றது.*

*அத்விதீயப் பிரஹ்மத்தின் ஞானத்தினால் மூலத்தோடு கூடிய சோக மோகங்களின் நிவிர்த்தி பயனெனப்பட் டிருக்கின்றது. ஸ்துதியினையாவது நிந்தையினையாவது அறிவிக்கும் வசனம் அர்த்தவாத மெனப்படும். அத்விதீயப் பிரஹ்மத்தை அறிவிக்கும் ஸ்துதி உபநிடதங்களில் ஸ்பஷ்டமாம்.*

*சொல்லிய அர்த்தத்திற்கு அநுகூலமான யுத்தியினை உபபத்தி யென்பர். சாந்தோக்கியத்தில் சகல பதார்த்தங்களுக்கும் பிரஹ்மத்தோடு அபேதத்தைச் சொல்லுதற்பொருட்டுக் காரியத்திற்குக் காரணத்தோடு அபேதத்தைப் பிரதிபாதித்தல் அநேக திருஷ்டாந்தங்களாற் சொல்லப்பட்டிருக்கின்றது.*

*இவ்வாறு ஆறலிங்கங்களால் சகல உபநிஷதங்களுக்கும் தாற்பரியம் அத்விதீயப் பிரஹ்மத்திலுளது. அந்த ஆறலிங்கங்களை உபநிஷதங்களின் வியாக்கியானத்தில் பகவான் பாஷியகாரர் வெளிப்படையாக எழுதியிருக்கின்றனர். அவற்றால், வேதாந்த வாக்கியங்களுக்கு அத்வைதப் பிரஹ்மத்தில் தாற்பரிய நிச்சய முண்டாகின்றது." என்று விருத்திரத்நாவலி ஐந்தாவது ரத்நத்திற் கூறுவதிங்குணர்தற்பாற்றாம்.*

மனன சககாரித்திரயம்.

*(சககாரி- துணைக்காரணம்)*

வினா :—மனன சககாரித் திரயமெவை?

விடை :—*அவை யுத்தி, தருக்கம், அனுமான மென்பனவாம்; அவற்றுள்,*

(1) யுத்தி.

*இது கூடும், இது கூடாதெனத் தோன்றும் ஆராய்ச்சி வடிவ புத்தி யுத்தியாம். இதனைத் தருக்கத்தி லடக்கிக்கூறுவாருமுளர்; இதுபொருந்துமாறென்றுங் கூறப்படும். இது கூடும் என்பது அந்வயமாம்; இது கூடாதென்பது வியதிரேகமாம். அந்வயம் வியதிரேகமென்னு மிரண்டங்கத்தோடு கூடியது யுத்தியாம். அந்வயம் - உடம்பாடு; வியதிரேகம் - எதிர்மறை, (1) அஃதிருந்தால், அஃதிருக்குமென்பது அந்வயமாம்;இதற்கு உதாரணம்: புகையாகிய காரியமிருந்தால்,தீயாகிய காரணமிருக்கும் என்பதாம். (2) அஃதின்றாயின், அஃதின்றாமென்பது வியதிரேகமாம்; இதற்கு உதாரணம்: தீயாகிய காரணமின்றாயின், புகையாகிய காரியமின்றாமென்பதாம். இங்ஙனமே ஆரோபமாகிய மாயாப்பிரபஞ்ச மிருந்தால், அதிஷ்டானமாகிய பிரஹ்ம மிருக்குமென்பது அந்வயமாம்; அதிஷ்டானமாகிய பிரஹ்மமின்றாயின், ஆரோபமாகிய மாயாப்பிரபஞ்ச மின்றாமென்பது வியதிரேகமாம். இந்த யுத்தியால் கற்பிதமாயுள்ள மாயாப்பிரபஞ்சத்திற்கு அதிஷ்டானமாக ஒருபொருள் யதார்த்தமாக விருத்தல் வேண்டுமென்பது பெறப்படுவதாம். இந்த யுத்தி தன்னை அறிஞ ருபயோகிக்கும் வகையால் பலதிறப்பெயர் பெற்று விளங்குவதாம். மேல் ஆத்மா ஏகமா? அநேகமா? என்பது பற்றிக் கூறிய யுத்தி இங்குக்கூறிய யுத்தியிலக்கணத்திலடங்கி யிருத்தலை ஆராய்ந்துணர்க. "அத்தியா ரோப மென்று மபவாத மென்றுஞ் சொல்லும், உத்தியாற் பந்தம் வீடென் றுரைக்கும்வே தாந்த மெல்லாம்" என்று கைவல்லிய நவநீதம் கூறுவதால், அத்தியாரோபயுத்தியும், அபவாதயுத்தியும் இங்குணர்தற்பாலனவாம். (1) "ஆரோப முள்ள, சுத்தியூ டிலாதவிர சதம்விளைதல் போலச் சொல்பிரம சத்தினிலா வுலகதுகற் பித்தல்" என்பது அத்தியாரோப யுத்தியாம்; (2) "இதுதான் வெள்ளியதன் றிப்பியெனல் போலோர்ந் திறைமெய் பொய் யுலகமெனத் தெளிதலப வாதம்" என்பது அபவாத யுத்தியாம்.*

### (2) தருக்கம்.

தருக்கித்துப்பேசுதல் தருக்கமாம்; அஃதாவது அநிஷ்டத்தை (இஷ்டமாகாததை)க் கூறுதலாம். தருக்க சங்கிரகம் "தருக்கம் வியாப்பியத்தை ஆரோபித்தலால், வியாபகத்தை ஆரோபிப்பது; அது தீயில்லையாயின், புகையுமில்லையாதல் வேண்டும் என்பது" என்று தருக்கத்தினியல்பை உதாரணத்துடன் கூறுவதறிக. இதன் விரிவை நியாயப்பிரகாசம் 6-வது பரிச்சேதத்திலும் தருக்கபரிபாஷையின் குறிப்புரையிலுமறிக. இத்தருக்கத்தால் அதிஷ்டானமாய பிரஹ்மமின்றாயின், ஆரோபமாகிய மாயாப்பிரபஞ்சமு மில்லையாம்; ஆரோபமாகிய மாயாப்பிரபஞ்ச மிருத்தலின், அதற்கு அதிஷ்டானமாயுள்ள பிரஹ்மம் இன்றியமையாதிருத்தல் வேண்டுமென்பது பெறப்படுவதாம்.

### (3) அனுமானம்.

அனுமிதிப்பிரமையின் கரணம் அனுமானமாம். இம்மலை தீயுடையது; புகையுடைமையால் என்புழிப் புகையின் ஞானம் அனுமானமாம்; அதனாலுண்டாகும் தீயின்ஞானம் அனுமிதிப்பிரமையாம். பிரமை - யதார்த்த ஞானம்.

(1) பிரஹ்மம் தேசபரிச்சேதமில்லாததாம்; வியாபகமாயிருத்தலின்; யாது தேச பரிச்சேதமில்லாததன்று அது வியாபகமன்று, கடம்போல.

(2) பிரஹ்மம் காலபரிச்சேதமில்லாததாம்; நித்தியமாயிருத்தலின்; யாது காலபரிச்சேதமில்லாததன்று அது நித்தியமன்று, மின்னல்போல.

(3) பிரஹ்மம் வஸ்து பரிச்சேதமில்லாததாம்; (திருசியமாயுள்ள) எல்லாவற்றின் சொரூபமாயிருத்தலின்; யாது வஸ்து பரிச்சேதமில்லாததன்று அஃது எல்லாவற்றின் சொரூபமன்று, ஆகாயம்போல.

என்றிவ்வாறு அளவிறந்த அனுமானப் பிரமாணங்களுண்டு; அவற்றைப் பெருநூல்களிற் காண்க.

### தருக்கத்தோடுகூடிய அனுமானம்.

"வேதாந்த வாக்கியங்களால் ஜீவனிடத்து நிச்சயிக்கப்பட்டுள்ள பிரஹ்மத்தின் அபேதமெதுவோ அஃதனுமானத்தாலும் இவ்வாற்றாற் சித்திக்கின்றது:—

ஜீவன் பிரஹ்மாபின்னன்; சேதனத்தன்மையால்; யாண்டு யாண்டுச்சேதனத்தன்மை யுண்டு, ஆண்டாண்டுப் பிரஹ்மாபேதமுண்டு; பிரஹ்மம்போல. இது மூன்றவயவங்களின் சமுதாயமாகிய மகா வாக்கியமாம்...ஈண்டுச் சீவன் பட்சம்; பிரஹ்மாபேதம் சாத்தியம்; சேதனத்தன்மை ஏது; பிரஹ்மம் திருஷ்டாந்தம். ஈண்டுப் பிரதிவாதி, ஜீவனிடத்துச் சேதனத்தன்மையாகிய ஏதுவோ இருக்கின்றது, பிரஹ்மாபேதமாகிய சாத்தியமில்லையென் றிவ்வாறு பட்சத்தில் சேதனத்தன்மையாகிய ஏதுவிற்குப் பிரஹ்மாபேதரூப சாத்தியத்தோடு வியபிசாரசங்கைசெய்யின், தருக்கத்தால் அச்சங்கையை நிவிர்த்தி செய்தல்வேண்டும். ஈண்டுத் தருக்கத்தின் சொரூபமிதுவாம்: ஜீவனிடத்துச் சேதனத்தன்மையாகிய ஏதுவை யங்கீகரித்துப் பிரஹ்மாபேதமாகிய சாத்தியத்தை யங்கீகரியாவிடின், சேதனத்திற்கு அத்விதீயத்தன்மையைப் பிரதிபாதிக்கும் சுருதிக்கு விரோதமுண்டாம். அநிஷ்டத்தைச் சம்பாதித்தல் தருக்கமெனப்படும். சுருதியின் விரோதம் சர்வ ஆஸ்திகர்க்கும் அநிஷ்டமாம். வியாவகாரிகப் பிரபஞ்சம்மித்தை: ஞானத்தால் நிவிர்த்திக்கப்படுந் தன்மையால்; யாண்டு யாண்டு ஞானத்தால் நிவிர்த்திக்கப்படுந் தன்மை யுண்டு, ஆண்டாண்டு மித்தியாத்துவமுண்டு, இப்பிவெள்ளி முதலியனபோல. ஈண்டு வியாவகாரிகப் பிரபஞ்சம் பட்சம்; மித்தியாத்தன்மை சாத்தியம்; ஞானத்தால் நிவிர்த்திக்கப்படுந்தன்மை ஏது; இப்பிவெள்ளி



**133.** இந்தவுடம் பிவற்கேயாம் போகசா தனமற் றேனோர்க் கன் றெனப்போகத் திதிபுகலொ ணாதாம், வந்தவுடம் பெத்திறத்து மிவன்வினையான் வரலான் மற்றிவற்கே யெனின்வினையு மேவர்க்கு மிலை யோதான், முந்தையுடம் பபிமானத் தாற்செய்வினை யிவற்கே முற்றுமெனி னவ்வபிமா னமுமுந்தை யுடல்சே, ரந்தவுயி ரனைத்திற்கு மிலையோதா னிவ்வா றனவத்தை நீக்கலரி தநேகமுயி ரேனலால்.

முதலியன திருஷ்டாந்தம். வியாவகாரிகப் பிரபஞ்சம் மித்தையென்பது பிரதிஞ்ஞா வாக்கியம்; ஞானத்தால் நிவிர்த்திக்கப்படுந் தன்மையாலென்பது ஏது வாக்கியம்; யாண்டு யாண்டு ஞானத்தால் நிவிர்த்திக்கப்படுந் தன்மையுண்டு, ஆண்டாண்டு மித்தியாத்துவமுண்டு; இப்பிவெள்ளி முதலியனபோல என்பது உதாரண வாக்கியம். ஈண்டும் பிரபஞ்சத்திற்கு ஞானத்தால் நிவிர்த்திக்கப்படுந் தன்மையை யங்கீகரித்து மித்தியாத்தன்மையை யங்கீகரியாவிடின், சத்தி(உள்ளத)ற்கு ஞானத்தால் நிவிர்த்தி பொருந்தாது. அதனால் ஞானத்தால் சர்வப் பிரபஞ்சமும் நிவிர்த்தியாதலைப் பிரதிபாதிக்கும் சுருதி ஸ்மிருதிகளுக்கு விரோதமுண்டாமென்னுந் தருக்கத்தால் வியபிசார சங்கையி னிவிர்த்தியுண்டாகின்றது." என்று விருத்திப்பிரபாகரம் இரண்டாவது பிரகாசம் கூறுகின்றது.

### அநேகான்ம வாத கண்டனம்.

சாங்கியர் முதலிய மதவாதிகள் ஆத்மா அநேகமாம்; (தனித்தனி) வியாபகமாம்; ஆத்மா அனைத்தும் ஒவ்வோருடம்பிலும் சேர்ந்திருப்பனவா மென்று கூறுகின்றனர். (132)

ஆத்மா அனைத்தும் ஒவ்வோருடம்பிலும் சேர்ந்திருத்தலால், இந்த உடம்பு இவ்வாத்மாவிற்கே போக சாதனமாம்; ஏனைய ஆத்மாக்களுக் கன்றென்று போகஸ்திதி கூறுவது பொருந்தாதாம்.

வினா :—இவ்வாத்மாவிற்கு வந்த உடம்பு எவ்விதத்தாலும் இதனது கருமத்தால் வந்து இருத்தலின், இதற்கே உரியதா மெனின்,

(இ - ள்.) இவற்கே - இவ்வாத்மாவிற்கே, இந்தவுடம்பு - இந்தச்சரீரம், போகசாதனமாம் - (சுகதுக்கவடிவ) போகானுபவத்திற்கிடமாம், ஏனோர்க்கு - மற்றச்சீவர்க்கு, அன்று - (போகசாதனம்) அன்றாம், என - என்று, போகத்திதி - போகஸ்திதியை, புகலொணாதாம் - கூறுதல் கூடாதாம், வந்தவுடம்பு - (இவ்வாத்மாவிற்கு) வாராநின்றவுடம்பு, எத்திறத்தும் - எவ்விதத்தினாலும், இவன் வினையால் - இவ்வாத்மாவினது கருமத்தால், வரலால் - வருதலால், இவற்கேயெனின் - இவ்வாத்மாவிற்கேயாமென்றால், வினையும் - (அந்தக்) கருமமும், எவர்க்குமிலையோ—எந்தச் சீவர்க்குமில்லையோ, (எல்லாச்சீவர்க்குமுண்டாம்), முந்தையுடம்பபிமானத்தால் - (இவ்வாத்மா) பூர்வதேகாபிமானத்தால், செய்வினை - செய்தகருமம், இவற்கே முற்றுமெனின் - இவ்வாத்மாவிற்கே பொருந்துவதாமெனின், அவ்வபிமானமும் - அந்தப் பூர்வதேகாபிமானமும், முந்தையுடல்சேர் - பூர்வதேகத்திற்கூடியிருந்த, அந்தவுயிரனைத்திற்கும் - அந்தச்சீவரனைவர்க்கும், இலையோ - இல்லையோ (உண்டாம்), (என்று), இவ்வாறு - இங்ஙனம் (வருகின்ற), அனவத்தை - அநவஸ்தா தோஷத்தை, நீக்கல் - ஒழித்தல், அரிது - முடியாதாம், (ஏனெனின், சாங்கியர் முதலாயினோர்), அநேகமுயிரெனலால் - ஆத்மா பலவென்று கூறுதலால், (எ - று). 133

**134.** சேப்பரிய வேகான்ம பக்கமதிற் போகத் திதியிலையேன்
றனேகான்ம பக்கமது கோளினு, மிப்பரிசு மிகுபோகத் திதிகூடா தாயிற்
றிச்சங்கை யிருமதத்து மோக்குமே யேன்னிற், பற்பலவி லேகான்ம பக்க
மதில் விம்பப் பதிவிம்ப நியாயத்தாற் கரணவசை வாதி, மேய்ப்பரிய
பலதிறத்தா லேண்ணிறந்த போக விளைவுகூ டுதலேளிதேன் குதலுத்தி
யாமால்.

---

*விடை :—அக்கருமமும் சர்வாத்மாக்களுக்கு மில்லையோ? இருக்கின்றதல்லவா ?*

வினு :—இவ்வாத்மா பூர்வ தேகாபிமானத்தாற் செய்த கருமம் இவ்வாத்மாவிற்கே பொருந்தும்; ஏனைய ஆத்மாக்களுக்குப் பொருந்தாது எனின்,

*விடை :—அவ்வபிமானமும் பூர்வ தேகத்தைச் சேர்ந்திருந்த அந்த ஆத்மாவனைத்திற்கு மில்லையோ? இருக்கின்ற தல்லவா ?*

*சாங்கியர் முதலிய மதவாதிகள் வியாபகமாயுள்ள ஆத்மா அநேக மெனக் கூறுதலால், அவர்கள் மதத்தில் இவ்வாறு நிகழும் (வரம்பின்றிச்சேற லென்னும்) அநவஸ்தா தோஷத்தை நீக்குதல் முடியாது.*

*(முன் முன் உள்ள ஒன்று பின் பின் உள்ள மற்றொன்றனை அபேட்சிப்பது அநவஸ்தையாம்; அஃதாவது முதலதற்கு இரண்டாவதும், இரண்டாவதற்கு மூன்ருவதும், மூன்ருவதற்கு நான்காவதும் காரணமாமெனக் காரணத்தினெல்லை யின்மையைக் கூறலாம்.)* (133)

*ஆத்மா ஒன்றே வியாபகமா யுள்ளதென்று கூறும் ஏகான்ம பட்சத்தில் (வேதாந்த மதத்தில்) போகஸ்திதி பொருந்துவதில்லை யென்று அநேகான்ம பட்சத்தை (ஆத்மா பலவாம்; வியாபகமாமென்று கூறும் சாங்கியர் முதலாயினேர் மதங்களை)க் கொண்டாலும், அப்பட்சத்திலும் இவ்விதமாகப் போகஸ்திதி பொருந்தாதாம்.*

வினு:—இந்த ஆட்சேபம் ஏகான்ம பட்சம் அநேகான்ம பட்சமென்னும் இரண்டு மதங்களிலும் சமானமாயிருக்கின்றதல்லவா ? இதற்குச் சமாதானம் யாது? எனின்,

---

*(இ - ள்.) செப்பரிய-(பிறர்மறுத்துக்) கூறுதற்கரியதாய, ஏகான்ம பக்கமதில்-ஏகான்ம பட்சத்தில், போகத்திதியிலையென்று - போகத்தின் வியவஸ்தை சம்பவியாதென்று, அநேகான்மபக்கமது கொளினும்-அநேகான்ம பட்சத்தையங்கீகரித்தாலும், (அதிலும்), இப்பரிசு - இவ்விதமாக, மிகுபோகத்திதி-மிக்கபோகத்தின் வியவஸ்தை, கூடாதாயிற்று - பொருந்தாதாம், இச்சங்கை - இவ்வாட்சேபம், இருமதத்தும் - (ஏகான்மவாதம் அநேகான்மவாதமென்னும்) இரண்டு மதத்திலும், ஒக்குமேயென்னில் - ஒத்திருக்கின்றதேயென்ருல், பற்பலவில் - பலபலவெனல் சிறிதுமில்லாத, ஏகான்ம பக்கமதில் - ஏகான்மவாதபட்சத்தில், விம்பப்பதிவிம்பநியாயத்தால் - பிம்பப்பிரதிபிம்ப நியாயத்தால், கரணவசைவாதி - (உபாதியான) அந்தக்கரணத்தின் கலக்கம் (கவலை) முதலிய, மெய்ப்பரிய - மெய்யாதலில்லாத, பலதிறத்தால் - பலகூறுபாட்டினுல், எண்ணிறந்த - அளவு கடந்த, போகவிளைவு - (விசித்திரமான) போகானுபவம், கூடுதல் - (பிரதிபிம்ப ஜீவர்க்குச்) சம்பவித்தல், எளிதென்குதல் - எளிதாமென்று கூறுதல், உத்தியாம் - யுத்தியாம், (எ - று).* 134



*விடை :—ஏகான்மவாதத்தில், பிம்பப் பிரதிபிம்ப நியாயத்தால் அந்தக்கரணத்தினது மந்தம் கலக்க முதலிய பலவகைக் கூறுபாட்டால் ஆத்மாவிற்கு அளவு கடந்த (விசித்திரமான) போக விளைவு (சுக துக்க அனுபவம்) உண்டாதல் எளிதாமென்று கூறுதலே யுக்தியாம்.*

*"வியாபகமான ஆத்மா நாநாவென்று அங்கீகரிக்கின், எல்லாச் சரீரங்களிலும் எல்லா ஆத்மாக்களின் சம்பந்தத்தையும் அங்கீகரித்தல் வேண்டும்; அதனுல், இந்தச் சரீரம் இந்த ஆத்மாவினுடையதென்னும் நிச்சய முண்டாகாது; ஒவ்வோராத்மாவிற்கும் எல்லாச் சரீரங்களு மிருத்தல்வேண்டும்.*

*எந்த ஆத்மாவின் கருமத்தினுல் எந்தச் சரீரமுண்டாயிற்ரோ அந்த ஆத்மாவிற்கு அது சரீரமாமென்று ஒருவன்கூறின், அதுவும் பொருந்தாது; ஏனெனின், எந்தச் சரீரத்தாற் கர்மம் செய்யப்பட்டதோ அந்தக் கருமத்தைச் செய்தவனது முன் சரீரத்திலும் சகல ஆத்மாக்களுக்கும் சம்பந்தமிருந்தது; ஆதலால், கருமமும் சர்வ ஆத்மாக்களினதேயாகும், ஓராத்மாவினதாகாது. எந்த ஆத்மாவிற்குச் சரீரம் மனதோடுகூடி யிருக்கின்றதோ அந்த ஆத்மாவிற்கு அது சரீரமாம் என்று கூறின், அதுவும் பொருந்தாது. ஏனெனின், சரீரம்போல் மனதுடனும் சகல ஆத்மாக்களுக்கும் சம்பந்தமிருக்கின்றது; அதன்கண் இந்த மனம் இந்த ஆத்மாவினதென்னும் நிச்சய முண்டாகாது. பின்னரோ, எல்லா ஆத்மாக்கட்கும் எல்லா மனமுமிருத்தல் வேண்டும்; அங்ஙனமே, எல்லா ஆத்மாக்களுக்கும் எல்லா இந்திரியமுமே இருத்தல் வேண்டும். வெளிப் பதார்த்தங்களில் இது என்னுடையது, இது வேறொருவனது என்னும் வியவகாரமும் சரீரத்தை நிமித்தமாக வுடையதாம். எல்லா ஆத்மாக்கட்கும் எல்லாச் சரீரமும் ஆதலால், வெளிப்பதார்த்தங்கள் யாவும் எல்லா ஆத்மாக்களுக்கு முரியனவாதல் வேண்டும். அன்றியும், எந்த ஆத்மாவிற்கு எந்தச் சரீரத்தில் நான் என்னுடையது என்னும் புத்தியிருக்கின்றதோ அந்தச் சரீரமே அந்த ஆத்மாவினதாம்; யானென்னும் புத்தியும் என்னுடையதென்னும் புத்தியும் ஒன்ரும்; ஆதலால், எல்லா ஆத்மாவிலுமிராது; ஆனுல், ஒரு தருமம் ஒரு தருமியின் கண்ணேயே யிருக்கும்; ஆதலால், ஒரே ஆத்மாவின் சரீரமாம். எந்த ஆத்மாவிற்கு எந்தச் சரீரமிருக்கின்றதோ அந்தச் சரீரத்துடன் சம்பந்தப்பட்ட மனமும் இந்திரியமும் வெளிப்பதார்த்தங்களும் அந்த ஆத்மாவினுடையனவாம்; ஆதலால், வியாபகமான நாநா ஆத்மாக்களை அங்கீகரித்தலிலும் தோஷமில்லை என்று கூறின், அவ்வார்த்தையும் பொருந்தாது; ஏனெனின், நான் என்னும் புத்தி ஒரு தேகத்தில் ஒரோ ஆத்மாவிற்கிருப்பினும், அது நியாயமதத்திற் பொருந்துவதில்லை. எல்லா ஆத்மாக்கட்கும் ஒரு சரீரத்தில் நான் என்னும் புத்தியுண்டாதல் வேண்டும்; ஏனெனின், நியாயமதத்தில் புத்தியென்பது ஞானத்திற்காம். அந்த ஞானம் ஆத்ம மனங்களின் சையோகத்தினுலுண்டாகின்றது. அந்த மனமோடுண்டாம் சையோகம் எல்லா ஆத்மாக்களுக்கும் இருக்கின்றது. ஆதலால், மனதின் சையோகத்தினுல் எங்ஙனம் ஒரு சரீரத்தில் ஒரு ஆத்மாவிற்கு நான்*

என்னும் புத்தி யுண்டாகின்றதோ, அங்ஙனமே ஒரு சரீரத்தில் எல்லா ஆத்மாக்களுக்கும் நானென்னும் புத்தி யுண்டாதல்வேண்டும்.

மனத்தின் சையோகம் எல்லா ஆத்மாக்களோடுமிருப்பினும், எந்த ஆத்மாவில் ஞானத்தை உண்டுபண்ணும் அதிருஷ்டமிருக்கின்றதோ அந்த ஆத்மாவிற்கே நானென்னும் புத்தியுண்டாகின்றது என்று கூறினும், எல்லாருக்குமே ஞானமுண்டாதல் வேண்டும்; ஏனெனின், வியாபகமான நாநா ஆத்மாவினை யங்கீகாரஞ் செய்யினோ ஒரு சரீரத்தின் சுபாசுபக்கிரியைகளால் சரீரத்திலிருக்கும் எல்லா ஆத்மாக்கட்குமே அதிருஷ்டம் உண்டாதல் வேண்டும் என்னும் வார்த்தையினை முற்கூறியுள்ளோம். ஆதலால், வியாபகமான நாநா ஆத்மாவை அங்கீகரிக்கினோ ஒரு தேகத்தில் எல்லா ஆத்மாக்களுக்கும் சுகதுக்கங்களின் போகமுண்டாதல் வேண்டும். அநுபவத்தில் அங்ஙனமின்று. ஆதலால், ஆத்மா வியாபகமும் நாநாவும் கர்த்தா போக்தாவுமாம் என்னும் நியாயசித்தாந்தம் நலமுடையதன்றாம்.

நமது சித்தாந்தத்திலோ கர்த்தா போக்தா அந்தக்கரணமாம்; அந்த அந்தக்கரணம் நாநாவாம்; வியாபகமும் அணுவுமன்றாம்; பின்னரோ, அதன் பரிமாணம் சரீரத்திற்குச் சமானமாம்; தீபப்பிரகாசம்போலப் பெரிய சரீரத்தை யடையும் போது அந்தக்கரணம் விகாசமாகின்றது; சிறிய சரீரத்தில் சங்கோசமாகின்றது. இவ்வார்த்தை சித்தாந்த பிந்துவின் வியாக்கியானத்தில் மதுசூதந ஸ்வாமிகளால் பிரதிபாதிக்கப்பட்டிருக்கின்றது. எந்த அந்தக்கரணத்திற்கு எந்தச் சரீரத்தோடு சம்பந்தமிருக்கின்றதோ அந்த அந்தக்கரணத்திற்கு அந்தச் சரீரத்தாற் போக முண்டாகின்றது.

அந்தக்கரணத்தை வியாபகமாக அங்கீகரிக்கினோ எல்லாச் சரீரங்களும் எல்லோர்க்கும் உரியனவாம்; போகமும் எல்லோர்க்கு முண்டாம். அந்த அந்தக்கரணம் வியாபகமன்றாதலின், தோஷமில்லை. அந்தக்கரணத்தை அணுவென அங்கீகரிக்கினோ சரீரத்தின் ஓரிடத்தில் அஃதிருத்தல் வேண்டுமென்று அங்கீகரித்தல் நேரும். அவ்வார்த்தை பொருந்தாது. ஏனெனின், ஓரே காலத்திலேயே பாதத்திலும் சிரசிலும் முள் குத்தினால் இரண்டிடங்களிலும் ஓரே காலத்தில் வேதனையுண்டாகின்றது; அஃது உண்டாக வேண்டுவதில்லை; ஏனெனின், அந்தக்கரணம் அணுவாயினோ ஒரு ஸ்தானத்திலேயே ஒரு காலத்திலிருக்கும். அதனால், எவ்விடத்தில் அந்தக்கரண மிருக்கின்றதோ அவ்விடத்திலேயே வேதனை யுண்டாதல்வேண்டும்; இரண்டிடங்களிலுமுண்டாக வேண்டுவதில்லை.

ஆதலால், அந்தக்கரணம் அணுவும் வியாபகமுமன்று; ஆனால், சரீரத்திற்குச் சமானமாயிருக்கின்றது. அதனால், ஒரு தோஷமுமில்லை. அணுவிற்கும் வியாபகத்திற்கும் விலக்ஷணமாயிருப்பது எதுவோ அதனையே மத்தியம பரிமாணம் என்பர்.'' என்ற விசாரசாகரம் ஆறாவது தரங்கத்திற் கூறவதிங் குணர்தற்பாலதாம்.

(134)



**135.** தருக்கவனு மானவிலக் கணங்கடா மிசிரா சாரியர்கண்
முதலானோர் கண்டனா திகளில், விரித்தமைத லாலிதுதான் சுவானுபவ
நூலாய் விளங்குதலா லீண்டுரைப்பிற் பெருகுமேனும் பயத்தா, லுரைக்
கிலமந் திரயோகம் பரிசயோ கம்பி னுயர்பாவ யோகமுட னபாவயோ
கந்தான், றெரித்தமகா யோகமேனு மிவைகளோ ரைந்துந் திகழ்கின்ற
நிதித்தியா சனவடிவ மாமால்.

தருக்க அனுமானங்களி னிலக்கணங்கள் ஸ்ரீ ஹர்ஷமிசிராசிரியர் முதலாயினோரால் கண்டநாதிக் கிரந்தங்களில் (பிரசித்தமாய்) விரித்துக் கூறப்பட்டிருக்கின்றமையாலும், (வேதாந்த சூடாமணி யென்னும்) இது சுவானுபவ நூலாக விளங்குகின்றமையாலும், இவ்விடத்து அவற்றைக் கூறின் நூல் பெருகுமென்னும் பயத்தினாலும், தருக்க-அனுமானங்களி னிலக்கணங்களைக் கூறாது விட்டனம்.

(தருக்க-அனுமானங்களினிலக்கணங்கள் ஸ்ரீ ஹர்ஷமிசிரர் பிரஹ்மாநந்தர் முதலிய ஆசாரியர்களால் ஸ்ரீகண்டநகண்டகாத்திய முதலிய கிரந்தங்களில் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. அவை உணர்தற் கருமையா யிருத்தலின், சுவானுபவ நூலான இதன்கண் கூறப்படவில்லை. அவற்றை யறியும் விருப்புடையோர் சிந்தாமணி முதலிய நூல்களிலறிக.)

நிதித்தியாசன யோக பஞ்சகம்.

வினா:—நிதித்தியாசன யோக பஞ்சகம் எவை?

விடை:—அவை மந்திரயோகம், ஸ்பரிசயோகம், பாவயோகம், அபாவயோகம், மகாயோக மென்பனவாம்; அவற்றுள், (135)

(இ - ள்.) தருக்கவனுமான விலக்கணங்கள்தாம் - தருக்க அனுமானங்களின் இலக்கணங்கள், மிசிராசாரியர்கள் முதலானோர் - ஸ்ரீ ஹர்ஷமிசிராசாரியர் (பிரஹ்மாநந்தர்) முதலிய பெரியோர் (இயற்றியுள்ள), கண்டனாதிகளில் - கண்டந முதலிய நூல்களில், (அவர்களால்), விரித்தமைதலால் - (பிரசித்தமாய்) விரிக்கப்பட்டமைந்திருத்தலாலும், இதுதான் - (வேதாந்த சூடாமணி யென்னும்) இந்நூல், சுவானுபவ நூலாய் விளங்குதலால்-சுவானுபவப் பிரகரணமாக விளங்குதலாலும், ஈண்டு - இந்நூலின்கண், உரைப்பின் - (தருக்கத்தையும் அனுமானத்தையும்) கூறின், பெருகுமெனும் பயத்தால் - நூல் விரியுமென்னுமச்சத்தாலும், உரைக்கிலம் - (யுத்திகடினமான தருக்க முதலியவற்றைக்) கூறாதுவிட்டனம், மந்திரயோகம் - மந்திரயோகமும், பரிசயோகம் - பரிசயோகமும், பின் - பின்னர், உயர் - (மிக) உயர்ந்துள்ள, பாவயோகமுடன் - பாவயோகமும், அபாவயோகம் - அபாவயோகமும், தெரித்த - (சிறப்பாகத்) தெரிவிக்கப்படுகின்ற, மகாயோகம் - மகாயோகமும், எனுமிவைகளோரைந்தும் - என்று கூறப்படுகின்ற வொப்பற்ற இவ்வைந்துயோகங்களும், திகழ்கின்ற (தத்துவஞான சாதனமாக) விளங்குகின்ற, நிதித்தியாசன வடிவமாம் - நிதித்தியாசனரூபமாம், (எ - று). தான் - தான் - ஆல் - அசை, சுவானுபவம் - ஆத்மானுபவம்.

**136.** ஓங்காரா திகளனுசந் தானத்தாற் பரத்தி லுள்ளமடங் குதலே மந் திரயோக மதனே, டீங்காகு மனபவன மோன்ருய்மூ லத்தி னிருஞ் சுழினை வழிச்சென்று சென்னிநடு விருந்த, தேங்கான்ம வொளியின்மனே லயமாதல் பரிசஞ் சிரந்துறக்கஞ் செவிதிசைக ளிருசுடர்கள் விழிதீ,பாங் காய முகமுந்தி விசும்புநிலம் பதமாம் பரமனது நல்விராட் புருடவடி வெனினும்.

---

மந்திரயோகம்.

1. மனம், ஓம் என்னும் பிரணவ முதலிய மந்திரங்களை இடைவிடாது சிந்தனை செய்வது வாயிலாகப் பிரத்தியக் ஆத்ம சொரூபப் பிரஹ்மத்தின்கண் இலயமாவதே மந்திர யோகமாம்.

ஸ்பரிசயோகம்.

2. அந்த மந்திர யோகத்தோடு மனமும் பிராண வாயுவும் ஒன்ருய் மூலாதாரத்திலிருந்து சுழிமுனை நாடி மார்க்கத்திலேறி நின்றபின், சிரசின் நடுவிலுள்ள பாமாத்மப் பிரகாசத்தில் மனம் இலயமாவதே ஸ்பரிச யோகமாம்.

பாவயோகம்.

3. மனம், சுவர்க்கமே சிரசும், திக்குக்களே செவிகளும், சந்திராதித்தர்களே கண்களும், அக்கினியே முகமும், ஆகாயமே நாபியும், பூமியே பாதமுமாகவுடைய பரமேசுவரனது விராட் புருஷ சொரூபத்தையாவது, அல்லது இரண்டு நான்கு என்றற்ருெடக்கத்து அளவுள்ள தோள்களோடும், (சூலம் முதலிய) ஆயுதங்களோடும், ஆபரணங்களோடும் பொருந்தியுள்ள பாமேசுவரனது சொரூபத்தையாவது தியானஞ்செய்து, பின் அந்த அவயவங்களை ஒவ்வொன்ருக விட்டு, எஞ்சி நின்ற அவயவி மாத்திரமாயுள்ள சத்ரூபப் பிரஹ்மத்தில் விலயமாவதே பாவ யோகமாம்.

---

(இ - ள்.) ஓங்காராதிகள் - (அவற்றுள்), ஓம் என்னும் பிரணவ முதலிய மந்திரங்களின், அனுசந்தானத்தால்-தியானுப்பியாசத்தால், பரத்தில் - பரமாத்மாவின்கண், உள்ளமடங்குதலே - மனம் விலயமாதலே, மந்திரயோகம் - மந்திர யோகமாம், அதனேடு - அம்மந்திரயோகத்தோடு, ஈங்கு - இவ்வுலகத்தின்கண், ஆகும் - (தன்னைத் தம்வயமாகச் செய்வார்க்கு நன்மைதருவது) ஆகிய, மனம் - மனமும், பவனம் - பிராணவாயுவும், ஒன்ருய் - ஒற்றுமையாய்க்கூடி, மூலத்தின் - மூலாதாரத்தினின்றும், இருமை - பெருமை வாய்ந்த, சுழினைவழி சென்று - சுழிமுனைநாடி மார்க்கத்தில் எறிச்சென்று, (நிற்க), சென்னிநடு-சிரசின்மத்தியில் (பிரஹ்மரந்திரத்தில்), இருந்த - இருக்கின்ற, தேங்கு ஆன்மவொளியில் - பரிபூரண ஆத்மப்பிரகாசத்தில், மனேலயமாதல் - (அந்த) மனம் விலயமாதலே, பரிசம் - பரிசயோகமாம், சிரம்துறக்கம் - சுவர்க்கமேசிரசும், செவிதிசைகள் - திக்குக்களே சுரோத்திரமும், இருசுடர்கள் விழி - சந்திராதித்தரே நேத்திரமும், தீபாங்காயமுகம் - அக்கினியே அழகமைந்தமுகமும், உந்திவிசும்பு - ஆகாயமே நாபியும், நிலம்பதமாம் - பூமியே பாதமுமாயிருக்கின்ற, பரமனது - ஈசுவரனது, நல்விராட்புருட வடிவெனினும் - பெரியவிராட்புருஷ வடிவத்தையாலுைம், (எ - று).





**137.** அன்றியள வுறுபெருந்தோட் படைபணியோ டுற்ற வண்ணல்வடி வெனினுநினைந் தவயவங்க டம்மை,யோன்றென்ருய் விடுத்து நின்ற வவயவிமாத் திரமா முண்மையாம் பிரமத்தின் மனமடங்கல் பாவஞ், சென்றணவு கரணமுரு வொருபிரமந் தன்னிற் சிந்தையடங் குதலபா வம்படைப்பி லோழிவிற், றன்றெரித றெரியாமை யிடத்திலோர் பரிசாய்த் தன்வடிவாம் பிரமத்தின் மனமிறன்மா யோகம்.

---

அபாவயோகம்.

4. மனம், விஷயங்களிற் சென்று கூடுகின்ற சுரோத்திர முதலிய காணங்களுக்கு விஷயமாகாதுள்ள (பிரமாணுதீதமான நிருபாதிகப்) பிரஹ்மத்தில் விலயமாவதே அபாவ யோகமாம்.

மகாயோகம்.

5. மனம், உலகோற்பத்தி லயங்களிலும் (யாதாவ தொன்றனை) அறிதல் அறியாமைகளிலும் (தனக்கொரு கேடின்றி) ஒரு தன்மையதாக விளங்கும் (ஜீவனது நிஜ வடிவமாயுள்ள) பிரத்தியக் ஆத்மப் பிரஹ்மத்தில் விலயமாவதே மகா யோகமாம். (136-137)

பிரதிபந்தத் திரயம்.

வினு:—ஆத்ம சாட்சாத்காரத்திற்கு (பிரத்தியட்சத்திற்கு)ப் பிரதிபந்தமாக (விரோதமாக) வருவன எவை ?

---

(இ - ள்.) அன்றி - அல்லது, அளவுறு - (இரண்டு - நான்கு என்றற்ருெடக்கத்து) அளவமைந்த, பெருந்தோள் - பெரிய தோள்களையும், படை - (அவற்றிற்கேற்ற) ஆயுதங்களையும், பணியோடு - (தனது வடிவத்திற்குத்தக்க) ஆபரணங்களுடன், உற்ற - பொருந்தியுள்ள, அண்ணல்வடிவெனினும் - பரமேசுவரனது (திவ்வியமங்கள) வடிவத்தையாயினும், நினைந்து - தியானஞ் செய்து, (பின்னர்), அவயவங்கள் தம்மை-(கூறிய அந்தப் பாத முதலிய) அவயவங்களை, ஒன்றென்ருய்விடுத்து-ஒவ்வொன்ருக நீக்கி, நின்ற - (நீக்குவதற்குரியதாகாது) நின்ற, அவயவிமாத்திரமாம் - அவயவிமாத்திரமான, உண்மையாம் பிரமத்தில் - சத்ரூபப் பிரஹ்மத்தில், மனமடங்கல் - மனம் விலயமாவதே, பாவம் - பாவயோகமாம், சென்று - (விஷயங்களிற்) சென்று, அணவு - அடைகின்ற, காணம்- (அகக்காணம் புறக்காணமென்னும்) காணங்கள், உரு - சென்றடைதலில்லாத, ஒருபிரமந்தன்னில் - (பிரமாணுதீதமாய் நிருபாதிகமாயுள்ள) ஒப்பற்ற பிரஹ்மத்தில், சிந்தையடங்குதல் - மனம் விலயமாவதே, அபாவம் - அபாவயோகமாம், படைப்பில் - (உலகப்)படைப்பிலும், ஒழிவில் - (அதன்) விலயத்திலும், தன்தெரிதல் - (யானிதனை யறிவேனென்னும்) தனது அறிவிலும், தெரியாமையிடத்தில் - (யானிதனை யறியேனென்னும் தனது) அறியாமையிலும், (ஒருதீங்குமின்றி), ஓர் பரிசாய் - ஒருதன்மையதாய், தன்வடிவாம் - தனது யதார்த்த வடிவமாயிருக்கின்ற, பிரமத்தில் - (பிரத்தியகாத்மப்) பிரஹ்மத்தில், மனமிறல்-மனம் விலயமாவதே, மாயோகம் - மகாயோகமாம், (எ - று).

**138.** பகர்ந்தவுயி ருண்மைவிலக் காகவரும் பூதப் பதிபந்தம் வர்த்தமா னப்பதிபந் தம்பி, னிகழ்ந்தவா காமியப் பதிபந்த முத்தி நேயமோடு துறந்துகுரு பரனையறிந் தடைந்து, மகிழ்ந்துசவ ணுதிக முற் றிடினுமுன் னுகர்ந்த வனிதாதி விடயசுக வாதனையாற் றினமும், புகுந்துமன நிலைகலக்கி யுயிருண்மை யுறுமற் போக்கியிட றனைப்பூதப் பதிபந்த மேன்பர்.

---

விடை:—அவை பூதப் பிரதிபந்தம், வர்த்தமானப் பிரதிபந்தம், ஆகாமியப் பிரதிபந்த மென்பனவாம்; அவற்றுள்,

பூதப் பிரதிபந்தம்.

1. ஒருவன் முத்தி விருப்பத்தோடு சர்வசங்க பரித்தியாகஞ் செய்து, சற்குரு மூர்த்தியை ஆராய்ந்து தேடி யடைந்து, மிகு பிரியமாய் அவர் வாயிலாகச் சிரவண-மநந-நிதித்தியாசனங்களைச் செய்தாலும், அவன் முன்னர்க் கிருகஸ்தாசிரமத்தி லிருந்து அனுபவித்த வனிதாதி (மனைவி முதலிய) விஷயசுகம் (சிற்றின்ப அனுபவம்) சம்ஸ்கார பலத்தால் நாடோறும் வந்து (சுகதுக்கங்களைத் தருவதுவாயிலாக) அவனது மன நிலையைக் கலங்கச்செய்து அவனுக்கு ஆத்ம சாட்சாத்கார முண்டாகாதபடி செய்வதே பூதப் பிரதிபந்தமாம். (பூதம்-இறந்தகாலம்; பிரதிபந்தம்-தடை.)

காமம் வெகுளி முதலிய விருத்திகளுண்டாவதற் கேதுவாய சித்தத்தின் சூட்சுமாவஸ்தையாகிய சம்ஸ்காரம் வாசனையாம். (138)

---

(இ - ள்.) பகர்ந்த - (மேற்) கூறிய, உயிருண்மை - பிரத்தியகாத்ம சாட்சாத்கார நிச்சயத்திற்கு, விலக்காக - விக்கினமாக, பூதப்பதிபந்தம் - பூதப்பிரதிபந்தமும், வர்த்தமானப்பதிபந்தம்-வர்த்தமானப்பிரதிபந்தமும், பின்- (இவற்றின்) பின்னர், நிகழ்ந்த-(நிலைபெற்று) விளங்குகின்ற, ஆகாமியப்பதிபந்தம் - ஆகாமியப் பிரதிபந்தமும் (என்று மூன்றுபிரதிபந்தம்), வரும்-வருவனவாம், (அவற்றுள்), (ஒருவன்), முத்திநேயமொடு-மோட்ச விருப்பத்துடன், துறந்து-(தன் விருப்பத்திற்கு விஷயமாயுள்ளவற்றையெல்லாம்)விட்டு, குருபரனை - சற்குருமூர்த்தியை, அறிந்து - (பலகால் ஆராய்ச்சிசெய்து நோக்கி, நம்மைப் பாதுகாத்தற்குரியவரிவரேயென்று துணிவாக) அறிந்து, அடைந்து - (தஞ்சமாக) அடைந்து, மகிழ்ந்து - (மிகு) பிரியமாய், சவணுதிகமுற்றிடினும் - சிரவணுதிகளைச் செய்தாலும், முன் - முன்னர், நுகர்ந்த - (கிருகஸ்தாசிரமத்தில்) அனுபவித்திருந்த, வனிதாதி விடயசுக வாதனையால் - மனைவி முதலிய விஷயங்களாலுண்டாகிய சிற்றின்ப வாசனையால், தினமும் புகுந்து - நாள்தோறும் (சித்தத்தில்) பிரவேசித்து, மனநிலைகலக்கி - (அவனது) மனவுறுதியைக் கலங்கச்செய்து, உயிருண்மை - பிரத்தியக் ஆத்ம சாட்சாத்கார நிச்சயம், உறுமல் - பொருந்தாவண்ணம், போக்கியிடல்தனை - (அதனைத் தடுத்து) ஒழிப்பதையே, பூதப்பதிபந்தமென்பர் - (மேலோர்) பூதப்பிரதிபந்தமென்று கூறுவர், (எ - று). வாதனையால் தினமும் புகுந்து மனநிலை கலக்கி உயிருண்மையுறுமற் போக்குவது விஷயானுபவமாம்.

138



**139.** மடிவிடயா சத்தியபி மானமொடு குதர்க்க மறுகுறுசிற் றினஞ்சேர்தல் சபலத்து வாதி, யடைதலின்மெய் தெரிந்துமுயி ருண்மை யுறு தழித்த லதுவாகும் வர்த்தமா னப்பதிபந் தங்காண், விடலரிய சன னமினுஞ் சிலவடைந்தா லன்றி விடாதுபிர மாதியுல கிச்சையெனுந் தோட, மொடுமருவி மறைப்பொருளை யுணர்ந்திடினு மான்ம வுண்மை யுறு தழித்தலா காமியப்பதி பந்தம்.

---

வர்த்தமானப் பிரதிபந்தம்.

2. ஒருவன் தத்துவ விசாரஞ் செய்திருந்தும் மடி (சோம்பல் அல்லது ஜடபுத்தி), விஷயாசக்தி (விஷய விச்சை), யானெனதென்னும் அபிமானம், குதர்க்கம் (தருக்க நெறி கடந்து பேசுதல்), சிற்றினஞ் சேர்தல் (கீழ் மக்களோடு சேருதல்), சபலத்துவம் (ஸ்திரபுத்தி யின்மை) முதலியன தோன்றி அவனுக்கு ஆத்ம சாட்சாத்கார முண்டாகாதபடி செய்வதே வர்த்தமானப் பிரதிபந்தமாம். (வர்த்தமானம் - நிகழ் காலம்.)

ஆகாமியப் பிரதிபந்தம்.

3. ஒருவன் தக்காரோடு கூடி வேதாந்த (உபநிஷத்) அருத்தங்களை ஆராய்ந்தறிந் திருந்தாலும், அவன் எனக்கு இன்னுஞ் சில ஜன்மம் வந்தா லல்லாமல், பிரஹ்மாதி உலகங்களின்மீதுள்ள இச்சை ஒழியாதென்று கருதும் தோஷம் தோன்றி அவனுக்கு ஆத்மசாட்சாத்கார முண்டாகாதபடி செய்வதே ஆகாமியப் பிரதிபந்தமாம். (ஆகாமியம்—எதிர் காலம்.) (139)

---

(இ - ள்.) மடி - சோம்பல் (ஜடபுத்தி), விடயாசத்தி - விஷய இச்சை, அபிமானம் - (யானெனதென்னுஞ் செருக்குவடிவ) அபிமானம், குதர்க்கம் - குதர்க்கம், மறுகுறு - (சித்தங்) கலங்குதற் கேதுவாய, சிற்றினஞ் சேர்தல் - சிற்றினத்தாரோடு கூடியிருத்தல், சபலத்துவாதி - சஞ்சலத்தன்மை முதலியன, அடைதலின் - (அதிகாரிபுருஷனுக்கு) உண்டாதலால், (அவன்), மெய்தெரிந்தும் - தத்துவ விசாரம் செய்திருந்தாலும், உயிருண்மையுறாது - (அவனுக்கு) ஆத்மசாட்சாத்காரம் பொருந்தாவாறு, (அதனை), அழித்தல் - தடுப்பது (எதுவோ), அது - அது, வர்த்தமானப்பதிபந்தம் ஆகும் - வர்த்தமானப் பிரதிபந்தமாம், (ஒருவன்), விடலரிய - (தத்துவஞானம் ஐயந்திரிபின்றி யுண்டாமளவும்) நீங்குதலில்லாத, சனனம் - பிறப்பு, இனுஞ்சிலவடைந்தாலன்றி - (எனக்கு) இன்னும் சில வந்தாலல்லாமல், பிரமாதியுலகிச்சை - பிரஹ்மலோக முதலிய புண்ணிய வுலகங்களில் (யான் வைத்துள்ள) பிரியம், விடாது - நீங்காது, எனுந்தோடமொடுமருவி - என்கின்ற தோஷத்தோடு பொருந்தி, மறைப்பொருளையுணர்ந்திடினும்-வேதார்த்தத்தை யறிந்திருப்பினும்,(அவனுக்கு),ஆன்மவுண்மை - ஆத்ம சாட்சாத்காரம், உறாது - பொருந்ாதவண்ணம், (அதனை), அழித்தல்-தடுப்பதே, ஆகாமியப்பதிபந்தம் - ஆகாமியப் பிரதிபந்தமாம், (எ-று). ஒடு - காண் - அசை.

139

**140.** பந்தமவை மூன்றனையுங் கடந்திடுவான் பயில்வ பகர்ஞா
னம் வைராக முபரதியா மவற்றின், வந்தணுகு மிலக்கணங்கா ரண
மோடுதோன் சோரூப மருவுகா ரியமெனவே தனித்தனிஞா னக்கு,
முந்துசவ ணுதிகமே காரணமான் மாவு மூலவகங் காரமும்வே றுக்கு
தலே சோரூபம், நந்துமகங் காரகத மயற்குத்தான் கரியாய் நணுகுதலே
காரியமேன் றறைகுவர்மூ தறிஞர்.

---

பிரதிபந்த நிவர்த்தகம்,

வினா:—இம்மூன்று பிரதிபந்தங்களையும் ஒழித்தற் பொருட்டு அப்பியா
சஞ் செய்தற்குரிய சாதனங்கள் எவை?

விடை:—அவை ஞானம், வைராக்கியம், உபரதி என்பனவாம்.

வினா:—அவற்றின் காரணம், சொருபம், காரியமென்னு மிலக்கணங்க
ளைத் தனித் தனியாகக் கூறல்வேண்டும்?

ஞானம்.

ஞானகாரணம்.

விடை:—1. ஞானத்திற்கு (அகம் பிரஹ்மாஸ்மி யென்னும் தத்துவஞான
முண்டாவதற்கு)க் காரணம் சிரவணம், மனனம், நிதித்தியாசன மென்பனவாம்.

ஞான சொரூபம்.

2. ஞானத்திற்குச் சொரூபம் பிரத்தியக் ஆத்மாவையும் மூலாங்காரத்தை
யும் வேறாகப் பிரித்தறிவதேயாம்.

ஞான காரியம்.

3. ஞானத்திற்குக் காரியம் அகங்காரத்தோடு கூடியுள்ள ஜீவனுக்கு
(அதிகாரி புருஷன்) தான் சாட்சியாக விளங்குவதேயாம். (140)

---

(இ - ள்.) பந்தமவை மூன்றனையும் - (கூறிய) அந்தப்பந்த மூன்றனையும்,
கடந்திடுவான் - கடந்துசெல்லும்படி, பயில்வ - அப்பியசித்தற்குரியன, பகர் -
(மேலோர் சிறப்பித்துப்) பேசுகின்ற, ஞானம் வைராகம் உபரதியாம் - ஞான
மும் வைராக்கியமும் உபரதியும் என்னு மூன்றுமாம், அவற்றின் - அம்மூன்ற
னது, இலக்கணம்-இலக்கணமாவது, காரணமொடு சொரூபம் மருவுகாரியமென-
காரணமும் சொரூபமும் பொருந்திய காரியமுமென்று, தனித்தனி - தனித்
தனியாக (ஒவ்வொன்றற்கும்), வந்தணுகும் - வந்துபொருந்துவனவாம், (அவற்
றுள்), ஞானக்கு - ஞானத்திற்கு, முந்து - முதன்மையாகவுள்ள, சவணுதிகமே -
சிரவண முதலியனவே, காரணம் - காரணமாம், ஆன்மாவும் மூலவகங்காரமும் -
ஆத்மாவையும் மூலாங்காரத்தையும் (அவற்றின் அத்தியாச ஐக்கியம் தோன்று
தொழிய, ஆத்மா சத்தியமாம், மூலாங்காரம் மித்தையாமென), வேறு ஆக்குதலே-
வேறாகப் பிரித்தறிவதே, சொரூபம் - சொரூபமாம், நந்தும்-நசிக்குமியல்புடைய,
அகங்காரகதமயற்கு - அகங்காரத்தோடு கூடியுள்ள ஜீவனுக்கு, தான் - தான்
(பிரத்தியகாத்மா), கரியாய்நணுகுதலே - சாட்சியாகப்பொருந்தி விளங்குவதே,
காரியம் - காரியமாம், என்று - என்று, மூதறிஞர் - பேரறிவுடையார், அறை
குவர் - (ஞானத்தின்காரண முதலியவற்றைக்) கூறுவர், (எ-று). தான்-ஏ-அசை.



**141.** வேண்டும்வை ராக்கியத்திற் குற்றவனி தாதி விடயத்தி னிலை
யாமை முதலாய குற்றங், காண்டலது காரணமேத் திறத்தானு மதனைக்
கழன்றிடுதல் சோரூபம்பின் புறுமைகா ரியமா, மாண்டவுப ரதிக்கியமா
திகளேகா ரணஞ்சூழ் மனமோடுங்கல் சோரூபமாம் புறக்கருமந் தன்னின்,
மீண்டுபுகு மயலறுதல் காரியமேன் றிசைப்பர் விளம்பலுறு ஞானாதி
கட்கவதி மொழிவாம்.

---

வைராக்கியம்.

வைராக்கிய காரணம்.

1. வைராக்கியத்திற்குக் காரணம் வனிதாதி (மனைவி முதலிய) விஷயங்
களில் நிலையாமை (அநித்தியத்துவ) முதலிய குற்றங்களைக் காண்பதேயாம்.

வைராக்கிய சொரூபம்.

2. வைராக்கியத்திற்குச் சொரூபம் பின் அவ்வனிதாதி விஷயங்களை எவ்
விதத்தா லாயினும் விடுவதேயாம்.

வைராக்கிய காரியம்.

3. வைராக்கியத்திற்குக் காரியம் அவ்வனிதாதி விஷயங்களில் பின்னர்ச்
செல்லாமையேயாம்.

உபரதி.

உபரதி காரணம்.

1. உபரதிக்குக் காரணம் இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்
தியாகாரம், தாரணை, தியானம், (சவிகற்ப) சமாதி யென்னும் அஷ்டாங்க
யோகமேயாம்.

---

(இ - ள்.) வேண்டும் - (அதிகாரிபுருஷர்) விரும்புதற்குரிய, வைராக்கியத்
திற்கு - வைராக்கியத்திற்கு, உற்ற - (கருமவசத்தால்வந்து) பொருந்திய, வனி
தாதிவிடயத்தில் - வனிதை(மனைவி) முதலிய விஷயங்களில், நிலையாமை
முதலாய குற்றம்-அநித்தியத்துவமுதலிய தோஷங்களை,காண்டலது-(உள்ளபடி)
அறிதலே, காரணம் - காரணமாம், எத்திறத்தானும் - (பின்) எந்தவகையினா
லும், அதனை - அவ்வனிதாதி விஷயங்களை, கழன்றிடுதல் - விடுவதே, சொரூ
பம் - சொரூபமாம், பின்பு உறாமை - (அவ்விஷயங்களில்) பின்னர்ப் பிரவேசி
யாமையே, காரியமாம் - காரியமாம், மாண்ட - (சித்தம் ஒருமுகமாதற்குச் சிறந்த
காரணமாயிருப்பனவற்றுள் தலைமையாய்) மாட்சிமைபொருந்தியுள்ள, உபர
திக்கு - உபரதிக்கு, இயமாதிகளே - இயமமுதலிய அஷ்டாங்கயோகமே,
காரணம் - காரணமாம், சூழ் - (வனிதாதி விஷயங்களைக்) கருதுகின்ற, மனம்
ஒடுங்கல் - மனம் (தனது ஸ்தானமாகிய ஆத்ம சொரூபத்தில்) ஏகாக்கிரமா
யிருத்தலே, சொரூபமாம் - சொரூபமாம், புறக் கருமந்தன்னில் - (முன்னர்
விட்ட) பகிர்முக வியாபாரத்தில், மீண்டுபுகும் - திரும்பிச்செல்லும், மயலறு
தல் - விபரீதவெண்ணமற்று (அழுந்தி) இருப்பதே, காரியம் - காரியமாம்,
என்று - என்று, (மேலோர்), இசைப்பர் - (வைராக்கிய - உபரதிகளின் காரண
முதலியவற்றைக்) கூறுவர், (இனி), விளம்பலுறும் - (முன்னர்க்)கூறிய, ஞானாதி
கட்கு - ஞானமுதலியவற்றிற்கு, அவதி - எல்லையினை, மொழிவாம் - கூறுவாம்,
(எ-று). அதனையென்பது தொகுதியொருமையாம். 141

இயமம்.

(1). அவற்றுள், (1) அஹிம்சை(கொல்லாமை),(2) சத்தியம் (மெய்யுரை), (3) அஸ்தேயம் (கள்ளாமை), (4) பிரஹ்மசரியம், (5) க்ஷமை - (பொறை), (6) திருதி (தைரியம்), (7) தயை, (8) ஆர்ஜவம் (நேர்மை), (9) மிதாகாரம், (10) சௌசம் (சுத்தம்) என்னுமிப்பத்தும் இயமமாம்.

நியமம்.

(2). (1) தவம், (2) சந்தோஷம், (3) ஆஸ்திக்கியம் (விசுவாசம்), (4) தானம், (5) ஈசுவரபூசை, (6) சித்தாந்த (உபநிஷத்) வாக்கியசிரவணம், (7) லஜ்ஜை (நாணம்),(8) மதி(சிரத்தை), (9) ஜபம், (10)விரதமென்னுமிப்பத்தும் நியமமாம்.

இவ்விரண்டனுள் முன்னதற்குப் பயன் துர்ச்சங்கத்தை விடுதலும் நற்சங்கத்தைக்கொள்ளுதலுமாம்;பின்னதற்குப் பயன் சன்மார்க்கப் பிரவிர்த்தியும் துன்மார்க்க நிவிர்த்தியுமாம்.

ஆசனம்.

(3). (1) ஸ்வஸ்திகம், (2) கோமுகம், (3) வீரம், (4) கூர்மம், (5) பத்மம், (6)குக்குடம்,(7)உத்தானம், (8) கூர்மகம், (9) தநுஷம், (10) மத்ஸ்யம்,(11) பச்சிமதானம், (12) மயூரம், (13) சவம், (14) சிம்மம், (15) பத்ரம், (16) சித்த முதலியன ஆசனமாம். இது 124 வகையாம். இவ்வாசனங்களுள் சிம்மம், பத்ரம், பத்மம், சித்தம் என்பன முக்கியமானவையாம்; இவற்றுள், சித்தாசனம் மிகச்சிரேட்டமானதாம். இடக் குதிக்காலை குதலிங்கங்களின் மத்தியான யோனியில் அழுத்திக்கொண்டு, வலக் குதிக்காலை இலிங்கத்தின்மீ தழுத்திக்கொண்டு, புருவங்களின் மத்தியில் திருஷ்டியை வைத்துக் கட்டைபோல நிமிர்ந்து சலனமின்றிச் சரீரமிருக்க இருப்பது சித்தாசனமாம்.

“செவ்வே யுடலுங் கழுத்துஞ் சிரமுமுற, எவ்வா தனத்தே யிருந்தவர்க்குங் - கைவந்து, வாத முதனோய் நலியா மதியுடையோர், ஆதன மென்ப தது” என்று அமிர்தசாரங் கூறுவதிங்குணர்தற்பாற்றும்.

பிராணாயாமம்.

(4). (1) மூக்கின் இடப்பக்கத்துத் துவாரத்தின் வழியாக இடையென்னும் நாடியால் வாயுவைப் பூரித்தல் பூரகமாம்; (2) மூக்கின் வலப்பக்கத்துத் துவாரத்தின் வழியாக வாயுவை விடுதல் ரேசகமாம்; (3) சுழிமுனையால் வாயுவையடக்குதல் கும்பகமாம். பிராணாயாமமென்பது இம்மூன்றுமாம். அஃதாவது வெளிவாயுவை யுட்கொள்ளுதலாகிய சுவாசமும் உள்வாயுவை வெளிவிடுதலாகிய பிரசுவாசமும் ஆகிய இரண்டன்கதியினையும் கெடுத்தல் பிராணாயாமமாம். அஃது (க) அகர்ப்பம் (2) சகர்ப்பமென இருவகைத்தாம். (க) பிரணவ உச்சாரணமின்றிச் செய்யும் பிராணாயாமம் அகர்ப்பமாம்; (2) பிரணவ உச்சாரணத்தோடு செய்யும் பிராணாயாமம் சகர்ப்பமாம். “எந்தத்துவிசன் காலையிலெழுந்து (பிராணசம்யமமென்னும்) பிராணாயாமமொன்றை யாசரிக்கின்றானோ அவன் பாவமனைத்தையுங் கெடுத்து விரைவில் பிரஹ்மலோகத்தை யடைகின்றான்” என்று யோகசூடாமணி உபநிஷத் கூறுகின்றது.

பிரத்தியாகாரம்.

(5). சுபாவமாக விஷயங்களிற்செல்லும் இந்திரியமனத்தையும் நிரோதம் செய்வது (திருப்புதல் அஃதாவது தடுப்பது) பிரத்தியாகாரமாம். “உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான், வரனென்னும் வைப்பிற்கோர் வித்து -



திண்மையென்னுந் தோட்டியால் பொறிகளாகிய யானையைந்தனையும் தத்தம் புலன்கண்மேற் செல்லாமற் காப்பான் எல்லாநிலத்தினும் மிக்கதென்று சொல்லப்படும் வீட்டுநிலத்திற்கு ஓர்வித்தாம்” என்று திருக்குறள் கூறுவதிங்குணர்தற்பாற்றும்.

தாரணை.

(6). அந்தராயமின்றி (மறைப்பின்றி) அந்தக்கரணம்நிலைத்தல் தாரணையாம். தாரணை - நிறுத்துதல். “பிராணாயாமத்தால் வாயுவையும் பிரத்தியாகாரத்தால் இந்திரியத்தையும் வசமாக்கி, அதன்பின் சுபாசிரயத்தில் (சகுண அல்லது நிர்க்குணப்பிரஹ்மத்தில்) சித்தத்தின் ஸ்திரத்தன்மையைச் செய்தல்வேண்டும்” என்று விஷ்ணுபுராணம் கூறுகின்றது.

யோகசூடாமணி உபநிஷத் “யோகி ஆசனத்தால் வியாதியைக் கெடுக்கின்றான்; பிராணாயாமத்தால் பாவத்தைக் கெடுக்கின்றான்; பிரத்தியாகாரத்தால் மானத விகாரத்தை விடுகின்றான்; தாரணையால் மனோ :தைரியத்தையும், தியானத்தால் அற்புத சைதன்னியத்தையு மடைகின்றான்; சமாதியால் சுபாசுப கருமங்களை விட்டு மோட்சமடைகின்றான்” என்று கூறுவது இங்குணர்தற்பாலதாம்.

தியானம்.

(7). அந்தராயத்தோடு(மறைப்போடு) கூடிச் சகுண அல்லது நிர்க்குணப்பிரஹ்மத்திற்செல்லும் அந்தக்கரண விருத்தியின் பிரவாகம் தியானமாம். “மனம் நிலைத்தற் பொருட்டு முன்னர் ஸ்தூல வடிவத்தை விசேஷமாய்ச் சிந்தித்தல் (தியானித்தல்) வேண்டும்; அந்த ஸ்தூலத்தில் நிலைத்த மனம் சூட்சுமத்திலும் நிலைபெறும்” என்று கருட புராணம் கூறுகின்றது.

சமாதி.

(8). எழுந்த சம்ஸ்காரங்களின் திரஸ்காரமும் (விஷய சிந்தனைகளினடக்கமும்) அடங்கிய சம்ஸ்காரங்களின் பிரகடமும் (ஆத்ம சிந்தனைகளின் வெளிப்பாடும்) உண்டாய் அந்தக்கரணம் ஏகாக்கிரமாய் (ஒருமுகமாய்)ப் பரிணமித்தல் சமாதியாம். இச்சமாதி சவிகற்பம் நிர்விகற்பமென இருவகைத்தாம். (1) ஞாதா - ஞான - ஞேய ரூப திரிபுடி விளக்கத்தோடுகூடிய அத்விதீயப் பிரஹ்மத்திலுள்ள அந்தக்கரண விருத்தியினிலைமை சவிகற்ப சமாதியாம்; (2) திரிபுடித் தோற்றமில்லாத அகண்டப் பிரஹ்மாகாரமான அந்தக்கரண விருத்தியினிலைமை நிர்விகற்பசமாதியாம். இவ்விரண்டனுள் சவிகற்பசமாதி சாதனமாம்; நிர்விகற்பசமாதி பயனும். இவ்விரண்டனுள் முன்னது சம்பிரஞ்ஞாத சமாதியென்றும், பின்னது அசம்பிரஞ்ஞாத சமாதியென்றும் சொல்லப்படும். “அதனால் (சமாதி லாபத்தால்) அவித்தை முதலிய கிலேசங்களும், சுபாசுப கருமங்களும் (முற்றும்) நிவிர்த்தியாகின்றன”என்று பாதஞ்சலயோகம் கூறுகின்றது.

உபாதி சொரூபம்.

2. உபாதிக்குச் சொரூபம் மனம் ஒடுங்கி (ஆத்மாவையே நோக்கி) ஒருமுகமா யிருத்தலேயாம்.

உபாதி காரியம்.

3. உபாதிக்குக் காரியம் (நிர்விகற்ப சமாதியின் பெருக்கத்தால் இலௌகிக - வைதிக மென்னும்) பாகிய கரும வியாபாரங்களில் மீண்டு மீண்டுஞ் செல்லும் மயக்கம் நீங்குவதேயாம்.(அஃதாவது மனம் பாகிய கரும வியவகாரசிந்தனையின்றிப்பிரத்யகாத்மசொரூபத்தில் அழுந்தி யிருப்பதே உபாதிக்குக் காரியமாம்.)

**142.** தக்கதே கான்மபா வம்போலப் பிரமந் தானென்னுந் திண்மைஞா னத்தினுக்கா மவதி, மிக்கபிர மாதிபதந் துரும்பெனவே நினைத்தல் விளம்பும்வை ராக்கியத்திற் கவதிசுழுத் தியன்போற், றொக்ககருமங்களனைத் தினையுநினை யாமை தோன்றுமுப ரதிக்கவதி யாகுமிவை மூன்றும், புக்கோருவ னடைந்திடுமே லதுமுன்னம் விடாது புரிந்தமா தவத்தின்வலி யென்றறிக தெரிந்தே.

---

ஞானாதிகளின் அவதி.

வினா:—ஞானாதிகளின் அவதிகளைக் கூறல்வேண்டும்? (அவதி-எல்லை.)()

ஞான அவதி.

விடை:—1. ஞானத்திற்கு அவதி தேகாத்ம பாவம் திடமா யிருந்தமை (தேகமே ஆத்மா வென்னும் புத்தி உறுதியாயிருந்தமை) போல, பிரஹ்மமே நான் என்னும் போதம் திடமா யிருத்தலேயாம்.

வைராக்கிய அவதி.

2. வைராக்கியத்திற்கு அவதி பிரஹ்மலோக முதலிய பதவிகளை ஒருசிறு துரும்பிற்குச் சமானமாகக் கருதுதலேயாம்.

உபரதி அவதி.

3. உபரதிக்குஅவதி சுழுத்தி யவஸ்தை யடைந்திருப்பவன் (எந்தக் காரியத்தையுஞ் செய்ய நினையாது மறந்திருப்பது) போல, கரும மனைத்தினையும் செய்ய நினையாது மறந்திருப்பதேயாம்.

ஞானம், வைராக்கியம், உபரதி யென்னு மிந்த மூன்றையும் ஒருவன் தவறு தடைவானாயின், அஃது அவனுக்கு (அவன்) சன்மாந்தரத்தில் விடாது செய்து வந்த பெருந் தவத்தின் பலமாம். (142)

---

(இ - ள்.) (அஞ்ஞானகாலத்தில்), தக்க - தகுதியான, தேகான்மபாவம் போல - தேகாத்மபுத்தி (திடமாயிருந்தமை)போல, பிரமந்தானென்னும் திண்மை - பிரஹ்மமேயானென்னும் புத்தி திடமாயிருத்தலே, ஞானத்தினுக்காமவதி - ஞானத்திற்கு அவதியாம், மிக்க- (மேன்மை) மிக்க, பிரமாதிபதம் - பிரமலோக முதலிய புண்ணிய பதவிகளை, துரும்பெனவே நினைத்தல் - ஒரு துரும்பைப்போலக் கருதுதலே, விளம்பும் - (உயர்வாகச்) சொல்லப்படுகின்ற, வைராக்கியத்திற்கவதி - வைராக்கியத்திற்கு அவதியாம், சுழுத்தியன்போல்- சுழுத்தியவஸ்தையுடையவன்போல, தொக்க - (பலவாகப்) பொருந்தியுள்ள, கருமங்களனைத்தினையும் - கருமமனைத்தையும், நினையாமை - மறந்திருத்தலே, தோன்றும் - (வைராக்கியத்தால்) உண்டாகின்ற, உபரதிக்கவதியாகும் - உபரதிக்கு அவதியாம், இவைமூன்றும்-இந்தஞான முதலிய மூன்றையும், ஒருவன் - அதிகாரி புருஷனொருவன், புக்கு - (தனதுமுயற்சியால் சற்குருவினிடத்துச்) சென்று, அடைந்திடுமேல் - அடைவானாயின், அது- (அவனுக்கு) அம்மூன்றனது சித்தி, முன்னம் விடாதபுரிந்த - (அவன்) முற்பிறப்பில் இடைவிடாது செய்துவந்த, மாதவத்தின்வலி - பெருந்தவத்தின்பலமாம், என்றுதெரிந்தறிக - என்று (அம்மூன்றனது சித்தியையும் நீ) ஆராய்ந்தறிவாயாக, (எ - று). தேகான்மபாவம் - தேகமே யானென்னும் புத்தி. ஏ-அசை. 142



**143.** குறையகலும் வைராக முபரதியா மிரண்டுங் கூடிஞானங்கூடா தாயின்முத்தி யரிதா, முறுமினிய மிசையுலக பதங்கிடைக்கு ஞான மொன்றுமடைந் தவையிரண்டு மிலையாயி னிற்ப, முறியுமர நெடும்பனையோன் விழநினைவின் றேனு முறியவிழல் போலவே தேகாந்த மதனிற், பெறுவனுயர் முத்தியினை யுடற்கமைந்த வினையாற் பிறந்திடுந்துக் கானுபவ முளதாத றிண்ணம்.

---

மோட்ச காரணம்.

வினா:—இம் மூன்றும் மோட்ச காரணமா?

விடை :—இம் மூன்றனுள், ஞானமே மோட்ச காரணமாம்.

ஒருவனுக்கு வைராக்கியம், உபரதி யிரண்டுங் கூடியிருக்க, ஞானம் கூடாதாயின், அவனுக்கு மோட்சம் சித்திப்ப தில்லையாம்; ஆனால், மகாசுகஸ்தானமாயுள்ள பிரஹ்ம லோகத்தை யடைதல் சித்திப்பதாம்.

ஒருவன் ஞானமொன்றுமாத்திர மடைந்து வைராக்கியம் உபரதி என்னும் இரண்டையும் அடையாதிருப்பானாயின், அவன் வேரோடு முறிந்து விழுதற்குரிய நிலைமையிலுள்ள ஒரு விருட்சத்தினது பெருங் கிளையிலேறி யிருப்பவன் தான் அதனிடத்திருக்க அல்லது பூமியில் விழ நினைவில்லாதிருப்பினும், அவ்விருட்சம் முறிந்து விழத் தானும் விழுதல்போலத் தேகாந்தத்திலே மோட்சத்தைப் பெறுவன்; (அம் மோட்சம் சித்திக்கு மளவும்) அவனுக்கு (அவனது) தேகமுண்டாவதற்கு அமைந்த பிராரத்த கருமத்தா லுண்டாகின்ற (சுக) துக்க அனுபவமுண்டாதல் தவறுதாம். (அதனால், மோட்ச காரணம் பிரஹ்ம ஞானமேயாம்; வைராக்கியமும் உபரதியு மன்றும்.) (143)

---

(இ - ள்.) குறையகலும் - குற்றம் நீங்கியுள்ள, வைராக முபரதியாமிரண்டும் - வைராக்கியமும் உபரதியுமாகிய இரண்டும், கூடி.—(தம்முள் ஒத்து ஒருவனிடத்துச் சம்பூரணமாகக்) கூடி (இருப்பினும்), ஞானம் கூடாதாயின் - ஞானமாத்திரம் கூடாதிருக்குமாயின், (அவனுக்கு), முத்தியரிதாம் - மோட்சம் (உண்டாதல்) இல்லையாம், (ஆனால்), உறுமினிய - மிகவும் இனிமைபொருந்திய, மிசை - (எவ்வுலகத்திலும்) மேலாகவுள்ள, உலகபதம் - பிரஹ்மலோகத்தை யடைதல், கிடைக்கும் - சித்திப்பதாம், ஞானமொன்றுமடைந்து - (ஒருவன்) ஞானமொன்றுமாத்திரம் அடைந்து, (இருக்க), (அவனிடத்து), அவையிரண்டுமிலையாயின் - (வைராக்கியமும் உபரதியுமான) அவ்விரண்டும் இல்லையாமாயின், முறியுமரம் - முறிந்துவிழுதற்குரிய ஒருவிருட்சத்தினது, நெடும்பணையோன் - நீண்டகிளையின்கணிருப்பவன், நிற்ப - (அதனிடத்து) நின்றிருக்க, (அல்லது), விழ - (பூமியின்கண்) வீழ, நினைவின்றேனும் - நினைவில்லாதவனாயிருப்பினும், முறிய - (அவ்விருட்சத்தின்கிளை) முறிந்துவிழ, விழல்போல - (பூமியில்)விழுதல்போல, தேகாந்தமதனில் - (அவன்) தேகாந்தத்தில், உயர்முத்தியினைப்பெறுவன் - உயர்வாகிய மோட்சத்தையடைவான், உடற்கமைந்தவினையால் - (அவனுக்குத் தேகாந்தமுண்டாமளவும் அவனது) உடம்பு வருதற்குக்காரணமாகப் பொருந்திய பிராரத்தகருமத்தால், பிறந்திடும் - உண்டாகின்ற, துக்கானுபவம் - (சுகத்தோடு) துக்கத்தையனுபவித்தல், உளதாதல் - உண்டாவது, திண்ணம் - நிச்சயமாம், (எ - று). ஏ அசை. பதநம் - என்பது பதமென விகாரப்பட்டு வந்தது. பதநம்-அடைதல். தேகாந்தம் - தேகத்தின்முடிவு. 143

**144.** சாற்றரிய சுபேச்சைவிசா ரணைதநுமா நசிசத் வாபத்தி
யசம்சத்தி பதார்த்தாபா வனையே, மேற்றுரிய காமியேனு மிவற்றினைமூ
தறிஞர் விளங்குசத்த ஞானபூ மிகளேன்ப ரவற்றுட், டோற்றிடுநோன்
மூடனு யிருந்தகா ரணமேன் சுருதிகுரு வாலறிவ லேனநினைதல் சுபேச்
சை, மாற்றரிய சுருதிகுரு வாற்சிறிது தோன்றும் வைராகத் துறுதல்சதா
சாரம்விசா ரணையே.

ஞானபூமி சப்தகம்.

வினா:—ஞான்பூமி சப்தக மேவை?

விடை:—அவை சுபேச்சை, விசாரணை, தனுமாநசி, சத்வாபத்தி, அசம்சத்தி, பதார்த்தாபாவனை, துரியகாமி என்பனவாம்; அவற்றுள்,

சுபேச்சை.

1. ஒருவன் யான் இதுகாறும் ஆத்மாநாத்ம விவேகமில்லாத மூடனு யிருந்தமைக்குக் காரணம் யாது? இனி அதனைச் சுருதி வாக்கியத்தாலும் ஆசிரிய ருபதேசத்தாலும் அறிவேனென்று கருதுவதே சுபேச்சையாம். (சுபேச்சை-நன்மையை விரும்புதல்.)

விசாரணை.

2. அதன்பின் அவனுக்குச் சுருதி வாக்கியத்தாலும் ஆசிரிய ருபதேசத்தாலும் சிறிது தோன்றும் (ஞான) வைராக்கிய பலத்தா லுண்டாகும் சதாசாரப் பிரவிர்த்தியே விசாரணையாம். (ஜீவப்பிரஹ்மங்களின் அபேதத்தை யுணர்த்தும் வேதாந்த வாக்கியங்களின் பொருள்களை யுத்தியினுல் ஆராய்ந்து நோக்குதல் இங்குச் சதாசாரப் பிரவிர்த்தியாம்.) (144)

தநுமாநசி.

3. அப்பா லவனுக்குச் சுபேச்சை விசாரணைகளின் அப்பியாச பலத்தால் விஷயப் பற்று நீங்குவதே தநுமாநசியாம்.

---

(இ - ள்.) சாற்றரிய - (அதிகாரிபுருஷரல்லாதார் இத்தன்மையனவென்று குறிப்பிட்டுக்) கூறுதற்கரிய, சுபேச்சை - சுபேச்சையும், விசாரணை - விசாரணையும், தநுமாநசி - தநுமாநசியும், சத்வாபத்தி - சத்துவாபத்தியும், அசம்சத்தி - அசம்சத்தியும், பதார்த்தாபாவனை - பதார்த்தாபாவனையும், மேல் - (இவற்றிற்கு) மேலாகவுள்ள, துரியகாமி - துரியகாமியும், எனும் - என்று கூறப்படுகின்ற, இவற்றினை - இவ்வேழனையும், மூதறிஞர் - பேரறிவினையுடையார், விளங்கு - (அதிகாரிகளிடத்து) விளங்குகின்ற, சத்தஞானபூமிகளென்பர் - எழுஞானபூமிகளென்று கூறுவர், அவற்றுள் - அந்தஞான பூமிகளேழனுள், தோற்றிடுநோன் - (மக்கள் வருக்கத்துள் ஒருவனுகப்) பிறந்திருக்கின்ற நான், (பிறந்ததுமுதல் இதுகாறும்), மூடனுய்-(ஆத்மாநாத்ம விசாரஞ்செய்யும்) அறிவில்லாதவனுய், (இருக்க), இருந்தகாரணம் என் - இருக்கின்ற காரணம் யாது, (அதனை), சுருதிகுருவால் - சுருதிவாக்கியத்தாலும் ஆசிரியர் உபதேசத்தாலும், அறிவல் - (இனி) அறியமுயலுவேன், எனநினைதல் - என்றெண்ணுவதே, சுபேச்சை - சுபேச்சையாம், (பின்னர்), மாற்றரிய - நீக்குதற்கரிய, சுருதிகுருவால் - சுருதிவாக்கியத்தாலும் ஆசிரியருபதேசத்தாலும், சிறிது தோன்றும் - சிறிதுண்டாய, வைராகத்துறுதல் - (ஞான) வைராக்கிய பலத்தால் பொருந்துவதாய, சதாசாரம் - (சாதுக்களது) சதாசாரப்பிரவிர்த்தியே, விசாரணை - விசாரணையாம், (எ - று). ஏ-அசை. 144



**145.** மருவலுறு சுபேச்சைவிசா ரணைவலியால் விடய வலிய
றுத ருன்றநுமா நசியவற்றின் பயில்வால், விரவுநன வாயவுல கினைக்
கனவேன் றெண்ணி மெய்த்தவான் மாவுண்மை கருதல்சத்வா பத்தி,
பரவலுறு முலகுதோன் ருதுசுழுத் தியன்போற் பகரறிவு மாத்திரையாய்
நிற்றலசம் சத்தி,யோருவிவா சனையனைத்து மிகுதுயில்வோன் போல வுயி
ராநந் தத்தோடுங்கல் பதார்த்தாபா வனையாம்.

---

(ஒருவனிடத்துச் சுபேச்சையும் விசாரணையும் மிகுதியா யிருக்குமாயின், அவற்றுல் அவனது மனம் விஷயப்பற்று நீங்கிச் சூக்குமத்தன்மை யடைவதாம்; அஃதிவ்வா றுதலே சித்தஞ் சிறுக லென்னும் தநுமாநசியாம் ; இவ்வாறுள்ள மனந்தான் சமாதி செய்தற்குரியமனமாம்.)

சத்துவாபத்தி-

4. அப்பா லவன் மனம் சுபேச்சை - விசாரணை - தநுமாநசி யென்னும் அம்மூன்றனது அப்பியாச பலத்தால் ஜாக்கிரப் பிரபஞ்சத்தைச் சொப்பனப் பிரபஞ்சம் போல்வதென் றுள்ளவா றுணர்ந்து, ஆத்மாவின் சன்மாத்திராநுசந்தானஞ் செய்வதே சத்துவாபத்தியாம்.

(ஆத்மாவே சத்தாக விருப்பது என்று சிந்தனஞ் செய்வதே உண்மை நிலை மருவலென்னும் ஆத்மாவின் சன்மாத்திராநுசந்தானமாம். சித்தத்தில் ஆத்ம சொரூப சத்தையினடைவுண்டாதல் சத்துவாபத்தியா மென்றிங் குணர்தல் வேண்டும். சத்துவாபத்தி சத்துவ - ஆபத்தி யெனப் பிரிபடும்.)

அசம்சத்தி.

5. அப்பா லவன் பிரபஞ்சத் தோற்றமின்றிச் சுழுத்தி யவஸ்தை யடைந்தவனைப் போலச் சின்மாத்திர சிவ சொரூபமாக நிலைபெற்றிருத்தலே அசம்சத்தியாம்.

---

(இ - ள்.) (பின்னர்), மருவலுறு—(கர்ம உபாசனைகளின் பெருக்கத்தால்) பொருந்துகின்ற, சுபேச்சை விசாரணைவலியால் - சுபேச்சை விசாரணைகளின் அப்பியாச பலத்தாலே, விடயவலி - விஷயங்களில் இழுப்பதாகிய பற்று (சித்தத்தில் சவிகற்பசமாதிபரியந்தம் தொடர்ந்துவருகின்ற விஷயவாசனை), அறுதல்தான் - குறைதலே, தநுமாநசி - தநுமாநசியாம், (பின்னர்), அவற்றின் பயில்வால் - (சுபேச்சை முதலிய) அம்மூன்றனது அப்பியாச பலத்தால், விரவு ஆய - (தத்துவ விசாரமில்லாதவர்க்குச் சத்தியமாகப்) பொருந்தித் தோன்றுவதாய, நனவு உலகினை—சாக்கிரப் பஞ்சத்தை, கனவென்றெண்ணி - சொப்பனப் பிரபஞ்சமென்று (மனத்தால்) நோக்கிக்கண்டு, மெய்த்த - உள்ளதாய, ஆன்மாவுண்மைகருதல் - ஆத்மாவின் சத்தாமாத்திரத்தைச் சிந்தனை செய்வதே, சத்வாபத்தி - சத்துவாபத்தியாம், (பின்னர்), பரவலுறும் - (நாமரூபவடிவமாக) விரிந்திருக்கின்ற, உலகுதோன்ருது-உலகந் தோன்றுதலின்றி, (அடங்கி), சுழுத்தியன்போல் - சுழுத்தியவஸ்தையுடையவன்போல, பகர்—(மேலோர் சிறப்பித்துக்) கூறுகின்ற, அறிவுமாத்திரையாய் நிற்றல் - சின்மாத்திர ஆத்மாவாக (நிலைத்து) நிற்றலே, அசம்சத்தி-அசம்சத்தியாம், (பின்னர்), வாசனையனைத்தும் ஒருவி - வாசனையனைத்தும் ஒழிந்து (போக), மிகு துயில்வோன்போல - காடநித்திரை செய்பவன்போல, உயிராநந்தத்து - ஆத்மாநந்தத்தில், ஒடுங்கல்-விலயமாவதே, பதார்த்தாபாவனையாம் - பதார்த்தாபாவனையாம், (எ - று). மிகுதுயில், பெருந்தூக்கம், காடநித்திரை என்பன ஒருபொருட் கிளவிகளாம். 145

**146.** உண்டிலையென் ஞதுமகங் கிருதிநிரங் கிருதி யுருதுமறி வுருவாய வத்துவித பதத்திற், கண்டதோரு வறுங்குடம்போ லுட்புறஞ்சூ னியமாங் கதிதுரிய காமியா முபரதியை யடைந்து, கோண்டிலக லுறு திருசி யாநுவே தம்பின் கூறலுறு சத்தாநு வேதநிரு விகற்ப, மேண்டரு சட் சமாதிகளாம் புறமோடக மேன்னு மிருபேத மடைந்தவற்றை முறை யினிவண் மோழிவாம்.

(சுபேச்சை முதலிய நான்கனது பெருக்கத்தால் பிரபஞ்சம் தோன்றுதை லின்றித் தான் அறிவாநந்த வடிவமாகவே நிலைபெற்றிருத்தலே அசம்சத்தி யாம். சம்சத்தி - சம்பந்தம்; அஃதின்மை அசம்சத்தியாம். அசங்கம் அசம் சத்தி யென்பன ஒருபொருட் கிளவிகளாம்.)

பதார்த்தபாவனை.

6\. அப்பா லவன் வாசனை யனைத்தும் நீங்கக் காட சுழுத்தி யடைந்தவ னைப்போல ஆத்மாநந்தத்தின்கண் அடங்கி யிருப்பதே பதார்த்தாபாவனையாம்.

(லோக வாசனை - தேக வாசனை - சாஸ்திர வாசனை யென்னும் அசுத்த வாசனைகளும், மைத்திரி - கருணை - முதிதை - உபேட்சை என்னும் சுத்த வாசனைகளும், சர்வமும் பிரஹ்மமென்னும் சத்வாசனையும், பிறவும் இங்குவாசனை களாம்.

சுபேச்சை முதலிய ஐந்தனது பெருக்கத்தால் வாசனை யனைத்தும் நீங்கக் காடசுழுத்தி யடைந்தவனைப்போல ஆத்மாநந்தத்தின்கண் அடங்கியிருப்பதே பதார்த்த நினைவொழித லென்னும் பதார்த்தாபாவனையாம். பதார்த்தாபாவனை யென்பது பதார்த்த-அபாவனையெனப்பிரிபடும். பதார்த்தம்-பாகியாந்தர(வெளி-

(இ - ள்.) (பின்னர்), உண்டிலையென்ஞதும் - (இப்பொருள்) உண்டு (இப் பொருள்) இல்லையென்னும் வியவகாரஞ் செய்யாதும், அகங்கிருதிநிரகங்கிருதி யுருதும் - அகங்கிருதியும் நிரகங்கிருதியுந் தோன்ருமலும், அறிவுருவாய - சின் மாத்திர சொரூபமாயிருக்கின்ற, அத்துவிதபதத்தில் - அத்வைதபதத்தில் (ஆத் மாவில்), கண்டது-(புறத்திற்) கண்டதாகிய, ஒருவறுங்குடம்போல் - (அகத்தும் புறத்தும் நீரின்றிய) ஒரு வெறுங் கடத்தைப்போல, உட்புறம் சூனியமாம்கதி - அகத்தும் புறத்தும் சூனியமாயிருக்கும் ஸ்திதியே, துரியகாமியாம் - துரியகாமி யாம், உபரதியை யடைந்துகொண்டு - (முற்கூறிய) உபரதியை யனுசரித்துக் கொண்டு, இலகலுற—விளங்குகின்ற, திருசியாநுவேதம் - திருசியாநுவேதமும், பின்-(அதன்) பின்னர், கூறலுற-கூறப்படுகின்ற, சத்தாநுவேதம்-சத்தாநுவேத மும், நிருவிகற்பம் - நிருவிகற்பமும், புறமொடகமென்னும் - புறமும் அகமும் என்று கூறப்படுகின்ற, இருபேதமடைந்து-இரண்டு வகையாகிய பேதமடைந்து (இருத்தல்பற்றி), எண்தரு - (அதிகாரி புருஷர்) கருதுதற்குரிய, சட்சமாதி களாம் - ஆறு சமாதிகளாம், அவற்றை - அச்சமாதிகளை, முறையின்-கிரமமாக, இவண் - இவ்விடத்து, மொழிவாம் - கூறுவாம், (எ - று). நிரகங்கிருதியென் பது நிரங்கிருதியென விகாரப்பட்டுவந்தது. (நிர்-இன்மை, அகம்-நான், கிருதி - செய்தல்.) அகங்கிருதி - (தேகாதிகளில்) நானென்னும் புத்தியுடையனுதல்; நிரகங்கிருதி-(தேகாதிகளில்) நானென்னும் புத்தியிலனுதல்; இவ்விரண்டனுள், முன்னது சகலத்திலும் (சாக்கிர - சொப்பனங்களிலும்), பின்னது கேவலத்தி லும் (சுழுத்தியிலும்) நிகழ்வனவாம். அகத்துச் சூனியமாயிருத்தல் - மனோ வியாபாரமில்லாதிருத்தல்; புறத்துச் சூனியமாயிருத்தல் - இந்திரிய வியாபார மில்லாதிருத்தல். 146



**147.** கடாதிவிட யத்தினிலோன் றனைக்குறித்து நாம கற்பனையோ டுருவமேனு மாயையதன் றிறத்தைத், தடாதுவிடுத் தத்திபா திப்பிரிய மேன்னுஞ் சச்சிதா நந்தமாம் பிரமத்தின் றிறத்தை, விடாதநுசந் தானஞ் செய் திடுதலே புறத்து மெய்ந்திருசி யாநுவே தப்பெயர்கோள் கின்ற, கேடாததோரு சவிகற்ப சமாதியேன லாகுங் கிளந்தபுறச் சத்தாநு வேதமது கிளப்பில்.

உள்) பதார்த்தங்களாம்; அபாவனை - அவற்றின் வாசனை வடிவ சங்கற்ப மில்லா மையாம். காடசுழுத்தி - அழுந்திய உறக்கமாம்.) (145)

துரியகாமி.

7\. அப்பா லவன் ஒன்றுண்டென்றும் பிறிதொன் றின்றென்றும் வியவகாரஞ்செய்யாதும், அகங்கிருதியும் நிரகங்கிருதியும் தோன்ருதும்,சின்மாத் திரமாயுள்ள அத்வைத நிலையில் வெறுங் கடம்போல அகத்தும் புறத்தும் சூனியமா யிருப்பதே துரியகாமியாம்.

(அகங்கிருதி - தேகமே யானென்னும் வியவகாரம்; நிரகங்கிருதி - தேகம் யானன்றென்னும் வியவகாரம். அத்வைதநிலை - இரண்டாவ தென்பதில்லாத நிலை; அதுவே தன்னிலையாம். அந்நிலை வெறுங்கடம் அகத்தும் புறத்தும் யாதொன்று மில்லா திருத்தல்போல, அறிவுமாத்திரமாயுள்ள தான் அகத்தும் புறத்தும் யாதொன்று மில்லாதிருக்கும் நிலையாம். சுபேச்சை முதலிய ஆறனது பெருக்கத்தால் பேதவியவகாரம் சிறிதுமின்றித் தான் மாத்திரமாக விளங்குவதே துரிய காமியாம். இது துரியமென்றும் சொல்லப்படும்.

இந்த ஞானபூமி ஏழனுள் முதல் மூன்று பூமிகள் தத்துவ ஞானத்திற்குச் சாதனமும், நான்காவது பூமி தத்துவஞான வடிவமாயிருத்தலின், ஜீவன் முத்தி விதேக முத்திகளுக்குச் சாதனமும், ஐந்தாவது ஆருவது ஏழாவது பூமிகள் ஜீவன் முத்தியின் விலக்ஷணாநந்தத்திற்குச் சாதனமுமாம்.

(இ - ள்.) கடாதிவிடயத்தினில் - கடமுதலிய விஷயசமூகத்துள், ஒன் றனைக்குறித்து - (யாதாவது) ஒரு விஷயத்தைக் குறித்து (எடுத்துக்கொண்டு), (அதனது), நாமகற்பனையோடு - (நாநாவிதமான) கற்பனு நாமத்தோடு, உருவ மெனும் - ரூபமும் என்று கூறப்படுகின்ற, மாயையதன் திறத்தை - மாயையின் அம்சங்களிரண்டையும், (நாம ரூப மாயாம்ச மிரண்டையும்), தடாதுவிடுத்து - தடையில்லாது (மித்தையென்றுணர்ந்து) நீக்கி, (அதிலுள்ள), அத்திபாதிப் பிரியமென்னும் - அஸ்தி பாதி பிரியமென்று கூறப்படுகின்ற, சச்சிதாநந்தமாம் பிரமத்தின் திறத்தை - சச்சிதாநந்தமாகிய பிரஹ்மத்தின் அம்சங்கள் மூன்றை யும், விடாது - (இடை)விடாமல், (நெடுங்காலம் விசுவாசத்தோடு), அநுசந்தா னம் செய்திடுதலே - (நானென்று பாவித்து) அப்பியாசஞ்செய்தலே, மெய் - மெய்யுணர்வைத்தருதற்குரிய, புறத்துத்திருசியாநுவேதப்பெயர் கொள்கின்ற - பாகிய திருசியாநுவேத மென்னும் பெயரைக்கொண்டுள்ள, கெடாதது - (திருசியநாட்டமுள்ளவளவும்) கெடாதிருப்பதாகிய, ஒரு - ஒப்பற்ற, சவிகற்ப சமாதியெனலாகும் - சவிகற்ப சமாதியென்று கூறுதற்குரியதாம், கிளந்த (முற்) கூறிய, புறச்சத்தாநுவேதமது - பாகிய சத்தாநுவேத சமாதியி னியல்பினை, கிளப்பில் - கூறுமிடத்து, (எ - று). குறித்தல் - சுட்டல், வேதம் - வித்தமென் றும் கூறப்படும். 147

**148.** சச்சிதா நந்தவுரு வாகுவதே பிரமந் தானெனவே
தியானித்த லதுவாகு மென்க, விச்சமா திகள்பயின்ற வலியினூற் றோன்
று மிரும்பிரமா நந்தநிலை தனின்மனஞ்சென் றொடுங்கி, நிச்சலமா யலை
யில்கடல் போலிருத்தல் புறத்து நிருவிகற்ப சமாதியா மனோகதகா
மாதிக், கச்சமறு கரிதானென் றெண்ணுதலுட் டிருசி யாநுவே தப்பெயர்
கோள் சவிகற்ப சமாதி.

---

ஈண்டு முதலாவது சாதன சதுஷ்டய பூமியும், இரண்டாவது சிரவண மனன பூமியும், மூன்றாவது நிதித்தியாசன பூமியும், நான்காவது பிரஹ்மவித்துப் பூமியும்,ஐந்தாவது பிரஹ்மவித்வரன் பூமியும்,ஆறாவது பிரஹ்மவித்வரியான் பூமியும், எழாவது பிரஹ்மவித்வரிஷ்டன் பூமியுமாம்.)

சட்சமாதி.

வினா:—முற்கூறிய உபாதியை அநுசரித்துக்கொண்டு விளங்குகின்ற சமாதிகளேவை?

விடை:—அவை பாகிய திருசியாநுவித்த சவிகற்ப சமாதி, பாகிய சத்தாநுவித்த சவிகற்ப சமாதி, பாகிய நிர்விகற்ப சமாதி, ஆப்பியந்தர திருசியாநுவித்த சவிகற்ப சமாதி, ஆப்பியந்தர சத்தாநுவித்த சவிகற்ப சமாதி, ஆப்பியந்தர நிர்விகற்ப சமாதியென அறுவகையாம்; அவற்றுள்,

(பாகியம் - புறமென்னும் வெளியாம்; ஆப்பியந்தரம் - அகமென்னும் உள்ளாம்.) (146)

பாகிய திருசியாநுவித்த சவிகற்ப சமாதி.

1. கடம் - பட முதலிய விஷயக் கூட்டத்துள் யாதாவதொன்றனைக் குறித்துக்கொண்டு, அதனது நாம ரூபமான மாயாம்சங்க ளிரண்டையும் மிச்சமில்லாது நீக்கி, அதன்கணுள்ள அஸ்தி - பாதி - பிரியமென்னும் சச்சிதாநந்த பாகிய பிரஹ்மாம்சத் திரயங்களை விடாது அநுசந்தானஞ் செய்வதே பாகிய திருசியாநுவித்த சவிகற்ப சமாதியாம்.

---

(இ - ள்.) சச்சிதாநந்த வுருவாகுவதே - (அகண்ட) சச்சிதாநந்த (அத்விதீய) சொரூபமாயிருப்பதே, பிரமம் - பிரஹ்மமாம், தானெனவே - (அதுவே) யானென்று, தியானித்தல்-பாவனைசெய்வதே, அதுவாகும் - (மேற்கூறிய) அந்தப் பாகியசத்தாநுவேத சவிகற்ப சமாதியாம், என்க—என்று (அதனியல்பினை நீ) அறிவாயாக, இச்சமாதிகள் பயின்ற வலியினால் - இந்த இருவகைச் சமாதிகளையும் அப்பியாசஞ்செய்த பலத்தால், தோன்றும் - தோன்றிய, இருமை - பெருமை பொருந்திய, பிரமாநந்தநிலை தனில் - பிரஹ்மாநந்த அனுபவத்தில், மனம் சென்றொடுங்கி - மனமானது (பையப்பையச்) சென்றடங்கி, (மக்கினமாய்), அலையில் கடல்போல் - நிஸ்தரங்க சமுத்திரம்போல, நிச்சலமாயிருத்தல் - நிச்சல வடிவமாயிருத்தலே, புறத்து நிருவிகற்பசமாதியாம் - பாகியநிர்விகற்ப சமாதியாம், மனோகதகாமாதிக்கு - மனத்தின்கணுள்ள காமக்குரோத முதலிய சங்கற்பவடிவத் திருசியங்களுக்கு, அச்சமறு - (அவித்தை முதலியவற்றாலுண்டாகின்ற) பயமற்றுள்ள, கரிதான் - சாட்சியாயிருப்பன் யான்தான், (சங்கற்ப சாட்சி யான்), என்றெண்ணுதல் - என்று பாவனை செய்வதே, உள்திருசியாநு வேதப்பெயர்கொள் - ஆப்பியந்தர திருசியாநுவேதசமாதி யென்னும் பெயரைக்கொண்டுள்ள, சவிகற்பசமாதி - சவிகற்ப சமாதியாம், (எ - று). நிச்சலம் - அசைவின்மை. 148



---

(கடம் பட முதலிய விஷயக் கூட்டத்துள் ஒவ்வொன்றும் இருத்தல்,விளங்கல், பிரியம், நாமம், ரூபமென்னும் ஐந்தம்ச முடையதாம்; அவற்றுள், முன்னுள்ள மூன்றும் பிரஹ்மாம்சங்களாம்; பின்னுள்ள விரண்டும் மாயாம்சங்களாம்; இவ்வைந்தனுள்,மாயாம்சங்களை நீக்கி, பிரஹ்மாம்சங்களை யானென்று தியானஞ் செய்வதே பாகிய திருசியாநுவித்த சவிகற்ப சமாதியாம்.

பாகியம் - வெளி, திருசியம் - காணப்படும் பொருள்; அநுவித்தம் - கூடியது. திருசியாநுவித்தமென்பது திருசிய-அநுவித்தமெனப் பிரிபடும்.) (147)

பாகிய சத்தாநுவித்த சவிகற்ப சமாதி,

2. அகண்ட சச்சிதாநந்த அத்வீதீய சொரூபமா யிருப்பதே பிரஹ்மமென்றுணர்ந்து அதனைத் தியானஞ் செய்வதே பாகிய சத்தாநுவித்த சவிகற்ப சமாதியாம்.

(நாம ரூப கற்பனைக்கு அதிஷ்டானமாயுள்ள பிரஹ்மம் அகண்ட சச்சிதாநந்த அத்வீதீய சொரூபமா யிருப்பதென் றுணர்ந்து அதனை யானென்று தியானஞ் செய்வதே பாகிய சத்தாநுவித்த சவிகற்ப சமாதியாம். சத்தாநுவித்தமென்பது சத்த - அநுவித்தமெனப் பிரிபடும் ; சத்தம் - அகம்பிரஹ்மாஸ்மி யென்னும் மகாவாக்கியம்.)

பாகிய நிர்விகற்ப சமாதி.

3. பாகிய திருசியாநுவித்த சவிகற்பசமாதி, பாகிய சத்தாநுவித்த சவிகற்ப சமாதி யென்னும் இவ்விருவகைச் சமாதிகளின் அப்பியாச பலத்தால் தோன்றும் பிரஹ்மாநந்தானுபவத்தில் மனஞ் சென்று ஒடுங்கி நிச்சலமாய், நிஸ்தாங்க (அலையின்றிய) சமுத்திரம் போல இருப்பதே பாகிய நிர்விகர்ப சமாதியாம். (நிர்விகற்பம் - வேறுபாடின்மை.)

ஆப்பியர்தா திருசியாநுவித்த சவிகர்ப சமாதி.

4. மனத்தின்கணுள்ள காமக்குரோத முதலிய திருசியங்களுக்கு நான் சாட்சியாக விருக்கின்றே னென்று தன்னை (ஆத்மாவை)த் தியானஞ் செய்வதே ஆப்பியந்தர திருசியாநுவித்த சவிகற்ப சமாதியாம்.

(முக்குண வடிவமாயுள்ள அந்தக்கரணத்திற்கும், அதனது பரிணமமாயுள்ள சாந்த - கோர - மூடவிருத்திகளுக்கும் நான் அநுகூதமாயிருக்கின்றேன்; அதனால், அத்திருசியங்களுக்குச் சாட்சியாயிருக்கின்றேனென்று தன்னைத் தியானஞ்செய்வதே ஆப்பியந்தர் திருசியாநுவித்த சவிகற்ப சமாதியாம். அநுகூதமாயிருத்தல் - தொடர்ச்சியா யிருத்தல்.) (148)

ஆப்பியந்தா சத்தாநுவித்த சவிகற்ப சமாதி.

5. அசங்க சச்சிதாநந்த சுவயம்பிரகாச அத்வைத சொரூபமே நானென்று தன்னைத் தியானஞ் செய்வதே ஆப்பியந்தா சத்தாநுவித்த சவிகற்ப சமாதியாம்.

(நான் அசங்கன், நான் சச்சிதாநந்தவடிவன், நான் சுவயம் பிரகாச அத்வைத சொரூபனென்று தன்னைத் தியானஞ்செய்வதே ஆப்பியந்தா சத்தாநுவித்த சவிகற்ப சமாதியாம்.)

**149.** சங்கமறு சச்சிதா நந்தவொளி யுருவந் தானெனச்சிந் தித்திடலுட் சத்தாநு வேதம், பொங்குறுதன் னநுபூதி ரசந்தோன்று மதனாற் புகன்றதிரு சியஞ்சத்த மெனுமிரண்டு மகன்றே, யிங்கசைவி றீபமெனப் பந்தமற விருத்த லிலங்குறுமுண் ணிருவிகற்ப சமாதியிவ்வா றானுந், தங்கலுற வொழுகுமியோ கிக்குமன மெங்குச் சரிக்குமாண் டாண்டெலாஞ் சமாதியென லாகும்.

---

ஆப்பியந்தர நிர்விகற்ப சமாதி.

6. ஆப்பியந்தர திருசியாநுவித்த சவிகற்ப சமாதி, ஆப்பியந்தர சத்தாநுவித்த சவிகற்ப சமாதிகளின் அப்பியாச பலத்தால் சுவாநுபவரசம் (ஆத்மாநந்த அனுபவம்) உண்டாவதாம்; அதனால், ஆப்பியந்தர திருசியாநுவித்த சவிகற்ப சமாதி- ஆப்பியந்தர சத்தாநுவித்த சவிகற்பசமாதியென்னுமிரண்டு சமாதிகளையும் விட்டு,நிவாத (அசை வில்லாத) தீபம் போல நிர்ச்சிந்தையாக விருப்பதே ஆப்பியந்தர நிர்விகற்ப சமாதியாம்.

(ஆப்பியந்தர திருசியாநுவித்த சவிகற்ப சமாதி, ஆப்பியந்தர சத்தாநுவித்த சவிகற்பசமாதி யென்பவற்றின் அப்பியாச முதிர்ச்சியினால் பையப்பைய ஆத்ம சொரூபாநந்தம் வெளியாய்ப் பூரணமாக விளங்குவதாம்; அதனால், அவ்விரண்டு சமாதிகளையும் விட்டு நிவாத தீபம்போல நிர்ச்சிந்தையா யிருப்பதே ஆப்பியந்தர நிர்விகற்ப சமாதியாம். நிர்ச்சிந்தையாயிருத்தல் - மனோவிருத்தி சிறிதுமின்றி யிருத்தல்.)

வினா:—இவ் வறுவகைச் சமாதிகளாலும் மனம் பிரத்யக் ஆத்மாவின்கண் நிலைபெற்றிருக்க ஒழுகுகின்ற சிவயோகியின் மனம் அவன் சமாதிசெய்யாத காலத்தில் எவ்வாறிருக்கும்?

விடை:—அக்காலத்தில் அவன் மனம் எங்கெங்கே சஞ்சரிக்கின்றதோ அங்கங்கெல்லாம் அது சமாதி யுடையதேயாம்.

---

(இ - ள்.) சங்கமறு - கூட்டமற்ற (அசங்க), சச்சிதாநந்தவொளியுருவம் - சச்சிதாநந்த சுவயம்பிரகாச (அத்வைத)சொரூபமே (பிரஹ்மமே), தானெனச்சிந்தித்திடல் - நானென்ற பாவனை செய்வதே, உட்சத்தாநுவேதம் - ஆப்பியந்தர சத்தாநுவேத சவிகற்ப சமாதியாம், பொங்குறு - (பூரணமாக) விளங்குகின்ற, தன்னுநுபூதிரசம் - சுவாநுபவ (ஆத்மாநுபவ) சுகாவேசம், தோன்றுமதனால் - உண்டாவதனால், புகன்ற - (முற்)கூறிய, திருசியம் சத்தமெனுமிரண்டுமகன்று - திருசியாநுவேதம் சத்தாநுவேதமென்னும் சவிகற்பசமாதி இரண்டும் நீங்கிப் (போக), இங்கு - இவ்வுலகத்தில், அசைவில் தீபமென - (காற்றால்) அசைதலில்லாத தீபம்போல (நிவாததீபம்போல), பந்தமறவிருத்தல் - (உலகசிந்தனை யென்னும்) பந்தமொழிய (நிர்ச்சிந்தையாக) இருத்தலே, இலங்குறும் - (தடையற்று) விளங்குகின்ற, உள்நிருவிகற்பசமாதி - ஆப்பியந்தர நிர்விகற்ப சமாதியாம், இவ்வாறானும் - (அப்பியாசத்தின் பெருக்கத்தால் தனக்கு வசமாகவந்த) இவ்வறுவகைச் சமாதிகளாலும், தங்கலுற - (சித்தம் தனது நிஜவடிவத்தில் செவ்வையாகப்) பொருந்தியிருக்க, ஒழுகும் யோகிக்கு - ஒழுகுகின்ற ஞானயோகிக்கு, (பேததரிசன மின்மையின்), மனம் - (அவனது) மனம், எங்குச்சரிக்கும் - (எங்கு) எங்குச் செல்லுகின்றதோ, ஆண்டாண்டெலாம் - அங்கங்கெல்லாம், சமாதியெனலாகும் - (அவனுக்கு ஆநந்த வடிவமாகவே விளங்கும்) சமாதியே யாமென்று கூறலாம், (எ - று). சுகாவேசம் - சுகப்பிரவேசம்; அஃதாவது ஆநந்தப்பெருக்கம். 149



**150.** தக்கமா ஞானபல நான்குதுக்கா பாவஞ் சர்வகா மாப்தியொடு கிருதகிருத் தியமே, தொக்கபிராப் தப்பிராப் பியங்களென வவற்றுட் சொல்லியதுக் காபாவ மிகபரத்தா லிரண்டாம், பொய்க்குமோர் தூலவுடம் பொழிவெழிறீ நாற்றம் புகுபிணிகண் முதலனவுஞ் சூக்குமதே கத்து, மிக்ககா மாதியுங்கா ரணத்தினிலவ் வாதி வியாதிகட்கு வித்தாம்வா சனையுமிகத் திடும்பை.

---

(சிவயோகியின் மனம் சர்வம் சிவமயமென்னும் பாவனை யுடையதாயிருத்தலின், அவன் சமாதி செய்யாத காலத்திலும் அது பலவாறாக விகற்பமடைவதில்லையாம்; விகற்ப மடையினும், அதுவும் சர்வம் சிவமய மென்னும் பாவனையுடைய அதற்குச் சமாதியேயாமென்பதிங் குணர்தற்பாலதாம்.) (149)

ஞானபல சதுஷ்டயம்.

வினா:—ஞானபல சதுஷ்டயம் எவை?

விடை.—அவை துக்காபாவம், சர்வகாமாப்தி, கிருத கிருத்தியத்துவம், பிராப்தப் பிராப்பியத்துவ மென்பனவாம்; அவற்றுள்,

துக்காபாவம்.

1. துக்காபாவம் (துக்கமின்மை) இகலோக பரலோக மென்னும் பேதத்தால் இருவகைத்தாம்; (துக்காபாவம் இகலோக துக்காபாவம், பரலோக துக்காபாவமென் றிருவகைத்தாம்); அவ்விரண்டனுள்,

(துக்காபாவம் - துக்க அபாவமெனப் பிரிபடும்.)

(1) இகலோக துக்காபாவம்.

(1) ஸ்தூல சரீரத்திலுள்ள அழகின்மை, துர்க்கந்தம், (கபம் - குன்மம் - க்ஷயம் - சூலை முதலிய) வியாதி முதலியனவும், (2) சூட்சும சரீரத்திலுள்ள காமக்குரோத முதலியனவும், (3) காரண சரீரத்திலுள்ள அவ்வாதி வியாதிகளுக்குப் பீஜமாய (வாசனை யென்னும்) சம்ஸ்காரமும் இகலோக துக்கமாம்.

---

(இ - ள்.) தக்க - (அதிகாரி புருஷனுக்குத்) தகுதியானதாய, மாஞானபலம் - பரிபூரண ஞானத்தினது பயன், துக்காபாவம் - துக்காபாவமும், சர்வகாமாப்தியொடு - சர்வகாமாப்தியும், கிருதகிருத்தியம் - கிருத கிருத்தியத்துவமும், தொக்க - (அவற்றின் பின்னே) பொருந்திய, பிராப்தப் பிராப்பியங்களென - பிராப்தப் பிராப்பியத்துவமுமென்று, நான்கு - நான்காம், அவற்றுள் - அந்நான்கனுள், சொல்லிய (முன்னர்க்)கூறிய, துக்காபாவம் - துக்காபாவமானது, இகபரத்தாலிரண்டாம் - இகலோக பரலோக பேதத்தால் இருவகைத்தாம், (அவ்விருவகையுள்), பொய்க்கும் - பொய்யாதற்குரிய, ஓர்தூலவுடம்பு - (இழிவால் தனக்குப் பிறிதொன்று) ஒப்பற்ற ஸ்தூலசரீரத்தில், (உள்ள), எழிலொழிவு - அழகின்மை (குரூபத்துவம்), தீ நாற்றம் - துர்க்கந்தம், புகுபிணிகள் - (மாறாது) வருகின்ற வியாதிகள், முதலனவும் - முதலாயினவும், சூக்குமதேகத்து - சூக்குமசரீரத்தில், மிக்ககாமாதியும் - மிகுதியாகவுள்ள காமக்குரோத முதலியனவும், காரணத்தினில் - காரணசரீரத்தில், அவ்வாதி வியாதிகட்கு - அந்த ஆதிவியாதிகளுக்கு, வித்தாம் - பீஜபூதமாயுள்ள, வாசனையும் - சம்ஸ்காரமும், (ஆகிய மூவகைத் தாபங்களும்), இகத்திடும்பை-இகலோக துக்கமாம், (எ - று). ஆதி-காமக்குரோதாதிகள்; பீஜபூதம் - காரணம். தூலவுடம்பு எழில் ஒழிவு என்றந்வயஞ் செய்துகொள்க. தாபம் - துக்கம். ஏ - அசை. 150

**151.** மித்தையெனு மாயாகாரியவுடம்பா திகளின் வேறாய துரிய ஞா னத்தின்மே லாக, வைத்தவொரு போகபோத் துருக்களிலா மையி னால் வரஞானிக் கவ்விடும்பை மூன்றுமிலா திருத்தல், பொய்த்தவிக லோகதுக்கா பாவமென லாகும் புண்ணியம்வந் தென்றுபோம் பாவ மென நின்ற, சித்தமுறு சிந்தனையே பரலோக துக்கந் தெரியினெனப் புகன் றிடுவர் திருக்கறுநல் லறிஞர்.

---

(மானச தாபம் ஆதியென்றும், சரீர தாபம் வியாதி யென்றும் சொல்லப் படும். ஸ்தூல சரீரத்திலுள்ள அழகின்மை முதலியனவும், சூட்சும சரீரத்தி லுள்ள காமக்குரோத முதலியனவும், காரண சரீரத்திலுள்ள சரீர தாபமும் மானச தாபமு முண்டாவதற்குக் காரணமாய சம்ஸ்காரமும் துக்க சாதனமா யிருப்பனவாம்; அங்ஙன மிருப்பதுபற்றி அவையும் உபசார வழக்கால் துக்க மென்று கூறப்படுகின்றன வென்பதிங் குணர்தற் பாலதாம்.) (150)

ஞானிக்கு மித்தியா சொரூபமாயுள்ள மாயையின் காரியமாகிய ஸ்தூல சரீர முதலியவற்றினும் வேறாயுள்ள அத்துவிதீயப் பிரத்தியக் ஆத்ம ஞானத் தை யடைந்ததன் பின்னர்ப் பரமார்த்தமாக விருக்கின்ற (போக்கியமும்), போக மும், போத்துருவும் தோன்றாமையால், (ஸ்தூல சரீர துக்கம், சூட்சும சரீர துக்கம், காரண சரீர துக்க மென்னும்) அவ் விகலோக துக்க மூன்றும் தோன்றா திருத்தலே இகலோக துக்கா பாவமாம்.

(போக்கியம் - அனுபவித்தற்குரிய விஷயம், போகம் - சுக துக்க அனு பவம், போத்துரு - போகத்தை அனுபவிப்பவன்.)

(2.) பரலோக துக்காபாவம்.

புண்ணியம் எப்போது உண்டாகுமோ? பாவம் எப்போது ஒழியுமோ? என்று கருதுகின்ற சிந்தனையே பரலோக துக்கமாம்.

(நமக்குச் சுவர்க்கமடைதற் கேதுவாயுள்ள புண்ணியமெப்போது உண்டாகு மோ, நரகமடைதற் கேதுவா யுள்ள பாவமெப்போது ஒழியுமோ என்று கருது கின்ற சிந்தனையும் துக்க சாதனமாம்; அங்ஙன மிருப்பதுபற்றி அதுவும் உபசார வழக்கால் துக்கமென்று கூறப்படுகின்ற தென்பதாம்.) (151)

---

(இ - ள்.) மித்தையெனும் - மித்தியா சொரூபமென்று கூறப்படுகின்ற, மாயாகாரியம் - மாயையின் காரியமான, உடம்பாதிகளின்வேறாய - ஸ்தூல சரீர முதலியவற்றினும் விலட்சணமாயுள்ள, துரியஞானத்தின்மேல் - (அத் விதீய) பிரத்தியக் ஆத்மஞானத்தின் பின்னர், ஆக - (பாரமார்த்திகசத்து) ஆக, வைத்த - (அனுபவிக்கும்படி) வைத்துள்ள, ஒரு - ஒப்பற்ற, போகபோத்துருக் கள் - (போக்கியங்களோடு) போகங்களும் போத்துருக்களும், வரஞானிக்கு - சிரேஷ்டமான ஞானிக்கு, இலாமையினால்-இல்லாமையால், அவ்விடும்பை மூன் றும் - (வியாதி - ஆதி - வாசனை என்னும்) அம்மூன்று துக்கமும், இலா திருத்தல் - (அவன்) இல்லாமலிருப்பதே, பொய்த்த - மித்தையாயுள்ள, இக லோக துக்காபாவமெனலாகும் - இகலோக துக்காபாவமென்று கூறுதற்குரிய தாம், புண்ணியம் (என்று) வந்து (உறும்) - புண்ணியம் எப்போது வந்து பொருந்துமோ, பாவம் என்று போம் - பாவம் எப்போது போமோ, எனநின்ற - என்று நிலைபெற் றிருக்கின்ற, சித்தமுறு சிந்தனையே - மனத்தின்கண் பொருந் திய சிந்தனையே, திருக்கறு - விபரீதபுத்தியொழிந்துள்ள, நல்லறிஞர் - பேரறி வுடையார், தெரியின் - ஆராயுமிடத்து, பரலோகதுக்கமென - பரலோகதுக்கமா மென்று, புகன்றிடுவர் - (அதனைக்) கூறுவர், (எ - று). 151



**152.** ஞானநிலை யடைதலுந்தா மரையிலைநீர் போல ஞானியிரு வினையுமுறா மையினாலிந் தனத்திற், றீநணுகு மழலில்விற கிராதது போற் கருமச் செயலிலவ னுமவனி லஃதிரா மையினான், மானழலுண் வனத்தையுறா ததுபோல ஞான மயனைவினை யாவுமுறா மையினாலச் சிந்தை, தானவனி லெழாதிருத்த றனையுரைப்பர் மேலோர் தக்கபர லோகதுக்கா பாவமென வன்றே.

---

அத்துவிதீயப் பிரத்தியக் ஆத்ம ஞான நிலையை யடைந்ததன் பின்னர் ஞானி கமல பத்திரோதகம் (தாமரை யிலையி னீர்)போல (அறம்பாவ மென்னும்) இரு வினையையும் அடைவதில்லையாம்; அஃதெங்ஙன மெனின், காஷ்டத்தில்(கட்டை யில்) அக்கினி யிருப்பதாம்; அதனிடத்துக் காஷ்ட மிருப்பதில்லையாம். அது போல, (நல்வினை - தீவினை யென்னும்) கருமத்துவய வியவகாரத்தில் ஞானி யிருப் பன்; அவனிடத்துக் கருமத்துவய வியவகார மிருப்பதில்லையாம்; அதனால், மான் முதலிய மிருகம் தீயால் பற்றப்பட்டெரிகின்ற காட்டை யடையாமைபோல, சகல கருமங்களும் ஞானக்கினி சொரூபமா யிருப்பவனை யடைவதில்லையாம்; அதனால், (புண்ணிய மெப்போது உண்டாகுமோ? பாவ மெப்போது ஒழியுமோ? என்று கருதுகின்ற) அச் சிந்தனை அவனிடத்துத் தோன்றா திருத்தலே பரலோக துக்காபாவமாம்.

(தாமரையிலையில்நீர்பற்றாமைபோலும், நெருப்பில்காஷ்டமிராமைபோலும், கொழுந்துவிட்டெரியும்காட்டில் மிருகங்கள் அடையாமைபோலும் ஞானியினிடத் துக் கருமங்கள் சம்பந்த முறுவ தில்லையாம்; அதனால், அவன் கருமசிந்தனை யின்றி யிருக்கின்றான்; அங்ஙன மிருத்தலே அவனுக்குப் பரலோக துக்க மில் லாமையா மென்பதிங் குணர்தற் பாலதாம்.) (152)

---

(இ - ள்.) ஞானநிலை - (சந்தேக விபரீதமின்றிச் சீவப்பிரஹ்ம ஐக்கிய) ஞான ஸ்திதியை, அடைதலும் - அடைந்த வளவிலே, தாமரையிலை நீர்போல - தாமரை யிலையி னிடத்துத் தண்ணீர் பற்றாமைபோல, ஞானி - ஞானி புருஷ னிடத்து, இருவினையு முறாமையினால் - (அறம்பாவமென்னும்) வினையிரண்டும் பற்றாமையாலும், இந்தனத்தில் தீநணுகும் - விறகில் தீ யிருப்பதாம், அழலில் விறகிராது - அத்தீயில் விறகிருப்பதில்லையாம், அதுபோல் - அதுபோல, கருமச்செயலிலவனும் - (அவ்விரு) கரும வியவகாரத்தில் அந்த ஞானி யிருப் பன், அவனிலஃதிராமையினால் - அவனிடத்து (அக்)கரும வியவகார மில்லா மையாலும், மான் - மிருகம், அழலுண்வனத்தை - தீப்பற்றியுள்ள காட்டை, உறாது - சோராது, அதுபோல - அதுபோல, ஞானமயனை - ஞானக்கினி சொரூபனை, வினையாவும் - கருமமனைத்தும், உறாமையினால் - சோராமையாலும், அச்சிந்தைதான் - (புண்ணியம் எப்போதுவருமோ பாவம் எப்போதுபோமோ என்னும்) அச்சிந்தனையானது, அவனில் எழாதிருத்தல்தனை - அவனிடத்து (தலையெடுத்துத்) தோன்றாதிருப்பதை, மேலோர் - மேன்மக்கள், தக்க - தகுதி யமைந்த, பரலோக துக்காபாவமென - பரலோக துக்காபாவமென்று, உரைப் பர் - கூறுவர், (எ - று). மான் என்றமையின், இனம்பற்றிப் பறவை முதலிய வற்றையுங் கொள்க. அன்று - ஏ - அசை. 152

**153.** எல்லாவாழ் வினையுமுறுஞ் சார்வபௌ மாதி யிரணியகர்ப்
பாந்தமாய் மேன்மேல்வேண் டுற்ற, நல்லாநந் தங்களெலாம் பற்றிலா
வறிஞ னணுகுதலான் ஞானங்கொண் டறிசிவத்தின் கூறுய்த்,தொல்லாநந்
தங்களெலா நிற்கையினு லவற்குத் துவமிலகண் டாநந்த சித்திதோன்
றுதலே, பொல்லாத வினைப்பகையைக் கடந்தபெருந் தவர்கள் புகன்
றிடுவோர் சர்வகா மாப்தியென வன்றே.

---

*சர்வகாமாப்தி.*

*2. சர்வைசுவரிய சம்பன்னனுன சார்வபௌமன் முதல் இரணியகருப்ப னீருக வுள்ளவர் உத்தரோத்தரமாக (முறையே ஒன்றற் கொன்று நூறு மடங்கு அதிகமாக) அடைந்துள்ள சிறந்த ஆநந்த மனைத்தையும் யானெனத தென்னுஞ் செருக்குச் சிறிது மில்லாதுள்ள ஞானி யடைந்திருத்தலினுலும், தத்துவ ஞானத் தால் அறிதற்குரியதாயுள்ள சிவத்தின் அம்சங்களாய் அவ்வாநந்த மனைத்து மிருத் தலினுலும், அவனுக்கு வேற்றுமை யில்லாத அகண்டாநந்த சித்தி யுண்டாவதே சர்வகாமாப்தியாம்.*

*சார்வபௌமன் முதல் இரணியகருப்ப னீருக உள்ளவர் பதினொருவ ராவர். அவர் (1) சார்வபௌமன் (சர்வ பூமியையு மாளும் சக்ரவர்த்தி), (2) மநுட கந்தருவன், (3) தேவ கந்தருவன், (4) பிதிரர், (5) ஆஜாந தேவர், (6) கருமதேவர், (7) முக்கியதேவர், (8) இந்திரன், (9) பிருகஸ்பதி, (10) பிரஜாபதி, (11) இரணியகருப்ப னென்பவராவர்; இவரது ஆநந்தம் முறையே*

---

(இ - ள்.) எல்லாவாழ்வினையும் - (அழகு - இளமை முதலிய) ஐசுவரிய மனைத்தையும், உறும் - அடைந்திருக்கின்ற, சார்வபௌமாதி - சார்வபௌமன் முதல், இரணியகர்ப்பாந்தமாய் - இரணியகருப்பனீருக, (உள்ளவர்), மேல்மேல் - உத்தரோத்தரமாக, (முறையே ஒன்றற்கொன்று ஒருநூறுமடங்கதிகமாக), வேண்டுற்ற - விரும்பிப்பெற்றிருக்கின்ற, நல்லாநந்தங்களெலாம் - சிறந்த ஆநந்தமனைத்தையும், பற்றிலாவறிஞன் - (யானெனதென்னும் அபிமானவடிவச்) செருக்கில்லாத விவேகிபுருஷன், நணுகுதலால் - அடைந்திருப்பதாலும், ஞானங்கொண்டு - (அகம்பிரஹ்மாஸ்மி யென்னும் தத்துவ) ஞானத்தால், அறி - அறிதற்குரிய, சிவத்தின்கூறுய் - பிரஹ்மத்தின் அமிசங்களாய், தொல்லாநந்தங்களெலாம் - (கூறிய) பழைமையான ஆநந்தமனைத்தும், நிற்கையினுல் - இருப்பதாலும், அவற்கு - அந்த விவேகிபுருஷனுக்கு, துவமில் - இரண்டாவதென்பதில்லாத, அகண்டாநந்தசித்தி - அகண்டாநந்த வடிவமாகவிளங்கும் ஐசுவரியம், தோன்றுதலே - உண்டாதலையே, பொல்லாத - கொடியதாய, வினைப்பகையை - கர்மசத்துருவை, கடந்த - வென்ற, பெருந்தவர்கள் - மாதவர்கள், சர்வகாமாப்தியென - சர்வகாமாப்தி யென்று, புகன்றிடுவோர் - கூறுவர், (எ - று). அன்று - ஏ - அசை. 153



*நூறு நூறு மடங்கு அதிகமாக இருப்பதாம். சர்வகாமாப்தி - சர்வ-காம - அப்தி எனப் பிரிபடுவதாம்; இதன் பொருள் சர்வாநந்தத்தையு மடைவ தென்பதாம்.*

11 - ஆநந்தம்.

*(1) யௌவனனுய், ரூபவானுய், வித்தை - அரோகம் - திடசித்தமென்பவற்றை யுடையவனுய், சேனுசமூகங்களுடன் கூடிச் சர்வப் பிருதிவியையும் பரிபாலனஞ்செய்பவன் சார்வபௌமனுவன்; மனிதசுகத்திற்கு முடிவு இவனிடத்தேயாம்;*

*(2) இந்தக் கற்பத்திலே (சிருஷ்டியிலே) மனிதனுயிருந்து புண்ணிய விசேஷத்தால் கந்தர்வபதமடைந்தவன் மநுடகந்தருவனுவன்; இவன் சார்வபௌமனிலும் நூறுபங்கதிகமான சுகமுடையவனுவன்;*

*(3) முன் கற்பத்திற் செய்த புண்ணிய விசேஷத்தால் இந்தக் கற்பத்தினுதியிலேயே கந்தர்வத்தன்மை யடைந்தவன் தேவகந்தர்வனுவன்; இவன் மநுடகந்தர்வனிலும் நூறுபங் கதிகமான சுகமுடையவனுவன்;*

*(4) தமதுலகின்கண் வெகுகாலவளவு வசிக்கின்ற அக்கிநிஷ்வாத்தர் முதலியோர் பிதிரராவர்; இவர் தேவகந்தர்வனிலும் நூறுபங் கதிகமான சுகமுடையவராவர்;*

*(5) கற்பத்தினுதியிலேயே தேவத்தன்மையை யடைந்தவர் ஆஜாநதேவராவர்; இவர் பிதிரரிலும் நூறுபங் கதிகமான சுகமுடையவ ராவர்;*

*(6) இந்தக் கற்பத்தில் அசுவமேதாதி கருமங்களைச் செய்து, மகத் பதத்தை யடைந்து, ஆஜாநதேவரால் சேவிக்கப்பட்டிருப்பவர் கருமதேவராவர்; இவர் ஆஜாநதேவரிலும் நூறுபங்கதிகமான சுகமுடையவராவர்;*

*(7) அஷ்ட வசுக்கள், துவாதசாதித்தியர், ஏகாதச ருத்திரரென்னும் இம் முப்பத்தொருவரும் முக்கிய தேவராவர்; இவர் கருமதேவரிலும் நூறுபங் கதிகமான சுகமுடையவராவர்;*

*(8) இந்திரன்-தேவராஜன்; இவன், முக்கிய தேவரிலும் நூறுபங் கதிகமான சுக முடையவனுவன்;*

*(9) பிருகஸ்பதி - தேவகுரு; இவர் இந்திரனிலும் நூறுபங் கதிகமான சுகமுடையவராவர்;*

*(10) பிரஜாபதி - விராட்டு; இவர் பிருகஸ்பதியிலும் நூறுபங் கதிகமான சுகமுடையவராவர்;*

*(11) இரணியகருப்பன் - பிரஹ்மதேவர்; இவர் பிரஜாபதியிலும் நூறுபங் கதிகமான சுகமுடையவராவர்.* (153)

*கிருத கிருத்தியத்துவம்.*

*3. அந்த ஞானிக்குத் தத்துவஞான முண்டாவதற்கு முன்னர் இவ்வுலக சம்பந்தமான இஷ்டப் பிராப்தி அநிஷ்ட நிவிர்த்தியின் பொருட்டு உழவு- வாணிப*

**154.** தத்துவஞா னத்திற்கு முன்னமிங் கடையத் தக்கவிட்டம் பெறவநிட்ட வொழிவிற்கு வேண்டி, வைத்தவுழ வாதிகளுந் துறக்க முதல் பெறற்கு மகமுதலா யினவுமுத்தி சாதனமா ஞான, சித்தியுற மிகுசவண திகமுமறி ஞர்க்குச் செய்வனவாந் தத்துவஞா னத்தின்பின் குடும்பப், புத்தியோடு பலபோகத் திச்சையிலா மையினாற் புகன்றவுழ வாதிதொழில் யாவுமிலை யாமால்.

---

முதலியனவும், சுவர்க்க முதலிய புண்ணிய லோகங்களை யடைதற் பொருட்டு யாகம் உபாசனை முதலியனவும், மோட்ச சாதனமாயுள்ள தத்துவஞான சித்தியின் பொருட்டுச் சிரவண மனன முதலியனவும் செய்யத்தக்கனவா யிருந்தன; தத்துவஞானத்தை யடைந்ததன் பின்னர்ச் சப்சார புத்தியோடு (யான் சம்சாரி யென்னும் விபரீத ஞானத்தோடு) இகலோகத்தில் (மனைவி - மக்கள் முதலாக வுள்ள) பல போகத்தி லிச்சை யில்லாமையால், உழவு முதலிய வியாபார முற்று மில்லையாம்; ஒரு வீட்டின் சிறு சாளரத்தில் வெளியே யிருந்து வந்து ஆண்டுள்ள சூரியகிரணத்தில் தோன்றுகின்ற பரமாணுக்கள் வெளியேயுள்ள சூரியப் பிரகாசத்திலே தோன்றாமைபோல அஞ்ஞானிக்கு விஷயமாகுங் கருமமனைத்தும் ஞானிக்கு விஷய மாகாமையால் அவனுக்குச் செய்யத்தக்கனவாக யாகம் உபாசனை முதலியன வில்லையாம்; அவன் தத்துவ ஞானத்தால் பிரஹ்மாநந்தத்தை யடைந்திருத்தலால் சிரவணமனன முதலிய வனைத்தும் அவனால் செய்யப்பட்டனவேயாம் ; (அவன் சிரவண மனன முதலியவற்றின் பயனை

---

(இ - ள்.) தத்தவ ஞானத்திற்குமுன்னம் - தத்துவஞானமுண்டாவதற்கு முன்னர், இங்கு - இவ்வுலகத்தில், அடையத்தக்க - (தாம்) அடைவதற்குத் தகுதியாகவுள்ள, இட்டம்பெற - இஷ்டமானபொருள்களைப் பெறுதற்கும், அநிட்டவொழிவிற்கு - அநிஷ்டமான பொருள்களின் நீக்கத்திற்கும், (எதுவாக), வேண்டிவைத்த - விரும்பி (நியமமாகக் கற்பித்து) வைத்திருக்கின்ற, உழவாதிகளும் - உழவுமுதலியனவும், துறக்கமுதல்பெறற்கு - சுவர்க்கமுதலிய புண்ணியலோகங்களை யடைதற்பொருட்டு, மகமுதலாயினவும் - யாகமுதலியனவும், முத்திசாதனமாம் ஞானசித்தியுற - மோட்ச சாதனமாயுள்ள ஞானசித்தியைப்பெறுதற்கு, (ஏதுவாக), மிகுசவணதிகமும் - (மேன்மை) மிக்க சிரவண முதலியனவும், (ஆகிய மூன்றும்), அறிஞர்க்கு - விவேகிகளுக்கு, செய்வனவாம் - செய்தற்குரியனவாம், தத்துவஞானத்தின்பின் - தத்துவஞானமுண்டானதற்குப் பின்னர், குடும்பப்புத்தியொடு - (யான் குடும்பவான் என்னும்) சம்சார புத்தியுடன், பலபோகத்து - (இகலோக) பலபோகத்தில், இச்சையிலாமையினால் - இச்சையில்லாமையால், புகன்ற - கூறிய, உழவாதி தொழில்யாவும் - உழவுமுதலிய தொழிலனைத்தும், இலையாம் - இல்லையாம், (எ - று). பலம் - வனிதாதிவிஷயம். ஆல் - அசை. 154



**155.** வந்துசிறு சாளரத்திற் றோன்றுபர மாணு வான்கதிரின் மிகுமொளியிற் றோன்றிடா வாபோ, னந்தலுறு சிற்றறிஞன் விடயமாங் கரும ஞானியிடைத் தோன்றாமை யாலியற்றத் தக்க, முந்துமக முதலன விங் கிலைபிரமா நந்த முதலுண்மை யெய்தலாற் சவணாதி யெல்லாஞ், சிந்தையுற வியற்றியன வாகுமதா லிதுவே செப்பியவக் கிருதகிருத் தியத் துவமேன் றறியே.

---

யடைந்து விட்டமையால், அவற்றைச் செய்வதில்லையாம்); அதனால், ஞானி யிங்ஙன மிருத்தலே கிருத கிருத்தியத்துவமாம்.

(ஞானி இம்மைப் பயனை யடைதற் பொருட்டு உழவு முதலியனவும், மறுமைப் பயனை யடைதற் பொருட்டு யாக முதலியனவும், மோட்சத்தை யடைதற் பொருட்டுச் சிரவண முதலியனவும் செய்வதில்லையா மென்பதிங் குணர்தற்பாற்றும் கிருத கிருத்தியத்துவம் செய்தற்குரிய செயலனைத்தையுஞ் செய்து முடித்தமையாம், சாளரம் - பலகணி.) (154 - 155)

பிராப்தப் பிராப்பியத்துவம்.

4. விசிட்ட புண்ணிய பரிபாகம், முமுட்சுத்துவம், குரு பாத சேவை, வேதாந்த சாஸ்திர சிரவண மனன நிதித்தியாசனம், ஆத்மாநாத்ம விவேகம், அஞ்ஞான நிவிர்த்தி, ஆத்ம சாட்சாத்காரம், சம்சார துக்க நிவிர்த்தி, நிஜாநந்தப் பிராப்தி என்பன ஞானிக்கு முறையாக உண்டாதலே பிராப்தப் பிராப்பியத்துவமாம்.

(விசிட்ட புண்ணிய பரிபாகம் - சிறப்புடைய புண்ணிய கருமம் தன் பயனைத் தருதற்குப் பக்குவமா யிருத்தலாம்; பிராப்தப் பிராப்பியத்துவம் - அடைய வேண்டிய வனைத்தையும் அடைதலாம்.)

---

(இ - ள்.) சிறுசாளரத்தில்-(ஒருவீட்டின்)சிறிய சாளரத்தில், வந்து-(வெளியேயிருந்து)வந்து, தோன்று - (ஆண்டுள்ள சூரியகிரணத்திலே) தோன்றுகின்ற, பரமாணு - பரமாணுக்கள், (வெளியேயுள்ள),வான்கதிரின் - மேன்மை பொருந்திய சூரியனது, மிகுமொளியில் - மிகுந்தபிரகாசத்திலே, தோன்றிடாத வாறுபோல் - தோன்றாதவிதம்போல, நந்தலுறு - (தத்துவஞானத்தாற்) கெடுதற்குரிய, சிற்றறிஞன் - (அஞ்ஞானியாகிய) சிற்றறிவினனிடத்து, விடயமாங் கருமம் - விஷயமாயுள்ள கருமம், ஞானியிடைத்தோன்றாமையால் - ஞானியினிடத்து (யதார்த்தமாகத்) தோன்றாமையால், இயற்றத்தக்க - (அவன்) செய்யத்தக்கன (ஆக), முந்து - முதன்மையாயுள்ள, மகமுதலன - யாகமுதலியன, இங்கிலை - இவ்வுலகத்தில்லையாம், பிரமாநந்தமுதல் - பிரஹ்மாநந்தசொரூபத்தின், உண்மை - யதார்த்தசாட்சாத்காரத்தை, எய்தலால் - அடைந்திருத்தலால், சவணாதியெல்லாம் - சிரவண முதலிய அனைத்தும், (அவனால்), சிந்தையுற - மனத்தோடுபொருந்த, இயற்றியனவாகும் - செய்யப்பட்டனவேயாம், அதால் - அதனால், இதுவே - இதனையே, (பிரஹ்மாநந்த சொரூபத்தின் யதார்த்த சாட்சாத்காரத்தை யடைந்திருக்கின்ற ஞானி இவ்வாறிருத்தலையே), செப்பிய - கூறிய, அக்கிருதகிருத்தியத்துவமென்று-அந்தக் கிருத கிருத்தியத்துவமென்று, அறி - (நீ) அறியக்கடவாய், (எ-று). விடயமாதல் - தோன்றுதல். பரமாணு என்றது இங்குத் திரியணுகத்தை. சாட்சாத்காரம் - பிரத்தியட்சம். 155

**156.** முற்றலுற விசிட்டபுண் ணியபரிபா கந்தான் முத்திவிருப் பரியகுரு வழிபாடு பெருநூல், வெற்றிதரு சவணுதி யறிவறியா மைகளின் விவேகமிகு மஞ்ஞான வழிவோடுதன் னுண்மை, பெற்றசமு சாரதுக்க நிவிர்த்திநிசா நந்தப் பேறெய்த லேபிராப் தப்பிராப் பியமாம், பற்று முயர் முத்திவகை யிரண்டாகு மவைதாம் பகர்சீவன் முத்தியோடு விதேககை வல்யம்.

---

முத்தித்துவயம்.

வினு:—முத்தித்துவய மெவை ?

விடை:—அவை ஜீவன் முத்தி, விதேக முத்தி என்பனவாம்; அவற்றுள், (156)

ஜீவன் முத்தி.

1. (ஞானிக்கும் அஞ்ஞானிக்கும் செய்யா நின்றேன், கண்டேன், உண்டேன், சென்றே னென்றற்றொடக்கத்து வியவகாரம், சமானமாயிருப்பதாம் ; அங்ஙனமிருப்பினும்), ஞானிக்கு அகம் ஆன்மா வென்னும் இருதயக் கிரந்தியோடு தொடர்ந்து வருகின்ற சம்பந்தம் ஒழிந்தமையால், அவன் பிறரது சரீரத்திலே தனக்குயானென்னும் அபிமான மில்லாமைபோலத் தனது சரீரத்திலும் யானென்னும் அபிமான மில்லாதிருப்பன்; அஞ்ஞானியைப்போலச் சுகதுக்கங்களை அனுபவித்துவரும் அனுபவ வொப்புமையால் அவனுக்குப்பிராரத்த கருமபலன்களை யனுபவித்த லுண்டாவதாம்; அவன் சுழுத்தி அவஸ்தையைப்போல மூடமா யிருக்கின்ற பாலர் பித்தர் முதலியோரது மந்தானுசந்தானம்போல மந்தானு சந்தான முடையவனுயிருப்பன்; அதனுல், அவன் தேகாதி யபிமான மின்றி யிருந்தும் கடமுண்டாய பின்னரும் சுழலுகின்ற குலாலனது சக்கரம்போல, பிராரத்தகரும வாசனு பலத்தால் சஞ்சரிப்பதே ஜீவன் முத்தியாம்.

---

(இ - ள்) முற்றலுற - முற்றப்பெற்ற, விசிட்டம் - சிறப்பினையுடையதாகிய, புண்ணியபரிபாகம் - (நிஷ்காம) புண்ணிய கருமத்தின் பரிபாகமும், (அதனுல்), முத்திவிருப்பு - முமுட்சுத்துவமும், (அதனுல்), அரிய - (பெறுதற்கு) அரிய, குருவழிபாடு - குருபாத சேவையும், (அதனுல்), பெருநூல் - வேதாந்த சாஸ்திரத்தின், வெற்றிதரு - (அஞ்ஞானத்தைக் கெடுக்கும்) வெற்றியைத்தருகின்ற, சவணுதி - சிரவணுதித்திரயமும், (அவற்ருல்), அறிவறியாமைகளின் விவேகம் - ஆத்மாநாத்மாக்களின் விவேகமும், (அதனுல்), மிகும் அஞ்ஞானவழிவொடு - (அநாத்ம வர்க்கங்களில்) மேலாயுள்ள அஞ்ஞானநிவிர்த்தியும், (அதனுல்), தன்னுண்மை - தனது நிஜவடிவ ஆத்மசாட்சாத்காரமும், (அதனுல்), பெற்ற - (தான்முன்னர்) அடைந்துள்ள, சமுசாரதுக்கநிவிர்த்தி - சம்சாரதுக்கநிவிர்த்தியும், (அதனுல்), நிசாநந்தப்பேறு - நிசாநந்தப்பிராப்தியும், எய்தலே - (ஆகிய இவற்றை முறையாக) அடைதலே, பிராப்தப்பிராப்பியத்துவமாம், பற்றும்-(அதிகாரிபுருஷன்) பற்றுதற்குரிய, உயர் - (எவற்றினும்) உயர்வாகவுள்ள, முத்திவகை - முத்தியின்வகை, இரண்டாகும் - இரண்டாம், அவை - அவை, பகர் - (மேலோர் சிறப்பித்துக்) கூறுகின்ற, சீவன் முத்தியொடு விதேக கைவல்லியம் - ஜீவன்முத்தியும் விதேகமுத்தியுமாம், (எ - று). தான் - தாம் - அசை. புண்ணியபரிபாகம் - அறவினை தன் பயனைத் தாத் தகுதியுடையதாதல்.





**157.** அறிவுடையோர்க் ககமான்மா வோடுவருசம் பந்த மகறலினுற் பிறருடல்போற் றம்முடலந் தனிலு, முறுதிதரு மபிமான மின்மையே யாகி யுண்ணுமனு பவவொப்பால் வருபிரா ரத்த, வறுநுகர்வுண் டாஞ்சுழுத்தி பாலாதி போல மந்தானு சந்தான மாதலிற்றேகாதிச், செறியபிமா னங்கழன்றுங் கடமுதித்துஞ் சுழலுந் திகிரிபோல் வாதனையா லுறல்சீவன் முத்தி.

---

(தேகாதிப் பிரபஞ்சம் தோற்றிக்கொண் டிருக்கும்போதே பிரஹ்ம சொரூபமாக நிலைத்தல் ஜீவன் முத்தியாம்; அஃதாவது யானென தென்னும் ஜீவத்துவம் விடுபட்டிருத்தலாம். அகம் ஆன்மாவென்னும் இருதயக் கிரந்தி யாவது அகங்காரமே ஆத்மா வென்னும் விபரீத புத்தியாம். மந்தானுசந்தானம்-விஷயங்களில் அழுத்தமான பிரவிருத்தி யில்லாமை.)

கிரந்தி (முடிச்சு அல்லது கட்டு): இருதயக்கிரந்தி, சம்சயக்கிரந்தி, கர்மக்கிரந்தியென மூவகையாம்; (1) அகங்காரத்தை ஆத்மாவாக அத்தியாசத்தால் நிச்சயித் திருத்தல் இருதயக்கிரந்தியாம்; இஃது அகங்காரக்கிரந்தி யென்றும் சொல்லப்படும். (2) ஆத்மா ஏகமா? அநேகமா? சித்தா? ஜடமா? என்றற்றொடக்கத்தனவாக ஐயங்கொண்டிருத்தல் சம்சயக்கிரந்தியாம்; (3) ஆத்மா சஞ்சிதம் - பிராரத்தம் - ஆகாமியமென்னும் கருமங்களை யுடையதா யிருக்கின்றதென்பது கர்மக்கிரந்தியாமென்பதுமிங் குணர்தற்பாலதாம். (157)

---

(இ - ள்.) (அவ்விருவகைமுத்தியுள்), (ஞானிகளுக்கும் அஞ்ஞானிகளுக்கும் பரஸ்பர சம்பந்த விலக்கணம் சமானமாயிருப்பதாம்; அவ்வாறிருப்பினும்), அறிவுடையோர்க்கு - ஞானிகளுக்கு, அகம் ஆன்மாவொடுவருசம்பந்தம் - அகங்காரத்திற்குப் பிரத்தியகாத்மாவோடு (அநாதியாக) வந்துள்ள (தாதாத்மிய அத்தியாச) சம்பந்தம் (அஃதாவது இருதயக்கிரந்தி), அகறலினுல் - நீங்கியொழிந்தமையால், (அவர்), பிறருடல்போல் - அன்னியரது சரீரத்திற்போல, தம்முடலந் தனிலும் - தமது சரீரத்திலும், உறுதிதரும் - (மயக்ககாலத்தில்) உறுதியைத் தருகின்ற, அபிமானமின்மையேயாகி - (யான்என்னும்) அபிமான மில்லாதவரேயாய் (இருப்பர்), (அஞ்ஞானிகளைப்போல), உண்ணும் - (சுகதுக்கங்களை) அனுபவிக்கின்ற, அனுபவவொப்பால் - அனுபவத்தின் ஒப்புமையால், (அவர்க்கு), வரு - (அநாதியாகத்தொடர்ந்து) வருகின்ற, பிராரத்த வறுநுகர்வுண்டாம் - பிராரப்த கருமத்தின் பயனுய (சுக துக்கவடிவ) மித்தியானுபவமுண்டாம், (அவர்), சுழுத்திபாலாதிபோல-சுழுத்தியவஸ்தையைப்போல மூடமாயிருக்கின்ற பாலர் முதலியோர்போல, மந்தானுசந்தானம் - மந்தானுசந்தானமுடையவராயிருப்பர், ஆதலின்-ஆதலால், தேகாதிச்செறியபிமானங்கழன்றும்-தேகேந்திரிய முதலியவற்றில்(அநாதியாகப்) பொருந்தியுள்ள (நான்என்னும்) அபிமானம் (தமக்கு) நீங்கியும், கடமுதித்தும் - கடமுண்டானபின்னும், சுழலும் - சுழலுகின்ற, திகிரிபோல் - (குலாலனது) சக்கரம்போல, வாதனையால் - பிராரப்தகர்மவாசனையின் பலத்தால், உறல்-(உலகத்தில்) சஞ்சரித்திருப்பதே, சீவன்முத்தி - ஜீவன்முத்தியாம், (எ - று). மந்தானுசந்தானம்-விஷயப்பிரவிர்த்தி மிகக் குறைவாதல்.

**158**. பரமமா ஞானந்தோன் றுதலுமே கதிர்முன் பாயிருள்போ
லஞ்ஞானத் துடனதன்கா ரியமாம், புரமுதலா யினவனைத்து மகன்றிடுத
ருனே புகலரிய விதேககைவல் லியமேன் றிசைப்ப, ருரமுறுமிங் கிது
வாகச் சீவன்முத்தி யுளதேன் றுரைப்பதேவ்வா றேனிற்கயிற்றி னரவ
மயக் கோழிந்தும், வரு'மதன்கா ரியமாகும் பயகம்ப மாதி மருவுதல்
போன் ஞானத்தா லஞ்ஞானங் கேடினும்.

---

விதேக முத்தி.

2. ஞானிக்குப் பிரஹ்ம ஞானோதயமான பின்னர்ச் சூரியோதயத்தின் முன்னர் இருள்கெடுவதுபோல (அந்தப் பிரஹ்ம ஞானத்தால்) அஞ்ஞானத்தோடு அதன் காரியமாயுள்ள சரீர முதலிய வனைத்தும் கெடுவதே விதேக முத்தியாம்.

(தேகாதிப் பிரபஞ்சம் பொய்யாகவேனுந் தோன்றுதலின்றிப் பிரஹ்ம சொரூபமாக நிலைத்தல் விதேக முத்தியாம்.)

**வினு:—ஞானிக்கு இவ்விதேக முத்தி யிருப்பதாக, இவ்விரண்டிற்கு மிடையே ஜீவன் முத்தி யேன்பதோன்றிருக்கின்றதேன்று கூறுதல் எவ்வாறு போருந்துவதாம்?**

விடை:—ஒருவனுக்கு விவேகத்தால் இரச்சுச் சர்ப்பப் பிராந்தி கெட்டாலும், அப்பிராந்தியின் காரியமாயுள்ள பயம் கம்பனம் (நடுக்கம்) முதலியன அற்பகால வளவு இருத்தல்போல, ஞானிக்கு (ஆத்மாநாத்ம) விவேகத்தால் (தன்னை மறைத்த பந்தமென்னும்) அஞ்ஞானம் கெட்டாலும், அவ்வஞ்ஞானத்தின் காரியமாயுள்ள சரீரம் இந்திரிய முதலியன இருத்தலாலும், பிரஹ்ம ஞானோற்பத்தி காலத்திலேயே அஞ்ஞானத்தோடு அதன் காரியமாயுள்ள தேகாதிப் பிரபஞ்சமும் (சிறிது மின்றிக்) கெடுமாயின், பிரஹ்ம வித்தியா சம்பிரதாயத்தின் கதி கெடு மாதலினுலும், பரமசிவனுல் பிரஹ்மனும், பிரஹ்மனுல் பிரஜாபதியும், பிரஜாபதியால் மனுவும், மனுவால் மக்களும் பிரத்தியக் ஆத்ம சொரூபப் பிரஹ்மத்தை அறிந்தனரென்று பிரஹ்ம வித்தியா சம்பிரதாயத்தின் கிரமத்தைக் கூறும் (சாந்தோக்கியம் பிருகதாரண்ய முதலிய) சுருதிக்கும் விரோதமாகு மாதலினுலும், அவனுக்குச் சீவன் முத்தி சித்தித்தற்பொருட்டுப் பிராரத்த கரும வாசனையோடு அஞ்ஞானலேசம் (அஞ்ஞானத்தின் இரண்டாவதம்சமாயுள்ள விட்சேபம்) இருப்பதாக அங்கீகரித்திருப்பதாலும், அவனுக்குத் தேகத்தினிருப்பும், சிஷ்யர்களுக்குத் தத்துவோபதேசஞ் செய்தல் முதலியனவும் எப்போதும் (ஜீவன் முத்தியுள்ள பரியந்தமும்) சித்தித்திருப்பனவாம். (இவ்வாற்ருல் ஞானிக்கு விதேக முத்தியேயன்றி, ஜீவன் முத்தியுமுண்டாம்.)

"இந்த மது ஞானத்தைச் சாட்சாத் பிரமன் பிரஜாபதிக்குக் கூறினர்; அவர் மநுவுக்குக் கூறினர்; அவர் இட்சுவாகு முதலியோர்க்குக் கூறினர்; - - இந்தப் பிரஹ்மவித்தையை ஒருவன் தன் ஜ்யேஷ்ட புத்திரனுக்கு உபதேசித்தல்வேண்டும்; அல்லது தகுதியுள்ள சிஷ்யனுக்கு உபதேசித்தல் வேண்டும்; மற்றவர்க்கு உபதேசித்தல் கூடாது" என்று சாந்தோக்கியோபநிஷத்து மூன்ருவது பிரபாடகத்தில் கூறுகின்றது.

---

(இ - ள்.) பரமமாஞானம் - (ஞானிக்கு மிகப்) பெரிதாயுள்ள (ஜீவப் பிரஹ்ம ஐக்கிய) ஞானம், தோன்றுதலும் - தோன்றியவளவிலே, கதிர்முன் - சூரியோதயத்தின் முன்னர், பாயிருள்போல் - (எங்கும்) பரவியுள்ள இருள் (நீங்கிக்கெடுதல்)போல, அஞ்ஞானத்துடன் - அஞ்ஞானத்தோடு, அதன்காரியமாம் - அவ்வஞ்ஞானத்தின்காரியமாயுள்ள, புரமுதலாயினவனைத்தும் - சரீர முதலியனவாகவுள்ள பொருளனைத்தும், அகன்றிடுதல்தானே - நீங்கிக் கெடுதலேயே, புகலரிய - (இத்தன்மையதென்று இலக்கணம்) கூறுதற்கரிய, விதேக கைவல்லியமென்று - விதேகமுத்தியென்று, இசைப்பர் - (மேலோர்) கூறுவர், இங்கு - இவ்வுலகத்தில், உரம் - ஞானத்தால், உறும் - அடைதற்குரிய, இது - இவ் விதேகமுத்தியென்பதொன்று, ஆக - இருப்பதாக, (இவ்விரண்டற்கு மிடையே), சீவன்முத்தியுளதென்றுரைப்பது - ஜீவன்முத்தியென்பதொன்றிருக்கின்றதென்று கூறுவது, எவ்வாறெனின் - எவ்வாறு பொருந்துவதாமென்ருல், கயிற்றினரவ மயக்கொழிந்தும்-(ஒருவனுக்கு விவேகத்தால்) இரச்சுச் சர்ப்பப் பிராந்தி கெட்டாலும், வரும்-(இதுகயிறென்றறியாமையால்) தோன்றிய, அதன் - அந்த இரச்சுச் சர்ப்பப் பிராந்தியின், காரியமாகும் - காரியமாயுள்ள, பயகம்பமாதி - பயம் நடுக்க முதலியன, (சிறிதுபோது), மருவுதல்போல் - பொருந்தியிருப்பதுபோல, ஞானத்தாலஞ்ஞானங்கெடினும் - (தத்துவ) ஞானத்தால் அஞ்ஞானங் கெட்டாலும், (எ - று). ஏ-அசை. 158



**159**. அதனதுகா ரியமாகு முடம்பாதி நிற்கு மதனுலும் பிரமஞா
னந்தோன்றும் போழுதே,சிதைதருமஞ் ஞானமுட னுடம்போழியு மாயிற்
றிகழ்பிரம வித்தியா சம்பிரதா யத்தின், கதியோழியு மதனுலும் பர
சிவனுற் பிரமன் கமலனு லுயர்பிரசா பதியவனுன் மநுவற், புதமநு
வான் மநுடருணர்ந் தனரேனவே முறைமை புகல்சுருதி விரோதமா
மதனுலு மன்றே.

---

(இ - ள்.) அதனது காரியமாகும் - அவ்வஞ்ஞானத்தின் காரியமான, உடம்பாதிநிற்கும் - சரீரமுதலியன கெடாதிருக்கின்றன, அதனுலும் - அக்காரணத்தாலும், பிரமஞானந் தோன்றும்பொழுதே - (அகம்பிரஹ்மாஸ்மியென்னும்) பிரஹ்மஞானம் தோன்றும்பொழுதே, சிதைதரும் - கெடுகின்ற, அஞ்ஞானமுடன் - அஞ்ஞானத்தோடு, உடம்பொழியுமாயின் - (அவ்வஞ்ஞானத்தின்காரியமான) சரீரம் (முதலியன சிறிதுமில்லாது) கெடுமாயின், திகழ் - (நல்லோருள்ளத்தில்) விளங்குகின்ற, பிரமவித்தியா சம்பிரதாயத்தின்கதி - பிரஹ்மவித்தியா சம்பிரதாயத்தினது கிரமம், ஒழியும் - கெடும், அதனுலும் - அக்காரணத்தாலும், பரசிவனுல் பிரமன்-பரமசிவனுல் பிரஹ்மதேவனும், கமலனுல் உயர் பிரசாபதி - செந்தாமரைப்பூவில் வீற்றிருக்கும் பிரஹ்மதேவனுல் மேலானபிரஜாபதியும், அவனுல் மநு - அப்பிரஜாபதியால் மநுவும், அற்புதமநுவால் மநுடர் - விவேக ஞானமுடைய மநுவால் (இட்சுவாகுமுதலிய) மனிதரும், உணர்ந்தனரென - (பிரஹ்மத்தை) அறிந்தனரென்று, முறைமைபுகல்-(பிரஹ்மவித்தியா சம்பிரதாயத்தின்) கிரமத்தைக் கூறுகின்ற, சுருதி - (சாந்தோக்கியம்-பிருகதாரண்ய முதலிய) சுருதிக்கும், விரோதமாம்-முரணும், அதனுலும் - அக்காரணத்தாலும், (எ - று). அன்று - ஏ - அசை. 159

**160.** செஞ்ஞானிக் குரித்தாகு நற்சீவன் முத்தி சித்தித்தற் குற்ற
பிரா ரத்தவா தனையோ,டஞ்ஞான விலேசசற் பாவவுடன் பாட்டா லாக
நிலே யுஞ்சீடர்க் குபதேசா திகமு,மெஞ்ஞான்றுங் கிடைத்திடுமோ லச்சீவன்
முத்தற் கிரிதருஞ்சஞ் சிதமங்கி புகுமுளிபுற் போல, மேய்ஞ்ஞானத் தாற்
பிரா ரத்தநுகர்ந் தொழியு மேல்விளேகூ டாதனதி காரியா தலினுல்

---

தத்துவஞானத்தால் அஞ்ஞானத்தின் ஆவரணசத்தியும், தத்துவஞானத்தின் சம்ஸ்காரத்தால் அஞ்ஞானத்தின் விட்சேபசத்தியென்னும் அவித்தியாலேசமும் கெடுகின்றன வென்பது இங்குச் சாஸ்திரார்த்தமாம்.

(ரச்சுச்சர்ப்பப் பிராந்தி - கயிற்றில் இது பாம்பென்னும் விபரீத ஞானமாம். பிரஹ்ம வித்தியா சம்பிரதாயம் - பிரஹ்ம ஞான உபதேசம் முறையாக நடைபெற்று வருதல்.)

ஞானப் பிரபாவம் — கருமவிசாரம்.

வினு:—ஜீவன் முத்தனது பிராரத்த முதலிய கருமங்கள் எவ்வாறம்?

விடை:—ஜீவன் முத்தனுக்குச் சஞ்சித கருமம் அக்கினியை யடைந்த உலர்ந்த புல்லைப்போல, தத்துவ ஞானத்தால் ஒழிவதாம்; பிராரத்த கருமம் (அவன் அதன் பயனை) அனுபவிக்க ஒழிவதாம்; ஆகாமிய கருமம் (அவன்) (யான் கர்த்தாபோக்தா வென்றற்றொடக்கத்த விபரீத புத்தியில்லாதவனுயிருத்தலால், கருமத்தைச் செய்வதற்கு) அதிகார மில்லாதவனு யிருக்கின்றுனுதலால் உண்டாகாது.

யான் கர்த்தா போக்தா வென்றற்றொடக்கத்துப் பிராந்தி யுடையவன் கர்மத்தைச் செய்வதற்கு அதிகாரமுடையவனுயிருக்கின்றுன்; அந்தப் பிராந்தியில்லாதவன் கர்மத்தைச் செய்வதற்கு அதிகாரமுடையவ னுவதில்லை; அதனுல், அவனுக்குக் கர்ம பந்த மில்லையாமென்பது இங்குச் சாஸ்திரார்த்தமாம்.

---

(இ - ள்.) செஞ்ஞானிக்கு - பிரஹ்மஞானிக்கு, உரித்தாகும் - (அவன் பெறுதற்கு) உரியதாயுள்ள, நற்சீவன் முத்திசித்தித்தற்கு - சிறந்த ஜீவன் முத்தியானது சித்தித்தற்பொருட்டு, உற்ற - பொருந்திய, பிராரத்த வாசனையோடு - பிராரப்தகரும வாசனையுடன், அஞ்ஞானவிலேசசற்பாவம்-அஞ்ஞானத்தின் அம்சமாகிய விட்சேபத்தினிருப்பை, உடன்பாட்டால் - அங்கீகரித்திருப்பதாலும், ஆகநிலேயும் - தேகத்தினிருப்பும், சீடர்க்குபதேசாதிகமும் - மாணவர்க்கு உபதேசமுதலியவற்றைச் செய்தலும், எஞ்ஞான்றுங் கிடைத்திடும் - எக்காலத்திலும் சித்திப்பனவாம், அச்சீவன்முத்தற்கு - அந்தச் சீவன் முத்தனுக்கு, சஞ்சிதம் - சஞ்சிதகருமம், மெய்ஞ்ஞானத்தால் - தத்துவஞானத்தால், அங்கிபுகுமுளிபுற்போல - அக்கினியிற்சேர்ந்த உலர்ந்த புல்லைப்போல, இரிதரும் - கெடுவதாம், பிராரத்தம் - பிராரப்தகருமம், நுகர்ந்தொழியும் - (தன் பயனுகிய சுக துக்கங்களை) (அவன்) அனுபவிக்கக்கெடுவதாம், மேல்வினை-ஆகாமியகருமம், அனதிகாரியாதலினுல் - (யான் கர்த்தா போக்தா என்றற்றொடக்கத்துப் பிராந்தி யில்லாதவனுயிருத்தலால் கருமத்தைச் செய்வதற்கு) அதிகாரமில்லாதவனு யிருக்கின்றுனுதலால், கூடாது-(அவனுக்குச்) சம்பவியாது, (எ-று). ஆல் - அசை. சத்பாவம்-இருப்பது.

160



**161.** பெற்றவுயர் ஞானத்தா லொழிந்தவினை தானே பிராரத்த
போகத்தை யளிக்குமெனி லதுமே, லுற்றவுட லுற்பத்தி தனையுமியற்
றுறுமேன் றுரைப்பில்வறு விதைநுகர்ச்சிக் கன்றியே முளைக்கு, மற்றது
தான் காரணமன் றதுபோல ஞான மடிகரும நுகர்ச்சியினு னேயொழிவ
தாகி, யற்றமுறு பிறவிமேல் விளைத்திடுதற் கேது வாகாதென் றியம்பிடுவ
ரறிவறிதக் கவரே.

---

"(ஞானிக்கு) யான் அசங்கன் அகர்த்தா அபோக்தா என்னும் நிச்சயத்தின்வலியால் ஆகாமியின் (ஆகாமியகருமங்களின்) பரிசமு முண்டாவதில்லை; ஆனுல், அவற்றின் பயன் பிரியன் துவேஷி யென்னும் புருஷர்களுக்குப் போகமாகின்றது" என்ற பஞ்சதசியின் குறிப்புரையி லெழுதப்பட்டிருப்பது இங்குணர்தற்பாற்றும்.

(1) சென்ற சரீரங்களிற் செய்யப்பட்டுப் பலனுக்கு வாராதுள்ள கர்மம் சஞ்சிதமாம்; (2) எதிர்காலத்திற் செய்யப்படும் கர்மம் ஆகாமியமாம்; (3) சென்ற சரீரங்களிற் செய்யப்பட்டு வர்த்தமான (நிகழ்கால) சரீரத்திற்கு ஏதுவாயுள்ள கர்மம் பிராரத்தமாம், (158 - 159 - 160)

வினு:—தத்துவ ஞானத்தால் ஒழிந்த சஞ்சித கருமமே பிராரத்த கரும போகத்தைத் தருவதாயின், அச் சஞ்சித கருமமே இனியும் தேகோற்பத்தியைச் செய்யலாம் அன்றே?

விடை:—செய்யாது.

வினு:—அதனை விளக்கமாகக் கூறல்வேண்டும்?

விடை:—ஒருவனுக்கு வறுத்தவிதையானது புசித்தற்கு மாத்திரம் உபயோகமாவதன்றி அங்குரோற்பத்திக்கு(முளை உண்டாதற்கு)க்காரணமாவதன்றும்; அதுபோல, ஞானிக்குத் தத்துவ ஞானத்தால் ஒழிந்த சஞ்சிதகருமம் தனதுசேடமாகிய பிராரத்த கருமபோகத்தை யனுபவித்தலாலே யொழிவதா யிருப்பதன்றிப் பிறப்பினை மேலே யுண்டாக்குவதற்குக் காரணமாவதில்லையாம்.

---

(இ - ள்.) பெற்ற - (அதிகாரிபுருஷன் சற்குருவினிடத்து முறையாகப்) பெற்ற, உயர் - உயர்வாகிய, ஞானத்தால் - தத்துவஞானத்தால், ஒழிந்தவினை தானே-கெட்டொழிந்த சஞ்சிதகருமமே, பிராரத்த போகத்தை யளிக்குமெனில்-(அவனுக்குப்)பிராரப்தகரும போகத்தைத் தருமாயின், அது-அச்சஞ்சிதகருமம், மேலுற்ற-இனிவரக்கடவதாய, உடலுற்பத்திதனையும் - தேகோற்பத்தியையும், இயற்றுறும்-செய்யும், என்றுரைப்பில்-என்றுகூறின், வறுவிதை - வறுத்தவிதையானது, நுகர்ச்சிக்கன்றியே புசிப்பதற்கே(உபயோகமாவது) அல்லாமல், முளைக்கு - முளை யுண்டாதற்கு, அது - அவ்விதையானது, காரணமன்று - காரணமாவதன்றும், அதுபோல - அதுபோல, ஞானம் - தத்துவ ஞானத்தால், மடி - கெட்ட, கருமம் - சஞ்சிதகருமம், நுகர்ச்சியினுனே - (தனதுசேடமாகிய பிராரப்தகரும போகத்தைத் தத்துவஞானி)அனுபவித்தலாலே, ஒழிவதாகி-கெடுவதாய் (இருப்பதல்லாமல்), அற்றமுறு - அழிதலைப்பொருந்திய, மேல் - இனி, (அவனுக்கு), பிறவிவிளைத்திடுதற்கு - பிறப்பையுண்டாக்குவதற்கு, ஏதுவாகாது - காரணமாகாது, என்று - என்று, அறிவறிதக்கவர் - அறிவினையறிந்தபெரியார், இயம்பிடுவர் - (சஞ்சிதகருமத்தினியல்பினைக்) கூறுவர், (எ - று) போகம் - சுக துக்க அனுபவம். மற்று - தான் - ஏ-அசை.

161

**162**. அறைந்தநுகர் வினையதுதா னுலோகயாத் திரைக ளதி கரியா துறுநரர்க்கே யோருடம்பு தன்னிற் சேறிந்துநுகர் வாமவற்றி னதி கிருத ராகிச் சிறந்தமா புருடர்க்குத் தசசங்கை யுடம்பி, னுறைந்தலது தீர்ந்திடா தெனினுமறைப் பின்றி யுறுதலா லோருவனுக்கிங் கிளமை முதற் பேதம், பிறந்திடினு மவனுக்கோ ருடம்பேயாய் நின்ற பெற்றி போ லாகுமென வுணர்ந்திடுக தெரிந்தே.

---

அக்கினியால் தகிக்கப்பட்ட படம் காற்று வருமளவும் தன் வடிவங் கெடா திருப்பதுபோல, ஞானக்கினியால் தகிக்கப்பட்ட சஞ்சிதகர்மமும் தனது சேட மாகிய பிராரப்த கர்மத்திற்கு நாசம் வருமளவும் தன் வடிவம் கெடாதிருப்பதா மென்பது இங்குச் சாஸ்திரார்த்தமாம். படம் - ஆடை- (161)

வினு:—பிராரத்த கருமம் அதிகாரி புருடர்க் கெவ்வா றிருக்கும்?

விடை:—அஃது அவர்க்குப் பல சரீரம் வருதற்குக் காரணமா யிருக்கும்.

வினு:—அதனை விளக்கமாகக் கூறல்வேண்டும்?

விடை:—அந்தப் பிராரத்த கருமம் (உலோகாசார மென்னும்) லோக யாத் திரைகளைக் கடவாதுள்ள மக்களுக்கு ஒரு சரீரத்திற்குரியதாக விருந்து அவர் சுகதுக்க வடிவபோகத்தை அந்த உடம்பின்கண் பொருந்தி அனுபவித்தற்குரிய தாக விருப்பதாம்; அந்த லோக யாத்திரைகளைக் கடந்து சிறப்புற்று விளங்கும் அதிகாரி புருஷர்க்குத் தச சரீரங்களில் (அவர்) சேர்ந்தாலல்லாமல் ஒழியாதாம்; அஃது அவர்க்கு அங்ஙனம் இருப்பதாயினும், அவரது ஞானத்திற்கு மறைப் பில்லா திருப்பதாம்.

வினு:—அதிகாரி புருஷர்க்குத் தச சரீரங்கள் வருவதற் குரிய பிராரத்த கருமம் ஒன்றுயிருத்தல் எங்ஙனம்?

விடை:—ஒருவனது தேகத்திற்குப் பால்ய கௌமார வார்த்திக முதலிய பேதங்க ளுண்டாயினும், அவனுக்கு அத்தேகம் ஒன்ருகவே யிருப்பதுபோல அஃது ஒன்ருகவே யிருப்பதாம்.

---

(இ - ள்.) அறைந்த - கூறிய, நுகர்வினையதுதான் - அனுபவித்தற்குரிய தாகவிருக்கின்ற அந்தப் பிராரப்த கருமம், உலோகயாத்திரைகள் - உலகநடை களை, அதிகரியாதுறுநரர்க்கு - கடவாதிருக்கின்ற மக்களுக்கு, ஒருடம்புதன்னில்- ஒருசரீரத்திலே, செறிந்து நுகர்வாம் - பொருந்தியனுபவித்தற்குரியதாம், அவற் றினதிகிருதராகி - அவ்வுலக நடைகளினின்றும் மேம்பட்டவராய், சிறந்த - (நற்குண நற்செய்கைகளால்) சிறப்புற்றிருக்கின்ற, மாபுருடர்க்கு - (வசிஷ்டர் பீஷ்மர் முதலிய) அதிகாரிபுருஷர்க்கு, தசசங்கையுடம்பில் - பத்தென்னு மிலக்கமுள்ளவுடம்பில் (பத்துச்சரீரத்தில்), உறைந்தலது - பொருந்தி (அனுப வித்தால்) அல்லாமல், தீர்ந்திடாது - (பிராரப்தகருமம்) ஒழியாது, எனினும் - என்றுகூறப்படுவதாயினும், மறைப்பின்றி - (அவ்வதிகாரிபுருஷர் தமது தத்துவ ஞானத்திற்கு அஞ்ஞான - சந்தேக - விபரீதங்களால்) திரோபவமில்லாது, உறுதலால் - (அச்சரீரங்களில்) பொருந்தியிருத்தலால், (அச்சரீரங்கள் அவர் களுக்கு), ஒருவனுக்கு - ஒருவனுக்கு, (அவனது சரீரத்தில்), இங்கு - இவ்வுல கத்தில், இளமைமுதற்பேதம் - பால்யமுதலிய வேறுபாடுகள், பிறந்திடினும் - உண்டாயினும், அவனுக்கு - அவனுக்கு, (அச்சரீரம்), ஒருடம்பேயாய் நின்ற - ஒருசரீரமேயாயிருந்த, பெற்றிபோலாகும் - விதம்போலவாகும், என - என்று, தெரிந்து உணர்ந்திடுக - (அவ்வதிகாரிபுருஷரது பிராரப்தகருமத்தின்பயனை நீ) ஆராய்ந்தறிவாயாக, (எ - று). 162



**163**. விடயங்க ளனைத்தினுக்கும் பொய்ம்மைசா திக்கு மெய்ஞ் ஞானந் தனக்குமவைக் குண்மைசா திக்கு,முடலினுகர் வினைக்குமோன் றற்கோன்று விரோத முண்மையினுன் ஞானிக்கு நுகர்வெங்ங னென் னிற், கெடுகனவு முதலவற்றுண் மைதுன திகளாங் கேடினுகர் வாதல் போற் பிராரத்த போகம், விடயங்க ளுண்மையா யலதாகா தென்னும் விதியின்மை யானுகர்வு முணர்வுமுர ணுவால்.

---

தச சரீரம் - பத்துச் சரீரம். பிராரத்த கருமம் லௌகிக நடையுள்ளவர்க்கு ஒரு சரீரம் வருதற்குரியதாயும், அந் நடையில்லாத அதிகாரி புருஷர்க்குப் பல சரீரம் வருதற்குரியதாயு மிருக்கின்ற தென்பதிங் குணர்தற் பாலதாம். அதி காரி புருஷர் - வசிஷ்டர் பீஷ்மர் வியாசர் முதலாயினோர்.

"வசிஷ்டர் பீஷ்மர் முதலியோர் அதிகாரிகளாயிருந்தமையால், அவர்கட்குப் பல ஜன்மங்கள் உண்டாயின; ஏனெனின், அதிகாரி புருஷர்க்கு ஒரு கற்ப பரியந் தம் பிராரப்த கர்மமிருக்கிறது; கற்ப முடிந்தா லல்லது விதேக மோட்சமுண்டாவ தில்லை. கற்பத்திற்குள்ளேயே அவர்கட்கு இச்சையின் வலியால் பலசரீரங்கள் உண்டாகின்றன; அங்ஙனமாயினும், ஆத்ம ஸ்வரூபத்தில் அவர்கட்கு ஜனன மா ணப் பிராந்தியுண்டாவதில்லை; ஆதலால், அவர்கள் ஜீவன் முத்தர்கள். இந்த அதிகாரி புருஷர்களின் வியவகார மனைத்தும் பிறருடைய உபதேச நிமித்தமே யாம்" என்று விசாரசாகரம் ஏழாவது தரங்கத்திற் கூறுவதிங்குணர்தற்பாலதாம்.

ஞானியின் போக சித்தி. (162)

வினு:—விஷய மனைத்திற்கும் மித்தியாத்துவஞ் சாதிக்கும் தத்துவ ஞானத்திற்கும், அவற்றிற்குச் சத்தியத்துவஞ் சாதிக்கும் பிராரத்த கருமபோகத்

---

(இ - ள்.) விடயங்களனைத்தினுக்கும் - சகலவிஷயத்திற்கும் (மாயாப்பிர பஞ்சமனைத்திற்கும்), பொய்ம்மை சாதிக்கும் - மித்தியாத்துவத்தைச் சாதிக்கின்ற, மெய்ஞ்ஞானந்தனக்கும் - தத்துவஞானத்திற்கும், அவைக்கு - அவ்விஷயங் களுக்கு, உண்மைசாதிக்கும் - சத்தியத்துவத்தைச் சாதிக்கின்ற, உடலினுகர் வினைக்கும் - (ஜீவர்கள் சுகதுக்கங்களைச்) சரீரத்திலிருந்து அனுபவித்தற்கேது வாயுள்ள பிராரப்தகருமத்திற்கும், ஒன்றற்கொன்று விரோதம் - பரஸ்பரம் விரோதம், உண்மையினுல் - இருத்தலால், ஞானிக்கு நுகர்வெங்ஙனென்னின் - தத்துவஞானிக்குப் பிராரப்தகரும போகாநுபவம் எவ்வாறு பொருந்துவதா மென்று வினுவுவாயாயின், (நம்மனோர்க்கு), கெடுகனவுமுதலவற்றுள் - (விரைந்து) கெடுதற்குரிய (பிராதிபாசிக) சொப்பனம் இந்திரஜால முதலியவற்றில், ஆம் - உண்டாகின்ற, மைதுனதிகள் - புணர்ச்சி முதலியன, கேடில் நுகர்வாதல் போல் - கெடுதலில்லாத (நிசமான) போகானுபவமாதல்போல, பிராரத்த போகம் - (வியாவகாரிக) பிராரப்தகரும போகானுபவம், விடயங்கள் - விஷயங் களுக்கு, உண்மையாயலது - சத்தியத்துவதரிசன முண்டானுலல்லாமல், ஆகா தென்னும் - பொருந்தாதென்னும், விதியின்மையால் - நியமமில்லாமையால், நுகர்வுமுணர்வும் - பிராரப்த கருமபோகானுபவமும் தத்துவஞானமும், முரணு - (தம்முள்) விரோதமாவனவன்ரும், (இதனுல், தத்துவஞானிக்கும் பிராரப்த கரும போகானுபவமுண்டாமென்பது பெற்ரும்), (எ - று). ஆல் - அசை. விஷயங்கள் சத்தியமாயிருப்பின், பிராரப்த கருமபோகாநுபவம் பொருந்தும்; இன்றேல், பொருந்தாதென்னும் நியமமில்லையாமென்பது இங்குக் குறிப்பிடப் பட்டவாறுணர்தற்பாலதாம். மைதுனம் - மிதுனசம்பந்தம்; அஃது ஆண் பெண் புணர்ச்சியாம். 163

**164.** வந்தமைய லொழிந்தளவே யிப்பியிடை வெள்ளி மாய்தல் போ லறிவினு லஞ்ஞானங் கெடலு, மிந்தவுல கதுதோற்ற மேயிலா மை யினு லெங்ஙன மாம் வினைப்போக நுகர்ச்சியெனி லிப்பி, தந்தவிர சத நிருபா திகப்பிராந்தி யாமத் தன்மையினு லுணர்ந்தளவில் வெள்ளியுரு வொழியும்,பந்தமுறு மிதுசோபா திகமாகு மதனுற் பகர்ந்ததுபோ லன்று மற் றெங்ஙனெனி லுரைப்பாம்.

---

திற்கும் பரஸ்பரம் (ஒன்றற்கொன்று) விரோத மிருத்தலின், தத்துவ ஞானிக்குப் போகானுபவம் எவ்வாறு கூடும்?

(மித்தியாத்துவம் பொய்ம்மை; சத்தியத்துவம் - மெய்ம்மை.)

விடை:—(பிராதிபாசிகமான) சொப்பன உலகம் இந்திரசாலம் முதலிய வற்றில் மைதுனம் (புணர்ச்சி) முதலிய நிஜபோக முண்டாவதுபோல, (வியாவகாரிகமான) பிராரத்த கரும போகம் விஷயங்களுக்குச் சத்தியத்துவ தரிசனமுண்டானுலல்லது ஆகாதென்னும் நியமமில்லையாகலின், பிராரத்த கரும போகத்திற்கும் தத்துவ ஞானத்திற்கும் பரஸ்பரம் விரோதமில்லையாம். (அதனுல், தத்துவ ஞானிக்கும் பிராரத்த கருமமுண்டென்பது நிச்சயமாம்.)

(மித்தையான சொப்பனத்திற்கும் சத்தியமான மைதுன போகத்திற்கும் விரோதமில்லாமைபோல, மித்தையான பிராரத்த கரும போகத்திற்கும் சத்தியமான தத்துவஞானத்திற்கும் விரோத மில்லையாமென்பதும், விஷயங்கள் சத்தியமா யிருந்தாற்ருன் பிராரத்த கருமபோகமுண்டாகும்; அவை மித்தையாயிருந்தால் அஃதுண்டாகா தென்னும் நியமமில்லையா மென்பது மிங்குணர்தற் பாலனவாம்.) (163)

வினு:—ஒருவனுக்கு இப்பியினிடத்து இது வெள்ளியென்னும் பிராந்தி (விபரீதவுணர்வு) கெட்ட வளவிலே இப்பியின்கண் வெள்ளி கெடுவதுபோல, தத்துவஞானத்தால் அஞ்ஞானம் கெட்ட வளவிலே ஆத்மாவின் கண் பிரபஞ்சங் கெடுதல்வேண்டும்; கெடுமாயின், இந்தப் பிரபஞ்சத் தோற்றமே இல்லையாம்; இல்லையாமாயின், பிராரத்த கரும போகானுபவம் தத்துவ ஞானிக்கு எவ்வா றுண்டாகும்?

---

(இ - ள்.) வந்த - (ஒருவனுக்குக் கிளிஞ்சிலாகிய அதிஷ்டானத்தை யறியாமையால்) தோன்றிய, மயல் - (இதுவெள்ளியென்னும்) பிராந்தி, ஒழிந்த அளவே - (கிளிஞ்சிலையறிந்தமையால்) நீங்கியமாத்திரத்திலே, இப்பியிடை வெள்ளி மாய்தல்போல்-கிளிஞ்சிலின்கண்வெள்ளி கெடுவதுபோல, அறிவினுல்-தத்துவஞானத்தால், அஞ்ஞானங்கெடலும் - அஞ்ஞானங்கெட்ட மாத்திரத்திலே, இந்தவுலகதுதோற்றமே - இந்தப் பிரபஞ்சத்தின்தோற்றமே, இலாமையினுல் - இல்லாமையால், (தத்துவஞானிக்கு), வினைப்போகநுகர்ச்சி - பிராரப்தகருமபோகானுபவம், எங்ஙனமாம்எனின் - எவ்வாறு பொருந்துவதாமென்று வினுவுவாயாயின், இப்பிதந்தவிரசதம் - கிளிஞ்சிலில்தோன்றிய வெள்ளி (சுத்திகாரசிதம்), நிருபாதிகப்பிராந்தியாம் - நிருபாதிகப்பிராந்தியாம், அத்தன்மையினுல் - அதனுல், உணர்ந்தஅளவில் - (கிளிஞ்சிலை) அறிந்தமாத்திரத்திலே, வெள்ளியுருவொழியும் - வெள்ளியின்வடிவம் கெட்டொழிவதாம், பந்தமுறு மிது - (சம்சார) பந்தகாரணமாகப் பொருந்தியுள்ள இப்பிரபஞ்சம், சோபாதிகமாகும் - சோபாதிகப்பிராந்தியாம், அதனுல் - அதனுல், பகர்ந்ததுபோலன்ரும் - (மேற்)கூறிய நிருபாதிகப்பிராந்திபோல்வதன்ரும், மற்று - பின், எங்ஙனெனின் - எத்தன்மையதாமென்று வினுவுவாயாயின், உரைப்பாம் - (அதற்கு விடை) கூறுவாம், (எ - று). 164



**165.** தடத்தினுயர் கரையமர்வோ னத்தடத்துப் புனலிற் றுனதோ முகமாக விருப்பதுபோய் யென்று, படைத்ததெளி வுளமோடிருப் பினுமதோ முகமாம் படிவந்தோன் றுதல்போல மூலவகங் கார, மடுத்து வரு சீவபா வாதிகமோ மித்தை யறிதுரியன் ருனெனவே யுணரினுஞ்சீ வாதித், தொடுத்தவுல குறுதலினுற் சீவன்முத்தன் றனக்குத் துய்க்கும் வினைப் போகவிவ காரமுடன் பாடாம்.

---

சோபாதிகப்பிராந்தி - நிருபாதிகப்பிராந்தி.

விடை:—இப்பி வெள்ளி யென்னும் சுத்திகாரசிதம் நிருபாதிகப் பிராந்தியாம்; அதனுல், இப்பியை யறிந்த வளவிலே வெள்ளியுருவம் இப்பியின் கண்ணே கெட்டுப்போவதாம்; இப்பிரபஞ்சம் சோபாதிகப் பிராந்தியாம்; அதனுல், நிருபாதிகப் பிராந்திபோலக் கெடுவதன்ரும். (இப்பி - கிளிஞ்சில்; சோபாதிகம் - உபாதியோடு கூடியது; நிருபாதிகம் - உபாதி யில்லாதது.)

வினு:—அங்ஙனமாயின், அது பின் எங்ஙனமாம்? (164)

விடை.—ஒரு தெளிந்த தடாகத்தினது உயர்ந்துள்ள கரையின்கணிருப்பவன் தான் அத்தடாக நீரில் அதோமுகமாக (தலை கீழாகத்தோன்றி) இருப்பது பொய்யென்று நிச்சயித்தறிந்த காலத்தும், அவ்வதோமுகமாயுள்ள வடிவம் அவனுக்குத் தோன்றுவதாம்; அதுபோல, ஜீவன் முத்தன் மூலாங்காரத்தைச் சம்பந்தித்து வருகின்ற ஜீவத்துவம் (ஈச்சுரத்துவம்) முதலியவனைத்தும் மித்தையாம்; அவற்றைச் சாட்சி மாத்திரமாக இருந்து அறிகின்ற சத்தியமான பிரத்தியக் ஆத்மா யான்தானே யென்று நிச்சயித்தறிந்த காலத்தும், ஜீவத்துவ முதலாகப் பொருந்தியுள்ள பிரபஞ்சம் அவனுக்குத் தோன்றுவதாம்; அதனுல், ஜீவன் முத்தனுக்குப் பிராரத்த கரும போகானுபவ வியவகாரம் அங்கிகரிக்கப்படுவதாம்.

---

(இ - ள்.) தடத்தின் - (தெளிந்த நீரையுடைய ஒரு) தடாகத்தின், உயர்- உயர்வாயுள்ள, கரையமர்வோன் - கரையின்கணிருப்பவன், அத்தடத்துப் புனலில் - அத்தடாக நீரில், தானதோமுகமாக விருப்பது - தான் (தனது வடிவம்) அதோமுகமாகத் தோன்றுவது, பொய்யென்று - மித்தையாமென்று, படைத்த - உறுதியாகக்கொண்ட, தெளிவுளமொடிருப்பினும் - தெளிவாய மனத்துடனிருந்தாலும், (அவனுக்கு), அதோமுகமாம்படிவம் - அவ்வதோமுகமாயுள்ள வடிவம், தோன்றுதல்போல - தோன்றுவதுபோல, (ஜீவன்முத்தன்), மூலவகங்காரம் - மூலாங்காரத்தை, அடுத்துவரு - சம்பந்தித்து வருகின்ற, ஜீவபாவாதிகமோ மித்தை - ஜீவத்துவ முதலிய வனைத்தும் மித்தையாம், அறி-(அவற்றைச்சாட்சியாக விருந்து) அறிகின்ற, துரியன் - பிரத்தியகாத்மா, தானெனவே யுணரினும் - யானேயென் றறிந்திருந்தாலும், சீவன்முத்தன் றனக்கு - அச்சீவன் முத்தனுக்கு,சீவாதி-ஜீவத்துவ முதலியனவாக, தொடுத்த-பொருந்தி யிருக்கின்ற, உலகு-பிரபஞ்சத் தோற்றம், உறுதலினுல் - பொருந்தி யிருத்தலால், துய்க்கும்- (சுக துக்கவடிவப் போகத்தை) அனுபவித்தற்கேதுவாயுள்ள, வினைப்போக விவகாரம் - பிராரப்தகரும போகானுபவ வியவகாரம், உடன்பாடாம் - அங்கிகரிக்கப்படுவதாம், (எ - று). அதோமுகம் - கீழ்நோக்கிய முகம்; அதோமுகமாகத் தோன்றுதல் - தலைகீழாகத் தோன்றுதல். சீவபாவாதிகம் - சீவபாவ ஆதிகமெனப் பிரிபடும். சீவபாவம் - ஜீவத்துவம் (ஜீவனது தன்மை), ஆதிகம்- முதலியன. ஓ - அசைநிலை. 165

**166.** சீவன்முத்தற் குரியனவா மயித்திரியே கருணை திகழ்முதிதை யுபேட்சையெனுஞ் சற்குணங்க ளவற்றுண், மேவுறுசற் புருடரோடு நட்புமயித் திரியா மெலிதருதுக் கிகளிடத்தி லிரக்கமே கருணை,யோவறு நற் புண்ணியர்பால் விருப்பமே முதிதை யுவப்புவெறுப் பிரண்டுமிலா துலகிலவ மியற்றும், பாவிகளை விடுதலே யுபேட்சையென வறிக பயனைந்தச் சீவன்முத்தற் குளவவையீண் டுரைப்பாம்.

---

(1) கேவலம் அஞ்ஞானத்தாற்றோன்றும் பிராந்தி நிருபாதிகப்பிராந்தியாம்; அது கிளிஞ்சிலில் வெள்ளி தோன்றுதல் போல்வதாம்; (2) உபாதியோடு கூடிய அஞ்ஞானத்தாற்றோன்றும் பிராந்தி சோபாதிகப் பிராந்தியாம்; அஃது ஒருவனது வடிவம் தடாகநீரில் தோன்றுதல் போல்வதாம். இதில் உபாதி தடாக நீராம். ஒருவன் தடாக நீரிற் றோன்றும் தனது வடிவம் பொய்யாமென் றுணர்ந்த காலத்தும் அஃதவனுக்கு அந்நீருள்ளளவளவும் தோன்றுதல்போல, அதிகாரிபுருஷன் பிரபஞ்சம் பொய்யாமென் றுணர்ந்த காலத்தும் அஃதவனுக்குப் பிராரப்த கருமத்தோடு கூடிய அஞ்ஞானமுள்ளவளவும் தோன்றுவதாமென்க. இங்குப் பிரபஞ்சந் தோன்றுவதற்குரிய உபாதி பிராரப்த கருமத்தோடு கூடிய அஞ்ஞானமாம்.

" நிருபாதிக அஞ்ஞான ஜந்நியம் சோபாதிக அஞ்ஞான ஜந்நியம் என்னும் பேதத்தால் பிராந்தி இருவகைத்தாம்; விலக்ஷண (தனது சமகால பரியந்தம் காரியத்தை நிறுத்துவதாகிய) நிமித்தகாரணம் ஈண்டு உபாதியெனப்படுகின்றது. அஃதின்றிக் கேவலம் அஞ்ஞானத்தால் தோன்றும் பிராந்தி நிருபாதிகப் பிராந்தியாம். அஃது இரஜ்ஜுசர்ப்பம் சுத்திரஜத முதலியவற்றின் பிராந்தியாம். விலக்ஷணமான நிமித்தகாரண வடிவ உபாதியோடு கூடிய அஞ்ஞான ஜந்நியப் பிராந்தி சோபாதிகப்பிராந்தியாம். எங்ஙனம் பிரகாச அந்தகாரங்களின் சம்பந்த வடிவ உபாதியோடு கூடிய அஞ்ஞானத்தாற் றோன்றும் ஆகாயத்தினது நீலத் தன்மையின் பிராந்தி யிருக்கின்றதோ, எங்ஙனம் பிம்பத்தின் சந்நிதி வடிவ உபாதியோடு கூடிய கண்ணாடியின் அஞ்ஞானத்தாற் றோன்றிய பிரதிபிம்பத்

---

(இ - ள்.) சீவன் முத்தற்கு - (அந்தச்)சீவன் முக்தனுக்கு, மயித்திரியே - மைத்திரியும், கருணை - கருணையும், திகழ் - (அவற்றின்பின்) விளங்குகின்ற, முதிதை - முதிதையும், உபேட்சை - உபேட்சையும், எனும் - என்று கூறப்படுகின்ற, சற்குணங்கள் - சிறந்த குணங்கள், உரியனவாம் - உரிமையுடையனவாக விருப்பனவாம், அவற்றுள் - அக்குணங்களுள், மேவுறு-(அறிஞர்யாவரும்) விரும்புகின்ற, சற்புருடரொடு நட்பு - சத்புருஷரோடு நட்புச்செய்தலே, மயித்திரியாம் - மைத்திரியாம், மெலிதரு - (தமக்கு நேர்ந்த விபத்தால்) வருந்துகின்ற, துக்கிகளிடத்தில்- துக்கிகளிடத்தில் (உண்டாகும்), இரக்கமே-(மன) இரக்கமே, கருணை- கருணையாம், ஓவறு - (சாஸ்திர விசுவாசமுதலியன) நீங்குதலில்லாத, நற்புண்ணியர்பால் - சிறந்த புண்ணியாதிகாரிகளிடத்தில் (உண்டாகும்), விருப்பமே- சந்தோஷமே, முதிதை - முதிதையாம், உலகில் - உலகத்தில், அவமியற்றும் - தீவினைகளைச் செய்கின்ற, பாவிகளை - பாவிகளை, உவப்பு வெறுப்பிரண்டு மிலாது - விருப்பும் வெறுப்புமாகிய இரண்டுமில்லாது, விடுதலே - விட்டுநீங்குதலே, உபேட்சை - உபேட்சையாம், எனவறிக - என்று (அச்சற்குணங்களினிலக்கணங்களை நீ) அறிவாயாக, அச்சீவன் முத்தற்கு - அந்தச் சீவன்முக்தனுக்கு, பயனைந்துள - பஞ்சப்பிரயோசனமுண்டு, அவை-அவற்றை, ஈண்டுரைப்பாம் - இவ்விடத்துக் கூறுவாம், (எ - று). 166



**167.** ஞானரக்கை தவஞ்சகல சம்வாத முடனே நவிறுக்க வொடுக்கமொடு சுகாவிர்ப்பா வந்தா, ஞவைவற்றுண் மருவும்வா சனை யழிவு மனத்தி னடக்கங்க ளாற்புத்தி நிருமலமா யிருத்தன், ஞானரக்கை மனம்பொறிகட் கொருமையே தவமா ஞானியென வுலகமெலாம் வழி படல்சம் வாத, மானமனக் கிலேசமற லேதுக்க வொடுக்க மவற்றினாற் பந்தமறல் சுகாவிர்ப்பா வந்தான்.

---

தின் பிராந்தி யிருக்கின்றதோ, அங்ஙனமே ஜீவர்களது அதிருஷ்ட வடிவ உபாதியோடு கூடிய மூலாஞ்ஞானத்தால் தோன்றிய பிரபஞ்சத்தின் பிராந்தி யிருக்கின்றது; அது முற்கூறிய உபாதியோடு கூடிய அஞ்ஞானத்தாற் றோன்றியதா யிருத்தலின், சோபாதிகப் பிராந்தியாம். நிருபாதிகப்பிராந்தியின் பாதிதாநுவிருத்தி (பாதமாகியபின் தோற்றுதல்) உண்டாகிறதில்லை; ஏனெனின், உபாதியின்மையால் அதன் நாசமும் பாதமுமாகிய இரண்டு மிருத்தலின். சோபாதிகப் பிராந்தியின் பாதிதாநுவிருத்தி யுண்டாகின்றது; ஏனெனின், மித்தியாத் தன்மை நிச்சயவடிவபாதம் உண்டாகியும் உபாதியின் இருப்புவரையில் ஸ்வரூபத்தின் அப்பிரதீதி (விளங்காமை) வடிவ நாசமின்மையால்.'' என்று பாலபோதக் குறிப்புரையிற் கூறப்பட்டிருத்தல் இங்குணர்தற்பாலதாம். (165)

### ஜீவன் முத்தனுக்குரிய சற்குண சதுஷ்டயம்.

வினா:—ஜீவன் முத்தனுக்குரிய சற்குண சதுஷ்டய மேவை?

விடை:—அவை மைத்திரி, கருணை, முதிதை, உபேட்சை யென்பனவாம்; அவற்றுள்,

#### மைத்திரி.

1. சற்புருஷரோடு நட்புக்கொள்ளுவதே (சற்புருஷ சிநேகமே) மைத்திரியாம்;

#### கருணை.

2. துக்கிப் பிராணிகளைக் கண்டவிடத்து, அத் துக்கிப் பிராணிகளிடத்து இரக்கங் கொள்ளுவதே கருணையாம்;

---

(இ - ள்.) (அவை), ஞானரக்கை - ஞானரட்சையும், தவம் - தவமும், சகல சம்வாதமுடன் - சர்வ சம்வாதமும், நவில் - (இவற்றின் பின்) கூறப்படுகின்ற, துக்கவொடுக்கமொடு - துக்க க்ஷயமும், சுகாவிர்ப்பாவம் - சுகாவிர்ப்பாவமுமாம், ஆன அவற்றுள்-இவ்வாறுள்ள அந்தப்பஞ்சப்பிரயோசனங்களுள், மருவும்-(சித்தத்திற்) பொருந்தியிருக்கின்ற, வாசனையழிவும் - வாசனாக்ஷயமும், மனத்தினடக்கங்களால் - மனோநாசமுமாகிய இவ்விரண்டால், புத்தி நிருமலமாயிருத்தல்- புத்தி (காமாதிவிருத்திகளெழாதொழிய) நிர்மலமாயிருப்பதே, ஞானரக்கை - ஞானரட்சையாம், மனம் பொறிகட்கொருமையே-மனத்திற்கும் இந்திரியங்களுக்கும் ஏகாக்கிரமுண்டாதலே, தவமாம் - தவமாம், ஞானியென - (இம்மகான்) தத்துவஞானியெனக் (கூறித் துதித்து), உலகமெலாம் (பாலர்முதல் பண்டிதரீறுயுள்ள) உலகத்தார் யாவரும், வழிபடல் - வணங்குதலே, சம்வாதம் - சர்வ சம்வாதமாம், ஆன - (பலஜன்மப் பழக்கத்தாலே வருவது) ஆய, மனக்கிலேசமறலே - (அவித்தை முதலிய) மனக்கிலேச மொழிதலே, துக்கவொடுக்கம் - துக்க க்ஷயமாம், அவற்றினால் - அந்த ஞானரட்சை முதலியவற்றால், பந்தமறல்- பிரதிபந்த மற்றிருப்பதே, சுகாவிர்ப்பாவம் - சுகாவிர்ப்பாவமாம், (எ - று). தான் இரண்டும் அசைநிலை. ஞானரட்சை-ஞானத்தைப் பாதுகாத்தல். சுகாவிர்ப்பாவம் - சுக ஆவிர்ப்பாவமெனப் பிரிபடும்; ஆவிர்ப்பாவம் - தோன்றுதல். 167

### முதிதை.

3. புண்ணிய புருஷரைக் கண்டவிடத்து அப் புண்ணிய புருஷரிடத்து விருப்ப முண்டாவதே முதிதையாம்;

### உபேட்சை.

4. தீயகாரியங்களைச் செய்யும் பாவிகளை விருப்பும் வெறுப்புமின்றி விட்டு நீங்குவதே உபேட்சையாம்.

### ஜீவன் முத்தனுக்குரிய பஞ்சப் பிரயோஜனம்.

வினா:—ஜீவன் முத்தனுக்குரிய பஞ்சப் பிரயோஜன மெவை? (166)

விடை:—அவை ஞான ரட்சை, தவம், சர்வசம்வாதம், துக்க க்ஷயம், சுகாவிர்ப்பாவ மென்பனவாம்; அவற்றுள்,

### ஞான ரட்சை.

1. வாசனாக்ஷயத்தாலும் மனோநாசத்தாலும் புத்தி நிர்மலமாயிருப்பதே ஞான ரட்சையாம்;

தத்துவ ஞானத்தால் சித்தத்தின்க ணுள்ள இராகத் துவேஷ முதலிய வாசனைகள் கெடுதல் வாசனாக்ஷயமாம்; வாசனா க்ஷயத்தால் சித்தம் ஆத்ம சொரூபத்தை நோக்கி நின்றடங்கிக் கிடத்தல் மனோ நாசமாம். தத்துவ ஞானம், வாசனாக்ஷயம், மனோநாசமென்னும் இம் மூன்றும் ஒன்றற் கொன்று காரண வடிவமா யிருப்பனவாம். இவற்றின் விரிவைத் தத்துவாநுசந்தானம், ஜீவன்முத்திப் பிரகரணம் முதலியவற்றிற் காண்க. புத்தி நிர்மலமா யிருத்தல் - புத்தி கோரவிருத்தியும் மூடவிருத்தியு மில்லாது சாந்தவிருத்தி யுடையதா யிருத்தலாம்.

(1) தத்துவஞான முண்டாவதற்குச் சிரவணாதிகள் சாதனங்களாம்; (2) காமக்குரோத முதலிய விர்த்தியுண்டாவதற்குக் காரணமாயுள்ள சித்தத்தின் சூட்சுமாவஸ்தையாகிய சம்ஸ்கார வடிவ வாசனை க்ஷயமாவதற்கு மைத்திரி முதலிய வாசனையின் பழக்கம் சாதனமாம்; (3) மனம் நாசமாவதற்குத் தியானஞ் சாதனமாம்.

(1) அகம்பிரஹ்மாஸ்மியென்னும் ஞானம் தத்துவஞானமாம்; (2) மனம் மைத்திரி முதலிய வாசனைகளால், பாகிய நிமித்தத்தால் காமக்குரோத முதலிய விர்த்தி யுண்டாகாதிருப்பதே வாசனாக்ஷயமாம்; (3) மனம் காமக்குரோத முதலிய விர்த்தி வடிவமாகப் பரிணமிப்பதொழிந்து, நிரோதாகாரமாகப் பரிணமிப்பதே மனநாசமாம் என்பதும் இங்குணர்தற்பாலதாம். நிரோதம் - ஒடுங்குதல்.

### தவம்.

2. மனத்திற்கும் இந்திரியங்களுக்கும் ஏகாக்கிரம் (ஒருமுக மாதல்) வருவதே தவமாம்;

(மனம் ஒருமுக மாதல் சமமாம்; இந்திரியங்கள் ஒருமுக மாதல் தமமாம்.)



### சர்வ சம்வாதம்.

3. ஞானதிருஷ்டியை யுடையவனா யிருத்தலால் இவன் தத்துவஞானி யென்று கூறி, அவனைப் பாலர் முதல் பண்டித ரீறாயுள்ள உலகத்தார் யாவரும் ஸ்துதி நமஸ்கார முதலியவற்றைச் செய்வதே சர்வ சம்வாதமாம்;

### துக்க க்ஷயம்.

4. மனக் கிலேச மற்றிருப்பதே துக்க க்ஷயமாம்; மனக் கிலேசமென்றது இங்குப் பஞ்சக் கிலேசங்களையாம். அவை அவித்தை, அஸ்மிதை, ராகம், துவேஷம், அபினிவேச மென்பனவாம். இவ்வைந்தும் கிலேசத்திற்குக் காரணமா யிருத்தல்பற்றிக் காரியவாகு பெயரால் பஞ்சக்கிலேசமென்று கூறப்படுகின்றன.

(1) எது விசாரணைசெய்து நோக்குமிடத்துத் தனக்கென ஒரு வடிவ மில்லா தொழிகின்றதோ அஃது அவித்தையாம்;

அது (க) மூலாவித்தை, (உ) தூலாவித்தையென இருவகைத்தாம்.

(க) சுத்த சைதன்யத்தை மூடிக்கொண்டிருப்பது மூலாவித்தையாம்; (உ) கடபடமுதலிய உபாதிகளையுடைய சைதன்னியத்தை மறைப்பது தூலாவித்தையாம். மூலாவித்தையும் (க) காரண (உ) காரிய பேதத்தால் இருவகைத்தாம்; (க) ஆவரண - விட்சேப சக்திகளோடுகூடி அநாதிபாவரூபமாயிருப்பது காரணாவித்தையாம்; (உ) ஒன்றில் மற்றொன்றன்புத்திவடிவத்தோற்றம் காரியாவித்தையாம். காரியாவித்தையும் (க) அநாத்மாவாகிய தேக முதலியவற்றில் ஆத்மபுத்தியும், (உ) அநித்தியமாகிய ஆகாய முதலியவற்றில் நித்தியபுத்தியும், (ங) துக்கரூப தனாதிகளில் சுகபுத்தியும், (ச) அசுசியான சரீர முதலியவற்றில் சுசிபுத்தியுமென நான்கு வகைத்தாம். இங்குக் கொள்ளத்தக்க அவித்தை இந் நால்வகைக் காரியாவித்தையேயாம்.

(2) புத்தி ஆத்மாக்களி னொருமையுணர்ச்சி அஸ்மிதையாம்; இது சாமானிய அகங்காரமென்றும் கூறப்படும்.

(3) அநுகூல பதார்த்தத்தின் ஞானத்தாலுண்டாகும் புத்திவிருத்தி இராகமாம்.

(4) பிரதிகூல பதார்த்தத்தின் ஞானத்தாலுண்டாகும் புத்திவிருத்தி துவேஷமாம்.

(5) மரணபயத்தால் சரீரத்தைக் காத்தலிலுண்டாகும் ஆக்கிரகம் அபிநிவேசமாம்.

### சுகாவிர்ப்பாவம்.

5. ஞானரட்சை முதலிய அச்சாதனங்கள் சித்தித் திருத்தலால் தான் பிரதிபந்தமற்றிருப்பதே சுகாவிர்ப்பாவமாம்.

(சுகாவிர்ப்பாவம் - ஆத்மாநந்தம் வெளிப்படுதல். பூதப்பிரதிபந்தம், வர்த்தமானப் பிரதிபந்தம், ஆகாமியப்பிரதிபந்தமென்னும் பிரதிபந்தத்திரயமின்றி யிருப்பவர் பரமாநந்தக்கடலாய் விளங்குவாரென்ப திங்குணர்தற்பாலதாம்.)(167)

**168.** குறிகளோர் பத்துளவாம் ஞானமயற் கவைதாங் குரோத மின்மை வைராக்கியம் பொறிபுலன்க ளடக்க, லறமுதவு சமைதமையே சனப்பிரியத் துவமே யலோபமொடு கோடையபய நிருமதமென் றறிக, நெறிமருவு சீடரோடு பத்தருதா சீனர் நிலையில்பா விகளென்னு நால் வகையோ ரிடத்து, முறையினனுக் கிரகம்வந் துறுமருள்கொள் சீவன் முத்தனு லென்பரவை முறையினெடுத் துரைப்பாம்.

---

ஜீவன் முத்தனுக்குரிய தச சின்னம்.

வினு:—ஜீவன் முத்தனுக்குரிய தச சின்னங்களெவை?

விடை:—அவை (1) அக்குரோதம் (கோபமில்லாமை), (2) வைராக்கியம், (3) ஜிதேந்திரியத்துவம், (4) சமை (சமம்), (5) தமை (தமம்), (6) ஜனப்பிரியத்துவம் (பாலர் முதல் பண்டிதரீருயுள்ள யாவரிடத்தும் பிரியமா யிருத்தல்), (7) அலோபம் (உலோபகுண மில்லாமை), (8) கொடை (ஈகை), (9) அபயம் (பயமின்மை), (10) நிர்மதம் (யானெனதென்னும் செருக்கில்லாமை) என்பனவாம்.

ஞானியால் மக்கட்குண்டாம் நன்மை.

வினு:—அந்தச் சீவன் முத்தனுகிய ஞானியால் சிஷ்யர், பத்தர், உதாசீனர், பாவிகளென்னும் நால்வகையோர்க்கும் எவ்வாறு அநுக்கிரகமுண்டாகின்றது? (168)

---

(இ - ள்.) ஞானமயற்கு - ஞானசொரூபமாக விளங்கும் ஜீவன் முத்தனிடத்து, ஓர் பத்துக்குறிகள் - ஒப்பற்ற பத்தடையாளங்கள், உளவாம் - உள்ளனவாம், அவை - அவ்வடையாளங்கள், குரோதமின்மை - துவேஷமில்லாமையும், வைராக்கியம் - (இகபரலோக போகங்களில்) வைராக்கியமும், பொறிபுலன்களடக்கல் - இந்திரியங்களை விஷயங்களில் செல்லாவா றடக்குதலும் (ஜிதேந்திரியத்துவமும்), அறமுதவு - புண்ணிய முண்டாதற்கேதுவாயுள்ள, சமை - சமையும் (மனவடக்கமும்), தமை - தமையும் (இந்திரியவடக்கமும்), சனப்பிரியத்துவமே - ஜனப்பிரியத்துவமும் (சர்வ ஜனங்களிடத்தும் பிரியமாயிருத்தலும்), அலோபமொடு - உலோபமின்மையும், கொடை - (தன்னிடத்துள்ளதைப் பிறர்க்கு இல்லையென்னுது) கொடுத்தலும், அபயம் - (மரண) பயமில்லாமையும், நிருமதம் - செருக்கில்லாமையும், (ஆம்), என்றறிக - என்று (நீ அவற்றை) அறிவாயாக, அருள்கொள் - (தனக்கு வடிவமாகக்) கருணையைக்கொண்டுள்ள, சீவன் முத்தனுல் - ஜீவன் முத்தனுலே, நெறிமருவு - சன்மார்க்கத்திற் பொருந்தியொழுகுகின்ற, சீடரொடு - சிஷ்யரும், பத்தர் - பத்தரும், உதாசீனர் - உதாசீனரும், நிலையில் - (சன்மார்க்கத்தில்) நிலைபெறுதலில்லாத, பாவிகள் - பாவிகளும், என்னும் நால்வகையோரிடத்தும் - என்று கூறப்படுகின்ற நான்கு திறத்தாரிடத்தும், முறையின் - கிரமமாக, அநுக்கிரகம் வந்துறும் - அநுக்கிரகமானது வந்து பொருந்தவதாம், என்பர் - என்று (அவ்வனுக்கிரகவகையை யறிந்த மேலோர்) கூறுவர், அவை - அவ்வநுக்கிரக வகையை, முறையின் - கிரமமாக, எடுத்துரைப்பாம் - எடுத்துக்கூறுவாம், (எ - று). தாமும் ஏயும் அசைநிலையாம். வைராக்கியம் - விருப்பமில்லாமை.





**169.** தெரிவரிய சீவன்முத்தன் றனைநம்பு மதனுற் சீடர்க்கு முத்தியுமன் போவேழிபா டதனைப், புரியுமுயர் பத்தர்க்கு நல்வினையு மவன்றன் புனிதமுறு சரிதமது கண்டவுதா சீனர்க், குரியபுண் ணியவிருப்பு மவன்றன்வடி வினைக்கண் ணுறுதன்முத லானவற்றுற் பாவிகட்குப் பாவ, விரிவுமுறு மென்பர்தருக் காதியா லாத லெங்ஙனெனின் முத்தனுற் பிரமோப தேசம்.

---

விடை:—1. ஞானியைப் பிரத்தியட்சமாகக் கண்ட பரமசிவமென்று நம்புகின்ற சிஷ்யர்க்கு அதனுல் முத்தியுண்டாவதாம்;

2. அவனை அன்போடு வணங்கித் துதிக்கும் பக்தர்க்கு அதனுல் புண்ணியமுண்டாவதாம்;

3. அவனது பரிசுத்தமான சரித்திரத்தை (ஒழுக்கத்தை)க் கண்டறிந்த உதாசீனர்க்கு அதனுல் புண்ணியகருமம் (நல்வினை) செய்வதன்கண் விருப்பமுண்டாவதாம்; (உதாசீனர் - விருப்பு வெறுப்பில்லாதவர்).

4. அவனது வடிவத்தைத் தரிசித்தல் பரிசித்தல் முதலியவற்றையுடைய பாவிகளுக்கு அவற்றுல் பாவக்ஷய முண்டாவதாம். (பாவ க்ஷயம் - பாவங் கெடுதல்).

(ஞானியினது பரிசுத்தமான சரித்திரத்தைக் கண்டிகழ்பவனுக்கு அதனுல் புண்ணிய க்ஷயமுண்டாவதாமென்பதுமிங் குணர்தற்பாலதாம்.)

வினு:—ஜீவன் முத்தன் கர்த்துருத்துவமுதலிய கருமமில்லாதவனு யிருத்தலின், அவன் அநுகூலதருக்க திருஷ்டாந்த யுக்திகளோடு சிஷ்யர்க்குப் பிரஹ்மோபதேசஞ் செய்வது எவ்வாறம்? (169)

---

(இ - ள்.) தெரிவரிய - (மூவுலகத்தினும்தேடி) அறிதற்கரிய, சீவன் முத்தன்றனை - ஜீவன்முத்தனை, நம்புமதனுல் - (இச்சற்குருமூர்த்தி பரமசிவமேயென்று) நம்பியொழுகுவதால், சீடர்க்கு - சிஷ்யர்க்கு, முத்தியும் - (தத்துவோபதேசத்தால்) முத்தியும், அன்பொடு - அன்புடனே, வழிபாடதனைப் புரியும் - (சிசுருடையென்னும்) ஏவற்றெழிலைச்செய்யும், உயர்பத்தர்க்கு - மேன்மைபொருந்திய பத்தர்க்கு, நல்வினையும் - புண்ணியமும், அவன்றன் - அச்சீவன்முத்தனது, புனிதமுற - பரிசுத்தம்பொருந்திய, சரிதமது - சரித்திரத்தை, கண்ட - (நேரே) கண்டறிந்த, உதாசீனர்க்கு - உதாசீனர்க்கு, உரிய - (மேன்மைதருதற்கு) உரிமையாயுள்ள, புண்ணியவிருப்பும் - புண்ணியகிருத்திய விருப்பமும், அவன்றன்வடிவினை - அச்சீவன்முத்தனது திருமேனியை, கண்ணுறுதல் முதலானவற்றுல் - தரிசித்தல் (நமஸ்கரித்தல்) முதலாகவுள்ள நற்கருமங்களைச்செய்வதால், பாவிகட்கு - பாவிகளுக்கு, பாவஇரிவும் - பாவநிவிர்த்தியும், உறும் - உண்டாவனவாம், என்பர் - என்று (இங்ஙனம் அனுக்கிரக வகையையறிந்தமேலோர்) கூறுவர், முத்தனுல் - (கர்த்துருத்வாதி கர்மமில்லாத) ஜீவன் முத்தனுல், தருக்காதியால் - தருக்க முதலியவற்றைக்கொண்டு, பிரமோபதேசம் - (சிஷ்யர்க்குப்) பிரஹ்மோபதேசம் செய்வது, எங்ஙன் ஆதல் - எப்படி பொருந்துவதாம், எனின் - என்று வினுவுவாயாயின், (எ - று). ஆதியென்றமையின், யுக்தி, அனுமானம், அனுபவமென்பனவற்றையுங் கொள்க. உதாசீனர் - விருப்புவெறுப்பில்லாதவர். புண்ணியகிருத்திய விருப்பம் - நல்வினைசெய்வதிற் பிரியம்.

**170.** மறைப்பகலு மொருபிரம சொரூபமா தலினுன் மகிழ்ச்சி
வெறுப் பிலாவீசற் கனுக்கிரகஞ் செயவு, மொறுப்புறவும் வரும்வினையி
னோராலத் தொழில்க ளுறுதல்போற் சாதகர்தம் பக்குவபே தத்தாற்,
சிறப்புறுநல் லுபதேசா திகண்ஞானிக் கெய்துஞ் செப்பியவிவ் விலக்
கணமோ டிராதுபல முறையாற், றுறப்பிலருட் சீவன்முத்த ரிருப்ப
தென்கோ லென்னிற் றுணிவுதோன் றறமுதுநூ றோகுத்தபரி சுரைப்பாம்.

---

விடை:—அஞ்ஞான மறைப்பின்றிய பிரஹ்ம சொரூபமாயிருத்தலால் இராகத்துவேஷ முதலியன இல்லாதுள்ள ஈசுவரனுக்குப் புண்ணிய பாவகருமங்களைச் செய்யும் ஜீவர்களது புண்ணிய பாவ வசத்தால் அவர்களுக்கு அநுக்கிரகஞ்செய்தலும் நிக்கிரகஞ் செய்தலுமாகிய சேஷ்டை யுண்டாவதுபோல, அஞ்ஞான மறைப்பின்றிய பிரஹ்ம சொரூபமாயிருத்தலால் இராகத்துவேஷ முதலியனவில்லாதுள்ள ஞானிக்கும், சாதகாது (சிஷ்யாது) புண்ணியகரும முதலியவற்றின் பிரபாவத்தால் அவர்களுக்கு(இரட்சித்தலும் சிட்சித்தலுமாகிய) பிரஹ்மோபதேசஞ் செய்தல் உண்டாவதாம்.

வினா:—ஜீவன் முத்தர் மேற்கூறிய இலக்கணங்களோடிராது பலவிதமாயிருப்பதேன்?

விடை:—அவர்கள் அவ்வாறிருப்பதற்குக் காரணம் அவரவர்தம் பிராரத்த கரும சம்ஸ்காரங்களாம்.

**பிராரத்த கரும சம்ஸ்கார சதுஷ்டயம்.**

வினா:—அவற்றை விளக்கமாகக் கூறல் வேண்டும்? (170)

---

(இ - ள்.) மறைப்பகலும் - (இயல்பாகவே) ஆவரணம் நீங்கியுள்ள, ஒரு - ஒப்பற்ற, பிரமசொரூபமாதலினால் - பிரஹ்மசொரூபமாயிருத்தலால், மகிழ்ச்சி வெறுப்பிலாத - இராகமும் துவேஷமுமில்லாதுள்ள, ஈசற்கு - ஈசுவரனுக்கு, வரும் - (அநாதியாகச் சம்சாரபந்தத்திற்பொருந்தி) வருகின்ற, வினையினோரால் - நல்வினை தீவினைகளையுடைய ஜீவர்களால்,(ஜீவர்களது புண்ணியபாவவசத்தால்) (அவர்களுக்கு), அநுக்கிரகஞ்செயவும் - அநுக்கிரகஞ்செய்தலும், ஒறுப்புறவும் - நிக்கிரகஞ்செய்தலும், (ஆகிய), அத்தொழில்கள் - அச்சேஷ்டைகள், உறுதல்போல் - உண்டாதல்போல,ஞானிக்கு - ஜீவன்முத்தனுக்கும், சாதகர்தம் (ஞான) சாதனஞ்செய்பவரது, பக்குவபேதத்தால் - பரிபக்குவபேதத்தால், (அவர்களுக்கு), சிறப்புறு - மேன்மைபொருந்திய, நல்லுபதேசாதிகள்-சிறந்த ஞானோபதேச முதலியவற்றைச்செய்தல், எய்தும் - உண்டாவதாம். துறப்பில் - நீங்குதலில்லாத, அருள் - கருணையையுடைய, சீவன்முத்தர் - ஜீவன்முத்தர்கள், செப்பிய - (இதுகாறும்) கூறிய, இவ்விலக்கணமொடிராது - இந்தலட்சணங்களோடிராமல், பலமுறையால் - பலவிதமாக, இருப்பது - இருத்தல், என் - என், என்னின் - என்று வினாவுவாயாயின், (உனக்கு), துணிவுதோன்றுற-(அவரவ்வாறிருத்தல் கூடுமென்னும்) நிச்சயமுண்டாமாறு, முதுநூல் தொகுத்த பரிசு - பழைமையான வேதாந்த சாஸ்திரங்கள் தொகுத்துக்கூறியவிதமாக, (அதனை), உரைப்பாம் - கூறுவாம், (எ - று). கொல் - அசைநிலை. அநுக்கிரகம் - கிருபை; நிக்கிரகம் - தண்டனை; பேதம் - தாரதம்மியம். 170



**171.** வந்தணையும் பிராரத்த வாசனைதீ விரமே மத்தியமந் தஞ்
சுத்த மெனவொருநான் காகும்,பந்தமறு ஞானியா யினும்போகத் தழுந்
திப் பசுப்போலத் தன்மகிழ்ச்சி மாத்திரமா யிருத்தன், முந்துரைசெய்
தீவிரம்போ கச்சிறப்புற் றிடினு மொழியான்ம தற்பரனாய் விநோதமே
புரிந்து, மைந்தரென விருத்தன்மத் தியம்போக மனைத்து மாற்றிமிது னம்
போலா நந்தமுறன் மந்தம்.

---

விடை:—பிராரத்தகருமசம்ஸ்காரம் தீவிரம், மத்தியம், மந்தம், சுத்தமென்று நால்வகைத்தாம்; அவற்றுள்,

**தீவிர பிராரத்த கரும சம்ஸ்காரம்.**

1. ஒருவன் ஐயத்தி னின்றும் நீங்கித் தெளிந்த ஞானியா யிருப்பினும், அவன் (விஷய) போகத்திலே யழுந்தி, பசுவைப்போல ஆத்மப் பிரீதிமாத்திரமா யிருப்பதே தீவிர பிராரப்த கரும சம்ஸ்காரமாம்;

**மத்திய பிராரத்த கரும சம்ஸ்காரம்.**

2. ஞானி விஷய போகங்களை மிகுதியாகப்பெற்றாலும், ஆத்ம தற்பரனாய் (ஆத்மாவிலேயே கருத்து உள்ளவனாய்)ப் பாலரைப் போலப் பலவிளையாடலைச் செய்துகொண்டிருப்பதே மத்திய பிராரத்த கரும சம்ஸ்காரமாம்;

**மந்தப் பிராரத்த கரும சம்ஸ்காரம்.**

3. ஞானி (விஷய) போகமனைத்தையும் மாற்றி, மிதுனம்போல ஆநந்தமுற்றிருப்பதே மந்தப் பிராரத்த கரும சம்ஸ்காரமாம்; (மிதுனம்போல என்பதற்குக் காதலனும் காதலியும் கருத்தொத்துக் கூடி அனுபவிக்கும் ஆநந்தம் போல என்று பொருள் கொள்க.) (171)

---

(இ - ள்.) வந்தணையும் - (ஜிவன்முத்தர் தன் பயனை யனுபவித்துத் தன்னை நீக்குதற்பொருட்டு, அவரிடத்து) வந்துபொருந்துகின்ற, பிராரத்தவாசனை-பிராரப்த கருமசம்ஸ்காரம், தீவிரமே மத்திய மந்தஞ் சுத்தமென - தீவிரம் மத்தியம் மந்தம் சுத்தமென்று, ஒருநான்காகும் - ஒப்பற்ற நான்குவகையதாம், (அவற்றுள், ஒருவன்), பந்தமறு - சம்சாரபந்தமற்றுள்ள, ஞானியாயினும் - தத்துவஞானியாயிருப்பினும், (அவன்), போகத்தழுந்தி - (உலக)போகத்திலழுத்தமுடையவனாய், பசுப்போல - பசுவைப்போல, தன்மகிழ்ச்சி மாத்திரமாய் - ஆத்மப்பிரீதிமாத்திரமாய், இருத்தல் - இருப்பதற்குக் காரணமாயிருப்பது, முந்துரைசெய் - முன்னர்க்கூறிய, தீவிரம் - தீவிர(பிராரப்தகரும) சம்ஸ்காரமாம், (ஒருதத்துவஞானி), போகச்சிறப்புற்றிடினும் - (தானனுபவிக்கும்) போகத்தில் தலைமை பொருந்தியவனாயிருப்பினும், (எப்போதும் அவன்), மொழி - (மேலோர் புகழ்ந்து) கூறுகின்ற, ஆன்மதற்பரனாய் - ஆத்மநோக்குடையவனாய், மைந்தரென - பாலரைப்போல, விநோதமேபுரிந்து - (பல)விளையாடல்களைச்செய்து, இருத்தல் - இருப்பதற்குக்காரணமாயிருப்பது, மத்தியம் - மத்திய (பிராரப்த கரும) சம்ஸ்காரமாம், (ஒருதத்துவஞானி), போகமனைத்துமாற்றி - (தானனுபவித்தற்குரிய) போகமனைத்தையும் (வைராக்கியத்தால்) நீக்கி, மிதுனம்போல் - மிதுனம்போல (காதலனும் காதலியும் கருத்தொத்துக்கூடியனுபவிக்கும் ஆநந்தம் போல), ஆநந்தமுறல் - ஆநந்தமுற்றிருப்பதற்குக் காரணமாயிருப்பது, மந்தம் - மந்த (பிராரப்தகரும) சம்ஸ்காரமாம், (எ - று). எ - அசை. 171

**172.** உலகவழக் ககன்றுநிரு பாதிகான் மாவி லுற்றதற் பரனுகிப்
பரமுத்த னெனவே, யிலகுசுகத் துடனிருத்தல் சுத்தவா சனையா
மென்பரிந்நால் வகையாகுங் கருமவா சனையாற், றலைமைகோண்முத்
தர்கள்வேறு வேருய வொழுக்கஞ் சாரினுஞ்சேந் நெறிகோண னெறி
பெறுமா நதிக, ளலைகடலிற் புகுதல்போன் முடிவினின்மெய்ப் பரமா
யமர்தருநன் முத்திசுக மொருபரிசேன் றறியே.

---

சுத்தப் பிராரத்த கரும சம்ஸ்காரம்.

4. ஞானி உலக வியவகாரஞ் செய்வதனினின்றும் நீங்கி, நிருபாதிக ஆத்மாவின்கண் (சுத்தப்பிரஹ்மத்தின்கண்) பொருந்திய கருத்துடையவனுய், விதேக முத்தனைப்போலப் பேரானந்தத்தோடிருப்பதே சுத்தப் பிராரத்த கரும சம்ஸ்காரமாம்.

(இந் நான்கிடத்தும் இருப்பதென்பதற்கு இருப்பதற்குக் காரணம் என்று பொருள் கொள்க.)

வினு:—இவ்வாறுள்ள ஜீவன் முத்தர் முடிவி லெவ்வாறவர் ?

விடை:—ஜீவன் முத்தர்கள் இந்நால்வகையாயுள்ள பிராரத்த கரும சம்ஸ்காரங்களால் நாநாவிதமான ஒழுக்க முடையவராயிருப்பினும், நேராகச் செல்லும் மார்க்கத்தையும் வளைவாகச்செல்லும் மார்க்கத்தையும் பெற்றுள்ள பெரிய நதிகளெல்லாம் முடிவில் சமுத்திரத்திற் பிரவேசித்து ஒருவிதமாயிருத்தல்போல, முடிவில் (தேகாந்தத்தில்) பிரஹ்ம சொரூபமாகவே யிருக்கின்ற முத்தியின்பம் ஒரு விதமாகவே யிருப்பதாம். (172)

---

(இ - ள்.) உலகவழக்ககன்று-(ஒருதத்துவஞானி) உலகவியாபாரம் (அனைத்தும்) நீங்கினவனுய், நிருபாதிகான்மாவில் - (மாயாப்பிரபஞ்ச) உபாதியில்லாதுள்ள ஆத்மாவின்கண், உற்ற - பொருந்திய, தற்பரனுகி - நோக்கமுடையவனுய், பரமுத்தனெனவே - விதேகமுத்தனைப்போல, இலகு - (மாருது) விளங்குகின்ற, சுகத்துடனிருத்தல் - பரமாநந்தத்தோடிருப்பதற்குக் காரணமாயிருப்பது, சுத்தவாசனையாம் - சுத்த (பிராரப்தகரும) சம்ஸ்காரமாம், என்பர் - என்று (மேலோர் பிராரப்தகரும சம்ஸ்காரவகையைக்) கூறுவர், இந்நால்வகையாகுங் கருமவாசனையால் - இந்த நான்குவிதமாயுள்ள பிராரப்தகரும சம்ஸ்காரத்தால், தலைமைகொள் - பெருந்தன்மையை (மாருது) கொண்டுள்ள, முத்தர்கள் - ஜீவன்முத்தர்கள், வேறுவேருய-(தம்முள்) வேறுவேருகவுள்ள (நாநாவிதமான), ஒழுக்கஞ்சாரினும் - ஒழுக்கங்களைப்பொருந்தினவராய் (இருப்பர்; அங்ஙனம்) இருப்பினும், செந்நெறிகோணனெறி - (தாம்செல்ல) நேரான வழியையும் கோணலான வழியையும், பெறுமாநதிகள் - பெற்றுள்ள பெருநதிகள், (முடிவில்), அலைகடலில் - (அலைகளால்) அசைகின்ற கடலில், புகுதல்போல் - பிரவேசித் தொருவிதமாயிருத்தல்போல, முடிவினில் - தேகாந்தத்தில், மெய்ப் பரமாயமர்தரு - சத்ரூபப் பிரஹ்மமாய்ப் பொருந்தியிருக்கின்ற, நன்முத்தி சுகம் - சிறந்த மோட்சாநந்தம், ஒருபரிசு - ஒருவிதமாகவே யிருப்பதாம், என்றறி - என்று (இதனைநீ) அறியக்கடவாய், (எ - று). நிருபாதி கான்மா என்பது நிர் - உபாதிக - ஆன்மா எனப் பிரிபடும். உபாதிகம் - உபாதியுடையது. ஏ - அசை.

172



**173.** இச்சையுட னநிச்சைபிற ரிச்சையேனு மிவற்ரு லியம்ப
லுறு பிராரத்த மூன்றுவகைப் படுமோ,லச்சுரர்க ளானும்விலக் குதற்கரிய
வாகு மபத்தியஞ்சேய் திடறனக்கே கேடேனவிங் கறிந்து, வைச்சுமது
புரிவித்த லிச்சைசெய்யே னெனினு மன்னவர்தம் மாணைபோற் சேய்
வித்த லநிச்சை, யிச்சையநிச் சைகளின்றி யிருந்துமய லோரா லின்ப
துன்ப நுகர்வித்தல் பிறரிச்சை வினையாம்.

---

பிராரத்தத் திரயம்.

வினு:—பிராரத்தத் திரய மேவை?

விடை:—அவை இச்சாப் பிராரத்தம், அநிச்சாப் பிராரத்தம், பரேச்சாப் பிராரத்த மென்பனவாம்.

இவை பிரஹ்மன் முதலிய தேவர்களாலும் நீக்கக்கூடாதனவாம்.

இச்சாப் பிராரத்தம்.

1. ஒருவன் அபத்தியம் செய்வது (பத்தியந் தவறுதல்) தனக்குத் துன்பம் தருவதாமென் றறிந்திருந்தாலும், அதனைச் செய்விப்பதே (அவன் அபத்தியத்தை யிச்சை மிகுதியால் விடாது செய்யுமாறு செய்வதே) இச்சாப் பிராரத்தமாம்;

அநிச்சாப் பிராரத்தம்.

2. ஒருவன் கொலை முதலியவற்றைச் செய்ய யான் விரும்பமாட்டேனென்றிருந்தாலும், அரசாது கட்டளைபோல அவற்றைச் செய்விப்பதே (அவன் அரசாது கட்டளையைப்போலக் கொலை முதலியவற்றைக் கட்டாயமாகச் செய்யுமாறு செய்வதே) அநிச்சாப் பிராரத்தமாம்;

பரேச்சாப் பிராரத்தம்.

3. ஒருவன் எதனிடத்தும் இச்சையும் அநிச்சையு மில்லாதிருந்தாலும், பிறாது இச்சை காரணமாக அவனுக்குச் சுகதுக்கங்களை அனுபவிக்கச்செய்வதே

---

(இ - ள்.) இயம்பலுறு - (முன்னர்க்) கூறிய, பிராரத்தம் - பிராரப்தகரு
மம், இச்சையுடன் - இச்சாப்பிராரப்தமும், அநிச்சை - அநிச்சாப்பிராரப்தமும்,
பிறரிச்சை - பரேச்சாப்பிராரப்தமும், எனுமிவற்ருல் - என்று கூறப்படுமிவற்
ருல், மூன்று வகைப்படும் - மூன்று விதமாக இருப்பதாம், (இவை), அச்சுரர்
களானும் விலக்குதற்கரியவாகும் - அந்தப் பிரமன் முதலிய தேவர்களாலும்
நீக்குதற்குக் கூடாதனவாம், (அவற்றுள்), இங்கு - இவ்வுலகத்தில், (ஒருவன்),
அபத்தியஞ் செய்திடல் - பத்தியந்தவறுதல், தனக்குக் கேடெனு - தனக்குக்
கேடு (உண்டாக்குவதாகும்) என்று, (அதனை), அறிந்து வைச்சும் - அறிந்திருந்
தாலும், அது புரிவித்தல் - (இச்சை மிகுதியால் விடாது) அதனைச் செய்விப்
பது, இச்சை - இச்சாப்பிராப்த கருமமாம், செய்யேனெனினும் - (ஒருவன்
யான் இத் தீயகாரியத்தைச்) செய்யமாட்டேனென்றிருந்தாலும், மன்னவர்தம்
ஆணைபோல் - அரசாது கட்டளையைப்போல(இராஜாக்கினையைப்போல,)(பலாத்
காரமாக),செய்வித்தல் - (அதனைச்) செய்விப்பது, அநிச்சை - அநிச்சாப்பிராரப்த
கருமமாம், (ஒருவன் தான்குறித்த சுகதுக்கங்களை யனுபவிப்பதன்கண்), இச்சை
யநிச்சைகளின்றி யிருந்தும் - இச்சை அநிச்சைகளில்லாதிருந்தாலும், அயலோ
ரால் - அன்னியரால், (அன்னியாது தாட்சண்யங்காரணமாக), (அவனை), இன்ப
துன்ப நுகர்வித்தல்-(அந்தச்) சுகதுக்கங்களை யனுபவிக்கச்செய்வது, பிறரிச்சை
வினையாம் - பரேச்சாப்பிராரப்த கருமமாம், (எ - று). ஆல்-ஏ-அசைநிலை. செய்
விப்பது - செய்யும்படி செய்வது.

173

**174.** இப்பரிசு மூவகையாம் பிராரத்த விளைவா லெண்ணில்
பல வொழுக்கமாஞ் சீவன்முத்தர்க் கிந்த, மெய்ப்பொருளை வசிட்டஞு
ரதன்றுருவா சன்சீர் வியாதனேடு சுகன்வாம தேவனருட் சனக, ஞெப்
பரிய பரதனெழிற் கௌதமனே முதலா யுளர்வருத்த ஞபேத முணர்த்த
லுற மிங்ஙன், றப்புதவு பிராரத்தங் கொளினஞ்ஞா னிக்குஞ் சுத்தனுக்
கும் வேறுபா டெங்ஙனெனின் மொழிவாம்.

---

(பிறாது இச்சை காரணமாக அவன் பத்திய - அபத்தியங்களைச் செய்து, அவற்ருல் சுகதுக்கமடையுமாறு செய்வதே) பரேச்சாப் பிராரத்தமாம். (173)

ஜீவன் முத்தாது விசித்திர சரித்திரம்.

வினு:—இம் மூவகைப் பிராரத்த கருமானுசாரமாகச் சீவன் முத்தர்க்கு அளவிறந்த பல ஒழுக்கங்க ளுளவாமேன்பதை எவரேவாது விசித்திர சரித்திரங்க ளுணர்த்தும்?

விடை:—அவ்வொழுக்கங்களை வசிஷ்டர், நாரதர், தூர்வாசர், வியாசர், சுகர், வாமதேவர், ஜனகர், ஜடபரதர், கௌதமர், (யாஞ்ஞவல்கியர், பிரகலாதர், வான்மீகர், விசுவாமித்திரர், தத்தாத்துரேயர், ஸநகாதியர், அனுமார், பிருகு, சௌபரி, ததீசி, பரத்துவாஜர்) முதலாக உள்ள ஜீவன் முத்தாது ஒழுங்கங்களின் தாரதம்மியங்கள் (விசித்திர சரித்திரங்கள்) உணர்த்துவனவாம்.

"கிருஷ்ஞே போகீ சுகஸ் தியாகீ ராஜாநௌ ஜநகராகவௌ-வசிஷ்ட கர்மகர்த்தாச த ஏதே ஞாநிநஸமா: கிருஷ்ணன் போகி, சுகர் தியாகி, ஜநகரும் இராமரும்அரசர்கள், வசிஷ்டர் கர்மகர்த்தா; இவ்வாறு பிராரப்த கர்மபேதங்களால் இவர்களது வியவகாரங்கள் வேறு வேருகவிருந்தாலும், ஞான விஷயத்தில் அவர்களும் இவர்களும் (இக்காலத்தவரும்) ஆகிய ஞானிகள் சமானமாயிருக்கின்றனர்" என்பது சம்பிரதாயமாக வழங்கப்பட்டுவரும் சுலோகமாம். தத்தாத்திரேயர் உன்மத்தர்போன்றும், நாரதர் கானலோலர்போன்றும், பிரகலாதர் பக்திசெய்பவர் போன்றும், ஸநகாதியர் யோகிகள்போன்றும், அநுமார் தூதர்போன்று மிருந்தனரென்று சாஸ்திரங்கள் கூறுவது மிங்குணர்தற்பாலதாம்.

---

(இ - ள்.) சீவன் முத்தர்க்கு - ஜீவன் முத்தர்களுக்கு, இப்பரிசு - இவ்வாறு, மூவகையாம் - மூன்று விதமாயுள்ள, பிராரத்தவிளைவால் - பிராப்த கருமமுண்டாவதால், எண்ணில் - எண்ணுதலில்லாத (அளவற்ற), பலவொழுக்கமாம் - நாநாவிதமாய ஒழுக்கங்களுண்டாம், இந்த மெய்ப்பொருளை - இந்த உண்மைப் பொருளை, வசிட்டன் - வசிட்ட முனிவரும், நாரதன் - நாரதமுனிவரும், துருவாசன் - துருவாச முனிவரும், சீர்-மேன்மையையுடைய, வியாதனெடு - வியாசமுனிவரும், சுகன் - சுகமுனிவரும், வாமதேவன் - வாமதேவ முனிவரும், அருள் - கருணைபொருந்திய, சனகன் - சனகவேந்தனும், ஒப்பரிய - ஒப்பில்லாத, பரதன் - ஜடபரதமுனிவரும், எழில் - அழகமைந்த, கௌதமன் - கௌதமமுனிவரும், முதலாயுளர் - முதலாகவுள்ள ஜீவன் முத்தாது, வருத்தனுபேதமே - ஒழுக்கபேதமே (நடையின் வேறுபாடே), உணர்த்தலுறும் - அறிவிப்பதாம், இங்ஙன் - இவ்வாறு, துப்புதவு - (சுகதுக்கவடிவப்) போகத்தைத் தருகின்ற, பிராரத்தம் - பிராரப்த கருமத்தை, கொளின் - (ஜீவன் முத்தர்க்கு முண்டென்று) கொண்டால், அஞ்ஞானிக்கும் சுத்தனுக்கும் - அஞ்ஞானிக்கும் ஞானிக்கும், வேறுபாடு - (உள்ள) பேதம், எங்ஙனெனின் - எப்படியாமென்றால், மொழிவாம் - (அதற்கு விடை) கூறுவாம், (எ - று). எகாரம் - பிரித்துக் கூட்டப்பட்டது. வர்த்தனு - ஒழுக்கம்; பேதம் - வேறுபாடு. 174



**175.** மண்ணுலகில் விராத்திரியர் சுரோத்திரியர் தமக்கு மறை
யொழித லோதலா லன்றியுணன் முதலா, வெண்ணவருஞ் செயலால்
வே றிலாமையது போல விதயபந்த முறலொழித லாலன்றிப் போக,
முண்ணுநிலை யதனுலஞ் ஞானமுடை யோர்க்கு முணர்வுமய மாய்
நின்ற சீவன்முத்தர் தமக்கு, நண்ணிவரும் வேறுபா டிலையெனவே
நவில்வர் ஞானநூல் பலவுணர்ந்த நல்லுணர்வி னவரே.

---

அஞ்ஞானிக்கும் ஞானிக்குமுள்ள பேதம்.

வினு:—இவ்வாறு ஞானிக்கும் பிராரத்த கரும முண்டென் றங்கீகாரஞ் செய்தால், அஞ்ஞானிக்கும் ஞானிக்குமுள்ள பேதம் யாதாம்? (174)

விடை:—விராத்திரியர்க்கும் சுரோத்திரியர்க்கும் முறையே வேதாத்தியயனம் செய்யாமை வேதாத்தியயனஞ் செய்த லென்பனவற்ருல் பேதமே யன்றி, உண்ணல் உறங்கல் முதலிய செயல்களால் பேதமில்லையாம்; அதுபோல, அஞ்ஞானிக்கும் ஞானிக்கும் முறையே இதயபந்த முறல் இதயபந்த முருமை யென்பனவற்ருல் பேதமே யன்றி உண்ணல் உறங்கல் முதலிய செயல்களால் பேதமில்லையாம்.

இதய (இருதய) பந்தமுறல் - சித்தம் ஆசை - கோபம் - அகந்தை முதலியவற்றின் வசமா யிருத்தலாம்; இதயபந்த முருமை - சித்தம் ஆசை, கோபம், அகந்தை முதலியவற்றின் வசமாயிராமையாம். "எவனுடைய மனப்புற்றி விராகமுனி வெனும்பணிக ளியக்கமில்லை, அவனெனுங்கற் பகத்தருவா லனுகாத தொன்றுண்டோ" என்று ஞானவாசிட்டங் கூறுவதாலும் இதயபந்தமுருமையின் தன்மை யினிது விளங்குவதாம்.

"அஞ்ஞானியோ பந்தத்திற் கிருப்பிடம்; ஞானி மோட்சத்திற் கிருப்பிடம்; இராகமும் விராகமும் அவர்களது கொடிகள். எங்ஙனம் கொடி இராஜாவின் பட்டணத்திற் கடையாளமாக விருக்கின்றதோ அங்ஙனம் அஞ்ஞானிக்கு இராகமும் ஞானிக்கு விராகமும் அடையாளங்களாகவிருக்கின்றன. அஞ்ஞானிக்கு இராகம் குறி; ஞானிக்கு விராகம் குறி.** அஞ்ஞானியின் அந்தக்கரணத்தில் சாட்சியரூப மூர்த்தியிருக்கின்றது; ஞானியின் அந்தக்கரணத்தில் சாட்சிரூபமூர்த்தியிருக்

---

(இ - ள்.) மண்ணுலகில் - இம்மண்ணுலகத்தில், விராத்திரியர் - விராத்திரியர்க்கும், சுரோத்திரியர் தமக்கு - சுரோத்திரியர்க்கும், மறையொழிதல் (ஆல்) - வேதாத்தியயனஞ் செய்யாமையாலும், ஓதலால் - வேதாத்தியயனஞ் செய்வதாலும், அன்றி - (பேதமே) அல்லாமல், உணல்முதலாக-உண்ணல் (உடுத்தல்) முதலாக, எண்ணவருஞ் செயலால் - எண்ணுதற்கு வருகின்ற செயலாலே, வேறிலாமையதுபோல - பேதமில்லாமைபோல, அஞ்ஞான முடையோர்க்கும் - அஞ்ஞானிகளுக்கும், உணர்வு மயமாய்நின்ற சீவன் முத்தர் தமக்கும் - ஞான சொரூபமாய் விளங்குகின்ற ஜீவன் முத்தரென்னும் ஞானிகளுக்கும், இதயபந்த முறல் (ஆல்) - இருதயக்கிரந்தி யுற்றிருப்பதாலும், ஒழிதலால் - இருதயக்கிரந்தி யொழிந்திருப்பதாலும், அன்றி - (பேதமே) அல்லாமல், போக முண்ணும் - (சுகதுக்க வடிவப்) போகத்தை யனுபவிக்கும், நிலையதனுல் - ஸ்திதியினுல், நண்ணிவரும் - பொருந்திவருகின்ற, வேறுபாடிலையென - பேதமில்லையென்று, ஞானநூல் பலவுணர்ந்த - ஞானசாஸ்திரம் பலவற்றை யாராய்ந்தறிந்துள்ள, நல்லுணர்வினவர் - பேரறிவுடையவர், நவில்வர் - (அவ்விருவர்க்குமுள்ள பேதத்தைக்) கூறுவர், (எ - று). விராத்திரியர் - வேதாத்தியயனஞ் செய்தற்கதிகாரமில்லாதவர்; சுரோத்திரியர் - வேதாத்தியயனஞ் செய்தற்கதிகார முடையவர். 175

**176.** தத்துவஞா னத்தினாற் பிரமமடைந் திடுமேற் றறுகண்வரிப் புலிகண்டோன் போற்சீவத் துவமே, யத்தலையே யழிந்திடுமோ தலினா லச் சீவ னழிவுதனக் குடன்படுமோ வேனிற்கடவுட் டன்மைக், குய்த் தவா தரவினாற் கங்கைமுத லவற்று ளொழிப்பதனுக் கிசைவர்நரத் துவ மதுபோ லென்றும், பொய்த்தலிலாத் துரியவடி வாம்பிரமத் துவத்திற் பொருந்தத்தன் கேட்டினுக்கிங் குடன்படுஞ்சீ வன்றான்.

---

*கின்றது. சாட்சிக்கு விஷயமான பிரபஞ்சத்தினைச் சாட்சியமென்பர். சாட்சியரூபமூர்த்தி மலினமாயிருக்கின்றது; சாட்சிரூபமூர்த்தி சுத்தமாயிருக்கின்றது. இவற்றுள், சாட்சியத்தில்அழுந்துவோர் இராகிகள்; சாட்சியில்அழுந்துவோர்தியாகிகள்; விராகிகள். சஞ்சலப் பிரமத்தை (பிரபஞ்சத்தை)ச் சத்தியமென்றறிந்தவர் துக்கமாகிய கிணற்றில்முழுகுகின்றனர்; அசலப் பிரஹ்மத்தின் நிஜசொரூபத்தை யறிகின்றவர் ஆநந்தசொரூபத்தையடைகின்றனர்'' என்று விசாரசாகரம் - 6 வது தரங்கத்திற் கூறுவதிங் குணர்தற்பாலதாம்.*

*விராத்திரியர் - அநுலோமத் தாய்க்கும் பிரதிலோமத் தந்தைக்கும் பிறந்தவர்; சுரோத்திரியர் - பிரஹ்மோபதேசத்தைப் பெறுதற் கதிகாரமுடைய அந்தணர் முதலாயினோர்.* (175)

தனது நாசப் பிரயத்தனம்.

வினா:—ஒருவன் (அகம் பிரஹ்மாஸ்மி யென்னும்) தத்துவ ஞானத்தால் பிரஹ்மத்தை (தனது நிஜவடிவ ஆத்மாவா மென்றுணர்ந்து) அடைவானாயின், அப்பொழுதே அவனது ஜீவத்துவம் (தற்செயலாகக் காட்டினடுவே) வேங்கைப் புலியைக் கண்டவனது ஜீவத்துவம் அழிவதுபோல அழியுமாகலின், அவன் தனது ஜீவத்துவ நாசத்திற்கு எவ்வாறு உடன்படுவான்? உடன்படானன்றே?

---

*(இ - ள்.) தத்துவஞானத்தினால் - (ஜீவன்) ஜீவப்பிரஹ்ம ஐக்கிய ஞானத்தால், பிரமமடைந்திடுமேல் - பிரஹ்ம சொரூபத்தை யடைவானாயின், அத்தலையே - (பிரஹ்ம சொரூபமான) அப்போதே, தறுகண் - அஞ்சாமையையும், வரி - தேமலையும் (உடைய), புலி கண்டோன்போல் - புலியைக் கண்டவனைப் போல, சீவத்துவம்-ஜீவத்தன்மையானது, அழிந்திடுமோதலினால் - (அவனுக்குக்) கெட்டொழியுமாதலால், அச்சீவன் - அந்தச் சீவன், அழிவு தனக்கு - (தனது ஜீவத்தவ) நாசத்திற்கு, உடன்படுமோவெனின் - உடன்படுவானோ வென்று வினாவுவாயாயின், (கர்மகாண்டிகளுள் சிலர்), கடவுள் தன்மைக்கு - தெய்வத்தன்மையை யடைதற்பொருட்டு, உய்த்த - செலுத்துகின்ற, ஆதரவினால்-விருப்பத்தால், கங்கை முதலவற்றுள் - கங்கை (பிரயாகை) முதலிய புண்ணிய நதிகளில், நரத்துவம் - நர(மனித)த்தன்மையை, ஒழிப்பதனுக்கு - ஒழிப்பதற்கு, இசைவர் - உடன்படுவர், அதுபோல் - அதுபோல, இங்கு - இவ்வுலகத்தில், சீவன் ஜீவன், என்றும் - எக்காலத்திலும், பொய்த்தலிலாத - பொய்யாதலில்லாத (மெய்யான), துரியவடிவாம் - பிரத்தியகான்ம வடிவமாயுள்ள, பிரமத்துவத்திற்பொருந்த - பிரஹ்மத்தன்மையிற் பொருந்தியிருக்க (பிரத்தியகாத்மப் பிரஹ்ம சொரூபமாக வேண்டி), (தத்துவஞானத்தால்), தன்கேட்டினுக்கு-தனது (ஜீவத்துவ) நாசத்திற்கு, உடன்படும் - உடன்படுவான், (எ - று). தெய்வத்தன்மையை யடைதல் - தேவசரீரத்தை யடைதல்; நரத்தன்மையை யொழித்தல் - மனித சரீரத்தை விடுதல். ஏ - தான் - அசை.* 176



**177.** வாதரா யணன்முதலோர் போற்சாப முடனே மற்றருள்சேய் வலியுடையோன் றத்துவஞா னத்தோ, னேதிலா னலனேனினவ் வலிதவத்தின் பலமா மிலங்குதத் துவஞான பலமன்று மாயின், மாதவமே ஞானத்திற் கேதுவேனுஞ் சுருதி வழக்கினாற் றவமிலர்க்குத் தத்துவஞா னந்தா, னேதேனிலாஞ் சாபாதிக் குச்சாகா மியமே யேதுநிட்காமியதவஞா னத்தினுக்கேன் றறியே.

---

*விடை:—கருமகாண்டிகளுள் சிலர் நாம் கடவுள்தன்மை (தேவத்துவம்) அடைய வேண்டுமென்னும் ஆசையால், கங்கை பிரயாகை முதலிய புண்ணிய நதிகளில் தமது மக்கள்தன்மையை (நரத்துவத்தை) யொழிப்பதற்குச் சம்மதித்திருக்கின்றனரன்றோ? அதுபோல, அதிகாரி புருஷனாயுள்ள ஜீவனும் தனது யதார்த்த சொரூப பிரத்தியக் ஆத்ம வடிவமாயுள்ள பிரஹ்ம சொரூபத்தில் தான் அபேதமாக விருக்க விரும்பித் தத்துவ ஞானத்தால் தனது ஜீவத்துவம் கெடுதற்குச் சம்மதித் திருக்கின்றான்.*

*(கருமகாண்டிகளுள் சிலர் தேவத்துவத்தையடைய விரும்பி நரத்துவத்தையொழிக்க முயற்சிசெய்வதுபோல, அதிகாரி புருஷனும் பிரஹ்மத்துவத்தை யடைய விரும்பிச் சீவத்துவத்தை யொழிக்க முயற்சி செய்கின்றானென்க. சீவத்துவம் - யானெனதென்னுஞ் செருக்கு.)* (176)

ஜீவன் முத்தர் பெருமை.

வினா:—வேதவியாசர் முதலிய முனிபுங்கவர்போலச் சாபாநுக்கிரக சாமர்த்தியமுடையவனே தத்துவ ஞானியாவன்; மற்றவன் தத்துவ ஞானியாகான் என்று கூறுதல் கூடாதோ?

*விடை:—அச் சாபாநுக்கிரக சாமர்த்தியம் தவத்தின் பயனே அல்லாமல் தத்துவ ஞானத்தின் பயனன்றாம்; அதனாலிங்ஙனம் கூறுதல் கூடாது.*

---

*(இ - ள்.) வாதராயணன் முதலோர்போல் - வியாசர் முதலிய மகரிஷிகளைப்போல, சாபம் - (தன்னையிகழ்ந்தவர்க்குச்) சாபமும், அருள் - (புகழ்ந்தவர்க்கு) அநுக்கிரகமும், செய் - செய்யத்தக்க, வலியுடையோனே - சாமர்த்தியமுடையவனே, தத்துவஞானத்தோன் - தத்துவஞானியாவன், ஏதிலான் - அச்சாமர்த்தியமில்லாதவன், அலன் - தத்துவஞானியல்லன், எனின்-என்று கூறின், அவ்வலி - அச்சாபாநுக்கிரக சாமர்த்தியம், தவத்தின் பலமாம்-தவத்தின் பயனேயாம், (அஃதன்றி), இலங்கு - (விசாரணையாற்றோன்றி) விளங்குகின்ற, தத்துவஞானபலமன்றாம் - தத்துவஞானத்தின் பயனன்றாம், ஆயின் - அங்ஙனமானால், ஞானத்திற்கு - தத்துவஞான முண்டாதற்கு, மாதவமே - மாட்சிமை பொருந்திய தவமே, ஏது-காரணமாம், எனும் - என்று கூறுகின்ற, சுருதிவழக்கினால் - சுருதி வாக்கியமிருத்தலால், தவமிலர்க்கு - தவமில்லாதவர்க்கு, தத்துவஞானம் - தத்துவ ஞானம் (உண்டாவது), ஏது - எங்ஙனமாம் (இல்லையாம்), எனின் - என்று வினாவுவாயாயின், சாபாதிக்கு - சாபாநுக்கிரகங்களுண்டாவதற்கு, சாகாமியமே-காமியதவமே, ஏதுஆம் - காரணமாம், ஞானத்தினுக்கு - தத்துவஞான முண்டாவதற்கு, நிட்காமியதவம் (ஏதுஆம்) - நிஷ்காமியதவம் காரணமாம், என்றறி - என்று (அவ்விருதவங்களின் பயன்களையும் நீ) அறியக்கடவாய், (எ - று). பயனோக்கிச் செய்யுந் தவம் காமியதவமாம்; பயனோக்காது செய்யும் தவம் நிஷ்காமிய தவமாம். உடன் - மற்று - தான் என்பன அசைநிலைகள். ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது.* 177

**178**. வேதவியா சாதிகட்கு ஞானம்வலி யிரண்டு மேவுமே யெனி லவர்கட் கிருதவமு முளவா, மாதலினு லவ்விரண்டு மாகுமோரோர் தவமே யாயினேவ்வோன் றேயடையு மதனுன்மா றின்ற, மேதையாஞ் சாபாதி வலியிலர்க ளாகி விதியிறத் துவஞானி களைக்கிரியா நிட்ட, ரோதுவார் நிந்தையெனி லவர்தமக்கும் விடயத் துழல்பவரா னிந்தையா தலிற்குறைவின் ருமால்.

---

வினு:—அங்ஙனமாயின், தத்துவ ஞான முண்டாதற்குத் தவமே காரணமா மென்னும் சுருதி வாக்கிய மிருத்தலின், தவ மில்லாதவர்க்குத் தத்துவ ஞான முண்டாவ தெங்ஙனமாம்?

விடை:—தவம் காமியத்தவம் நிஷ்காமியத் தவமென்றிருவகைத்தாம்; அவற்றுள், காமியத்தவம் சாபாநுக்கிரக சாமர்த்திய முண்டாதற்குக் காரணமாம்; நிஷ்காமியத் தவம் தத்துவ ஞான முண்டாதற்குக் காரணமாம். அதனுல், தத்துவ ஞான முண்டாதற்குத்தவமே காரணமா மென்று சுருதிகூறுவதுமாருயதன்ரும்.

(காமியத் தவம் சுவர்க்காதி போகத்தை விரும்பிச் செய்யும் தவமாம்; நிஷ்காமியத் தவம் அவ்விருப்பமின்றிச் செய்யும் தவமாம்.)

"தவத்தால் பிரஹ்மத்தை யறியக்கடவாய்" என்று தைத்திரீயோபநிஷத்து மூன்ருவதத்தியாயத்திற் கூறுகின்றது.

"(அதிகாரி புருஷன்) தவத்தாலே சத்துவகுணமடைகின்ருன்; அதனுலே சுத்தமான மனத்தையடைகின்ருன்; அதனுலே ஆத்மாவை யடைகின்ருன்; அதனுலே சம்சாரத்தினின்றும் நிவிர்த்தியடைகின்ருன்" என்று மைத்திரேயோபநிஷத்து முதலாவதத்தியாயத்திற் கூறுவதுமிங் குணர்தற்பாற்ரும். (177)

வினு:—வேதவியாசர் முதலிய முனிபுங்கவர்க்குத் தத்துவஞானம் சாபாநுக்கிரக சாமர்த்திய மென்னு மிரண்டும் உண்டென்பது (பாரத முதலியவற்றில்) மிகு பிரசித்தமாமன்றே? அவற்றிற்குக் காரணம் என்ன?

---

(இ - ள்.) வேதவியாசாதிகட்கு - (அந்த) வேதவியாசர் முதலிய மகரிஷிகளுக்கு, ஞானம்வலியிரண்டும் - தத்துவஞானம் சாபாநுக்கிரக சாமர்த்திய மென்னுமிரண்டும், மேவுமேயெனில் - பொருந்தியிருக்கின்றனவேயென்ருல், அவர்கட்கு - அவர்களுக்கு, இருதவமுமுளவாம் - (அந்த) இருவகைத்தவங்களு முள்ளனவாம், ஆதலினுல் - ஆதலால், அவ்விரண்டுமாகும் - (தத்துவஞானம் சாபாநுக்கிரக சாமர்த்தியமென்னும்) அவ்விரண்டு பயன்களும் உண்டாம், ஓரோர்தவமேயாயின் - (ஒருவன் அவ்விருவகைத் தவங்களுள்) ஒவ்வொரு தவத்தையே செய்திருப்பானுயின், (அவ்விருவகைப் பயன்களுள்), ஒவ்வொன்றே யடையும் - ஒவ்வொரு பயனையே யடைவான், அதனுல் மாறின்ரும் - அதனுல் விரோதமில்லையாம், மேதையாம் - மேன்மை யமைந்த, சாபாதிவலி - சாபாநுக்கிரக சாமர்த்தியம், இலர்களாகி - இல்லாதவராய், விதியில் - விதி (விலக்கு) இல்லாதுள்ள, தத்துவஞானிகளை-ஜீவன் முத்தர்களை, கிரியாநிட்டர் - கருமிகள் (யாவரும்), நிந்தை ஓதுவாரெனின் - நிந்தனை (செய்து) பேசுகின்றனரே என்று வினுவுவாயாயின், அவர் தமக்கும் - அக்கிரியாநிஷ்டர்க்கும், விடயத் துழல்பவரால் - விஷயப்பற்றுடையவராயலைகின்ற மூடரால், நிந்தனை (கூறப்பட்டு) வருதலின், (கிரியா நிஷ்டர் செய்யும் நிந்தையாதலின் - ஞானிகளுக்கு), குறைவின்ரும் - குறைவுண்டாதலில்லையாம், (எ - று). கிரியா நிஷ்டர் - வேதத்தின் கரும காண்டம் கூறியவாறு கருமஞ்செய்பவர். 178



விடை:—அவ் வேத வியாசர் முதலிய முனிபுங்கவர்க்குக் காமியத் தவம் நிஷ்காமியத் தவ மென்னு மிருவகைத் தவமு மிருந்தன; அதனுல், தத்துவ ஞானம் சாபாநுக்கிரக சாமர்த்திய மென்னு மிவ்விரண்டு பயனும் சித்தியா யிருந்தன.

அவ் விருவகைத் தவங்களுள் ஒவ்வொரு தவத்தைச் செய்யின், ஒவ்வொரு பயனே சித்திப்பதாம்; அதனுல், வேத வியாசர் முதலிய முனிபுங்கவர் தத்துவ ஞானமும் சாபாநுக்கிரக சாமர்த்தியமும் பெற்றிருந்தமை விரோதமான தன்ரும்.

காமியத் தவம் செய்தவர்க்குச் சாபாநுக்கிரக சாமர்த்தியமும், நிஷ்காமியத் தவஞ் செய்தவர்க்குத் தத்துவ ஞானமும், அவ்விரண்டையும் செய்தவர்க்குச் சாபாநுக்கிரக சாமர்த்தியமும் தத்துவ ஞானமு முண்டா மென்பதிங் குணர்தற் பாலதாம்.

" காமி யத்தவங் காமிய மொன்றையுங் கருதிடாத் தவமென்றும்
பூமி யிற்றவ மிருவகை சித்தியும் போதமுந் தருமைந்தா
ஆமி வற்றிலொன் றியற்றினு ரொன்றையே யடைகுவ ரிதுநீர்வை
யாமு ரைத்தவவ் விரண்டையு மியற்றினு ரன்றுள பெரியோரே."

என்று கைவல்லிய நவநீதம் கூறுவதுமிங் குணர்தற்பாலதாம்.

வினு:—அங்ஙன மாயின், சாபாநுக்கிரக சாமர்த்திய மின்றி விதிவிலக்கற்றுள்ள தத்துவ ஞானிகளைக் கிரியா நிஷ்டர் (கருமிகள்) நிந்தனைசெய்வா ரன்றே?

விடை:—அங்ஙனமாயின், அக்கிரியா நிஷ்டர்களையும் விஷயப் பற்றுடையவரா யலைகின்றவ ராகிய பாமரர்'இவர் சைவப் பழம்,இவர்வைஷ்ணவக்கொழுந்து' என்றற் ருெடக்கத்தனவற்றைக்கூறி நிந்தனை செய்கின்றன ரன்ருே? இங்ஙனம், கிரியா நிஷ்டர்க்கும் விஷயப்பற்றுடையவராயலைகின்றவரால் நிந்தைவருதலின் அக் கிரியா நிஷ்டர் செய்யும் நிந்தனையால் தத்துவஞானிகளுக்கு யாதொரு குறைவு முண்டாவ தில்லையாம்.

(பாமரர் செய்யும் நிந்தையால் கிரியா நிஷ்டர்க்கு யாதோ ரானியு மில்லாமைபோல, கிரியாநிஷ்டர் செய்யும் நிந்தையால் தத்துவ ஞானிகளுக்கும் யாதோ ரானியு மில்லையா மென்பதிங் குணர்தற்பாலதாம்.) (178)

வினு:—ஜீவன் முத்த ரொழுக்கம் எவ்வா றிருக்கும்?

விடை:—பல விதமா யிருக்கும்.

வினு:—அதனை விளக்கமாகக் கூறல் வேண்டும்?

**179.** உலகிறந்த சீவன்முத்த னுகர்வினைவா சனையா லுண்
பொருள்கள் பலகவர்ந்து மௌனமே யுற்றும், பலதிறங்கண் மொழிந்து
முப தேசநெறி புரிந்தும் பரிதவித்து மகிழ்ந்துமிகு வேடங்கள் புனைந்துங்,
கலைதுறந்து முடையுடுத்துங் கல்விபல பயின்றுங் கல்லாது மாதர்முயக்
கிடையுற்று மிவ்வா, றலகிறந்த நடையுறினு மருள்விளையாட் டென்றே
யவன்றனைநம் புகவைய மொருசிறிது முறுமல்.

---

விடை:—(பொருளைத் தேடுதல், அதுகொண்டு போகத்தை யனுபவித்த லென்னும்) உலகாசார மொழிந்துள்ள ஜீவன் முத்தன் தனது பிராரப்த கரும சம்ஸ்காரத்தின் வசத்தால் தானனுபவித்தற் குரிய உண்டி உடை முதலியவற்றுள் பலவற்றைத் தனக்கென்று சேர்த்து வைத்துக்கொண்டு மிருப்பன்; எவரோடும்பேசாது மௌனமாயு மிருப்பன்; பலவகையாயுள்ள சொற்களைப் பேசிக்கொண்டு மிருப்பன்; தன்னை யடுத்தொழுகும் அதிகாரி புருஷர்க்கு முறையாகத் தத்துவமசி மகா வாக்கிய உபதேசஞ் செய்துகொண்டு மிருப்பன்; தன்னிடத்துள்ளனவற்றுள் ஒன்று தன்னை விட்டொழிந்தபோது வாட்டமடைந்து மிருப்பன்; தனக்கென்று ஒருபொருள் கிடைத்தபோது மகிழ்ச்சி யடைந்து மிருப்பன்; பலவிதமாக வேஷங்களைத் தரித்துக்கொண்டு மிருப்பன்; ஆடையில்லாதவனுயு மிருப்பன்; ஆடை யுடையவனுயு மிருப்பன்; சாங்கிய யோக முதலிய சாஸ்திரம் பலவற்றை ஆராய்ச்சி செய்துகொண்டு மிருப்பன்; யாதொரு சாஸ்திர விசாரமும் செய்யாது மிருப்பன்; மாதர் முயக்கிடையுற்று (ஸ்திரீலோலனுயு) மிருப்பன். இங்ஙனமவன் அளவிறந்த ஒழுக்க முடையவனு யிருப்பன்; இவ்வாறிருப்பினும், அவனது ஒழுக்கங்களை அவனது அருள் விளையாடலாமென்று கருதி அவனை ஒரு சிறிது மையமுறாது சிவமென்றே நம்பி யொழுகுதல் வேண்டும். (179)

---

(இ - ள்.) உலகிறந்த - உலகாசாரமிறந்துள்ள, சீவன் முத்தன் - ஜீவன் முத்த புருஷன், நுகர்வினைவாசனையால் - பிராரப்தகரும சம்ஸ்காரத்தின் வசத்தால், உண்பொருள்கள்பல-(தான்) அனுபவித்தற்குரிய பொருள்கள் பலவற்றை, கவர்ந்தும் - கிரகித்தும், மௌனமே யுற்றும் - வாக்குமௌனம் செய்தும், பலதிறங்கள் மொழிந்தும் - பலதிறத்தனவாயுள்ள சொற்களைக் கூறியும், உபதேச நெறி புரிந்தும் - (சிஷ்யர்க்கு மகாவாக்கிய) உபதேசத்தை முறையாகச் செய்தும், பரிதவித்தும் - (விரும்பியபொருள் கிட்டாமைபற்றி) துக்கமுற்றும், மகிழ்ந்தும்-(விரும்பியபொருள் கிட்டினமைபற்றி) மகிழ்வுற்றும், மிகுவேடங்கள் புனைந்தும் - பலவிதமாய வேஷங்களைத்தரித்தும், கலைதுறந்தும் - (உடுத்தியிருந்த) ஆடையை யவிழ்த்தெறிந்தும் (நிருவாணமாயிருந்தும்), உடையுடுத்தும்- ஆடையைத் தரித்தும், கல்வி பல பயின்றும் - சாஸ்திரம் பலவற்றை யப்பியாசித்தும், கல்லாதும் - சாஸ்திராப்பியாசஞ் செய்யாதும், மாதர் முயக்கிடையுற்றும் - பெண்களைக் கூடுவதிற் பிரிய முற்றும், இவ்வாறு - இங்ஙனம், அலகிறந்த- அளவுகடந்த, நடையுறினும் - நடைகளைப் பொருந்தியிருப்பினும், அருள்விளையாட்டென்றே - (அவற்றை அவனது) அருள்விளையாடலாமென்று (கருதி), ஐயமொரு சிறிது முறுமல் - ஐயமென்ப தொருசிறிது மடையாமல், அவன்றனை - அந்தச் சீவன் முத்த புருஷனை, நம்புக - (நீ சிவமென்று) நம்புவாயாக, (எ- று). நுகர்வினை - பிராரப்த கருமம். ஏகார மிரண்டும் அசைநிலை. 179



**180.** என்றுமெவ் விடத்தினுமோ ருடம்புமுறு தோன்று யிருந்த
சச்சி தாநந்த சிவசோருப மாத, னன்றிதரு விதேககை வல்லியமென்
றிசைப்பர் நவின்றவிதை யெய்துமா றெவ்வாற்று னென்னிற், பொன்றலி
னித் தியகருமா னுட்டானந் தன்னுற் புண்ணியமப் புண்ணியத்தாற்
பாவவொழி வதனுற், குன்றலறு சித்தசுத்தி யதனுற்பொய்க் குடும்பக்
குற்றநிகழ் வதனுன்மெய்த் துறவுதுற வதனுல்.

---

விதேகமுத்தி யடையுங் கிரமம்.

வினு:—அதிகாரி புருஷன் விதேகமுத்தியடையுங்கிரம மெவ்வாறும்?

விடை:—அதிகாரிபுருஷன் எக்காலத்திலும் எத்தேசத்திலும் யாதொரு சரீரமுமடையாது ஏகமாயுள்ள சச்சிதாநந்த சிவசொரூபமாக விளங்குதலே விதேக முத்தியாம்.

முமுட்சுவிற்கு (அதிகாரி புருஷனுக்கு) 1. நித்திய கர்மாநுஷ்டானத்தால் புண்ணியம் (தருமம்) உண்டாவதாம்; 2. அதனுல், பாவம் (அதருமம்) ஒழிவதாம்; 3. அதனுல், சித்த சுத்தி யுண்டாவதாம்; 4. அதனுல், சம்சார தோஷ தரிசன முண்டாவதாம்; 5. அதனுல், உண்மையாய துறவு (விஷய விரக்தி) உண்டாவதாம்; 6. அதனுல், முத்திவிருப்பு(மோட்சாபேட்சை யென்னும் முமுட்சுத்துவம்) உண்டாவதாம்; 7. அதனுல், பாகிய கர்ம பரித்தியாகம்(பாகிய கருமங்களைச் செய்வதொழிதல்) உண்டாவதாம்; 8. அதனுல், ஞானயோக அப்பியாச முயற்சி யுண்டாவதாம்; 9. அதனுல், பிரத்தியக் ஆத்மாவின்கண் பிரிய முண்

---

(இ - ள்.) என்றும் - (அதிகாரி புருஷன்)எக்காலத்திலும்,எவ்விடத்தினும்- எத்தேசத்திலும்,ஒருடம்புமுறுது-ஒரு சரீரத்தையும் அடையாது, ஒன்றுயிருந்த- ஏகவடிவமாயிருக்கின்ற, சச்சிதாநந்த சிவசொரூபமாதல் - சச்சிதாநந்தப் பிரஹ்ம சொரூபமாக விளங்குதலையே, நன்றிதரு - (மீண்டும் பிறத்தலில்லாமையாகிய) நன்மையைத் தருகின்ற, விதேக கைவல்லியமென்று-விதேக முத்தியா மென்று, இசைப்பர் - (மேலோர்) கூறுவர், நவின்றவிதை - கூறிய இந்த விதேக முத்தியை, எய்துமாறு - அடையும் முறை, எவ்வாற்றுனென்னில் - எவ்விதத்தாலாமென்று வினுவுவாயாயின், (ஒரு முமுட்சுவிற்கு), பொன்றலில் - (நற்பயனைத் தருவதில்) தவறுதலில்லாத, நித்திய கருமானுட்டானந் தன்னுல்-நித்திய கருமானுஷ்டானத்தால், புண்ணியம் - புண்ணியம் (உண்டாவதாம்), அப்புண்ணியத்தால் - அந்தப் புண்ணியத்தால், பாவவொழிவு - பாவம் நாசமாவதாம், அதனுல் - அப்பாவநாசத்தால், குன்றலறு - குறைதலில்லாத, சித்த சுத்தி - சித்த சுத்தி (உண்டாவதாம்), அதனுல் - அச்சித்த சுத்தியால், பொய்க்குடும்பக் குற்ற நிகழ்வு - மித்தையாகிய சம்சாரதோஷ தரிசனம் (உண்டாவதாம்), அதனுல் - அச்சம்சாரதோஷதரிசனத்தால், மெய்த்துறவு - உண்மையாய துறவு (உண்டாவதாம்), துறவதனுல் - அத்துறவால், (எ - று). தோஷதரிசனம் - தோஷம் விளங்குதல்; துறவு - விஷய விரக்தி. 180

**181.** முத்திவிருப் பதனுலே புறக்கரும வோடுக்க மோழிந்த தனுல் யோகநிலை முயற்சியது தன்ஞற், போய்த்தலறு துரியவிழை வத் துரிய விழைவாற் புகலருமா வாக்கியவா ராய்ச்சியத னுலே, யத்துவித ஞானமத னுலவிச்சை நாச மதனுற்போய்த் துவிதமயக் கழிதலத னுலே, மேத்துசுக துக்கநினை வோழிவதனுல் விருப்பு வேறுப்பறுத லதனுலோண் விதிவிலக்கோய் வதனுல்.

டாவதாம்; 10. அதனுல், தத்துவமசி மகா வாக்கிய விசார முண்டாவதாம்; 11. அதனுல், அத்துவித ஞான முண்டாவதாம்; 12. அதனுல், அவித்தியா நாச முண்டாவதாம்; 13. அதனுல், துவிதமயக்கொழிதல் (துவைதப் பிராந்தி நஷ்டம்) உண்டாவதாம்; 14. அதனுல், சுகதுக்க சங்கற்ப நாச முண்டாவதாம்; 15. அதனுல், விருப்பு வெறுப்பறுதல் (இராகத்துவேஷஹானி) உண்டாவதாம்; 16. அதனுல், விதிவிலக்கொழிதலுண்டாவதாம்; 17. அதனுல், (அறம்பாவமென்னும்) புண்ணிய பாவங்களின் க்ஷயம் (கேடு) உண்டாவதாம்; 18. அதனுல், தேகாத்ம புத்தி (முற்றும்) ஒழிதலுண்டாவதாம்; 19. அதனுல், (அவித்தை, அஸ்மிதை, இராகம், துவேஷம், அபிநிவேச மென்னும்) பாசமனைத்து மொழித லுண்டாவதாம்; 20. அதனுல், பராபரமென்னும் பரப்பிரஹ்மமாயும், (சகல சாஸ்திரத்திற்கும்) முடிவாயும், பெயரும் ஜாதியும் குறியும் (அடையாளமும்) பெறுததாயும், ஒன்ருயும், வாக்கு மன மிறந்து (அவாங்மனே கோசர) நித்தியாநந்த மயமாயும், புநராவிர்த்தி (திரும்பிவருதல்) இல்லாததாயு முள்ள விதேகமுத்தி யுண்டாவதாம்.

(இ - ள்.) முத்திவிருப்பு - (முமுட்சுத்துவ மென்னும்) மோட்ச விருப்பம் (உண்டாவதாம்), அதனுல் - அம்மோட்ச விருப்பத்தால், புறக்கருமவொடுக்கம் - பாகிய கரும பரித்தியாகம் (உண்டாவதாம்), மொழிந்த அதனுல் - கூறிய அப் பாகிய கரும பரித்தியாகத்தால், யோகநிலை முயற்சி - நிலைபெற்ற யோகாப்பியாச முயற்சி (உண்டாவதாம்), அது தன்னுல் - அந்த யோகாப்பியாச முயற்சியால், பொய்த்தலறு - பொய்யாதலில்லாத, துரியவிழைவு - பிரத்திய கான்மப் பிரீதி (உண்டாவதாம்), அத்துரியவிழைவால் - அந்தப் பிரத்தியகான்மப் பிரீதியால், புகலரும் - (இத்தன்மையதாய மகிமை யுடையதென்று) கூறுதற்கரிய, மாவாக்கிய வாராய்ச்சி - தத்துவமசி மகாவாக்கிய விசாரம் (உண்டாவதாம்), அதனுல் - அம்மகாவாக்கிய விசாரத்தால், அத்துவித ஞானம் - அத்வைத ஞானம் (உண்டாவதாம்), அதனுல் - அவ்வத்வைத ஞானத்தால், அவிச்சை நாசம் - (சொரூபாவரணமென்னும்) அஞ்ஞானம் நாசமாவதாம், அதனுல் - அந்த அஞ்ஞான நாசத்தால், பொய்த்துவிதமயக்கழிதல் - மித்தையாகிய துவைதப்பிராந்தி நாசமாதல் (உண்டாவதாம்), அதனுல் - அத் துவைதப் பிராந்தி நாசத்தால், மெத்து - (ஒவ்வொருநாளும் விடாது) மிக்குவளர்கின்ற, சுகதுக்க நினைவொழிவு - சுகதுக்க சங்கற்ப நாசம் (உண்டாவதாம்), அதனுல் - அச் சுகதுக்க சங்கற்ப நாசத்தால், விருப்பு வெறுப்பறுதல் - இராகத்துவேஷ நாசம் (உண்டாவதாம்), அதனுல் - அவ் விராகத்துவேஷ நாசத்தால், ஒண்மை-சிறப்புப்பொருந்திய, விதிவிலக்கோய்வு - விதிநிஷேதகருமநாசம் (உண்டாவதாம்), அதனுல் - அவ்விதிநிஷேத கருமநாசத்தால், (எ - று). பரித்தியாகம் - நீக்கம். பிரத்தியக் ஆன்மப் பிரீதி - ஆத்மாவைப் பிரத்தியட்சமாக அறியவேண்டுமென்னு மிச்சை. சொரூபாவரணம் - சொரூபத்தை மறைப்பது; சொரூபம் - ஆத்மா. 181



**182.** வினையிரண்டு மகறலத ஞற்றேக பாவ விச்சிந்தி யதனுலே பாசமேலா மோழிதல், பினையறைந்த வதனுலே பராபரமாய் முடிவாய்ப் பெயர்சாதி குறிபெரு தோன்ருகி வாக்கு, மனமிறந்து நித்தியா நந்தமய மாகி மறிவிலா விதேககை வல்லியம்வந் தேய்து, மேனவறிந்து துணிந் திடுக சுருதிகுரு பரனு லின்பவீ டடையுநேறி விரும்புறுமுத் தமரே.

சுருதி குருபரனுல் இன்பவீடு அடையும்நெறியைவிரும்புறும் உத்தமர் விதேக முத்தியடையுங் கிரமம் இவ்வாறென்று துணிவாக அறிதல் வேண்டும். (180-182)

வேதாந்த சூடாமணி வசன விஞவிடை முற்றுப்பெற்றது.

---

(இ - ள்.) வினையிரண்டும் அகறல் - அறம்பாவமென்னும் வினை யிரண்டும் நாசமாதல் (உண்டாவதாம்), அதனுல் - அவ்விரண்டும் நாசமாவதால், தேகபாவ விச்சிந்தி - தேக பாவனை கெடுதல் (உண்டாவதாம்), அதனுல் - (தேகமே ஆத்மாவென்னும்) அத்தேகபாவனை கெடுவதால், பாசமெலாமொழிதல் - (அவித்தை முதலிய) பாசமனைத்தும் நாசமாதல் (உண்டாவதாம்), பினை - பின்னர், அறைந்த - கூறிய, அதனுல் - அப்பாசநாசத்தால், பராபரமாய் — (பரமஸ்தான மென்னும்) பராபரமாயும், முடிவாய் - (சகலசாஸ்திரங்களுக்கும்) முடிவாயும், பெயர்சாதி குறிபெருது - பெயரும் ஜாதியும் (குறிக்குமோர்) அடையாளமும் பெருததாயும், ஒன்ருகி - ஏகமாயும், வாக்குமனமிறந்து - வாக்கிற்கும் மனதிற்கும் எட்டாததாயும், நித்தியா நந்தமய மாகி - நித்தியாநந்தவடிவமாயும், (உள்ள), மறிவிலாத - திரும்புதலில்லாத, விதேக கைவல்லியம் - விதேகமுத்தி, வந்தெய்தும் - வந்து சித்தியாம், என - என்று, (விதேகமுத்தி யடையுங்கிரமத்தை), சுருதி (ஆல்) - சுருதிவாக்கியத்தாலும், குருபரனுல் - குருநாதனது உபதேசத்தாலும், இன்பவீ டடையுநெறி - நிரதிசயாநந்த வடிவமோட்சத்தை யடையுமார்க்கத்தை, விரும்புறும் - விரும்புகின்ற, உத்தமர் - உத்தமாதிகாரி புருஷர், துணிந்தறிந்திடுக - நிச்சயமாக அறிவாராக, (எ-று). பராபரம்-பரைக் (மாயைக்) கப்பாற்பட்டது. பராபரம் என்பதன் பூர்வரூபம் பராத்பரம் என்பதாம். 182

வேதாந்த சூடாமணியின் பதவுரை முற்றுப்பெற்றது.

---

இந்நூற் பேருமையும் இதனை யேற்றுக் கோள்ளுதற்குரிய அதிகாரியினியல்புங் கூறல்.

**183.** வேதமுத லாகியநூ லனைத்தினுஞ்சோல் போருளை விளங் கியிடக் கரதலா மலகமேனக் காட்டிப், போதமய மாகியபே ராநந்தத் தழுத்தும் போருவிகந்த விந்நூலை முத்திபேறற் குரிய, சாதனநான் கினையுமடைந் தேவரானு மேன்றுந் தடுப்பரிய பிறவிநோய் தணிப் பதனுக் கேண்ணி, யாதரவி னருட்குரவன் றனைத்தேடி யுருகு மன் புடையார் தமைக்காணி னளித்திடுக வுவந்தே.

கரதலாமலகம் - உள்ளங்கை நெல்லிக்கனி, போதமயமாகிய - ஞானவடிவமாகிய பொருவிகந்த - ஒப்பின்றிய, தணிப்பதனுக்கு - நீக்குவதற்கு, உவந்து - விரும்பி.

வேதாந்த சூடாமணியின் மொத்தச் செய்யுள் 185.

ஸ்ரீ சாது இரத்தின சற்குரு திருவடி வாழ்க.

---

PRINTED AT THE NOBLE PRESS, TRIPLICANE, MADRAS.

## பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 1 | 9 | தடியார் | தடியர் |
| ஷை | 14 | எழு | எழும் |
| ஷை | 16 | அடியார் | அடியர் |
| 4 | 28 | மந்திரம் | மந்திரம் |
| 14 | 8 | வற்றை | வற்றைப் |
| ஷை | 23 | (தன்னை | தன்னை) |
| 21 | 33 | சிவசிவ | சிவசிவ |
| 25 | 36 | களிள் | களின் |
| ஷை | 37 | எள்று | என்று |
| 31 | 6 | பனை | பணை |
| ஷை | 33 | பனை | பணை |
| 39 | 13 | நிரில் | நீரில் |
| ஷை | 17 | வாகத் | வாகச் |
| 54 | 29 | விரிஞனே | விரிஞ்சனே |
| 83 | 36 | அறிதல் | அறிந்திடல் |
| 92 | 25 | தத்துவத்தின்றும் | தத்துவத்தினின்றும் |
| 100 | 20 | மகனிறநது | மகனிறந்து |
| 112 | 16 | எகமாய் | ஏகமாய் |
| ஷை | 19 | இகழ் | இதழ் |
| ஷை | 19 | பொருட்டு | பொகுட்டு |
| 114 | 17 | மாத்திரயம் | மத்திரயம் |
| 115 | 14 | சுழுத்திய | சுழுத்தி |
| 118 | 21 | றறிக | றறிக. |
| 120 | 32 | வணிதாதி | வனிதாதி |
| 123 | 17 | சகலாஸ்தை | சகலாவஸ்தை |
| 135 | 3 | திறனுக | திறனுகு |
| 144 | 17 | பிரதியக் | பிரத்தியக் |
| 147 | 3 | லருத்த | வருத்த |
| 148 | 22 | இங்குப | இங்குப் |
| 150 | 7 | ஒன்ருய | ஒன்ருய் |
| 155 | 11 | நித்தி | நிதித்தி |
| 156 | 8 | நித்தி | நிதித்தி |
| 172 | 9 | பொருட்டு | பொருட்டு |
| 193 | 4 | யுண்ணுபனு | யுண்ணுமனு |
| 197 | 12 | பாற்ரு | பாற்ரும் |
| ஷை | 30 | போசத்தை | போகத்தை |
| 199 | 41 | யிருட்பின் | யிருப்பின் |
| 202 | 37 | ணியர்பால | ணியர்பால் |
| 203 | 30 | மொடு | மொடு- |

## செய்யுள் முதற்குறிப்பு அகராதி.

---